# சட்ட சபையில்
# எட்டு வருஷ வேலை




கனம் [illegible]பகதூர்

அ. க. கு. அக[illegible]து தம்பி மரக்காயர்.



சென்னை :

[illegible]சமித்திரன்" பிராஞ்சு பிரஸ்ஸில்

[illegible]திப்பிக்கப்பட்டது

1920.

# சட்ட சபையில்
# எட்டு வருஷ வேலை




கனம் கான்பகதூர்

அ. க. கு. அகமது தம்பி மரக்காயர்.



சென்னை :

"சுதேசமித்திரன்" பிராஞ்சு பிரஸ்.

1920.




# சென்னை சட்ட சபை.

## பிரிவு 1.

## கேள்விகளும் பதில்களும்.

1913

[ஏப்பிரல் மாதம் 2ம் தேதி சென்னையில் நடந்த கூட்டம்.]

வெள்ளிக்கிழமைத் தொழுகைக்காக முகம்மதியர்களுக்கு ராஜா

கே:—1 (ஏ.) கனம் மிஸ்டர் கஸ்நவியின் வேண்டுகோளின் பேரில் வங்காள கவர்ன்மெண்டார், கவர்ன் மெண்டு ஆபீஸ்களில் வேலை செய்யும் எல்லா முகம் மதியர்களுக்கும் வெள்ளிக்கிழமையன்று தொழுவதற் காக இரண்டு மணி நேரம் ராஜாக்கொடுத்திருப்பது இந்த கவர்ன்மெண்டாருக்குத் தெரியுமா?

(பி) அதே விதமாக இந்த மாகாணத்திலும் கவர்ன்மெண்டு ஆபீஸ் களில் வேலை செய்து வரும் முகம்மதிய உத்தியோகஸ்தர்களுக்கு வெள்ளிக் கிழமையன்று தொழுவதற்காக இரண்டு மணிநேரம் கவர்ன்மெண்டார் ராஜாக் கொடுப்பார்களா?

பதில்:—மேலே சொல்லப் பட்ட விதமாக உத்திரவேதேனும் பிறப்பி விக்க பட்டிருக்கிறதாவென்று வங்காள கவர்ன்மெண்டாரைக் கேட்டு விட்டிருக்கிறது. அவர்களுடைய பதில் கிடைத்த பிறகு இந்த விஷயம் ஆலோசிக்கப்படும்.

நாகப் பட்டணம் துறைமுகத் துவாரத்தைத் துநளடுத்தல்.

கே:—2 (ஏ) வேளாங் கண்ணியில் ஸ்பெஷலாக சிலவேலைகளைச்செய்தும் நாகப்பட்டணம் துறை முகத்துவாரம் அபி விருத்தியடையவில்லை யென்பதும், அலை கம்மி யாக விருக்கும் காலங்களில் காலிப்படகுகள் கூட துறை முகத்துவாரத்தைத் தாண்டிச் செல்ல முடி யாதென்பதும் கவர்ன் மெண்டாருக்குத் தெரியுமா?

பதில்:—முந்தின வருஷங்களில் இதேகாலத்தில் இருந்த நிலைமையை விட இவ்வருஷத்தில் துறை முகத்துவாரம் கேவலமான ஸ்திதியிலில்லை யென்று கவர்ன் மெண்டாருக்கு அறிவிக்கப்பட்டிருக்கிறது.

கே:—(பி) தூருவெடுப்பதற்காக உத்தேசிக்கப்பட் டிருக்கும் இயந்திரம், (Dredger) வந்து சேரும் வரையில், துறை முகத்துவாரம் அடிக்கடி தூர்ந்து போய்விடாமற் தடுப்பதற்கான உபாயங்களை கவர்ன் மெண்டார் சீக்கிரம் தேடுவார்களா?

பதில்:—புதிய தூருவெடுக்கும் இயந்திரம் (Dredger) வருகிற மே மாதம் முதல்வேலை ஆரம்பிக்கலாமென்று எதிர்பார்க்கப்படுகிறது. அதுவரையில் சத்தியாக இப்பொழுது உபயோகிக்கப்பட்டுவரும் இயந்திரத்தைப் பழுது பார்த்திருக்கிறது. அடிக்கடி அது உபயோகிக்கப்படும்.

*ஸ்தல ஸ்தாபனங்களில் முகம்மதியர்களுக்குப் பிரதிநிதித்துவம்.*

கே:—3 (ஏ) முகம்மதியர்கள் அதிகமாக வசித்துவரும் பிரதேசங்களில் அவர்கள் ஸ்தலஸ்தாபனங்களுக்குத் தங்களுடைய பிரதிநிதியைத் தெரிந்தெடுத்துக் கொள்ள சுதந்தர மில்லாததினால் அவைகளில் அவர்களுக்குப் பிரதிநிதித்துவமில்லாமல் போய்விடும் விஷயம் கவர்ன் மெண்டாருக்குத் தெரியுமா?

(பி) அவர்களுடைய நன்மைகளைக் காப்பாற்றுவதற்காக கவர்ன் மெண்டார் தாங்கள் நியமிக்கும் ஸ்தானங்களில் ஒரு பகுதியை முகம்மதியர்களுக்காக ஒதுக்கி வைப்பார்களா?

பதில்:—பொதுவாக ஸ்தல ஸ்தாபனங்களில் முகம்மதியர்களுக்குப் போதிய பிரதிநிதித்துவமில்லை யென்று நினைப்பதற்குத் தக்க ஆதாரங்களிருப்பதாக கவர்ன்மெண்டார் நினைக்கவில்லை. எலெக்ஷன் மூலமாகப் பிரதிநிதித்துவம் பெறமுடியாத சொற்பத் தொகையினராகவுள்ள வகுப்பினரின் நன்மைகளைப் பாதுகாப்பதற்காகவே கவர்ன் மெண்டார் நியமனம் செய்ய வைத்துக் கொண்டிருக்கும் அதிகாரம் உபயோகிக்கப்படுமென்பது நன்கு தெரிந்த விஷயம். ஆனால், நியமிக்கப் படவேண்டிய ஸ்தானங்களில் ஒரு பகுதியை எந்த வகுப்பினருக்காக வேனும் வேண்டுமென்று நிச்சயமாக ஒதுக்கிவைக்க கவர்ன்மெண்டார் தயாராக இல்லை.

[மேமாதம் 16-ம் தேதி உதகமண்டலத்தில் நடந்த கூட்டம்.]

*வெள்ளிக் கிழமைகளில் தொழுகைக்காக ரஜா.*

கே:—4 (ஏ) முகம்மதிய கவர்ன்மெண்டு உத்தியோகஸ்தர்களுக்கு ஜும்மா தொழுகைக்காக ரஜாக் கொடுக்கவேண்டுமென்று ஏப்பிரல் மாதம் 2-ம்தேதி நடந்த மீட்டிங்கில் நான் கேள்வி கேட்டு அதற்கு கவர்ன்மெண்டார் பதில் அளித்த விஷயம் சம்பந்தமாக, 1913-ம் வரு

ஷம் மார்ச்சுமாதம் 11-ம் தேதி நடந்த இந்தியா சட்டசபை மீட்டிங்கில் கனம் மிஸ்டர் கஸ்நவி கேட்ட கேள்விக்கு இந்தியா கவர்ன் மெண்டின் சார் பாக கனம் ஸர் ரெஜினல்டு கிராடாக் கீழ்கண்டவாறு பதிலளித்திருப்பது கவர்ன் மெண்டாருக்குத் தெரியுமா?

"இந்தியா கவர்ன் மெண்டு காரியஸ்தலங்களில் வேலை பார்த்துவரும் முகம்மதிய உத்தியோகஸ்தர்களுக்கு கனம் மெம்பர் விரும்புகிற பிரகாரம் சபையுடன் கூடிய ராஜப்பிரதிநிதி ரஜா கொடுப்பதுடன், மற்ற மாகாண கவர்ன்மெண்டுகளுக்கும் அவ்விதம் செய்வது உசிதமென்று அறிவிப் பார்".

(பி) இப்பொழுதாவது இந்த மாகாணத்திலுள்ள முகம்மதிய உத்தி யோகஸ்தர்களுக்கு ஜும்மா தொழுகைக்காக கவர்ன் மெண்டார் மனமு வந்து இரண்டு மணி நேரம் ரஜாக்கொடுப்பார்களா?

பதில்:—ஏப்பிரல் மாதம் 2-ம் தேதி நடந்த மீட்டிங்கில் இது விஷய மாக கனம் மெம்பருக்கு பதிலளித்தபிறகு, கவர்ன்மெண்டார் தாங்கள் சொல்லியிருந்த பிரகாரம் இவ்விஷயத்தைப் பற்றி ஆலோசனையும் செய் தார்கள்; தனிப்பட்ட நபர்கள் அவ்வித வழக்கத்தை அனுசரித்து வருகிறார் களா வென்பதையும் விசாரணைசெய்தார்கள். கனம் மெம்பர் குறிப்பிட்டிருக் கிற பதிலில் கண்ட பிரகாரம் இந்த மாகாணத்திலும் இரண்டு மணி நேரம் ரஜாக்கொடுக்க வேண்டியதவசியமென்று தோன்றவில்லை.

முகம்மதியர்களுக்கு விடு முறை நாட்கள்.

கே:—5 (ஏ) கைமாறக்கூடிய தஸ்தாவேஜிகளைப் பற்றிய சட்டத் தின்படி முகர்ரம் பண்டிகை விடுமுறை தினமாக பாவிக்கப்படுவது போல், பாராவபாத், ரம்ஸான், பக்ரீது இவைகளையும் அந்த சட்டத்தின்படி விடுமுறை தினங்களாக பாவிக்க வேண்டுமென்று பும்பாய் கவர்ன் மெண்டார் பஹிரங் கப்படுத்தியிருப்பது இந்த கவர்ன்மெண்டாருக்குத் தெரியுமா?

பதில்:—அவ்விதம் செய்திருப்பது கவர்ன்மெண்டாருக்குத் தெரி யும்.

(பி) இப்பொழுது கைமாறக் கூடிய தஸ்தாவேஜுகளைப் பற்றிய சட்டத்தின்படி ரம்ஸானுக்கு மாத்திரம் ஒருநாள் விடு முறை விடப்படு வதற்கு பதிலாக அந்த சட்டத்தின்படி பக்ரீது, ரம்ஸான், பாராவபாத், மொகரம் இவைகளுக்காக சென்னை கவர்ன் மெண்டார் தயவு செய்து நான்கு நாள் விடுமுறை கொடுப்பார்களா?

பதில்:—கனம் மெம்பருடைய வேண்டுகோளை கவர்ன்மெண்டார் ஆலோசிப்பார்கள்

நாகப்பட்டணம் துறைமுகத்திற்கு துரு எடுக்கும் இயந்திரம்.

கே:—6 (ஏ) நாகப்பட்டணம் துறைமுகத்திற்குத்துரு எடுக்கும் இயந்திரம் வேண்டிய விஷயமாக ஏப்பிரல் மாதம் 2-ம் தேதி கூடியசட்ட சபையில் நான் கேட்டிருந்த கேள்விக்கு கவர்ன்மெண்டார் பதிலளித்த விஷயம் சம்பந்தமாக, நாகப்பட்டணம் துறைமுகத்திற்காக உத்தேசிக்கப்பட்டிருந்த துருஎடுக்கும் இயந்திரமானது'(Dredger) கல்கத்தாவை விட்டுக்கொஞ்சதூரம் வந்ததும் நடுக்கடலில் முழுகும் நிலைமைக் காளாகி, கைவிடப்பட்டுவிட்ட விஷயம் கவர்ன்மெண்டாருக்குத் தெரியுமா?

பதில்:—அந்த இயந்திரம் சேதமாகிப் போய்விட்ட விஷயம் கவர்ன் மெண்டாருக்குத் தெரியும்.

(பி) இப்பொழுது உபயோகிக்கப் பட்டுவரும் இயந்திரம் மிகவும் பழைமையடைந்து, பலனைத்தரக்கூடிய நிலைமையில் இல்லாமலிருப்பதால், புதிய இயந்திரம் வந்து சேரும் வரையில் துறைமுகத்துவாரமும் அணையோரங்களும் விசேஷமாகத் தூந்து போவதை நிவர்த்திக்க சத்தியாக கவர்ன் மெண்டார் ஏதேனும் ஏற்பாடுகள் செய்வார்களா?

பதில்:—"ஹாவலக்" என்னும் இயந்திரமானது நன்கு வேலை செய்து வருவதாகத் தெரிகிறது. ஆகவே, இப்பொழுது சத்தியாக வேறு எவ்வித ஏற்பாடுகளும் செய்ய வேண்டிய அவசியமில்லை. எவ்வளவு சீக்கிரத்தில் சாத்தியப்படுமோ அவ்வளவு சீக்கிரத்தில் புதிய இயந்திரம் தருவித்துக் கொடுக்கப்படும்.

இந்தியப் பிரயாணிகள் தரித்திருக்கும்சாமான்களுக்கும் கடற் சுங்கவரி.

கே:— 7 (ஏ) சென்னையிலும், கடலோரமுள்ள இதர துறை முகங்களிலும் ஸ்டிரெயிட்ஸ் செட்டில் மெண்டுகளிலிருந்தும் மலாய் நாடுகளிலிருந்தும் வந்திறங்கும் இந்தியப் பிரயாணிகள் மேலே தரித்திருக்கும் சாமான்களுக்குக்கூட கடற்சுங்க இலாகா உத்தியோகஸ்தர்கள் தீர்வை விதித்து வருவது கவர்ன்மெண்டாருக்குத் தெரியுமா?

(பி) சரீரத்தின் மீது தரித்திருக்கக் கூடிய சாமான்களுக்கு சுங்கத் தீர்வை வசூலிக்காமலிருக்கும்படி கடற்சுங்க இலாகா உத்தியோகஸ்தர்களுக்கு அறிவிப்பதுடன், "சரீரத்தின் மீது தரித்திருக்கக் கூடிய சாமான்கள்" என்னென்ன வென்பதையும் கவர்ன்மெண்டார் வியாக்கியானம் செய்து விடுவார்களா?

பதில்:— கப்பல் மூலமாக வந்திறங்கும் பிரயாணிகளின் எந்தெந்த சாமான்கள் சுங்கத் தீர்வையிலிருந்து விலக்கென்று பொதுவாக விதிகள் தயாரிக்கப்பட்டு இந்தியா வர்ன்மெண்டாரின் அங்கீகாரத்தின் மேல் 1906-ம் வருஷம், ஆகஸ்டு மாதம் 21-ம் தேதி வெளியான போர்ட்டு செயிண்டு ஜார்ஜு கெஜட்டில் பிரசுரிக்கப்பட் டிருக்கின்றன. ஸ்டிரெயிட்ஸ் செட்டில்மெண்டுகள், மலாய் நாடுகள் இவைகளிலிருந்து இந்தியர்களுள்பட வந்திறங்கும் எல்லாப் பிரயாணிகளும் தரித்திருக்கக் கூடிய சாமான்கள் விஷயமாகவும் மேலே சொல்லப்பட்ட விதிகளில் சொல்லப்பட்டிருக்கிறது. இந்த மாகாணத்திலுள்ள கடற்சுங்க இலாகா உத்தியோகஸ்தர்கள் அந்த விதிகளுக்கு மாறாக நடந்துவருவதாக கவர்ன்மெண்டார் நினைக்க இடமில்லை.

## [நவம்பர்மாதம் 11-ம் தேதி சென்னையில் நடந்த கூட்டம்]

கடுவையாறுக்குப் பாலம்.

கே:— 8. நாகப்பட்டணத்திற் கருகாமையில் கடுவையாற்றில் சமீபத்தில் ஒரு விபத்து நேர்ந்து ஏராளமாக கிறிஸ்தவ யாத்திரீகர்கள் முழுகிப்போயிருப்பதை உத்தேசித்து, உடனே அதற்குப் பாலங்கட்ட கவர்ன்மெண்டார் உத்திரவுசெய்வார்களா?

பதில்:— இந்தப் பாலம் கட்டுவதற்கு ஏற்படும் செலவில் ஒரு பாதியை மாகாண நிதியிலிருந்து கொடுக்க வேண்டுமென்று ஜில்லா போர்டு பிரசிடெண்டு விண்ணப்பம் செய்து கொண்டிருக்கிறார். அந்த வேலை விஷயமாக இப்பொழுது திட்டம் தயாராகி வருகிறது. அது தயாராகி மொத்தம் எவ்வளவு செலவு பிடிக்குமென்று தெரிந்தவுடன், கவர்ன்மெண்டார் ஜில்லா போர்டு பிரசிடெண்டின் விண்ணப்பத்தின் மேல் உத்திரவு செய்வார்கள்.

நாகப்பட்டணம் முனிசிபாலிட்டியில் தண்ணீர் வரி.

கே:—9(ஏ) ஜலசப்ளை வேலைகள் முடிவடையும் வரையில் தண்ணீர்த் தீர்வை வசூலிப்பதை நிறுத்தி வைக்க வேண்டுமென்று, நாகப்பட்டணம் முனிசிபாலிட்டியின் வரி கொடுப்போர்கள் கவர்ன்மெண்டாருக்கு ஒரு மகஜர் அனுப்பிக் கொண்டிருக்கிறார்களா?

(பி) அவ்விதம் அவர்கள் அனுப்பி யிருக்கும் பட்சத்தில், தண்ணீர் வரியைவசூலிப்பதை நிறுத்தி வைக்கும்படி கவர்ன்மெண்டார் நாகப்பட்டணம் முனிசிபாலிட்டிக்கு உத்திரவளிப்பார்களா?

பதில்:— மனுதார்கள் கோருகிற பிரகாரம் செய்ய முடியாதென்று ஏற்கனவே உத்திரவு பிறப்பித்து, அவர்களுக்கு அறிவித்தாகி விட்டது.

கே:—10 (ஏ) நாகப்பட்டணம் ஜலசப்ளை வேலைகளுக்காக தருவிக்கப்பட்ட தளவாடங்களை இறக்கும் விஷயமாக, இறக்குமதி காண்டிராக்டு டெண்டர்கள் கேட்டுவிடப்படவில்லை யென்பது வாஸ்தவமா?

நாகப்பட்டணம் ஜலசப்ளை தளவாடங்களின் இறக்குமதி.

பதில்:— டெண்டர்கள் கேட்டுவிடப் படவில்லை.

(பி) ஒரு கம்பெனிக்காரர் குறைந்த தொகைக்கு சாமான்களை இறக்கித் தருவதாகச் சொல்லியிருந்தும், வரி கொடுப்போர்கள் பணத்திலிருந்து அதிகப் பணத்தை இறக்குக்கூலியாக மற்றொரு கம்பெனிக்குக் கொடுக்கப்பட்டிருக்கிறதா?

(ஸி) டெண்டர்கள் கேட்டுவிடப்படாமலிருந்தால், மொத்தம் பல தடவைகளிலும் இறக்கப்பட்ட தளவாடங்களின் அளவு, அதற்காகக்கொடுக்கப்பட்ட கூலி விவரம், இவைகளை கவர்ன்மெண்டார் அறிவிக்கமுடியுமா?

பதில்:— கவர்ன்மெண்டாரிடம் இந்தத் தகவல்களெல்லாம் இல்லை. இவைகளைப்பற்றி விசாரணை செய்யப்படும்.

கே:— 11 (ஏ) தஞ்சாவூர் ஜில்லாவில் புதிதாக ஒரு அடிஷனல் முன்சிப் கோர்ட்டு ஏற்படப் போவது வாஸ்தவமா?

தஞ்சை ஜில்லாவுக்கு அடிஷனல் முன்சீப் கோர்ட்டு.

பதில்:— தஞ்சாவூர் ஜில்லாவில் இன்னொரு முன்சிப் கோர்ட்டை சாசுவதமாக ஏற்படுத்தும் விஷயம் இப்பொழுது கவர்ன் மெண்டாரின் ஆலோசனையி லிருந்து வருகிறது.

(பி) அவ்விதமானல், (1) அதிக நிலத்தீர்வை வசூலாகும் தாலூகாவின் தலை நகரான நன்னிலத்தில் அந்தக் கோர்ட்டை கவர்ன்மெண்டார் ஏற்படுத்துவார்களா? (2) இல்லையேல், நன்னிலம் தாலூகாவில் அதிகாரவரம்புள்ள திருவாரூர் முன்சிப் கோர்ட்டை மத்தியமாகவுள்ள நன்னிலத்திற்கு மாற்றுவார்களா?

பதில்:— 1873-ம் வருஷத்திய சென்னை ஸிவில் கோர்ட்டுகள் சட்டத்தின் 5-வது பிரிவின்படி முன்சிப் கோர்ட்டுகளை ஏற்படுத்தும் விஷயமானது ஹைகோர்ட்டாராலேயே முடிவு செய்யப்படுகிறது.

கே:—12 (ஏ) வெளியிடங்களிலுள்ள கடற்சுங்க இலாகா உத்தியோகஸ்தர்களுக்கு அதிககாலம் வேலை பார்ப்பதற்காக அலவன்ஸ் கொடுக்கப்பட்டு வருகையில், வெளியிடங்களிலுள்ள துறைமுக ஆபீஸ்களில் வேலை செய்பவர்களுக்கு 1905ம் வருஷம் முதலாக அலவன்ஸ் நிறுத்தப்பட்டு விட்டது கவர்ன்மெண்டாருக்குத் தெரியுமா?

வெளித்துறைமுகங்களிலுள்ள உத்தியோகஸ்தர்களுக்கு அதிக வேலை அலவன்ஸ்.

பதில்:—கனம் மெம்பருடைய கேள்வியில் விஷயங்கள் சரியாகச் சொல்லப்படவில்லை. கடற்சுங்க இலாகா உத்தியோகஸ்தர்களுக்குக் கொடுபடவேண்டிய அலவன்ஸ் விஷயமாக 1904-ம் வருஷத்தில் அனுஷ்டிக்கப்பட்ட தத்துவங்களை அனுசரித்து துறைமுக இலாகா உத்தியோகஸ்தர்களுக்குக்கொடுபடவேண்டிய அதிக கால வேலை அலவன்ஸ் விகிதங்கள் மாற்றப்பட்டன. இரண்டு இலாகாக்களிலும் வேலை பார்த்து வரும் குமாஸ்தாக்கள், கணக்கர்கள், மேன் பார்வை பார்க்கும் அதிகாரிகள் இவர்களுக்கு சாதாரணமாக அதிக காலம் வேலை செய்வதற்காக அலவன்ஸ்கள் கொடுக்கப்படுவதில்லை.

(பி) அவ்விதமாயின், அந்த உத்திரவைப் புனராலோசனை செய்து ஞாயிற்றுக்கிழமைகளிலும் மற்ற கவர்ன்மெண்டு விடுமுறை நாட்களிலும் கூட கஷ்டப்பட்டு வேலை செய்யும் துறைமுக இலாகா சிப்பந்திகளுக்கு வழக்கமான ஓவர்டைம் அலவன்ஸ் கொடுக்கும்படி கவர்ன்மெண்டார் உத்திரவு செய்வார்களா?

பதில்:—இப்பொழுதிருந்து வரும் உத்திரவுகளை மாற்றுவதற்கு அவசியமிருப்பதாக கவர்ன்மெண்டார் நினைக்கவில்லை.

கே:-13 (ஏ) ராமநாதபுரம் ஜில்லா முதுகளத்தூரிலுள்ள முஸ்லீம் வாசிகளிடமிருந்து சென்ற செப்டம்பர் மாதம் 12-ம் தேதி இறந்துபோன முகம்மதிய ஸ்திரீயின் பிரேதத்தைத்தோண்டிஎடுத்த விஷயமாக கவர்ன்மெண்டாருக்கு ஒரு மகஜர் கிடைத்திருக்கிறதா?

ராமநாதபுரம் ஜில்லா முதுகளத்தூரில் ஒரு முகம்மதிய ஸ்திரீயின் பிரேதத்தைத் தோண்டி எடுத்த விஷயம்.

பதில்:—கனம் மெம்பர் பிரஸ்தாபிக்கிற மகஜர் கவர்ன்மெண்டாருக்குக் கிடைத்திருக்கிறது.

(பி) அந்தப் பிரேதம் தாழ்ந்த ஜாதியினரால் (பறையர்கள்) தோண்டி எடுக்கப்பட்டது கவர்ன்மெண்டாருக்குத் தெரியுமா?

(வி) அந்தப் பிரேதத்தின் தேகபரிசோதனை ஸ்திரீ வைத்தியரால் செய்யப்படாமல் ஆண் வைத்தியரால் செய்யப்பட்டது கவர்ன்மெண்டாருக்குத் தெரியுமா?

(டி) பிரேதத்தின் தேக பரிசோதனை நடந்த பிறகு, அந்தப்பிரேதத்தின் சொந்தக்காரர்கள் அதைத் தங்களிடம் ஒப்புவித்து விடும்படி மன்றாடிக் கேட்டுக் கொண்டும், ஸ்தலத்ததிகாரிகள் அதை மறுத்துவிட்டது கவர்ன்மெண்டாருக்குத் தெரியுமா?

(இ) மேலே கண்ட விஷயங்கள் உண்மையாயின், கவர்ன்மெண்டார் விசாரணை நடத்தி, முகம்மதியர்களின் மத தர்மத்திற்கு எவ்வித பங்கமு மேற்படாமல் தக்க பந்தோபஸ்துகளைச் செய்வார்களா?

பதில்:— இது விஷயமாக கவர்ன்மெண்டாரிடம் எவ்விதத் தகவலுமில்லை. ரிபோர்ட்டு கேட்டுவிடப்பட்டிருக்கிறது.

## 1914

## [ஜனவரிமாதம் 27-ம் தேதி சென்னையில் நடந்த கூட்டம்]

நாகப் பட்டணம் வடிகால் திட்டம்.

கே:—14 (ஏ) நாகப்பட்டணம் வடிகால் வேலைகளைப் பற்றிய திட்டமானது முடிவாக கவர்ன் மெண்டாரால் ஒப்புக் கொள்ளப்பட்டு விட்டதா? அந்த திட்டத்தை சாங்கிஷன் செய்வதான உத்திரவு எப்பொழுது வெளியாகுமென்று எதிர்பார்க்கலாம்?

(பி) நகரத்தின் தற்போதைய சுகாதாரக்கேடான நிலைமையை உத்தேசித்தும், பிளேக்நோய் கூட பாவியிருப்பதைக் கருதியும், சாக்கடைத் தண்ணீர் சரியானபடி அகற்றப்படாததை மதித்தும், கூடிய சீக்கிரத்தில் வடிகால் வேலைகளை கவர்ன் மெண்டார் துவக்கம் செய்வார்களா? 1914-15-ம் வருஷத்தில் வேலையை ஆரம்பிக்கப் போதிய பணத்தை கவர்ன்மெண்டார் ஒதுக்கி வைப்பார்களா?

பதில்:—திறந்த சாக்கடைகளை ஏற்படுத்துவதென்கிற நோக்கத்துடன் ஆதியில் திட்டம் தயாரிக்க பட்டது. நாகப்பட்டணம் போன்ற இடங்களில் பூமிக்குள் சாக்கடையிருப்பது தான் சரியானதென்று இப்

பொழுது கவர்ன் மெண்டார் முடிவு செய்திருக்கிறார்கள். பிளான்களையும் திட்டங்களையும் தயாரித்தனுப்பும்படி சுகாதார எஞ்சினீரைக் கேட்டு விட்டிருப்பதுடன், 1914-15-ம் வருஷத்திலேயே சாத்தியமானால் இந்த திட்டங்களை அங்கீகரித்து பணத்தையும் ஒதுக்கி வைக்க சவுகரியமாக யிருக்கும்படி அவருடைய உத்தேச வேலைகளின் ஜாப்தாவில் இந்த வேலையை முன்னதாகப் பதிவு செய்துகொள்ளும்படிக்கும் சொல்லப்பட்டிருக்கிறது.

தூத்துக்குடி—திருநெல்வேலி ஜலசப்ளை

கே:—15. தூத்துக்குடி—திருநெல்வேலி ஜலசப்ளை திட்டம் முடிவாக ஒப்புக்கொள்ளப்பட்டு விட்டதா? அவ்விதமாயின் எப்பொழுது வேலை ஆரம்பமாகும்?

பதில்:—தாம்பரபரணி நதியிலிருந்து தூத்துக்குடி, பாளையங்கோட்டை, திருநெல்வேலி முனிசிபாலிட்டிகளுக்கு பொதுவாக ஜலசப்ளைசெய்வதற்கு 35. 24 லட்சம் ரூபாய் பிடிக்கு மென்று கணக்கிடப்பட்டிருகிறது. சட்டப்படி அந்த முனிசிபாலிட்டிகள் எவ்வளவு தீர்வை விதிக்கலாமோ அவ்வளவு தீர்வை விதிக்கவும் இடங்கொடுத்து, மாகாண கவர்ன்மெண்டார் பாதிச் செலவுகளைக் கொடுக்கிறதாயினும் கூட அந்த முனிசிபாலிட்டிகளால் அவ்வளவு செலவைத் தாங்க முடியாது. ஆயினும் தூத்துக்குடிக்கு நல்ல குடி தண்ணீரை சப்ளை செய்ய வேண்டிய அவசியத்தை உத்தேசித்து, அந்த டவுனுக்கு மட்டில் தனியாக ஒரு திட்டத்தைத் தயாரித்து வேலையை முடிக்கலாமா என்கிற விஷயம் கவர்ன்மெண்டாரின் ஆலோசனையிலிருந்து வருகிறது.

ஸ்தல ஸ்தாபனங்களில் முகம்மதியர்களுக்குப் பிரதி நிதித்துவம்.

கே:—16 (எ) 1913-ம் வருஷம் ஏப்பிரல் மாதம் 2-ம் தேதி கூடிய இந்த சட்ட சபையில் நான் கேள்விகேட்டிருப்பதையும், இந்தியா சட்டசபையில் கனம் கான் பகதூர் மீர் அஸத் அலிகான் பகதூர் செப்டம்பர் மாதம் 9-ம் தேதி கேள்விகேட்டு அதற்கு கவர்ன்மெண்டார் பதில் அளித்திருப்பதையும் அனுசரித்து, முகம்மதியர்கள் ஸ்தலஸ்தாபனங்களில் எலக்ஷன் மூலமாக பெறும்படி சில ஸ்தானங்களை கவர்ன் மெண்டார் ஒதுக்கி வைக்க முடியுமா?

பதில்:—இதுவிஷயமாக இந்தியா கவர்ன் மெண்டாரின் அபிப்பிராயம் தெரியும் வரையில் இந்த கவர்ன் மெண்டார் ஒன்றும் சொல்ல முடியாது.

(பி) அவ்விதம் செய்வது அசௌகரியமாக இருக்கும் பட்சத்தில், கவர்ன் மெண்டார் நியமனம் செய்யும் ஸ்தானங்களிலாவது சிலவற்றை

அந்தந்த இடங்களி லுள்ள முஸ்லீம்களின் ஜனத்தொகைக்குத் தக்கபடி அவர்களுக்காக ஒதுக்கிவைக்க முடியுமா?

பதில்:—ஏப்பிரல் மாதம் 2-ம் தேதி நடந்த மீட்டிங்கில் கனம் மெம்பர் கேட்டிருந்த கேள்விக்குக் கொடுத்த பதிலைவிட அதிகமாக இப்பொழுது ஒன்றும் சொல்வதற்கில்லை.

**தஞ்சை ஜில்லாவிலுள்ள சிவில்கோர்ட்டுகளில் முஸ்லிம் உத்தியோகஸ்தர்கள்**

கே:— 17 (1) அடியிற்கண்ட விவரங்களை கவர்ன்மெண்டார் அறிவிப்பார்களா:—

(ஏ) தஞ்சாவூர் ஜில்லாவில் இப்பொழுது இருந்துவரும் சிவில் கோர்ட்டுகளின் சங்கியை என்ன ?

பதில்:— ஒருடிஸ்திரிக்ட் கோர்ட்டு, 5 சப்கோர்ட்டுகள், 11 முன்சிப் கோர்ட்டுகள்.

கே:— (பி) அந்தக் கோர்ட்டுகளில் மொத்தம் வேலை பார்த்துவரும் குமாஸ்தாக்கள், அமீனுக்கள், ஆபீஸின் முக்கிய உத்தியோகஸ்தர்கள் இவர்களின் சங்கியை என்ன ?

பதில்:— அவர்களின் சங்கியை முறையே 149, 141,17 ஆகும்.

கே:— (ஸி) அந்தக் கோர்ட்டுகளில் குமாஸ்தாக்களாகவும் அமீனுக்களாகவும் வேலை பார்த்துவரும் முகம்மதியர்களின் சங்கியை என்ன ?

பதில்:— கவர்ன்மெண்டாரிடத்தில் அந்தத் தகவலில்லை.

கே:— (2) அந்தக் கோர்ட்டுகளில் வேலை பார்க்கும் மற்ற ஜாதியினரின் விகிதாசாரப்படி, குமாஸ்தாக்கள், அமீனுக்கள் வேலைகளைப் பார்க்கத் தகுதியாக இருக்கும் முகம்மதியர்களை 20 ரூபாய் சம்பளமுள்ள உத்தியோகங்களில் நியமிக்கும்படி அந்தந்த இலாகாத் தலைவர்களுக்கு கவர்ன்மெண்டார் அறிவிப்பார்களா ?

பதில்:— கனம் மெம்பர் குறிப்பிடுகிற வேலைகளுக்கு நியமனம் செய்யும் அதிகாரம் 1873ம் வருஷத்திய சென்னை சிவில் கோர்ட்டு சட்டத்தின் 22, 23 வது பிரிவுகளில் வரையறுக்கப்பட் டிருக்கிறது. அதன்படி நடக்கிறதா வென்பதைக் கண்காணிக்கும் அதிகாரம் ஹைகோர்ட்டாரைச் சேர்ந்தது. உத்தியோகங்களுக்கு விகிதாசாரமாக எவ்விதம் நியமனம் செய்ய வேண்டுமென்பதைப் பற்றி கவர்ன்மெண்டாருடைய அபிப்பிராயம் போர்டு ஸ்டாண்டிங் ஆர்டர் 128-வது பிரிவில் சொல்லப்பட்டிருக்கிறது. அதன் விவரத்தை ஹைகோர்ட்டு ஜட்ஜுகள் அறிவார்கள்.

[ஏப்பிரல் மாதம் 2-ம்தேதி சென்னையில் நடந்த கூட்டம்]

ராமனுதபுரம் ஜில்லாவிலுள்ள சில கிராமங்களில் காலராவினுல் நேர்ந்த மரணங்கள்.

கே:—18 ராமனுதபுரம் ஜில்லா இளையாங்குடி, புதூர், சாலியூர், ஆயூர், சோதுகுடி, கருஞ்சுதி இந்த கிராமங்களில் 1911, 1912, 1913ம் வருஷங்களில் கால்ராவினுல் நேர்ந்த மரணங்களின் சங்கியை என்னவென்பதை கவர்ன்மெண்டார் அறிவிப்பார்களா?

பதில்:— இதனுடன் சேர்த்திருக்கும் ஜாப்தாவில் கூடியவரையில் விவரங்கள் கொடுக்கப்பட் டிருக்கின்றன,

| கிராமங்களின் பெயர் | காலராவினுல் நேர்ந்த மரணங்கள். | | |
|---|---|---|---|
| | 1911 | 1912 | 1913 |
| இளையாங்குடி | 25 | 20 | 107 |
| சாலியூர் | தனியாக புள்ளி விவரங்களில்லை. இந்த கிராமம் இளையாங்குடி டவுனைச் சேர்ந்தது. | | |
| புதூர் | ... | 20 | ... |
| ஆயூர் (கீழையூர்) | 16 | ... | 30 |
| சோதுகுடி | 47 | ... | ... |
| கருஞ்சுதி | 2 | ... | 7 |

கே:—(பி) இந்த தாலூகாவில் முக்கியமாக மரணவிகிதங்கள் அதிகரித்து வருவதன் காரணங்களை கவர்ன்மெண்டார் விசாரித்தறிவார்களா?

கே:— (ஸி) இந்தக் கஷ்டங்களை நிவர்த்திப்பதற்குதங்களுக்கு யுக்தமாகத் தோற்றுகிற பரிகாரங்களை கவர்ன்மெண்டார் செய்வார்களா?

பதில்:— இளையாங்குடி, கீழையூர் கிராமங்களில் 1913 வருஷத்தில் மரணங்கள் அதிகம் நேர்ந்திருப்பதற்குப் பலகாரணங்கள் சொல்லப்படுகின்றன. முன்சொன்ன கிராமத்திற்கு பந்தோபஸ்தான கிணறு ஒன்றை ஏற்படுத்திக் குழாய் வைத்துக் கொடுக்க உத்தேசிக்கப்பட்டிருக்கிறது.

தஞ்சாவூரில் ஒரு முகம்மதியப் பிரேதத்தை தகனம் செய்த விஷயம்.

கே:— 19 (ஏ) பிளேக் கண்டிருக்கலா மென்கிற சந்தேகத்தின் பேரில் தஞ்சாவூரில் ஒருமுகம்மதியரின் பிரேதத்தை அதிகாரிகள் எரித்து விட்டது கவர்ன்மெண்டாருக்குத் தெரியுமா?

(பி) பிளேக் கண்டிருக்கலாமென்று சந்தேகப்படக்கூடிய சின்னங்களாவது சந்தர்ப்பங்களாவது இருக்கவில்லையென்பது வாஸ்தவமா?

(ஸி) முகம்மதியர்களின் பிரேதத்தை எரித்து விடுவது மார்க்க விரோதமான காரியமென்பது கவர்ன்மெண்டாருக்குத் தெரியுமா?

(டி) கீழ்க்கண்டமத சம்பந்தமான சடங்குகளை அதிகாரிகள் நடத்தி வைக்காமலிருந்தது நியாயமா?

(1) கழுவிக்குளுப் பாட்டுதல்.

(2) கபன் போட்டு மூடுதல்

(3) தொழுதல்

(4) பூமியில் புதைத்தல்.

(இ) இதுசம்பந்தமாக கவர்ன் மெண்டார் சகல விவரங்களுமடங்கிய ரிபோர்ட்டைக் கேட்டுவிட்டு, அதை சபையின் முன் ஆஜர்ப்படுத்துவார்களா?

பதில்:—கவர்ன் மெண்டாருக்கு ஒருதகவலும் தெரியவில்லை. இது விஷயமாக ரிபோர்ட்டு கேட்டு விடப்பட்டிருக்கிறது.

நாகப் பட்டணம் தாலுகா லோகல் பண்டு உபாத்தியா யர்களின்சம்பளபட்டுவாடா.

கே:—20 (ஏ) நாகப்பட்டணம் தாலுகா போர்டு நிர்வாகத்திற்குட்பட்ட லோகல் பண்டு படசாலை உபாத்தியாயர்கள் 11 பேர்கள் தங்களுக்குச் சம்பளம் காலாகாலத்தில் கொடுபடுவதில்லையென்று கவர்ன்மெண்டாருக்கு மகஜர் அனுப்பியிருக்கிறார்களா?

பதில்:—ஆம்.

(பி) அவ்விதமாயின், கவர்ன் மெண்டார் இவ்விஷயத்தை உடனே கவனித்து, காலாகாலத்தில் ஏழை உபாத்தியாயர்களுக்கு சம்பளம் கிடைக்கும்படி ஏற்பாடு செய்வார்களா?

பதில்:—போர்டு எலிமெண்டரி பாட சாலை உபாத்தியாயர்களின் சம்பளத்தையும் காபிடேஷன் அலவுன்சையும் சரியான காலத்தில் பட்டுவாடா செய்விக்கும் விஷயமாக 1914-ம் வருஷம் பிப்பிரவரி மாதம் 11-ம் தேதியுள்ள 275L நம்பர் கவர்ன் மெண்டு உத்திரவில் ஏற்பாடுகள் சொல்லப்பட்டிருக்கின்றன. கனம் மெம்பர் அந்த உத்திரவைப்பார்த்துக் கொள்க.

[மேமாதம் 19-ம் தேதி உதகமண்டலத்தில் நடந்த கூட்டம்.]

ராமனுத புரம் ஜில்லா முதுகளத்தூரில் ரீஒ முகம்மதிய ஸ்திரீயின் பிரேதத்தைத் தோண்டி எடுத்தவிஷயம்.

கே:—(21) 1913-ம் வருஷம் நவம்பர் மாதம் 11-ம் தேதி நடந்த இந்த சபையின் கூட்டத்தில் நான் கேட்டிருந்த 13-வது கேள்வி, அதற்கு கவர்ன் மெண்டார் அளித்த பதில் சம்பந்தமாக, கவர்ன் மெண்டார் அடியிற் கண்ட தகவல்களை அறிவிப்பார்களா:—

(எ) அந்த ஸ்திரீக்கு செய்தகுற்றத்திற்காக அவளுடைய புருஷன் விசாரணைக்குக் கொண்டு வரப்பட்டானு? விசாரணைக்குக் கொண்டுவரப்பட்டிருந்தால் கேஸின் முடிவு என்ன வாயிற்று?

பதில்:—அந்த ஸ்திரீயின் புருஷன் இ. பி. கோ. 304, 316-வது செக்ஷன் களின்படி விசாரணைக்குக் கொண்டு வரப்பட்டு விடுதலை யடைந்தான்.

கே:—(பி) பிரேதசோதனை செய்ததினுல் என்ன தெரிந்தது? தேகத்தில் காயம் பட்டிருந்ததாகவாவது அல்லது அதிக்கிரமமான காரியம் செய்யப்பட்டிருந்ததாகவாவது தெரிந்ததா?

பதில்:—இறந்து போனவளுடைய கையில் கூரிய ஆயுதத்தினுல் ஏற்பட்ட காயமும், வயிற்றில் மழுங்கலான ஆயுதத்தினுல் ஏற்பட்ட காயமும் ஆக இரண்டு காயங்கள் இருந்ததாக செஷன்ஸ் ஜட்ஜு தீர்ப்பில் சொல்லப்பட்டிருக்கிறது.

கே:—(ஸி) சப்மாஜிஸ்ரேட்டுக்கு ரிபோர்ட்டு செய்த வில்லேஜ் முன்சீபின் நடத்தையைப் பற்றி ஏதேனும் கவனம் எடுத்துக்கொள்ளப்பட்டதா? யாருடைய தகவலின் பேரில் வில்லேஜ் முன்சீப் அந்த ரிபோர்ட்டை அனுப்பினுர்?

பதில்:—வில்லேஜ் முன் சீப்பினுடைய நடத்தையைப்பற்றி நோட்டீஸ் எடுத்துக் கொண்டதாகவாவது, அல்லது அவருடைய நடத்தை நோட்டீஸ் எடுத்துக் கொள்ளத்தக்க தென்ருவது கவர்ன் மெண்டாருக்குத் தெரியவில்லை. கிராம முன்சீப்புக்கு தகவல் கொடுத்தது யாரென்று கவர்ன் மெண்டாருக்குத் தெரியாது.

கே:—(டி) முகம்மதியர்களுடைய பிரேதங்களைத் தோண்டி எடுக்க வேண்டிய அவசிய மிருந்தால், முகம்மதியர்களைக் கொண்டும், அநேகமாய் சாத்தி

யமானல் அவர்களுடைய பந்துக்களைக் கொண்டும், தோண்டி எடுக்கச் செய்ய வேண்டுமென்று இப்பொழுதாவது கவர்ன் மெண்டார் உத்திரவு செய்வார்களா?

கே:—(இ) ஸ்திரீகளின் பிரேதங்களை பரிசோதனை செய்ய வேண்டியிருந்தால் ஸ்திரீ சப்அஸிஸ்டெண்டு சர்ஜனைக் கொண்டே அதை நடத்தி வைக்க வேண்டுமென்று கவர்ன் மெண்டார் உத்திரவு செய்வார்களா?

பதில்:—அந்தந்த சந்தர்ப்பத்திற்குத் தகுந்தபடி ஸ்தலத்ததிகாரிகள் காரியங்களைச்செய்ய வேண்டியிருக்கும். ஆகவே கனம் மெம்பர் கோருகிற பிரகாரம் பொதுவாக உத்திரவு செய்துவிட முடியாது.

நாகப்பட்டணம் ஜலசப்ளை வேலைக்கு தளவாடங்களை இறக்கிய விஷயம்.

கே:— 22 நாகப்பட்டணம் ஜலசப்ளை வேலைகளுக்கு தளவாடங்களை இறக்கியதைப்பற்றி 1913-ம் வருஷம் நவம்பர் மாதம் 11-ம் தேதி கூடிய சபையில் நான் கேட்ட கேள்விக்கு கவர்ன்மெண்டார் அளித்த பதிலை அனுசரித்து, இப்பால் செய்த விசாரணையின் முடிவை சபையின் முன் ஆஜர்ப்படுத்துவார்களா ?

பதில்-— இது சம்பந்தமான தஸ்தாவேஜிகளை சபையின் முன் ஆஜர்ப்படுத்த கவர்ன்மெண்டார் தயாராகவில்லை. துறைமுக உத்தியோகஸ்தர் செய்த காரியம் முற்றிலும் சரியான தென்பதே கவர்ன்மெண்டாரின் அபிப்பிராயம்.

தஞ்சாவூரில் முகம்மதியப் பிரேதத்தை தகனம் செய்த விஷயம்.

கே:— (23) தஞ்சாவூரில் ஒரு முகம்மதியப் பிரேதத்தைத் தகனம் செய்ததைப்பற்றி ஏப்ரல் மாதம் 2-ம் தேதி கூடிய மீட்டிங்கில் நான் கேள்வி கேட்டு அதற்கு கவர்ன் மெண்டார் அளித்த பதில் சம்பந்தமாக,

(ஏ) ஜில்லா மெடிகல் ஆபீசர் தஞ்சாவூர் அஞ்சுமானி அஸம் காரியதரிசிக்கு மார்ச்சு மாதம் 9-ம் தேதி எழுதியுள்ள 65 நம்பர் கடிதத்தில் பொது ஜன நன்மையை உத்தேசித்தே அந்தப் பிரேதம் தகனம் செய்யப்பட்டதாக ஒப்புக்கொண்டிருப்பது கவர்ன்மெண்டாருக்குத் தெரியுமா ?

பதில்:— தெரியும்.

கே:— (பி) இனி முகம்மதியப் பிரேதங்களை தகனம் செய்யக்கூடாதென்று கர்வன்மெண்டார் உத்திரவு பிறப்பிப்பார்களா ?

பதில்:— 1914-ம் வருஷம் எப்ரல் மாதம் 18-ம் தேதியுள்ள 246-ம் நம்பர் கவர்ன்மெண்டு உத்திரவை கனம் மெம்பர் கவனிப்பாராக. அது சபையின் முன் ஆஜர்ப்படுத்தப்பட் டிருக்கிறது.

நாகப்பட்டணம் ரெயில்வே கம்பெனி கட்டிடங்களுக்குத் தண்ணீர் வரி.

கே:— 24 நாகப்பட்டணத்தில் தென்னிந்தியா ரெயில்வே கம்பெனி கட்டிடங்களுக்கு மட்டில் தண்ணீர் வரி விதிக்காத காரண மென்ன வென்று கவர்ன்மெண்டார் சொல்லு வார்களா? வெகு காலத்திற்கு முன்னரே அதற்காக இந்தியா கவர்ன்மெண்டின் அநுமதி கோரப்பட்டிருப் பது வாஸ்தவமா? அவ்விதமாயின் எப்பொழுது கேட்கப்பட்டது? என்காலா காலத்தில் அந்த உத்திரவைத் தருவித்துக் கொள்ளவில்லை? முனிசி பாலிட்டி எல்லைக்குள்ளிருக்கும் எல்லாக் கட்டிடங்களின் சொந்தக் காரர்களும் அந்த வரிச் சுமையை ஏற்றுக்கொண்டிருக்க ரெயில்வே கம் பெனியார் மட்டில் தண்ணீர் தெளித்து விடப்பட்டிருப்பதற்கு ஏதாவது விசேஷ காரணமுண்டா?

பதில்:— இந்தியா கவர்ன்மெண்டாருடைய அநுமதி யன்னியில் நாகப்பட்டணத்திலுள்ள ரெயில்வே சொத்துக்களுக்குத் தண்ணீர் வரியா வது சாக்கடை வரியாவது விதிக்க முடியாது. 1912-ம் வருஷத்தில் முனிசிபல் கவுன்சில் அநுமதிக்காக விண்ணப்பம் செய்துகொண்டது. அதன்மேல் முனிஸிபாலிட்டிக்கும், தென்னிந்தியா ரெயில்வே கம்பெனிக் கும்கவர்ன்மெண்டாரிட மிருந்து கடிதப் போக்குவரத்துகள் நடந்துகொண் டிருந்தன. இதற்குள்ளாக ரெயில்வே சொத்துக்களுக்கு வரி விதிக்கலாமா வென்பது போன்ற சில பொதுப்படையான பிரச்னைகள் ஏற்பட்டன. அவைகளின்மேல் இந்தியா கவர்ன்மெண்டாரைக் கேட்டுவிட்டிருக்கிறது. அவர்களுடைய உத்திரவை எதிர்பார்த்து நாகப்பட்டணத்திலும் மற்றும் சில இடங்களிலும் வரிவிதிக்கும் விஷயம் நிறுத்தி வைக்கப்பட்டிருக்கிறது.

ஸ்தல ஸ்தாபனங் களில் முகம்மதியர்க ளுக்குப் பிரதிநிதித்து வம்.

கே:— 25 (எ) 1914-ம் வருஷம் ஜனவரி மாதம் 27-ம் தேதி கூடிய சட்டசபையில் நான் 16-வது கேள்வியாகக் கேட்டு அதற்கு கவர்ன்மெண்டார் அளித்திருக்கும் பதில் சம்பந்தமாக, பர்மா முனிசிபல் சட்டத்தில் ரெங்கூன் முனிசிபல் சபையில் முகம்மதியர்கள் எலெக்ஷன் மூல மாகப் பெறுவதற்கு சிலஸ்தானங்கள் ஒதுக்கி வைக்கப்பட்டிருப்பது கவர்ன் மெண்டாருக்குத் தெரியுமா?

பதில்:— கவர்ன்மெண்டாருக்குத் தெரியும்.

கேள்வி:— (பி) இப்பொழுதாவது இந்த விஷயத்தை கவர்ன் மெண்டார் தயையுடன் கவனித்து, முகம்மதியர்களுக்குப் பிரத்தியேகமாக எலெக்ஷன் நடைபெறும்படி உத்திரவு செய்வார்களா?

பதில்:— கனம் மெம்பருக்கு ஏற்கனவே அறிவித்திருப்பது போல் இது சம்பந்தமாக இந்தியா கவர்ன்மெண்டாரின் அபிப்பிராயங்கள் தெரியும் வரையில், இந்த கவர்ன்மெண்டார் எவ்வித நடவடிக்கையும் எடுத்துக் கொள்ள முடியாது.

மாப்பிள்ளைக் கைதிகளின் விடுதலை.

கே:— 26. கவர்ன்மெண்டாருடைய உத்திரவின் மேல் இப்பொழுது பல இடங்களிலும் பந்தோபஸ்தில் வைக்கப்பட்டிருக்கும் மாப்பிள்ளை ராஜாங்கக் கைதிகளை கவர்ன் மெண்டார் விடுதலை செய்வார்களா?

பதில்:—மாப்பிள்ளை ராஜாங்கக் கைதிகள் ஒருவரும் இப்பொழுது சிறையிலில்லை. எல்லோரும் விடுதலை யாகி போலீஸ் பார்வையிலிருந்து வருகிறார்கள். அவர்களில் ஒருவர் மிகவும் பலஹீனமாக இருந்ததால் அவரை மலபாருக்குத் திரும்பி வந்துவிட சமீபத்தில் கவர்ன்மெண்டார் அனுமதித்திருக்கிறார்கள். மற்றவர்கள் விஷயத்திலும் அதேவிதமான உத்திரவு செய்ய கவர்ன்மெண்டார் தயாராக வில்லை.

முனிசிபல் கவுன்சில் எலெக்ஷன்விதிகளைத்திருத்தகமிட்டி

கே:—27. (ஏ) முனிசிபல் சபைகளுக்கு நடைபெறும் எலெக்ஷன் விதிகளையும், ஓட்டர்களுக் கிருக்கவேண்டிய யோக்கியதைகளையும் மாற்றும் விஷயமாக சில வருஷங்களுக்கு முன் பல முனிசிபல் சபைகளையும் அபிப்பிராயம் தெரிவிக்கும்படி கவர்ன்மெண்டார் கேட்டு விட்ட துண்டா?

பதில்:—கவர்ன் மெண்டார் அபிப்பிராயம் கேட்டு விட்ட துண்டு.

கே:—(பி) அவைகளிடமிருந்து கிடைத்த அபிப்பிராயங்களைப்பற்றி ஆலோசனை செய்து அந்த விதிகளைத் திருத்துவதற்கு யோசனைகள் சொல்லுவதற்காக உத்தியோகஸ்தர்களும், உத்தியோகஸ்தர்களல்லாதவர்களும், அனுபோகம் வாய்ந்த சில சேர்மன்களு மடங்கிய கமிட்டி யொன்றை கவர்ன் மெண்டார் நியமிப்பார்களா?

கே:—(ஸி) சீக்கிரத்தில் இது சம்பந்தமாக கவர்ன் மெண்டார் நடவடிக்கை எடுத்துக் கொள்ளுவார்களா?

பதில்:—முனிசிபல் சபைகள் சொல்லியுள்ள யோசனைகளின்பிரகாரம் எலெக்ஷன் விதிகளில் கவர்ன்மெண்டார் செய்யஉத்தேசிக்கும் மாறுதல்களை பொது ஜன அபிப்பிராயத்தை அறியும் பொருட்டு, 1884-ம் வருஷத்திய

ஜில்லா முனிசிபாலிட்டிகள் சட்டம் 256 (1) பிரிவின்படி போர்ட்டுசெயிண்டு ஜார்ஜு கெஜட்டில் பிரசுரிக்கப்படும். ஆகவே கனம் மெம்பர் யோசனை சொல்லுகிற பிரகாரம் ஒரு கமிட்டியை நியமிக்கவேண்டிய தவசிய மென்று கவர்ன் மெண்டார் நினைக்கவில்லை.

ஹைகோர்ட்டுஜட் ஜுகள் நியமனம்.

கே:—28 சென்னை ஹைகோர்ட்டில் புதிதாக சாங்கிஷனுகி யிருக்கும் இரண்டு ஜட்ஜு ஸ்தானங்களிலொன்றில் கவர்ன் மெண்டார் முகம்மதியரொருவரை நியமனம் செய்வார்களா?

பதில்:—டெம்பரரி ஜட்ஜுகள் நியமனவிஷயமாக இந்த கவர்ன் மெண்டார் கவர்னர் ஜெனரலுக்கு சிபார்சு தான் செய்யலாம். அது விஷயம் கனம் மெம்பருக்குத் தெரிந்ததே. அவ்விதம் சிபார்சு செய்வதில் அந்த ஸ்தானத்திற்குத் தகுதியான முஸ்லிம்கள் இருந்தால் அவர்களுடைய பாத்தியதைகளையும் கவர்ன் மெண்டார் கவனிப்பார்கள். இந்த இரண்டு ஸ்தானங்களுக்கும் திர ஆலோசித்தே சிபார்சுகள் செய்யப்பட்டு, நியமனங்களும் ஆகிவிட்டன.

தென் கன்னடம் ஜில்லாவில் நிலேஷ்வர் நதி முகத்து வார அடைப்பு.

கே:—29 (ஏ) தென் கன்னடம் ஜில்லா, காஸர் கோடு தாலுகா மிராசுதார்கள், நிலச்சுவான்தார்கள், விவசாயிகள், விவசாயத் தொழிலாளர்கள், இதரர்கள் அனைவரும் சுமார் 6-மாதங்களுக்கு முன் கடுக்காச் ்சரிக் கருகாமையில் ஆற்றின் முகத்துவாரத்தை மீண்டும் அடைத்து விட்டதினல் தங்களுக்கு ஏற்பட்டுள்ள சவுகரியத்தைக் குறிப்பிட்டு கவர்ன் மெண்டாருக்குஒரு மகஜர் அனுப்பி யிருக்கிறார்களா?

(பி) அவ்விதம் அனுப்பியிருந்தால், நிலச்சுவான்தார்களின்நன்மையை உத்தேசித்து அம்முகத்துவாரத்தை கவர்ன் மெண்டார் மூடி விடுவார்களா? அதை மூடி விடுவது சிரமமாக இருந்தால் கரைகளைப்போட்டாவது நஷ்ட மேற்படாமல் தடுக்க கவர்ன் மெண்டார் ஏற்பாடு செய்வார்களா?

பதில்:—கனம் மெம்பர் பிரஸ்தாபிக்கிற மகஜர் வந்ததாகத் தெரிய வில்லை. இருந்தாலும் கனம் மெம்பர் 15-வது கேள்விக்கு அளித்திருக்கும் பதிலைக் கவனித்துக்கொள்க. (அதனல் பாதகப்படுகிறவர்கள் ரிவினியூ போர்டாருக்கு விஞ்ஞாபனம் செய்துகொண்டிருப்பதாகத் தெரியவருகிறது. ரிவினியூ போர்டாருடைய உத்திரவு திருப்திகரமாக இல்லாவிடில், அவர்கள் கவர்ன்மெண்டுக்கு எழுதிக்கொள்ளலாம். இந்த நிலைமையில் கவர்ன் மெண்டார் தாங்களாகவே எவ்வித விசாரணையையும் நடத்த வேண்டிய தவசிய மென்று நினைக்கவில்லை.)

கே:—30 (ஏ) பாதிரிமார்கள், தனிப்பட்ட நபர்கள் இவர்களால்நடத்தப்படும் சில பள்ளிக் கூடங்கள், கலாசாலைகள் இவைகளில் முகம்மதியப் பிள்ளைகளிடம் முழுச்சம்பளமும் கேட்கப்படுவது கவர்ன்மெண்டாருக்குத்தெரியுமா?

முகம்மதியப் பிள்ளைகளுக்குப்பள்ளிக்கூடச் சம்பளம்.

பதில்:—தெரியும்.

கே:—(பி) முகம்மதிய சமூகத்தினருக்கு கல்வி அறிவில் ஆஸ்தையை உண்டு பண்ணுவதற்காக, 1912-ம் வருஷம் மேமாதம் 10-ம் தேதியுள்ள 404-ம் நம்பர் கவர்ன் மெண்டு உத்திரவை அனுசரித்து, எல்லாப்பள்ளிக்கூடங்களும் கலாசாலைகளும் முகம்மதியப் பிள்ளைகளிடத்திலிருந்து அரைச் சம்பளம் தான் வசூல் செய்ய வேண்டுமென்று கவர்ன் மெண்டார் உத்திரவு பிறப்பிவிப்பார்களா?

பதில்:— மேலே கண்டவிதிகளின்படி நடப்பதற்கு பள்ளிக்கூட மானேஜர்களுக்குத் தூண்டுதலைஉண்டுபண்ணுவதற்காக முகம்மதியப்பிள்ளைகளுக்குத் தள்ளிக் கொடுக்கப்படும் அரைச் சம்பளத்தையும் கிராண்டுடன் சேர்த்துக் கொடுத்து விடப்படு மென்று கவர்ன்மெண்டார் பள்ளிக் கூடங்களுக்குப் பொருளுதவி செய்வதை பற்றிய சட்டத்தின் 32 வது பிரிவைத் திருத்தியிருக்கிறார்கள்.

## [நவம்பர்மாதம் 20ம் தேதி சென்னையில் நடந்த கூட்டம்]

கே:— 31 (ஏ) 1904-ம் வருஷத்தில் போலீஸ் இலாகாவில் எத்தனை முகம்மதிய இன்ஸ்பெக்டர்களிலிருந்தார்கள்? ஒவ்வொரு கிரேடிலும் எத்தனை பேர்களிருந்தார்கள்?

போலீஸ் இலாகாவில் முகம்மதியர்கள்

(பி) 1914-ம் வருஷத்தில் அவர்களுடைய சங்கியை என்ன?

பதில்:— கீழே புள்ளி விவரங்கள் கொடுக்கப்பட்டிருக்கின்றன.—

| கிரேட் | 1904 | 1914 |
|---|---|---|
| I | 1 | 2 |
| II | 16 | 4 |
| III | 12 | 7 |
| IV | 14 | 10 |
| | 43 | 23 |

1904-ம் வருஷத்தில் மொத்தம் வேலை பார்த்து வந்த இன்ஸ்பெக்டர்களின் சங்கியை.......................388

1914 „ „ 292

கே:— (வி) இன்ஸ்பெக்டர் வேலைக்கு யோக்கியதையுள்ள முகம்மதிய சப் இன்ஸ்பெக்டர்கள் எத்தனைபேர்களிருக்கிறார்கள் ?

பதில்:— ஏழு பேர்க ளிருக்கிறார்கள்.

கே:— (டி) இன்ஸ்பெக்டர் அந்தஸ்துக்கு அருகதை செய்து கொள்ள 1913, 1914-ம் வருஷங்களில் பரிட்சைக்கு ஆஜராகமுடியாதபடி எத்தனை முகம்மதிய சப் இன்ஸ்பெக்டர்கள் இன்ஸ்பெக்டர் ஜெனராலால் ஒதுக்கப்பட்டார்கள் ?

கே:— (இ) அதே காலத்தில் எத்தனை ஹிந்து சப் இன்ஸ்பெக்டர்களுக்கு பரிக்ஷைக்கு ஆஜராகி அருகதை உண்டுபண்ணிக் கொள்ள இடங் கொடுக்கப்பட்டது ?

பதில்:—1913-ம் வருஷத்தில் கிரிமினல் லோயர் பரிட்சைக்கு ஆஜராக இரண்டு ஹிந்து சப் இன்ஸ்பெக்டர்களுக்கு அனுமதி கொடுக்கப்பட்டது. 1914-ம் வருஷத்தில் 8 முகம்மதிய சப் இன்ஸ்பெக்டர்களுக்கு அனுமதி கொடுக்கலாமென்று சூப்பிரின்டெண்டுகள் சிபார்சு செய்தார்கள். அவர்களில் மூவருக்கு அனுமதி கொடுக்கப்பட்டது. மற்ற ஐவருக்குக் கொடுக்கப்படவில்லை. அதே காலத்தில் ஹிந்து சப் இன்ஸ்பெக்டர்கள் 89 பேர்கள் அனுமதிக்கு சிபார்சு செய்யப்பட்டிருந்ததில் 20 பேர்களுக்கு அனுமதி கொடுக்கப்பட்டது; 69 பேர்களுக்குக் கொடுபடவில்லை.

கே:—(2) போலீஸ் இலாகா உயர்தர உத்தியோகங்களில் ஜனத்தொகைக்குத் தகுந்த வீதாசாரப்படி முகம்மதியர்களும் இருக்கும்படி பார்த்துக் கொள்ள வேண்டுமென்று கவர்ன்மெண்டார் உத்திரவு செய்வார்களா?

பதில்:—ஜனத்தொகைக் கணக்கின்படி பார்க்கப்போனால், முகம்மதியர்களுடைய ஜனத்தொகையின் வீதாசாரத்திற் கதிகமாகவே முகம்மதிய இன்ஸ்பெக்டர்கள் இருந்து வருகிறார்கள்.

ராயப்பேட்டை பட்டேரி பள்ளிவாசல் ஆக்கிரமணம்.

கே:—32. (ஏ) ராயப்பேட்டை பீடர்ஸ் சாலை பட்டேரி பள்ளிவாசல் ஆக்கிரமணத்தை விலக்கு செய்து விட வேண்டுமென்று சென்னை ராயப்பேட்டை மௌப்ரேஸ் ரோட் இஸ்லாமிய சங்கத்தார் அனுப்பியுள்ள மகஜர் கவர்ன்மெண்டுக்குக் கிடைத்திருக்கிறதா?

(பி) மகஜர் கிடைத்திருந்தால், இன்னும் இதைப்போன்ற சில கேஸ்களில் விலக்கு செய்திருப்பதை அதில் உதாரணமாக எடுத்துக் காட்டியிருப்பதை கவர்ன்மெண்டார் கவனித்தார்களா?

(ஸி) இந்தப் பள்ளிவாசல் விஷயமாகவும் கவர்ன்மெண்டார் தயை காட்டி, ஆக்கிரமணத்தை விலக்கு செய்வார்களா?

பதில்;—கனம் மெம்பர் குறிப்பிடும் சங்கத்தாரிடமிருந்து கவர்ன்மெண்டாருக்கு மகஜர் கிடைக்கவில்லை; தவிரவும் கவர்ன்மெண்டாருக்கு ஆக்கிரமணத்தைப் பற்றிய தகவலும் ஒன்றும் தெரியாது.

சென்னை ஹோபார்ட் மகம்மதியப் பெண்கள் பாடசாலை.

கே:—33. (எ) 1914-ம் வருஷம் ஜூலை மாதம் 14-ம் தேதி வெளியான "இந்தியன் பேட்ரியட்" பத்திரிகையில் "முஸ்லீம் பெண் கல்வி" என்று பிரசுரமாகியிருக்கும் வியாசத்தை கவர்ன்மெண்டார் பார்வையிட்டார்களா?

பதில்:—கவர்ன்மெண்டார் அந்த வியாசத்தை இப்பொழுது பார்வையிட்டார்கள்.

கே. (பி) 1914-ம் வருஷம் மார்ச்சுமாதம் 28-ம் தேதி ஹோபார்ட் மகம்மதியப் பெண் பாடசாலையில் பாலிகைகள் தொழுது கொண்டிருக்கையில் தலைமை உபாத்தியாயினி குறுக்கிட்டுத் தடைப்படுத்தியதாகப் புகார் கூறி சென்னை முஸ்லீம் சங்க மெம்பர்கள் அனுப்பிய மகஜரொன்று கவர்ன்மெண்டுக்குக் கிடைத்திருக்கிறதா?

பதில்:—மகஜர் கிடைத்திருக்கிறது.

கே:—(ஸி) மகஜர் கிடைத்திருந்தால், மத சம்பந்தமான தொழுகை காலத்தில் குறுக்கிட்டு தடைப்படுத்திய தலைமை உபாத்தியாயினிமீது ஏதேனும் நடவடிக்கை எடுத்துக் கொள்ளப்பட்டிருக்கிறதா?

பதில்:—இது விஷயமாக கல்வி இலாகா டைரக்டரை ரிபோர்ட்டு செய்யும்படி கேட்டுவிட்டிருக்கிறது.

நாகப்பட்டணம் தாலூகா போர்டு பிரசிடெண்டு ஸ்தானம்.

கே—34. (எ) நாகப்பட்டணம் தாலூகா போர்டுக்கு உத்தியோகஸ்தரான ஒருவரை பிரசிடெண்டாக நியமனம் செய்த விஷயமாக பல பத்திரிகைகளிலும் பல தோஷங்கள் கூறப்பட்டிருப்பதை கவர்ன்மெண்டார் கவனித்தார்களா?

பதில்:—இந்த நியமன விஷயமாக கூறப்பட்டுள்ள சில தோஷங்களை கவர்ன் மெண்டார் பார்வை யிட்டுள்ளார்கள்.

கே:—(பி) அவ்விதமாயின், ஏற்கெனவே இந்த போர்டுக்குக் கொடுபட்டிருந்த சுதந்தரத்தை மீண்டும் கவர்ன்மெண்டார் கொடுப்பார்களா? அல்லது பிரசிடெண்டைத் தெரிந்தெடுத்துக் கொள்ளும் சுதந்தரத்தையே போர்டுக்கு கவர்ன்மெண்டார் கொடுத்து விடுவார்களா?

பதில்:—இப்பொழுது செய்திருக்கும் ஏற்பாட்டை மாற்ற கவர்ன் மெண்டார் தயாராக இல்லை.

நாகப்பட்டணம் முனிசிபல் எலக்ஷன்கள்.

கே:—35. நாகப்பட்டணம் முனிசிபல் எலெக்ஷன்களில் லஞ்சம் கொடுக்கும் வழக்கம் அனுஷ்டானத்திலிருந்து வரும் விஷயமாக முனிசிபல் நிர்வாக ரிபோர்ட்டில் தஞ்சாவூர் ஜில்லாகலெக்டர் எழுதியிருந்த ஷராக்கள் விஷயமாக 1914ம் வருஷம் அக்டோபர் மாதம் 3-ம் தேதியுள்ள 1910 M உத்திரவை அனுசரித்து கவர்ன்மெண்டார் என்ன நடவடிக்கை எடுத்து கொண் டிருக்கிறார்கள்?

பதில்:— பொதுவாக எலெக்ஷன் காலங்களில் லஞ்சம் கொடுபடாமல் தடுப்பதற்கு சட்ட மியற்றி விடலாமா வென்கிற விஷயம் இப்போது கவர்ன்மெண்டின் ஆலோசனையிலிருந்து வருகிறது.

ஸ்தல ஸ்தாபனங்களில் முகம்மதியர்களுக்குப் பிரதிநிதித்துவம்.

கே:— 36. ஸ்தல ஸ்தாபனங்களில் தேர்ந்தெடுக்கப்பட வேண்டிய ஸ்தானங்களில் சிலவற்றை முகம்மதியர்களுக்காக ஒதுக்கிவைப்பதன் மூலமாக அவர்களுக்குப் பிரத்தியேகப் பிரதிநிதித்துவம் கொடுக்கும் விஷயத்தைப்பற்றி இந்தியா கவர்ன்மெண்டாரின் அபிப்பிராயம் கிடைத்து விட்டதா?

பதில்:— இது விஷயமாக இந்தியா கவர்ன்மெண்டாரின் அபிப்பிராயம் இன்னும் கிடைக்கவில்லை.

மாப்பிள்ளை ராஜாங்கக் கைதிகள்.

கே:— 37—1914-ம் வருஷம் மேமாதம் 19-ம் தேதி கூடிய சட்டசபையில் நான் கேள்வி கேட்டு கவர்ன்மெண்டார் பதில் அளித்திருப்பதின் சம்பந்தமாக, மாப்பிள்ளை ராஜாங்கக் கைதிகளை கவர்ன்மெண்டார் தங்களுடைய சொந்த இடங்களுக்குத் திரும்பிவர அனுமதித்து, தங்களுக்கு யுக்தமாகத் தோற்றுகிற காலம் வரையில் அவர்களை போலீஸ் பார்வையில் மாத்திரம் இருந்துவரும்படி உத்திரவு செய்வார்களா?

பதில்:— மாப்பிள்ளை ராஜாங்கக் கைதிகள் எவரையும் தற்போது மலபாருக்குத் திரும்பி வரும்படி அனுமதிக்க கவர்ன்மெண்டார் தயாராக இல்லை.

கே:— 38, முகம்மதியப் பையன்களிடம் அரைச் சம்பளம் வாங்கிக் கொள்ள வேண்டுமென்று நான் மேமாதம் 19-ம்தேதி கூடிய மீட்டிங்கில் கேள்வி கேட்டு அதற்கு கவர்ன்மெண்டார் அளித்திருக்கும் பதில்சம்பந்தமாக, மேலே என்ன காரியங்கள் செய்யப்பட்டிருகின்றன? தனிப்பட்ட நபர்களால் நடத்தப்பட்டு வரும் பாடசாலைகளிலும், கலாசாலைகளிலும் முகம்மதியப் பையன்களிட மிருந்து முழுச் சம்பளமும் கேட்கப்படுவது கவர்ன்மெண்டுக்குத் தெரியுமா?

முகம்மதியப் பிள்ளைகளுக்கு பள்ளிக்கூடச் சம்பளம்

பதில்:— கனம் மெம்பர் குறிப்பிடும் 'கேள்வி, பதில் சம்பந்தமாக எவ்வித மேல் நடவடிக்கையும் எடுத்துக்கொள்ள வேண்டிய அவசியமென்று தோன்ற வில்லை. ஆகவே கவர்ன்மெண்டார் எவ்வித நடவடிக்கையும் எடுத்துக் கொள்ளவில்லை. சென்னை கல்விஇலாகா விதிகளின் 93 வது பிரிவின்படி தனிப்பட்ட நபர்களின் விசாரணையிலிருக்கும் பாடசாலைகளில் சம்பள விகிதங்களை நிர்ணயம் செய்து வசூலிப்பது பெரும்பாலும் மானேஜர்களின் இஷ்டத்தைப் பொறுத்தது.

கே:— 39. தொழில் இலாகாஅதிகாரிகள் ஸ்தலத்திற்குவந்துநேரில் பார்வை யிட்டுஆலோசனை சொல்வதற்காக 10 ரூபாய் கட்டணம் கட்ட வேண்டு மென்றிருக்கிற விதியை உண்மையான விண்ணப்பதார்கள் விஷயத்தில், அவர்கள் ரிவினியூ டிவிஷனல் ஆபீஸர்களால் சிபார்சு செய்யப்பட்டிருந்தால், கவர்ன்மெண்டார் விலக்கு செய்வார்களா?

தொழில் இலாகா அதிகாரிகள் ஆலோசனை சொல்ல கட்டணம்

பதில்:— தொழில் இலாகா அதிகாரிகள் செய்யும் வேலைக்காகக் கட்டணம் விதிப்பதைப் பற்றிய குறிப்பில் 2 (1) விதியை கனம் மெம்பர் கவனிக்க வேண்டும். கட்டணம் விதிப்பதானது மனுதார்களின் சொற்ப ஆதாய மூலத்திற்குப் பெரும்பளுவாக இருக்கு மென்று தோன்றினால், கட்டணம் முழுவதையுமோ, அல்லது அதில் ஒரு பாகத்தையோ தள்ளுபடி செய்ய அதில் தொழில் இலாகா டைக்டருக்கு அதிகாரம் கொடுக்கப்பட்டிருக்கிறது. குறிப்பிட்ட கட்டணத்தைச் செலுத்து வதிலிருந்து சிலரை விலக்கு செய்வதற்காக வேறு விதிகளைச் செய்ய வேண்டிய அவசியமென்று கவர்ன்மெண்டார் நினைக்கவில்லை.

கே:— 40, தொழில் மர்மம் தெரிந்த கல்லர் தச்சர் முதலியவர்களும் இதர தொழிலாளர்களும் ஏராளமாகத் தேவையாக விருப்பதை உத்தேசித்தும், நாகப்பட்டணத்திலுள்ள ரெயில்வே பட்டரையிலும், ஜில்லாவின் மற்ற பாகங் களிலும் அவர்களுக்கு வேலைக்கு வசதிகளிருப்பதை உத்தேசித்தும், மாணவர்களைப் பயிற்சி செய்விக்க கவர்ன்மெண்டார் நாகப் பட்டணத்தில் ஒரு தொழிற் பாடசாலையை ஏற்படுத்துவார்களா?

நாகப்பட்டணத்தில் ஒரு தொழிற்பாடசாலை.

பதில்:— இப்பொழுது மதுரையில் ஒரு கவர்ன்மெண்டு தொழில் மர்மப் பாடசாலை இருந்து வருகிறது. அதை அபிவிருத்தி செய்யவும் திருத்தி அமைக்கவும் ஒரு திட்டம் கவர்ன்மெண்டாரால் அங்கீகரிக்கப்பட் டிருக்கிறது. இந்தப் பாடசாலைக்காகக் கட்டிடம் கட்டி முடிந் ததும், புதிய திட்டம் அனுஷ்டானத்திற்கு வந்துவிடும். தஞ்சா வூரிலுள்ள செயிண்டு பிரான்விஸ் ஸாவியர் தொழிற் பாடசாலையை அபி விருத்தி செய்யலாமா வென்கிற விஷயமும் கவர்ன்மெண்டாரின் ஆலோசனை யிலிருந்து வருகிறது. தென் ஜில்லாக்களில் அதிகமாக தொழிற் பள்ளிக் கூடங்களை ஏற்படுத்த இப்பொழுது கவர்ன்மெண்டாருக்கு உத்தேசமில்லை. மதுரை, தஞ்சாவூர் இந்த இடங்களிலுள்ள பாடசாலைகள் நாகப்பட்டணத் திற்கும் போதுமானது.

கே:—41. 1914-ம் வருஷம் ஏப்பிரல் மாதம் 2-ம் தேதி வரவு செலவு திட்டத்தைப் பற்றிப் பேசுகையில் நான் சொன்ன பிரகாரம், மராமத்திலாகா அடுத்த ஐந்து வருஷங்களில் செய்ய உத்தேசித்திருக்கும் வேலை களைப் பற்றி திட்டம் தயாரிக்கும்படி ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறதா ?

மராமத்திலாகா வேலைகள்.

பதில்:—கனம் மெம்பர் சொன்ன யோசனையை கவர்ன்மெண்டார் அங்கீகரிக்கக்கூடவில்லை.

கே:—42. (ஏ) ராமனுதபுரம் முதல் கிழக்கரைவரையில் ஒரு ரஸ்தா போட்டுப் பராமரித்து வரவேண்டு மென்று கிழக் கரை வாசிகள் 1914-ம் வருஷம் அக்டோபர் மாதம் 31-ம் தேதி கவர்ன்மெண்டாருக்கு ஒரு மகஜர் அனுப் பியிருக்கிறார்களா?

ராமனுதபுரம்—கிழக்கரை ரஸ்தா.

பதில்:—அனுப்பியிருக்கிறார்கள்.

கே:—(பி) மனு கிடைத்திருக்குமானல், கிழக்கரை வாசிகள் தகுந்த ரஸ்தா வில்லாமல் பெருத்த கஷ்ட நஷ்டங்களுக்காளாவதை உத்தேசித்து ரஸ்தா போடும்படி கவர்ன்மெண்டார் உத்திரவு செய்வார்களா?

பதில்:—ஸ்தல ஸ்தாபனத்தைப் பொறுத்த ஒரு விஷயத்தில் கவர்ன்மெண்டார் தலையிடத் தயாராகவில்லை.

## 1915

[பிப்பிரவரி மாதம் 2-ம் தேதி சென்னையில் நடந்த கூட்டம்]

கே:—43. (ஏ) சென்னையிலும் வெளியிடங்களிலும் பைசிக்கிள்களுக்கு விதிக்கப்படும் தீர்வையில் ஒரு ரூபாய் ஏற்றத்தாழ்ச்சி இருக்கும் விவரத்தை கவர்ன்மெண்டார் அறிவார்களா?

முனிசிபாலிட்டிகளில் பைசிகிள்களுக்கு வரி.

பதில்:—கவர்ன்மெண்டாருக்கு அது தெரியும்.

கே:—(பி) கவர்ன் மெண்டார் இவ்விஷயத்தை தீர ஆலோசித்து மாகாண முழுவதும் ஒரே விதமாக இரண்டு ரூபாய் தீர்வை விதிக்கப்படும்படி செய்வார்களா?

பதில்:—1884-ம் வருஷத்திய ஜில்லா முனிசிபாலிட்டிகள் சட்டத்தைத் திருத்தும் சம்பந்தமாக இவ்விஷயமும் ஆலோசனையிலிருந்து வருகிறது.

கே:—44. மேன்மை தங்கிய கவர்னர் மலபார் ஜில்லாவுக்கு சுற்றுப் பிரயாணம் சென்றிருந்தபோது அந்த ஜில்லா மாப்பிள்ளைகள் மருமக்கள் தாயத்திற்கு பதிலாக மக்கள் தாயமாகிய மகம்மதியலாவை ஏற்படுத்தித் தரவேண்டுமென்று மகஜர் செய்து கொண்டிருப்பதை உத்தேசித்தும், அதற்கு மேன்மைதங்கிய கவர்னர் அனுதாபத்துடன் பதிலளித்திருப்பதைக் கருதியும், 1914-ம் வருஷம் டிசம்பர் மாதம் 18-ம் தேதி நான் எழுதி யிருந்த கடிதத்திற்கு கவர்ன்மெண்டு நீதி இலாகா காரியதரிசி எனக்கு எழுதியிருக்கும் பதிலை அனுசரித்தும், அந்த சட்டத்தைக் கூடிய சீக்கிரம் திருத்துவதற்கு கவர்ன்மெண்டார் முயற்சிப்பார்களா?

மலபார் மாப்பிள்ளைகளுக்கு மகம்மதியலா.

பதில்:—உத்தேசத் திருத்தமானது சம்பந்தப்பட்டவர்களால் எவ்விதம் கருதப்படு மென்பதை அறிய ஏற்பாடுகள் செய்யப்பட்டிருக்கின்றன. மலபார் ஜில்லா கலெக்டரிடமிருந்து இது சம்பந்தமாக கவர்ன்மெண்டார் ரிபோர்ட்டை எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறார்கள்.

ஜார்ஜ் டவுன்கவ ர்ன்மெண்டு முகம்ம தீய நடுத்தரப்பாட சாலைக்கு நிலம்வாங் குதல்.

கே:—45. (ஏ) சென்னை பாரிஷ் வெங்கடாஜலய்யர் தெருவிலுள்ள மசூதிக்கு அடுத்தாற் போலிருக்கும் நிலத்தை சென்னை கார்ப்பொரேஷன்வாங்க உத்தேசித்திருப்பதை ஆட்சே பித்தும், இப்பொழுது வாடகைக் கட்டிடத்திலிருந்து வரும் கவர்ன்மெண்டு முகம்மதிய நடுத்தரப் பாட சாலைக்கு சொந்தத்தில் கட்டிடம் கட்டுவதற்காக அந்த இடத்தை வாங்கலா மென்று ஆலோசனை சொல்லியும், சென்னை ஜார்ஜ் டவுனிலுள்ள முகம்மதியர்களின் சார்பாக கௌரவ மாஜிஸ்திரேட் ஜனுப் டி. எஸ். அப்துல் காதர் சாகிப் கவர்ன்மெண்டாருக்கு ஒரு விண்ணப்பம் அனு ப்பியிருக்கிறாரா?

பதில்:—அவ்வித மனுவொன்று சமீபத்தில் கவர்ன்மெண்டாருக்குக் கிடைத்திருக்கிறது.

கே:—(பி) மகஜர் வந்திருக்கு மானால், கவர்ன் மெண்டார் இவ்விஷ யத்தை அனுகூலமாக கவனித்து, பிரஸ்தாபத்திலுள்ள நிலத்தை வாங்கி, முகம்மதியப் பாடசாலையைக் கட்டிவைக்க ஏற்பாடு செய்வார்களா?

பதில்:—இந்த விஷயம் கிரமப்படி ஆலோசிக்கப்படும்.

மன்னார் குடி பின் ட்லே கர்லேஜ்.

கே:—46. (ஏ) மன்னார் குடி பின்ட்லேல் காலேஜை பி. ஏ- VI-வது தொகுதியில் சென்னை யூனிவர் ஸிட்டி யுடன் இணை த்து விடவேண்டு மென்று மன்னார்குடி, நாகப்பட்ட ணம், திருவாரூர், திருத்துரைப் பூண்டி நகர வாசிக ளும், அவைகளைச் சுற்றிலு முள்ள கிராமாந்தரவாசிகளும், சென்னை இந் திய கிறிஸ்தவ சங்கத்தாரும் கவர்ன் மெண்டாருக்கு மகஜர் அனுப்பிக் கொண்டிருக்கிறார்களா?

பதில்:—ஆம்; அனுப்பிக் கொண்டிருக்கிறார்கள்.

கே:—(பி) செனெட்சபையார் இது சம்பந்தமாக செய்திருக்கும் சிபா ர்சை கவர்ன் மெண்டார் களிகூர்ந்து அங்கீகரிப்பார்களா?

பதில்:—பிரஸ்தாப விஷயம் ஆலோசனையிலிருந்து வருகிறது.

நாகப் பட்டணம் கீழ செட்டிப்பிடா கையைக் காலி செ ய்யும் விஷயம்.

கே:—47. சென்ற வருஷத்தில் நாகப்பட்டணம் கீழசெட்டிப் பிடாகையில் பிளேக் முதன் முதலாகக் கண்டதை உத்தேசித்து, அந்தப் பிடாகையையே காலி செய்து விடவேண்டு மென்று முனிசிபல் கவுன்சில் செப்டம் பர்மாதம்22-ம் தேதி கூடிய மீட்டிங்கில்தீர்மானம்செய்

திருக்கும் விஷயமாக, கவர்ன் மெண்டார் இந்தவருஷம் பிளேக்காணுமலிருப்பதை உத்தேசித்தும், கடல் வியாபாரத்திற்குக் குந்தகம் நேராமலிருக்க வேண்டியதை உத்தேசித்தும், அந்தப் பிடாகையைத் தெருவாரியாகப் பிரித்து நெரிசலான இடங்களிலுள்ள வீடுகளை பட்டில் எடுத்து விடும்படி ஏற்பாடு செய்வார்களா?

பதில்:—இந்தவிஷயம் கவனிக்கப்படும்.

விவசாயத்தொழில் சம்பந்தமானதுண்டுப்பிரசுரங்கள்.

கே:—48. (ஏ) பொது ஜனங்கள் உத்கிருஷ்டமானதும் ஒப்புக்கொள்ளப்பட்டதுமான இயந்திரங்களையே வாங்குவதற்கு சவுகரியமாக இருக்கும்படி தொழில் இலாகாதாரரை பல தொழில் முயற்சிகளைப் பற்றியும், பலவித இயந்திரங்களின் குறைகுணங்களைக்குறித்தும், எவ்வித ஆயில் எஞ்சினோ அல்லது ஸ்டீம் எஞ்சினோ குணமானதென்று குறிப்பிட்டும், எந்தெந்தத் தொழில்களுக்கு எந்தெந்த இயந்திரங்களை உபயோகிக்கலாமென்றும், அவைகளின் விலை விபரங்களென்னவென்று குறிப் பிட்டும் அப்போதைக் கப்போது துண்டுப் பிரசுரங்களை வெளியிட்டுவரும்படி கவர்ன்மென்டார் ஏற்பாடு செய்வார்களா?

பதில்:—தொழில்கள் சம்பந்தமாக சமாசாரம் திரட்டும் ஆபீஸை ஏற்படுத்துகையில் இந்த விஷயம் கவனிக்கப்படும்.

கே:—(பி) விவசாய இலாகாதார் இதுவரையில் வெளியிட்டிருக்கும் துண்டுப்பிரசுரங்களை ஒன்றாகத் திரட்டிப் புத்தக ரூபமாகப் பிரசுரம் செய்து அவைகளை இலவசமாகவாவது அல்லது ஏற்பட்ட கிரயத் தொகைக்காவது கவர்ன் மென்டார் விநியோகிக்க ஏற்பாடு செய்வார்களா ?

பதில்:—விவசாய இலாகாதார் ஐந்து விதமான பிரசுரங்களை வெளியிடுகிறார்கள். அவை யாவன (1) புத்தகங்கள்; (2) வருஷாந்திர ரிபோர்ட்டுகள்; (3) குறிப்பிட்ட விஷயங்களைப்பற்றிய துண்டுப் பிரசுரங்கள் (4) விவசாயிகளைப்பொறுத்த விஷயங்களைப் பற்றிய துக்கடாக்கள்; (5) விவசாய காலண்டர்.

முதற் சொன்ன மூன்றும் ஆங்கிலத்தில் அச்சிடப் பட்டு கிரயத்திற்கு விநியோகிக்கப் படுகின்றன. ஆங்கிலத்திலும் தேச பாஷைகளிலும் துக்கடாக்கள் பிரசுரிக்கப்பட்டு இலவசமாக வழங்கப் படுகின்றன. விவசாய காலண்டர் தேச பாஷைகளிலும் வெளியாகி வெகு தாராளமாக விநியோமாகிறது. ரெயில்வே புத்தகசாலைகளிலும் மற்ற இடங்களிலும் அது விற்பனைக்குத் தயாராய் இருக்கிறது.

விவசாய இலாகா பிரசுரங்களின் ஜாப்தா விவசாய காலண்டரில் சேர்க்கப் பட்டிருக்கிறது. விவசாய இலாகா உத்தியோகஸ்தர்களுக்கு

எழுதியும் தெரிந்து கொள்ளலாம். பைண்டு செய்யப்பட்டிருக்கும் துண்டுப் பிரசுரங்களின் கிரயத்தையும் பைண்டு செய்யும் கூலியையும்சேர்த்து சென்னை சேப்பாக்கத்திலுள்ள விவசாய இலாகா டைரக்டருக்கு அனுப்பி, அந்த பிரசுரங்களைத் தருவித்துக் கொள்ளலாம்.

சேலம் முனிசிபாலிடியில் முகம்மதியர்களுக்கு ஸ்தானங்கள்.

கே.—49. சேலம் முனிசிபாலிடி கவுன்சிலர்களின் மொத்த சங்கியை இருபத்தி நான்கா? அவர்களில் 18 பேர்கள் தெரிந்தெடுக்கப் படுபவர்களா? ஆறு பேர்கள் கவர்ன்மெண்டாரால் நியமிக்கப்படுபவர்களா?

பதில்:— ஆம்.

கே:—(பி) இந்த இருபத்தி நான்கு பேர்களில் இப்பொழுது முகம்மதியர்கள் எவரேனு மிருக்கிறார்களா?

பதில்:—சமீபத்தில் ஒரு முகம்மதியர் கவுன்சிலராக நியமிக்கப்பட்டிருக்கிறார்.

கே:—(ஸி) சேலம் முஸ்லீம் சங்கத்தாரும் மற்றவர்களும் தங்களுடைய பிரதி நிதியாக ஒருவரைக் குறிப்பிட்டு அவரைக் கவுன்சிலராக நியமனம் செய்ய வேண்டுமென்று சேலம் கலெக்டருக்கு இரண்டு மகஜர்களும் கவர்ன் மென்டாருக்கு ஒருமகஜரும் அனுப்பி யிருக்கிறார்களா?

கே:—(டி) அவர்களுடைய சிபார்சுகளை இதுவரையில் அலட்சியம் செய்து விட்டு முனிசிபல் சேர்மன் வேறு பேர்வழியைச் சிபார்சு செய்திருக்கிறாரா?

கே:—(இ) இது விஷயமாக சேலம் முஸ்லீம்கள் செய்து கொண்டிருக்கும் சிபார்சை கவர்ன் மெண்டார் அனுகூலமாக கவனிப்பார்களா?

பதில்:—கலெக்டருக்கு மகஜர்கள் அனுப்பப் பட்டிருக்கின்றனவா வென்று கவர்ன் மெண்டாருக்கு உத்தியோக தோரணையில் ஒரு தகவலும் தெரியாது. ஒரு முகம் மதியரை கவுன் சிலராக நியமிக்க வேண்டுமென்கிற விஷயமாக சேலம் முகம்மதிய வரி கொடுப்போர் சிலர் அனுப்பிய மகஜர் கவர்ன்மெண்டுக்கு கிடைத்து கிரமப்படி கவனிக்கப்பட்டது.

கே:—(எப்) முகம்மதிய அபேட்சர்களுக்கென்று ஒரு ஸ்தானத்தை ஒதுக்கிவைக்கும் படியாக (உதாரணமாக, கோட்டை பிரதி நிதிஸ்தானம்) சேலம் முனிசிபல் கவுன்சிலின் அமைப்பை கவர்ன்மெண்டார் மாற்றுவார்களா?

பதில்:—கனம் மெம்பர் யோசனை சொல்லுகிற பிரகாரம் சேலம் முனிசிபல் கவுன்சிலின் அமைப்பை மாற்றவேண்டியது அவசியமென்று கவர்ன் மெண்டார் நினைக்க வில்லை.

கே:—50 (ஏ) முகம்மதியப் பிரேதங்களை வழக்கம்போல் உள்ளூர் மசூதி காம்பவுண்டுக்குள் புதைக்க அனுமதி கொடுக்கவேண்டுமென்று 1915ம் வருஷம் ஜனவரி மாதம் 17ந்தேதி தூத்துக் குடி முஸ்லீம் வாசிகள் கவர்ன் மெண்டுக்கு மகஜர் செய்து கொண்டிருக் கிறார்களா?

தூத்துக் குடியில் முகம் மதியர்களின் புதை பூமி.

கே:—(பி) அவ்விதம் மகஜர் செய்துகொண்டிருந்தால் அவர்களுடைய பிரார்த்தனைகளை கவர்ன் மெண்டார் அனுகூலமாக கவனித்து வழக்கம் போல் உள்ளூர் பள்ளி ஸ்தலத்தை புதை பூமியாக உபயோகிக்க அனுமதி தருவார்களா?

பதில்:— கனம் மெம்பர் குறிப்பிடும் மகஜர் கவர்ன்மெண்டாருக்கு எட்டி யிருக்கிறது. அதைப்பற்றி கிரமப்படி ஆலோசிக்கப்படும்.

கே:—(51) 1913-ம் வருஷம் ஏப்பிரல் மாதம் 4ந்தேதி வரவுசெலவு திட்டத்தைப் பற்றி நான் பேசுகையில், கவர்ன் மெண்டு உத்தியோகஸ்தர்களுக்குக் குடியிருப்பு வசதி செய்துகொடுக்க வேண்டு மென்று தெரிவித்துக் கொண்ட விஷயமாக, மேலே என்ன நடவடிக்கைகள் எடுத்துக் கொள்ளப்பட்டிருக்கின்றன?

கவர்ன்மெண்டு உத்தியோகஸ்தர்களுக்குக் குடியிருப்பு வசதி.

பதில்:— கனம் மெம்பர் சொன்ன யோசனையை வெகு சிரத்தையுடன் கவர்ன்மெண்டார் கவனித்தார்கள். கவர்ன்மெண்டு உத்தியோகஸ்தர்கள் குடியிருப்பதற்கு தனிப்பட்ட நபர்களின் கட்டிடங்கள் இல்லாமலும், தனிப்பட்ட நபர்களால் கட்டிடங்கள் கட்டப்படுமென்று நம்ப ஹேதுவில்லாமலு முள்ள இடங்களில் எவ்வித ஆட்சேபனையு மன்னியில் கவர்ன்மெண்டு உத்தியோகஸ்தர்களுக்கு விடுகளைக் கட்டிக் கொடுக்கலா மென்று கவர்ன் மெண்டார் தீர்மானித்திருக்கிறார்கள். அவ்விதமாகவே, துரோணுஜலம், நந்தியால், தர்மாவரம், வெங்கடபுரம், ஹளூர், நாமக்கல் முதலிய இடங்களில் கவர்ன்மெண்டு உத்தியோகஸ்தர்களுக்கு வீடுகள் கட்டிக்கொடுக்கப்பட்டிருக்கின்றன. அவசியம் ஏற்படுவதற்குத் தகுந்தாற் போலகாரியங்களைச் செய்ய வேண்டுமே தவிர பொதுவாக கவர்ன்மெண்டு உத்தியோகஸ்தர்களுக்கு வீடுகளைக் கட்டிக் கொடுத்து விடுவதாக ஒப்புக் கொள்ள முடியாது.

கே:— 52 (ஏ) "கம்பவுண்டர்கள்" என்று மகுடமிட்டு சென்ற ஜூலை மாதம் 22-ம் தேதி வெளியான "ஹிந்து" பத்திரிகையிலும், 1915-ம் வருஷம் ஜனவரி மாதம் 5-ம் தேதி வெளியான "நியூ இந்தியா" பத்திரிகையிலும் பிரசுரமாகி யிருக்கும் வியாசங்களை கவர்ன்மெண்டார் பார்வையிட்டார்களா?

கம்பவுண்டர்களின் சம்பளம்.

கே:—(பி) பரீட்சை] யோக்கியதையில்லாத கவர்ன்மெண்டு உத்தியோகஸ்தர்களுக்கு 14 ரூபாய்க்கு அதிகமாக சம்பளம் கொடுக்கக்கூடாதென்றிருந்தபோதும் கம்பவுண்டர்களுக்கு மாத்திரம் அவர்கள் செய்யும் வேலையின் முக்கியத்தையும், அவர்களுக்குள்ள பொறுப்பையும் உத்தேசித்து 18-ரூபாய் வரையில் சம்பளம் கொடுக்கலாமென்று ஏற்பாடு செய்ததுண்டா? பரிக்ஷையாகாத குமாஸ்தாக்களின் சம்பளத்தை 14-ரூபாயிலிருந்து 20-ரூபாயாக 1910-ம் வருஷத்தில் உயர்த்தியபோது அந்த தாமாஷாப்படி கம்பவுண்டர்களுடைய சம்பளத்தையும் 25-ரூபாயாக உயர்த்த வேண்டு மென்று சர்ஜன் ஜெனரல் சிபார்சு செய்தும், பெருவாரியான ஸ்தல ஸ்தாபனங்கள் அதை ஒப்புக்கொண்டிருந்தும் அவர்களுடைய சம்பளம் 18-ரூபாயிலிருந்து 20-ரூபாயாகத்தான் உயர்த்தப்பட்டதா?

கே:—(ஸி) கம்பவுண்டர்கள் முக்கியமானவும் பொறுப்புள்ளவு மான வேலைகளைச் செய்ய வேண்டியிருப்பதை உத்தேசித்தும், அவர்களுக்கு விசேஷ யோக்கியதைகள் இருக்க வேண்டியதை மதித்தும், அவர்களுடைய விஷயத்தை கவர்ன் மெண்டார் அனுகூலமாக கவனித்து, அவர்களுடைய நிலைமையைத் திருப்தி கரமானதாகச் செய்வார்களா?

பதில்:—67-வது கேள்விக்கு அளித்திருக்கும் பதிலை கனம் மெம்பர் கவனிக்க வேண்டும். (இந்த உத்தியோகஸ்தர்களின் சம்பளத்தை 1911-ம் வருஷத்தில் தான் 18-ரூபாயிலிருந்து 20-ரூபாயாக உயர்த்தியிருக்கிறது. இதை த்விர பஞ்சப்படியும் கொடுக்கப்பட்டு வருகிறது. இப்பொழுது மறுபடியும் அவர்களு டைய சம்பளவிகிதத்தை மாற்ற வேண்டிய தவசியமென்று கவர்ன்மெண்டார் நினைக்கவில்லை. ஆனால் பஞ்சப்படியை நிறுத்திவிடுவதாக இருக்கும் பட்சத்தில், அவர்களுடைய மொத்த வருமானம் கொஞ்சம் உயர்த்தப் படலாம்.)

## [மார்ச்சுமாதம் 29-ம் தேதி சென்னையில் நடந்த கூட்டம்.]

தலைச் சேரியில் ஹிந்து முஸ்லீம் கலவரம்.

கே:—53. (ஏ) தலைச்சேரியிலுள்ள தீயர்களில் சிலர் இந்திய வாலண்டியர்களில் சிலரைக் கூடச்சேர்த்துக் கொண்டு 1915ம் வருஷம் பிப்பிரவரி மாதம் 27-ம்தேதி இராத்திரி 8-மணிக்கு முக்கிய ரஸ்தாவின் வழியாக தம்பட்டம அடித்துக்கொண்டு ஊர்வலமாய்ப் போனதும், நமாஸ் காலத்தில் பள்ளிவாசல் முன்பாக தம்பட்டம் கொட்டினதும் கவர்ன்மெண்டாருக்குத் தெரியுமா?

(பி) மார்ச்சு மாதம் 4-ம்தேதி மறுபடியும் தீயர்கள் பள்ளிவாசல் முன்பாக தம்பட்ட மடிக்க முயற்சி செய்ததும், ஸ்தலத்ததிகாரிகள்

தக்க நடவடிக்கை எடுத்துக் கொண்டதின் மேல் கலகம் ஏற்படுவதாக இருந்தது என்றதும் கவர்ன்மெண்டுக்குத் தெரியுமா?

பதில்:— இது விஷயமாக பத்திரிகையில் வெளியான நிருபமொன்றை கவர்ன்மெண்டார் பார்வையிட்டார்கள். உத்தியோக முறையில் அவர்களுக்கு எவ்விதத் தகவலும் கிடைக்கவில்லை.

கே:—(ஸி) மேலேகண்ட விஷயங்கள் வாஸ்தவமாக இருந்தால், பள்ளிவாசல்களுக்கு இருபுறமும் 50 கஜத்திற்குட்பட்டு தம்பட்டம்கொட்டக் கூடாதென்று கவர்ன்மெண்டார் உத்திரவு பிறப்பிவிப்பார்களா?

பதில்:—கனம் மெம்பர் யோசனை சொல்லுகிற பிரகாரம் உத்திரவு பிறப்பிவிக்க இந்த கவர்ன்மெண்டுக்கு அதிகாரமில்லை.

கம்பவுண்டர் களுக்கு சம்பள உயர்வு.

கே—54 (ஏ) இப்பொழுது கவர்ன் மெண்டு உத்தியோகஸ்தர்கள் வாங்கிக் கொண்டு வரும் பஞ்சப்படிக்கு பதிலாக அவர்களுடைய சம்பளத்தை எவ்வளவுக்குக் குறையாமலும் எவ்வளவுக்குக் அதிகப்படாமலும் உயர்த்த வேண்டுமென்று சிஷ்கரிஷை செய்தாகிவிட்டதா?

(பி) அவ்விதம் சிஷ்கரிஷை செய்திருந்தால், பிப்பிரவரி மாதம் 2-ந் தேதி நடந்த மீட்டிங்கில் நான் கேட்டகேள்விக்கு கவர்ன்மெண்டார் அளித்திருக்கும் பதிலை அனுசரித்து, கம்பவுண்டர்களுக்கும் அவர்கள் செய்துவரும் முக்கியமானவும் பொறுப்பு வாய்ந்தவுமான வேலையை உத்தேசித்து உச்ச சம்பளத்தைக் கொடுக்க கவர்ன்மெண்டார் ஏற்பாடு செய்வார்களா?

பதில்:—பஞ்சப்படியை நிறுத்திவிடலாமா வென்கிற விஷயம் இன்னமும் ஆலோசனையிலிருந்து வருகிறது. அதைப்பற்றி ஒரு முடிவான தீர்மானம் செய்யும் வரையில் கம்பவுண்டர்களுடைய சம்பள விகிதத்தை மாற்ற கவர்ன்மெண்டார் தயாராக இல்லை.

முகம்மதியப் பாடசாலைகளில் பாடப் புத்தகங்கள்,

கே:— 55. (ஏ) இஸ்லாம் மார்க்கக் கதைகள் அடங்கிய புத்தகங்களையும் பள்ளிக்கூடங்களில் பாடப் புத்தகங்களாக சேர்த்துக் கொள்ளும்படி இந்தியா கவர்ன்மெண்டார் 1914-ம் வருஷம் மே மாதம் 2-ம் தேதி ஒரு சுற்றுத்திரவு பிறப்பிவித்திருப்பது வாஸ்தவமா?

(பி) அவ்விதமாயின், முகம்மதிய மாணவர்கள் படிக்கும் பாடசாலைகளில் இஸ்லாம் மார்க்கக் கதைகளடங்கிய புத்தகங்களையும் பாடங்களாகச் சேர்த்துக் கொள்ளும்படி கவர்ன்மெண்டார் கல்வி இலாகா அதிகாரிகளுக்கு உத்திரவு செய்வார்களா?

பதில்:—கனம் மெம்பர் சொல்லுகிறது போல் சுற்றுத்திரவு பிறந்திருப்பதாக கவர்ன்மெண்டாருக்குத் தெரியவில்லை.

கே:—56 (ஏ) 1914-ம் வருஷம் எப்பிரல் மாதம் 2-ம் தேதி நடந்த மீட்டிங்கில் நான் கேட்ட கேள்விக்கு கவர்ன்மெண்டார் அளித்த பதிலை அனுசரித்து ராமனாதபுரம் ஜில்லா பரமக்குடி தாலூகா இளையாங்குடியில் தகுதியான குடித்தண்ணீர்க் கிணறைக் கட்டி குழாய் வைத்துக் கொடுக்கும் விஷயமாக என்ன ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது?

ராமனாதபுரம் ஜில்லா பரமக்குடி தாலூகா இளையாங்குடியில் குடிதண்ணீர்க் கிணறு.

(பி) இதுவரையில் எவ்வித நடவடிக்கையும் எடுத்துக் கொள்ளப்படாமலிருந்தால், அந்த இடத்தில் மறுபடியும் காலரா பரவா வண்ணம் தடுப்பதற்காக உடனே கிணறை ஏற்படுத்த கவர்ன்மெண்டார் முயற்சி எடுத்துக் கொள்ளுவார்களா?

பதில்:—கிணறுகளைக் கட்டுவதற்காக ஜில்லா போர்டுகளுக்கு கவர்ன்மெண்டார் கிராண்டு கொடுத்திருக்கிறார்கள். ஆனால் கிணறு கட்டவேண்டிய இடங்களைத் தெரிந்தெடுக்கும் பொறுப்பு ஜில்லா போர்டுகளைச் சேர்ந்தது. இளையாங்குடியில் ஜில்லா போர்டார் கிணறு கட்டிக் கொடுத்திருக்கிறார்களாவென்பது கவர்ன்மெண்டாருக்குத் தெரியாது.

கே:—57. 1914-ம் வருஷம் நவம்பர் மாதம் 20-ந் தேதி கூடிய மீட்டிங்கில் ஹோபார்ட்டு முகம்மதியப் பெண் பாடசாலைத் தலைமை உபாத்தியாயினியின் நடத்தையைப் பற்றி நான் புகார் கூறி யிருந்ததின் மேல் என்ன நடவடிக்கை எடுத்துக் கொள்ளப்பட்டிருக்கிறது?

ஹோபார்ட் முகம்மதியப் பெண் பாடசாலைத் தலைமை உபாத்தியாயினியின் பிசகு.

பதில்:—இது சம்பந்தமாக கல்வி இலாகா டைரக்டரிடமிருந்து கிடைத்த ரிபோர்ட்டின் மேல் தீர்க்காலோசனை செய்து கவர்ன்மெண்டார் தாங்கள் தலையிடவேண்டியதில்லை யென்று தீர்மானித்திருக்கிறார்கள். அந்த கவர்ன்மெண்டு உத்திரவின் பிரதி யொன்று கனம் மெம்பருக்குக் கொடுக்கப்படும்.

கே:—58. சப் ஜட்ஜு ஸ்தானத்திற்கு அருகதையுள்ள முகம்மதிய டிஸ்திரிகட் முன்சீப்புகள் எத்தனை பேர்களிருக்கிறார்களென்று கவர்ன்மெண்டார் சொல்லமுடியுமா?

முகம்மதிய சப் ஜட்ஜுகள் நியமனம்

(பி) இப்பொழுது முகம்மதிய ரொருவரும் சப் ஜட்ஜாக இல்லாததினால் ஒரு முகம்மதியரையாவது கவர்ன்மெண்டார் சப் ஜட்ஜாக நியமனம் செய்வார்களா?

பதில்:—சப் ஜட்ஜு ஸ்தானத்திற்குத் தனியாக ஏதேனும் பரிட்சை செய்யவேண்டு மென்றாவது அல்லது எவ்வளவு காலம் வேலை பார்த்திருக்க வேண்டுமென்றாவது விதியில்லை. முகம்மதிய டிஸ்திரிக்ட் முன்சிப் ஒருவர் இப்பொழுது ஆக்டிங்காக சப் ஜட்ஜு வேலை பார்த்து வருகிறார்.

உத்தம பாளையத்தில் மதப்போராட்டம்.

கே:—59 (ஏ) ஏப்பிரல் மாதம் 21-ம் தேதி இராத்திரி உத்தம பாளையத்தில் சில ஹிந்துக்கள் ஊர்வலம் போகையில் பள்ளி வாசல்களுக்கு எதிரே வெள்ளாடுகளை பலி கொடுத்தது வாஸ்தவமா? அதன் மேல் கலவர மேற்பட்டு சில முகம்மதியர்கள் அடிபட்டும் சிலர் கொல்லப்பட்டும் போனது வாஸ்தவமா?

(பி) இது விஷயமாக கவர்ன்மெண்டார் என்ன நடவடிக்கைகள் எடுத்துக் கொண்டிருக்கிறார்கள்?

பதில்:—கனம் மெம்பர் பிரஸ்தாபித்த தினத்தன்று உத்தம பாளையத்தில் ஊர்வலமாகப் போன சில ஹிந்துக்களுக்கும் உள்ளூர் முகம்மதியர்கள் சிலருக்கும் கலவரம் ஏற்பட்டது வாஸ்தவமே. அதில் இரண்டு முகம்மதியர்கள் கொல்லப்பட்டுப் போயினர். ஹிந்துக்களில் பலருக்குக் காயம். கனம் மெம்பர் கேள்வியில் சொல்லியிருப்பது கலவரத்திற்குக் காரணமென்று நம்பத்தகுந்த சாட்சியமில்லை.

(பி) ஊர்வலத்தை உடனே நிறுத்தி, கி பி கோ 144-வது செக்ஷன் படி உத்திரவு பிறப்பிவிக்கப்பட்டது. இப்பால் போலீஸார் விசாரணை நடத்தினதின் பலனாக ஹிந்துக்களில் ஒருவர் கொலைக் குற்றத்திற்காகப் பிரியாது தொடரப்பட்டிருக்கிறார். கேஸ் இன்னும் விசாரணையிலிருக்கிறது.

ஸ்தல ஸ்தாபனங்களில் முகம்மதியர்களுக்குப் பிரதிநிதித்துவம்.

கே:—60. 1914-ம் வருஷம் மே மாதம் 19-ம் தேதி கூடிய சட்டசபையில் நான் கேள்வி கேட்டு அதற்கு கவர்ன்மெண்டார் பதிலளித்திருக்கும் விஷயமாக, இப்பொழுதாவது ஸ்தல ஸ்தாபனங்களில் முகம்மதியர்களுக்காகத் தெரிந்தெடுக்கப்படவேண்டிய ஸ்தானங்கள் சிலவற்றை ஒதுக்கிவைக்கும் விஷயத்தில் இந்தியா கவர்ன்மெண்டாருடைய அபிப்பிராயம் கிடைத்து விட்டதா?

பதில்:—இன்னமும் இந்தியா கவர்ன்மெண்டாருடைய அபிப்பிராயம் கிடைக்கவில்லை.

கே.:—61 (ஏ) தூத்துக்குடியில் முகம்மதியர்களின் புதை பூமியை வைத்திருக்கவேண்டு மென்று தூத்துக்குடி முஸ்லீம்கள் 1915-ம் வருஷம் ஆகஸ்டு மாதம் 5-ம் தேதி கவர்ன்மெண்டுக்கு மகஜர் அனுப்பியிருக்கிறார்களா?

தூத்துக்குடியில் முகம்மதியர் களின் புதை பூமி.

(பி) மகஜரில் சொல்லியிருக்கும் காரணங்களை உத்தேசித்து ஏப்பிரல் மாதம் 27-ம் தேதியுள்ள 651 எம் உத்திரவை கவர்ன்மெண்டார் புனராலோசனை செய்து, முகம்மதியர்களின் மார்க்க தர்மத்தைக் காப்பதற்காக, இப்பொழுது இருக்கும் புதை பூமியை வைத்துக்கொள்ளும் படிக்காவது அல்லது வேறு சவுகரியமும் தகுதியுமுள்ள இடத்தைத் தேடிக் கொடுக்கும்படிக்காவது செய்வார்களா?

பதில்:—இது சம்பந்தமாக ஒரு மகஜர் கிடைத்து கவர்ன்மெண்டின் ஆலோசனையிலிருந்து வருகிறது.

கே:—62 (ஏ) தஞ்சாவூர் ஜில்லா போர்டில் காலவரையறையினல் காலியான ஒரு முகம்மதிய மெம்பருடைய ஸ்தானத்திற்கு, 1913-ம் வருஷம் ஏப்பிரல் மாதம் 2-ம் தேதி நடந்த மீட்டிங்கில் நான் கேட்ட 39-வது கேள்விக்கு கவர்ன்மெண்டார் உறுதி மொழி கொடுத்திருக்கையிலும், இந்த ஸ்தானத்திற்கு நியமனம் செய்யு முன்பாக நான் கவர்ன்மெண்டுக்கு சிபார்சு செய்திருக்கையிலும், நிலச்சுவான் தாரரான பிராமண வக்கீல் ஒருவர் நியமிக்கப்பட் டிருப்பது கவர்ன்மெண்டுக்குத் தெரியுமா?

தஞ்சை ஜில்லா போர்டில் முகம்மதியர்களுக்குப் பிரதிநிதித்துவம்.

(பி) தஞ்சை ஜில்லா போர்டில் கவர்ன்மெண்டாரால் நியமிக்கப்பட்ட முகம்மதிய மெம்பர் இன்னும் ஒருவர் தானிருக்கிறு ரென்பதுதெரியுமா? முகம்மதியர்களுக்குப் போதிய ஸ்தானங்களை ஒதுக்கிவைக்கும்படி கவர்ன்மெண்டார் உத்திரவு செய்வார்களா?

பதில்:— (ஏ) கனம் மெம்பருடைய விஞ்ஞாபனம் கிடைப்பதற்கு முன் காலியான கனம் மெம்பரின் ஸ்தானத்திற்கு ம-ா-ா-ஸ்ரீ பி. எஸ். நடராஜ சாஸ்திரிகள் அவர்களை நியமிக்க வேண்டு மென்று தஞ்சாவூர் ஜில்லா போர்டு பிரசிடெண்டு செய்த சிபார்சை கவர்ன்மெண்டார் அங்கீகரித்து விட்டார்கள். கனம் மெம்பரும் ஜில்லா போர்டு மெம்பராகத் தெரிந்தெடுக்கப்பட்டு விட்டார். ஆகவே, 1913-வருஷம் ஏப்பிரல் மாதம் 2-ம்தேதி நடந்த மீட்டிங்கில் கவர்ன்மெண்டார் கொடுத்த வாக்குறுதிக்கு விரோதமாக ஒன்றும் நடந்து விடவில்லை.

(பி) கனம் மெம்பருள்பட ஜில்லா போர்டில் மூன்று முகம்மதிய மெம்பர்களிருப்பது கவர்ன்மெண்டாருக்குத் தெரியும். ஆகவே, தஞ்சாவூர்

ஜில்லாவிலுள்ள முஸ்லீம் ஜனத்தொகைக்கு ஜில்லா போர்டில் போதிய பிரதிநிதித்துவ மில்லை யென்று நினைக்க இடமில்லை.

உப கேள்வி:— அவர்களில் எத்தனை பேர் கவர்ன்மெண்டாரால் நியமிக்கப்பட்டவர்கள் ?

கனம் ஸர் பி. எஸ். சிவஸ்வாமி அய்யர்:—மூன்று முகம்மதிய மெம்பர்களிருக்கிறார்கள்.

கனம் மரக்காயர்:— என்னையும் சேர்த்தா ?

பதில்:—ஆம்.

கே:— அவர்களில் தெரிந்தெடுக்கப்பட்டவர்கள் எத்தனை பேர்? கவர்மெண்டாரால் நியமிக்கப்பட்டவர்கள் எத்தனை பேர்?

பதில்:— கனம் மெம்பர் ஸிவில் ஜாப்தாவிலிருந்து அந்த விவரங்களை அறிந்து கொள்ளலாம்.

ராமனாதபுரம்—விருதுப்பட்டி ரேயில்வே

கே:— 63 (எ) ராமனாதபுரம் ஜில்லா முதுகளத்தூர் தாலூகா அபிராமம் நத்தம் வாசிகள், ராமனாதபுரத்திலிருந்து விருதுப்பட்டிருக்குப் போட உத்தேசித்திருக்கும் ரெயில் பாதையை அபிராமம் வழியாகக்கொண்டு போக வேண்டுமென்று 1915-ம் வருஷம் அக்டோபர் மாதம் 12-ம் தேதி கவர்ன்மெண்டுக்கு மகஜர் அனுப்பி யிருக்கிறார்களா ?

(பி) அவர்கள் மகஜர் அனுப்பியிருக்கும் பட்சத்தில், மகஜரில் சொல்லப்பட்டிருக்கும் விஷயங்களை உத்தேசித்தும், கிழக்கரையிலிருந்து ராமனாதபுரம் வரையில் நல்ல ரோட்டாகப் போட்டுப் பராமரித்து வரமுடியாதென்று ஜில்லா போர்டு பிரசிடெண்டு சொல்லிவிட்டதை உத்தேசித்தும், மனுதார்களுடைய கோரிக்கையை கவர்ன்மெண்டார் அனுகூலமாக கவனித்து, ராமனாதபுரத்திலிருந்து கிழக்கரை, அபிராமம் வழியாக விருதுப்பட்டிக்கு ரெயில்வே லயனைப் போடும்படி உத்திரவு செய்வார்களா ?

பதில்:— (ஏ) கனம் மெம்பர் பிரஸ்தாபித்த மகஜர் கிடைத்திருக்கிறது.

(பி) அந்த லயனை சர்வேசெய்த காலத்தில் அபிராமம் வழியாக அதைப் போடலாமா வென்கிற விஷயம் தென்னிந்தியா ரெயில்வே கம்பெனியாரால் கவனிக்கப்பட்டது. அதில் பலவித ஆட்சேபனை களிருந்ததால், அந்த யோசனை சாத்தியமில்லை யென்று விட்டுவிடப்பட்டது.

உபகேள்வி:— ராமனாதபுரமிருந்து கீழக்கரைக்கு ரெயில்வே லய்னைப் போடுவதிலுள்ள ஆட்சேபனைகள் என்ன வென்று சொல்லமுடியுமா?

கனம் ஸர் ஹாரோல்டு ஸ்டுவர்ட்—ஒரு உபகேள்விக்கு பதிலாக ஆட்சேபனைகளின் சாராம்சத்தைச் சொல்லிவிட முடியாதென்று நினைக்கிறேன். அடுத்த மீட்டிங்கில் கனம் மெம்பர் இதைப் பற்றி கேட்கும் பட்சத்தில் அதற்கு நான் பதிலளிக்கிறேன்.

தனுஷ் கோடியில் பிளேக்கண்டிறந்த முகமதியரின் பிரேதத்தை எரிக்க முயற்சித்தவிஷயம்.

கே—64 (ஏ) 1915ம் வருஷம் செப்டம்பர் மாதம் 13ந் தேதி பிளேக்கினால் தனுஷ் கோடியிலிறந்த பம்பாய் வாசியான கௌரவம் தங்கிய முகம்மதிய ரொருவரின் பிரேதத்தை தனுஷ்கோடி முஸ்லீம்களின் ஆட்சேபனையையும் கவனிக்காமல் ராமனாதபுரம் சப்மாஜிஸ்திரேட் எரித்து விடும்படி உத்திரவிட்டது கவர்ன்மெண்டாருக்குத் தெரியுமா?

(பி) அந்தப் பிரேதத்தை தோட்டிகள் தூக்கிக் கொண்டு போய் ஜெதையில் வைத்ததும், நல்ல சமயத்தில் அந்தப்பிரேதம் எரிக்கப்படாமல் காப்பாற்றப் பட்டதும் கவர்ன்மெண்டாருக்குத் தெரியுமா?

(ஸி) 1914 ம் வருஷம் ஏப்பிரல் மாதம் 18-ந்தேதியுள்ள நம்பர் 246—பி கவர்ன்மெண்டு உத்திரவை சப்மாஜிஸ்திரேட்டின் அறிவிப்புக்குக் கொண்டுவந்தும் அவர் ஒரே பிடிவாதமாக பிரேதத்தைஎரித்து விடவேண்டுமென்று வற்புறுத்தியது கவர்ன்மெண்டாருக்குத் தெரியுமா?

(டி) மேலே கண்ட கவர்ன்மெண்டு உத்திரவை கவர்ன்மெண்டார் எல்லா உத்தியோகஸ்தர்களுக்கும் அனுப்பியிருக்கிறார்களா? அப்படியானால் அவ்வுத்திரவுக்கு விரோதமாக பிரேதத்தை எரிக்கப்போன சப் மாஜிஸ்திரேட்டைப் பற்றி என்ன நடவடிக்கை எடுத்துக் கொள்ளப் பட்டிருக்கிறது?

(இ) முகம்மதியர்களுக்கு இது விஷயமாகவுள்ள பலமான உணர்ச்சியை மதித்து இனி முகம்மதியப் பிரேதங்களை எரிக்கும்படி உத்திரவிடக் கூடாதென்று கவர்ன் மெண்டார் கண்டிப்பான உத்திரவு அனுப்புவார்களா?

பதில்—(ஏ) மேற்கண்ட உத்திரவை சப்மாஜிஸ்திரேட் செய்யவில்லை, தாசில் தார் பிறப்பி வித்தார். ஜில்லா சர்ஜனுடைய யோசனையின் படியே அவர் அவ்விதம் செய்தார்.

(பி) அந்தப் பிரேதத்தை சுற்றிலுமிருந்த முகம் மதியர்கள் அதைத் தூக்கிக்கொண்டுபோக மறுத்துவிட்டபடியினால் தோட்டிகள் தகனம்செய்ய வேண்டிய இடத்திற்கு பிரேதத்தை தூக்கிக்கொண்டு போனார்கள்.

(ஸி) 1914ம் வருஷம் எப்ரல் மாதம் 18ந்தேதியுள்ள 246—பி. நெம்பர் கவர்ன்மெண்டு உத்திரவின் விவரம் தெரிந்தவுடனே தாசில்தார் தமது உத்திரவை வாபீஸ் வாங்கிக் கொண்டுவிட்டார்.

(டி) பிரஸ்தாபத்திலுள்ள கவர்ன்மெண்டு உத்திரவானது முதலெடுப்பில் தஞ்சாவூர் ஜில்லாவுக்கு வெளியே யுள்ள உத்தியோகஸ்தர்களுக்கு அனுப்பப்படவில்லை. இப்பால் எல்லா ஜில்லாக்களுக்கும் அந்த உத்திரவு அனுப்பப்பட்டிருக்கிறது.

(இ) மேலே பிரஸ்தாபித்திருக்கும் கடிதத்தில், இது சம்பந்தமான உத்திரவும் அடங்கியிருக்கிறது.

அரவங் காட்டில் இறந்து போன ஒரு முகம்மதியஸ்திரீயின் தேகபரிசோதனை.

கே:—65 (ஏ) 1915-ம் வருஷம் அக்டோபர் மாதம் 15-ம் தேதி கூனூர் அரவங்காட்டில் முகம்மதியகோஷா ஸ்திரீ தற்கொலை செய்து கொள்ளுவதற்காக அபினை விழுங்கியதும், அரவங்காடு வைத்திய உத்தி யோகஸ்தர் காப்டன் பால்டிரி அவளுக்கு சிகிச்சை செய்ததும், அவள் இறந்து போனதும், அதைப்பற்றி காப்டன் பால்ட்ரி ஒரு சர்டிபிகேட்டு கொடுத்ததும் கவர்ன்மெண்டாருக்குத் தெரியுமா?

(பி) அந்த ஸ்திரீ இறந்து போவதற்கு முன் சிகிச்சை செய்துவந்த தேர்ச்சிபெற்ற வைத்திய நிபுணர் சர்ட்டிபிகேட்டு கொடுத்திருந்தும், அக்டோபர் மாதம் 16-ம் தேதியன்று பிரேத சோதனை செய்வதற்காக போலீஸ் அதிகாரிகள் அந்தப் பிரேதத்தை லாலி ஆஸ்பத்திரிக்கு எடுத்துக் கொண்டு போனது கவர்ன் மெண்டாருக்குத்தெரியுமா?

(ஸி) ஸ்திரீடாக்டர் இல்லாததினால் 16, 17 இரண்டு தேதிகளிலும் அந்தப்பிரேதம் ஆஸ்பத்திரியிலேயே வைத்துவைக்கப்பட்டிருந்ததும், பிரேத சோதனை செய்யக்கூடிய தகுந்த ஸ்திரீ வைத்தியரைத்தருவிக்கும் செலவுகளைக் கொடுப்பதாக ஒப்புக் கொள்ளப்பட்டும் அவ்விதம் செய்யப்படாமற் போனதும் கவர்ன் மெண்டாருக்குத் தெரியுமா?

(டி) பிரேத சோதனை கடைசியாக புருஷடாக்டரால் செய்யப்பட்டது கவர்ன்மெண்டாருக்குத் தெரியுமா?

(இ) இவ்விஷயத்தைப்பற்றி கவர்ன்மெண்டார் விசாரணை செய்வதுடன், இனி இவ்வித சம்பவங்கள் நடைபெறாவண்ணம் தக்க ஏற்பாடுகளைச் செய்வார்களா?

பதில்:—(ஏ) கார்டைட் தொழிற்சாலைக் கூலியனில் ஒருமுகம்மதியப் பெண் அக்டோபர் மாதம் 15-ம் தேதி இறந்து போனாள். அபின் கொஞ்சம்

காணமற் போயிருப் பதாகத் தெரிய வந்தது. அவளிடமும் அபினை விழுங்கிய குறிகள் காணப்பட்டன. ஆனல் கெமிக்கல் எக்ஸாமினர் என்கிற பரிட்சாதிகாரி ஒருவிதக் குறியையும் காணவில்லை. அந்தக் கேஸைப்பார்வை யிடுவதற்காக ஒரு சப் அஸிஸ்டெண்டு சர்ஜன் செல்லுகையில் காப்டன்பால்ட்ரி அவரை சந்தித்து, ஒருக்கால் பிளேக் கேஸாக இருக்கலாமோ வென்று அனுமானித்து அவருடன் கூடச்சென்ருர். அவர் போனபொழுது அந்தப் பெண் சாகுந்தறு வாயிலிருந்தாள். அந்த சந்தர்ப்பத்தில் என்ன செய்யக் கூடுமோ அதை அவர் செய்தார். அவர் அந்தப்பெண்ணுக்கு சிகிச்சை செய்யவு மில்லை; சர்ட்டிபிகேட்டு கொடுத்ததாகவும் தெரியவில்லை.

(பி) அந்த மரணம் சந்தேகிக்கத் தக்கதாக யிருந்ததால், பிரேதம் ஆஸ்பத்திரிக்கு எடுத்துக் கொண்டு போகப்பட்டது. சிகிச்சை செய்யப் பட்டவிவரங்கள் மேலே சொல்லப்பட்டிருக்கின்றன.

(ஸி) மொத்தம் 20-மணிநேரம் அந்தப் பிரேதம் ஆஸ்பத்திரியிலிருந்தது. அங்கு ஸ்திரீடாக்டர் ஒருவர் தானிருந்தார். அவரைப்பிரேத சோதனை செய்யும்படி கேட்டுக் கொள்ளப்பட்டது. தேச அசௌக்கியம் காரணமாக அவர் செய்யக்கூடவில்லை. அவரிடமிருந்து பதில் கிடைத்த பிறகு கோயமுத்தூருக்காவது உதகமண்டலத்திற்காவது அனுப்ப அவகாசமில்லாமற் போய்விட்டது.

(டி) கடைசியாக புருஷடாக்டராலேயே பிரேதசோதனை செய்யப் பட்டது.

(இ) விசாரணைசெய்து பார்த்ததில் வேறு விதியில்லாததினுலேயே அவ்விதம் செய்யப்பட்டதென்று தெரியவருகிறது.

கடுவையாற்றுக்கு நாகப் பட்டணத்தில் பாலம்.

கே:—66. (ஏ) 1915-ம் வருஷம் செப்டம்பர் மாதம் 9-ம் தேதியுள்ள 1262—எல் கவர்ன்மெண்டு உத்திரவை அனுசரித்து, நாகப்பட்டணத்தில் கடுவையாற்றுக்குப் பாலங் கட்டுவதற்காக வாக்களிக்கப்பட்டிருக்கும் தொகையை 1916-17 வது வருஷத்திய வரவு செலவு திட்டத்தில் ஒதுக்கி வைக்க முடியுமா?

(பி) ஜில்லா போர்டாரும் முனிசிபல் கவுன்சிலும் செலவில் மிகுதி பாகத்தை ஒத்துக்கொள்ள சம்மதித் திருப்பதை உத்தேசித்து, 1917-ம் வருஷத்திலேயே வேலையைத் துவக்குவதற்காக பூர்வ பிடிகையான வேலைகளைச் செய்யும்படி கவர்ன்மெண்டார் ஜில்லா போர்டாருக்கு உத்திரவு செய்வார்களா?

பதில்:--கனம் மெம்பருடைய வேண்டுகோளின்படி இப்பொழுது நடந்துகொள்ள முடியாமலிருப்பதற்காக கவர்ன்மெண்டார் வருந்துகிறார்கள்.

## 1916

[பிப்பிரவரி மாதம் முதல் தேதி சென்னையில் நடந்த கூட்டம்.]

கோயமுத்தூர் சிறைச்சாலையி லிருக்கும் கைதியின் வேண்டுகோள்.

கே:----67 (ஏ) கோயமுத்தூர் மத்தியச் சிறைச்சாலையிலிருக்கும் 2603ம் நம்பர் கைதி அப்துல் ரகிமான் சாகிப் 1915ம் வருஷம் டிசம்பர் மாதம் 14-ம் தேதியிட்டு கவர்ன் மெண்டாருக்கு ஒரு மகஜர் அனுப்பியிருக்கிறாரா?

(பி) அவருடைய மனுவில் கண்டிருக்கும் காரணங்களை உத்தேசித்து கவர்ன்மெண்டார் அவரிடம் கருணை காட்டி அவரை விடுதலை செய்யும்படி உத்திரவு செய்வார்களா? அல்லது அவருடைய தண்டனையையாவது குறைப்பார்களா?

பதில்:---கனம் மெம்பர் பிரஸ்தாபித்த கைதியிடமிருந்து 1915-ம் வருஷம் டிசம்பர் மாதம் 4-ம் தேதியுள்ள மகஜர் கவர்ன்மெண்டாருக்குக் கிடைத்திருக்கிறது. ஆயினும் அவருக்கு விதிக்கப்பட்டிருக்கும் சிட்சையை மாற்றுவதற்கு எவ்வித நியாயமுமிருப்பதாக கவர்ன்மெண்டார் நினைக்கவில்லை.

போளம் ஸ்டேஷனில் ஸ்திரீ பரிசோதகர்.

கே:---68 (ஏ) பிரெஞ்சுப் பிரதேசமாகிய காரைக்காலிலிருந்து வரும் ரெயில்வே பிரயாணிகளிடம் தீர்வை விதிக்கக் கூடிய சாமான்களிருக்கின்றனவாவென்று சோதனை செய்வதற்கு பேரளம் ஜங்ஷனில் ஸ்திரீ சோதகர் இல்லாமலிருக்கும் விஷயம் கவர்ன்மெண்டாருக்குத் தெரியுமா?

(பி) பிரயாணிகளில் பெரும்பாலோர் கோஷாஸ்திரீகளாகயிருப்பதை உத்தேசித்து ஸ்திரீ பரிசோதகரொருவரை நியமிக்கும்படி கவர்ன்மெண்டார் உத்திரவு செய்வார்களா?

(ஸி) இந்த சந்தர்ப்பத்தில் அதிகச் செலவுக்கு இடங்கொடுக்கக் கூடாதென்று கவர்ன் மெண்டார் அபிப்பிராயப் படும் பட்சத்தில், கூடலூர் ஜில்லா மதல்பேட்டையில் இப்பொழுது வேலைபார்த்து வரும் இருவரில் ஒருவரையாவது இங்கு வேலை பார்க்கும்படி கவர்ன்மெண்டார் அனுப்புவார்களா?

பதில்:—பேரளம் ஜங்ஷனுக்காக பிரத்தியேகமாக ஸ்திரீ சோதகர்கள் ஸாங்கிஷன் செய்யப்படவில்லை. ஸ்திரீ சோதகர் ஒருவரை நியமிக்க வேண்டிய தவசியமென்றும் கவர்ன்மெண்டார் நினைக்கவில்லை. பிரயாணிகளின் தேகம் சோதனை செய்யப்படும் தினங்களில் சென்னமங்கலம் சவுக்கையிலுள்ள ஸ்திரீ பரிசோதகர் பேரளத்திற்கு அனுப்பப்படுகிறார். மற்ற தினங்களில் பிரயாணிகளின் மூட்டை முடிச்சுகள் தான் சோதனை செய்யப்படுகின்றன.

தனுஷ்கோடியில் முகம்மதியப் பிரேதத்தை எரிக்க முயற்சித்த விஷயம்.

கே:—69 (ஏ) தனுஷ்கோடியில் இறந்துபோன முகம்மதியரின் பிரேதத்தை எரிக்க முயற்சித்த விஷயமாக நான் 1915-ம் வருஷம் நவம்பர்மாதம் 23 ம் தேதி கூடிய மீட்டிங்கில் கேள்விகேட்டு, அதற்கு கவர்ன்மெண்டார் அளித்திருக்கும் பதிலை அனுசரித்து, அங்கிருந்த முஸ்லீம்கள் பிரேதத்தை தகனம் செய்யுமிடத்திற்குத் தூக்கிக் கொண்டுபோக மறுத்துவிட்டதாக கவர்ன்மெண்டார் சொன்னது சரிதானு வென்று திருப்தி செய்து கொண்டார்களா?

(பி) அது சம்பந்தமான தஸ்தா வேஜிகளை கவர்ன் மெண்டார் சபையின்முன் ஆஜர் படுத்துவார்களா?

பதில்:—(ஏ)கவர்ன் மெண்டார் திருப்தி செய்து கொண்டு விட்டார்கள்.

(பி) 1915ம் வருஷம் அக்டோபர் மாதம் 2ந் தேதி டிப்டி கலெக்டர் "ராவுத்தர்" என்று சொல்லிக் கொள்ளும் ஒருவரிடமிருந்து வாங்கியிருக்கும் வாக்கு மூலத்தில் சம்பந்தப்பட்ட பாகத்தை சபையின் முன்பாக ஆஜர் படுத்தப் பட்டிருக்கிறது.

## வாக்கு மூலத்தின் விவரம்

சென்ற மாதத்தில் பிளேக் கண்ட முகம்மதியப் பிணியாளர் இறந்துபோன தினத்தில் நான் இங்கிருந்தேன். அவர் பிளேக்கினுல் இறந்திருப்பதினுல் அவரை எரித்து விடுவார்களென்று பயந்து நாகப்பட்டணம் ஜனுப் அகமது தம்பி மரக்காயருக்குத் தந்தி கொடுத்தேன். அவர் உடனே எனக்கு பதில் தந்தி அனுப்பினுர். 3 மணிக்கு எனக்கு அது கிடைத்தது. அந்தத் தந்தியை நான் ஆஜர் படுத்த முடியும். சப் அஸிஸ்டென்டு சர்ஜனுக்கு அந்தத் தந்தியைக் காட்டினேன். அவர் என்னைப் பொறுத் திருக்கும்படிச் சொன்னுர். மாலை 4மணிக்குப் பிளேக் சப் அஸிஸ்டென்டு சர்ஜன் எனக்கு சொல்லி அனுப்பினுர். நான் போனதும் தம்முடைய தந்திக்குப் பதில் கிடைக்கவில்லை யென்றும், நாம் பிரேதத்தைப் புதைத்துவிட ஏற்பாடு செய்ய

லாமென்றும் சொன்னார். எங்களில் நால்வர் பிரேதத்தைத் தூக்கிக் கொண்டுபோவதென்று ஏற்பாடு செய்து கொண்டோம். நாங்கள் தூக்கிக் கொண்டு போவதற்குள் தாசில்தார் போட்டு மெயிலில் அங்கு வந்துவிட்டார். கவர்ன்மெண்டு உத்திரவு வியக்தமாக இருப்பதால் பிரேதத்தைக் எரிக்கத் தான் வேண்டுமென்றும் நாங்கள் அதைத் தூக்கிக்கொண்டு போகலாம் என்றும் சொன்னார். கவர்ன்மெண்டு உத்திரவையும் அவர் எங்களுக்குக் காட்டினார். பிரேதத்தைக் கொளுத்துவதாக யிருந்தால் நாங்கள் தூக்கிக் கொண்டு போக முடியாதென்று சொல்லி விட்டோம். முகம்மதியர்களுடைய பிரேதங்களை புதைக்கத்தான் வேண்டுமென்கிற கவர்ன்மென்டு உத்திரவு எங்களிடமில்லை. ஜனாப் அக்மது தம்பி மரக்காயருடைய தந்தி தான் எங்களிட மிருந்தது. எங்களுடைய கையிலிருந்தது அந்த ஒரு காகிதந்தான். அதைத்தான் நாங்கள் காட்டினோம். எரித்து விடுவதாக யிருந்தால் தூக்கிக் கொண்டு போகமுடியாதென்று சொல்லி விட்டுப்போய் விட்டோம். யார் பிரேதத்தை தூக்கிக் கொண்டு போனார்களென்று எனக்குத் தெரியாது. பிறகு புதைக்கிறவிடத்தில் பிரேதத்தை நாங்கள் பார்த்தோம்.

டிஸ்திரிகட் முன் சீப் சப்ஜட் ஜட்ஜுகள் நியமனம்.

கே:— 70 (ஏ) முகம்மதியர்களில் தேர்ச்சி பெற்ற வக்கீல்களும் பாரிஸ்டர்களும் ஏராளமாக இருப்பதை உத்தேசித்து, கவர்ன்மெண்டார் முகம்மதியர்களை டிஸ்திரிக்ட் முன்சிப்புகள், சப் ஜட்ஜுகள் ஸ்தானங்களுக்கு அதிகமாக நியமிப்பார்களா?

பதில்:— டிஸ்திரிக்ட் முன்சிப்புகளை நியமிக்கும் அதிகாரம் ஹைகோர்ட்டாரிட மிருக்கிறது. சபஜட்ஜு பதவிகளுக்கு முன்சிப்புகளிலிருந்தே தெரிந்தெடுக்கப் படுகிறது. தேர்ச்சி பெற்ற வக்கீல்களும் பாரிஸ்டர்களும் முகம்மதியர்களுக்குள் ஏராளமாக இருப்பதாக கனம் மெம்பர் நினைத்திருப்பது சரியல்ல.

போலீஸ் இலாகாவில் முகம்மதியரின் புள்ளி விவரங்கள்.

கே:— 71. (ஏ) இப்போது போலீஸ் இலாகாவில் இன்ஸ்பெக்டர்களாகவும், சப்இன்ஸ்பெக்டர்களாகவும் எத்தனை முகம்மதியர்களிருக்கிறார்கள்?

(பி) இதர ஜாதியினரில் இன்ஸ்பெக்டர்கள் சப் இன்ஸ்பெக்டர்கள் எத்தனை பேர்கள் இருக்கிறார்கள்?

(ஸி) சென்ற இரண்டு வருஷங்களுக்குள்ளாக சப்இன்ஸ்பெக்டர்களிலிருந்து எத்தனை பேர் இன்ஸ்பெக்டர்களாக உயர்த்தப்பட்டிருக்கிறார்கள்? அவர்களில் முகம்மதியர்கள் எத்தனை பேர்?

பதில்:— 1914-ம் வருஷம் நவம்பர் மாதம் 20-ம் தேதி நடந்த மீட்டிங்கில் கனம் மெம்பர் இதே விஷயமாகக் கேட்டிருந்த கேள்விக்கு கவர்ன்மெண்டார் புள்ளி விவரங்களை அறிவித்திருக்கிறார்கள். மறுபடியும் புள்ளிவிவரங்களைக் கேட்டுவிட வேண்டிய சந்தர்ப்பங்கள் நிகழ்ந் திருக்கின்றனவென்று கவர்ன்மெண்டார் நினைக்கவில்லை.

சந்தேகப்பட்ட நபர்களின் பதிவு.

கே:—72 (ஏ) போலீஸ் அதிகாரிகள் சில நபர்களை அவர்களுக்குத் தெரியாமல் சந்தேகப்பட்டவர்களென்றும், பிரசித்தக் குற்றவாளிகளென்றும் பதிவு செய்து கொள்ளுகிறார்களா?

(பி) அவ்விதமாயின், சம்பந்தப்பட்ட பேர்வழிகளுக்கு நோட்டீஸ் கொடுத்து அவர்களுடைய ஆட்சேபனைகளைக் கேட்டுத் தெரிந்துகொண்ட பிறகே பதிவு செய்யவேண்டு மென்று கவர்ன்மெண்டார் உத்திரவு செய்வார்களா?

பதில்:—தண்டனை யடையாத எவரையும் "பிரசித்தக் குற்றவாளி" என்று அழைப்பதில்லை. தண்டனை யடையாமல் குற்றம் புரிபவர்கள் என்று சம்சயிக்கப்படுவோர் சந்தேகிக்கப்பட்ட நபர்களாகப் பதிவு செய்யப்படுகிறார்கள். சந்தேகிக்கப்பட்ட நபர்களைப் பதிவு செய்யுமுன் அவர்களுக்கு நோட்டீஸ் கொடுப்பது உசிதமென்று கவர்ன்மெண்டார் நினைக்கவில்லை.

## [1916-ம் வருஷம் எப்பிரல் மாதம் 5ம் தேதி நடந்த கூட்டம்]

தூத்துக்குடி ஜல சப்ளை திட்டம்.

கே:— 73 (ஏ) மாகாண விதில் வேலை திட்டத்தில் "சில்லரை அபிவிருத்திகள்" என்கிற தலைப்பின் கீழ் எப் அட்டவணை 30-வது ஐட்டமாகக் காணப்படும் தூத்துக்குடி அரைகுறை ஜலசப்ளை திட்டமானது 1916-17-ம் வருஷத்தில் வேலைக்கு எடுத்துக் கொள்ளப்படுமோ வென்பதை கவர்ன்மெண்டார் அறிவிப்பார்களா?

(பி) எப் அட்டவணையில் 30, 31-வது ஐட்டங்களாகக் காணப்படும் திட்டங்களிலெதையேனும் முடிவாக கவர்ன்மெண்டார் ஒப்புக்கொண்டு விட்டார்களா? அவ்விதமாயின் எதை கவர்ன்மெண்டார் ஒப்புக்கொண்டிருக்கிறார்கள்?

(ஸி) நீண்டகாலமாக தூத்துக்குடி வாசிகள் நல்லகுடி தண்ணீருக்கு வழியில்லாமல் கஷ்டப்படுவதை உத்தேசித்து, கவர்ன்மெண்டார் சீக்கிரத்தில் ஒரு முடிவுக்கு வந்து, 1916-17-ம் வருஷத்திலேயே வேலையைத் துவக்குவதற்காக பாதிச் செலவிற்காவது 1916-17-ம் வருஷத்திய வரவு செலவு திட்டத்தில் பணத்தை ஒதுக்கி வைப்பார்களா?

பதில்:—தூத்துக்குடி நகரத்திற்கு மட்டில் ஜல சப்ளை செய்வதற்காக ரூ1,07,000க்கு 1915-ம்வருஷம்டிசம்பர் மாதத்தில் திட்டம்சாங்கிஷன் செய்யப்பட்டிருக்கிறது. யுனைட்டெட் கிங்டத்திலிருந்து (கிரேட் பிரிட்டன் ஸ்காட்லாண்டு, அயர்லாந்து இவைகள் மூன்றும் சேர்ந்தது யுனைட்டெட் கிங்டம்) குழாய்கள் வகையறா வந்து சேர்ந்தவுடன் வேலை துவக்கப்படும். இந்த ஏற்பாட்டை தாம்ரபரணியிலிருந்துஆதியில் ஜலம் கொண்டு வர போடப்பட்டிருந்த திட்டத்துடன் சேர்த்து விடப்படும். அதற்கான பிளான்கள், திட்டங்கள் முதலியன இப்பொழுது பரிசீலனையிலிருந்து வருகின்றன. இந்த அரைகுறையான திட்டத்திற்கு இங்கிலாந்திலிருந்து தருவிக்கவேண்டிய சாமான்களின் கிரயம் இந்த வருஷத்திய திட்டத்தில் ஒதுக்கி வைக்கப்படும். ஆதி திட்டத்தின்படி வேலைசெய்தால் எல்லா இடங்களுக்கும் வேண்டிய ஜலம் தட்டாமல் கிடைக்குமா வென்கிற விஷயம் இப்பொழுது பரிசீலனையிருந்துவருகிறது.

சிலோனுக்குச் செல்லும் பிரயாணிகள், கூலிகளுக்கு கோரண்டைன் நிர்ப்பந்தங்கள்.

கே:—74. சிலோனுக்குச் செல்லும் இந்தியப் பிரயாணிகளுக்கு மண்டபத்தில் விதிக்கப்படும் கோரண்டைன் நிர்ப்பந்தங்களைப்பற்றி கனம் ராவ்பகதூர் எம். ராமச்சந்திரராவால் 1915-ம் வருஷம் நவம்பர் மாதம் 27-ம் தேதி நடந்த கூட்டத்தில் கொண்டுவரப்பட்டு கவர்ன்மெண்டாரால் அங்கீகரிக்கப்பட்டிருக்கும் தீர்மான சம்பந்தமாக,

(ஏ) அந்த விதிகளை வாபீஸ் வாங்கிக் கொள்ளும்படி செய்யவோ அல்லது மாற்றவோ கவர்ன்மெண்டார் என்ன செய்திருக்கிறார்கள் ?

(பி) இதுவரையில் ஒன்றும் செய்யாதிருந்திருப்பின் இனியாவது இந்த முக்கிய விஷயத்தைப் பற்றிக் கொஞ்சமும் காலதாமதமன்னியில் சிலோன் கவர்ன்மெண்டுடன் இந்த கவர்ன்மெண்டார் கலந்துகொண்டு தக்க ஏற்பாடுகளைச் செய்வார்களா?

பதில்:—சிலோன் கோரண்டைன் விதிகள் விஷயமாக சிலோன் கவர்ன்மெண்டாருக்கு 1915-ம் வருஷம் நவம்பர் மாதத்தில் கடிதம் எழுதப்பட்டது. அந்த கவர்ன்மெண்டாரிடமிருந்து சமீபத்தில் பதில் கிடைத்திருக்கிறது. அது இப்பொழுது கவர்ன்மெண்டாருடைய ஆலோசனையிலிருந்து வருகிறது.

முகம்மதியப் பிள்ளைகளுக்குப் பாடசாலைச் சம்பளம்.

கே:—75. 1914-ம்-வருஷம் மேமாதம் 19-ம் தேதி கூடிய சட்டசபையில் முகம்மதியப் பிள்ளைகளிடமிருந்து எல்லாப் பள்ளிக்கூடங்களிலும் கலாசாலைகளிலும் அரைச் சம்பளம் தான் வாங்கிக்கொள்ள வேண்டுமென்று உத்திரவு செய்ய வேண்டுமாய் நான் கேள்வி கேட்டு கவர்ன்மெண்டார் அதற்கு பதில் அளித்திருப்பதை அனுசரித்து, தனிப்பட்ட

நபர்களும் பாதிரிமார்களும் தாங்கள் நடத்திவரும் பாடசாலைகளில் கிராண்டு சட்டம் 32-வது விதியில் செய்யப்பட்டிருக்கும் திருத்தப்படி நடந்து கொள்ளாததினால் அவர்கள் அரைச் சம்பளம் தான் வாங்கிக் கொள்ளலாமென்று கவர்ன்மெண்டார் வியக்தமாக ஒரு உத்திரவு செய்து விடுவார்களா?

பதில்:—அவ்வித உத்திரவு பிறப்பி விப்பதானது மாணவர்களிடமிருந்து சம்பளம் வாங்கும் விஷயத்தில் பள்ளிக்கூட மானேஜர்களுக்குள்ள சுதந்தரத்தை பாதிக்குமாதலால் கவர்ன்மெண்டார் அவ்விதம் செய்யத் தயாராகவில்லை.

கே:—76 (ஏ) முத்துப்பேட்டையில் கோரையாறு மிகவும் தூந்து போய் அதன் பலனாக வியாபாரம் தடைப்பட்டிருப்பது கவர்ன்மெண்டாருக்குத் தெரியுமா?

முத்துப் பேட்டையில் கோரையாறு வெட்டு.

(பி) கவர்ன்மெண்டார் அனுமதி தந்தால் முத்துப் பேட்டையிலுள்ள வியாபாரிகள் தங்களுடைய சொந்தச் செலவிலேயே அந்த ஆற்றை வெட்டி விடத் தயாராக விருப்பது கவர்ன்மெண்டாருக்குத் தெரியுமா?

(ஸி) அந்த விவரங்கள் தெரியுமாயின், வியாபாரத்தைப் பெருக்க வேண்டிய அவசியத்தை முன்னிட்டு அந்த ஆற்றை வெட்டும்படி கவர்ன்மெண்டார் உத்திரவு செய்வார்களா?

பதில்:—இந்த விஷயம் கவர்ன்மெண்டாருடைய ஆலோசனையிலிருந்து வருகிறது. முத்துப்பேட்டை வியாபாரிகள் சொல்லும் யோசனை உசிதமானதாவென்று கவர்ன் மெண்டார் விசாரணை செய்து வருகிறார்கள்.

கே:—77 (ஏ) ரிவினியூ டிபார்ட்டுமெண்டிலும் இதர டிபார்ட்டுமெண்டுகளிலும் வேலை செய்து வரும் பியூன்கள் வெளியூர்களுக்குச் செல்லும் காலங்களில் அவர்களுக்கு தினமானம் இரண்டணாத்தான்படி கொடுக்கப் படுகிறதென்பது வாஸ்தவமா?

ரிவினியூ டிபார்ட்டுமெண்டிலும் இதர டிபார்டு மெண்டுகளிலும் வேலை செய்யும் சேவகர்களுக்குப் படி.

(பி) மலபார் ஜில்லாவில் சேவகர்களுக்கு தினமானம் 4 அணா படி கொடுபட்டு வருகிறதா?

(ஸி) நீண்டகாலத்திற்கு முன் தானியங்கள் வகையறாவின் விலை இப்பொழுதிருப்பதை விட வெகு குறைவாக இருந்தபோது அந்த விகிதங்கள் நிஷ்கரிஷை செய்யப்பட்டிருப்பதை உத்தேசித்து, அதை தினமானம் 6 அணாவாக கவர்ன்மெண்டார் உயர்த்துவார்களா?

பதில்:—(ஏ) ஆம். பொதுவாக இரண்டணு விதம்தான் படி கொடுக்கப்பட்டு வருகிறது. சில விசேஷபிராந்தியங்களில் அதிகப் படியும்கொடுக்கப்பட்டு வருகிறது.

(பி) மலபாரில் வயனுடைத் தவிர மற்ற இடங்களில் 4 அணு விதம் படி கொடுக்கப்பட்டு வருகிறது. வயனட்டில் அதைவிட அதிகமாகப் படி கொடுக்கப்பட்டு வருகிறது.

(ஸி) பிரயாணத்தில் ஏற்படும் செலவுகளுக்கு சரிக்கட்டிக் கொண்டு போகத்தான் கவர்ன்மெண்டு உத்தியோகஸ்தர்களுக்குப் படி கொடுக்கப்பட்டு வருகிறது. உணவுப் பொருள்களின் விலையேற்றத்திற்காக படி விகிதங்களையும் உயர்த்த வேண்டிய தவசியமென்று கவர்ன்மெண்டார் நினைக்கவில்லை. உணவுப்பொருள்களின் விலை அதிகமாக இருக்குமிடங்களில், பஞ்சப்படி மூலமாகவோ, சம்பளத்தை உயர்வு செய்தோ அவர்களுக்குப் பரிகாரம் செய்யப்படுகிறது.

[நவம்பர் மாதம் 21-ம் தேதி சென்னையில் நடந்த கூட்டம்.]

மண்டபம் கோரண்டைன் காம்பில் இந்தியப் பிரயாணிகள் படும்பாடு.

கே:—78 (ஏ) மண்டபம் கோரண்டைன் காம்பில் தாங்கள் படும் கஷ்டங்களையும் அசவுகரியங்களையும் குறிப்பிட்டு ராமனுதபுரம் ஜில்லா தேவிப்பட்டணம் முஸ்லீம் வாசிகள் 1916-ம் வருஷம் ஜுன் மாதம் 22-ம் தேதி கவர்ன்மெண்டாருக்கு ஒரு மகஜர் அனுப்பியிருக்கிறார்களா?

(பி) அவ்விதம் அவர்கள் மகஜர் அனுப்பிக்கொண்டிருந்தால், அதன் மேல் கவர்ன்மெண்டார் உடனே நடவடிக்கை எடுத்துக் கொள்ளுவார்களா?

பதில்:—(ஏ) மகஜர் கிடைத்திருக்கிறது.

(பி) 45-வது கேள்விக்குக் கொடுபட்டிருக்கும் பதிலை கனம் மெம்பர் பார்த்துக் கொள்ளவும்.

45-வது கேள்விக்கு பதில்:—ஸிலோன் கவர்ன்மெண்டுக்கு இந்த கவர்ன்மெண்டார் மறுபடியும் தெரிவித்துக் கொண்டதின்மேல், ஸிலோன் கோரண்டைன் விதிகளில் அடியிற்கண்ட மாறுதல்கள் செய்யப்பட்டிருக்கின்றன:—

(1) அடுத்த வருஷத்துவக்கத்தில் சாசுவதமாக வேறு காம்பு கட்டப்படும் வரையில் தான் ஆள் அடையாளத்திற்காக முத்திரை குத்தப்படும். அதற்குப் பிறகு வேறு ஏற்பாடுகள் செய்யப்படும்.

(2) கோரண்டைனுக்கு பதிலாக எல்லா வகுப்புப் பிரயாணிகளிடமிருந்தும் ஆரோக்கிய சரீரி என்றும், தொத்து வியாதிகளில்லாதவரென்றும் சர்ட்டிபிகேட்டுகளை விலோன் அதிகாரிகள் ஏற்றுக் கொள்ளுவார்கள். தனிப்பட்ட நபர்களுக்கு ரூ 5-ம் குடும்பத்தினருக்கு ரூ 8-ம் வாங்கிக்கொண்டு அத்தகைய சர்ட்டிபிகேட்டுகளைக் கொடுக்க ஜில்லா சர்ஜன்களுக்கு அதிகாரம் கொடுக்கப்பட்டிருக்கிறது.

(3) இந்த காம்பில் ஏற்கனவே அம்மை குத்திக்கொண்டிருப்பவர்களை மீண்டும் அம்மை குத்திக் கொள்ளும்படி வற்புறுத்தப்படமாட்டாது. இந்த காம்பில் அம்மை குத்தியவர்களின் ஜாப்தாவொன்று வைக்கப்பட்டிருக்கிறது. மற்ற கேஸ்களில் ஏற்கனவே அம்மை வைக்கப்பட்டிருப்பதாக ருஜுக்கள் ஆஜர்ப்படுத்தப்படும் பட்சத்தில், அவைகளின்மேல் பரிசோதனை செய்து பார்க்கப்படும். தழும்பு அடையாளங்கள் திருப்திகரமாக இருந்தால் மறுபடியும் அம்மை குத்திக் கொள்ளும்படி வற்புறுத்தப்படமாட்டாது.

(4) முத்திரைக் கட்டணம் ரூ 1 இப்பொழுது வாங்கப்படுவதில்லை; டிபாசிட்டும் கிலிப்தமாகக் கேட்கப்படமாட்டாது.

(5) அடியிற்கண்ட கவர்ன்மெண்டு உத்தியோகஸ்தர்களை தங்களுடைய காம்பைப் பார்வையிடும் உத்தியோகஸ்தர்களாக நியமனம் செய்ய விலோன் கவர்ன்மெண்டார் சம்மதித்திருக்கிறார்கள்:—

சர்ஜன் ஜெனரல்.

போலீஸ் இன்ஸ்பெக்டர் ஜெனரல்.

ராமநாதபுரம் டிஸ்திரிக்ட்மாஜிஸ்திரேட்.

சுகாதாரக் கமிஷனர்.

திருச்சி போலீஸ் டிப்டி இன்ஸ்பெக்டர் ஜெனரல்.

ராமநாத புரம் போலீஸ் சூப்பரின்டெண்டு,

ராமநாத புரம் டிஸ்டிரிக்ட் சர்ஜன்.

ராமநாத புரம் சப்டிவிஷனல் மாஜிஸ்திரேட்.

சென்னை கவர்ன் மெண்டாரால் ஸ்பெஷலாக அனுப்பப்படும் வேறு எந்த உத்தியோகஸ்தரும்,

(6) திருத்தப் பட்ட விதிகளை அட்டவணையில் காணலாம்.

(7) இது சம்பந்தமான கடிதப் போக்குவரவுகளை கவர்ன் மெண்டார் சபையின்முன் ஆஜர் படுத்த முடியாது.

கடப்பை ஜில்லாபத்வேலில் பள்ளிவாசலுக்கு எதிராக ஊர்வலம்.

கே:—79 (ஏ) கடப்பை ஜில்லா பத்வேலில் ஹிந்துக்கள் 1916ம் வருஷம் மேமீ 7ம்-தேதி பள்ளிவாசலுக்கெதிரே பண்ணி ஊர்வலம் நடத்தியதை ஆக்ஷேபித்து அந்த ஊர் முஸ்லீம் வாசிகள் கவர்ன் மெண்டாருக்கு ஒரு மகஜர் அனுப்பி யிருக்கிறார்களா?

(பி) அவ்வித மகஜர் கிடைத் திருந்தால் அதன் மேல் கவர்ன் மெண்டார் என்ன நடவடிக்கை எடுத்துக் கொண்டிருக்கிறார்கள்?

பதில் (ஏ) மகஜர் கிடைத்திருக்கிறது.

(பி)1916ம் வருஷம் ஜூலை மாதம் 17ம் தேதியுள்ள 1800ம் நம்பர் (ஜூடிஷியல்) கவர்ன் மெண்டு உத்திரவை கனம் மெம்பர் பார்த்துக் கொள்ளவும். அந்த உத்திரவு சபையின் முன்பாக ஆஜர் படுத்தப் பட்டிருக்கிறது.

கூனூர் முனிசிபல் சபையில் அதிக இந்தியக்கவுன்சிலர்கள்.

கே:—80 (ஏ) கூனூர் முனிசிபாலிடியி லுள்ள சில குறைகளைக் குறிப்பிட்டு கூனூர் வாசிகளும் வரி கொடுப்பவர்களும் 1916ம் வருஷம் ஜூலை மாதம் 24தேதியிட்டு அனுப்பி யிருக்கும் மகஜர் கிடைத்திருக்கிறதா?

(பி) அந்த மகஜர் கிடைத்திருக்கும் பட்சத்தில் அதன் 3வது பாராவில் கண்ட வேண்டுகோளை கவர்ன் மெண்டார் அனுகூலமாக கவனித்து இந்திய கவுன் சிலர்களுக்கு இரண்டு ஸ்தானங்களை ஒதுக்கி வைக்க ஏற்பாடு செய்வார்களா?

பதில்—(ஏ) கனம் மெம்பர் குறிப்பிடுகிற மகஜர் கிடைத் திருக்கிறது.

(பி) இனி முனிசிபல் சபையில் ஏற்படும் காலிகளைப் பூர்த்தி செய்கையில் அதிகப்படியாக இந்தியமெம்பர்களை நியமிக்கும் விஷயம் ஆலோசிக்கப் படும்.

வெளியிடங்களிலுள்ள துறைமுக சிப்பந்திகளுக்கு ஓவர்டயம் அலவுன்ஸ்.

கே:—81 . வெளி யிடங்களிலுள்ள துறை முக உத்தியோகஸ்தர்களுக்கு அதிககாலம் வேலை செய்வதற்காக அலவுன்ஸ் கொடுக்க வேண்டுமென்று 1913ம் வருஷம் நவம்பர் மாதம் 11ந்தேதிகூடிய சட்ட சபையில் நான் கேள்வி கேட்டு அதற்கு கவர்ன்மெண்டார் அளித்திருக்கும் பதில் சம்பந்தமாக, மேலும் கவர்ன்மெண்டார் அடியிற் கண்ட தகவல்களைக் கொடுப்பார்களா:—

(ஏ) 1905ம் வருஷம் ஜனவரி மாதம் 30ந் தேதியுள்ள நம்பர் 52 (மாரைன்) கவர்ன்மெண்டு உத்திரவினுல் துறைமுக ஆபீசுகளில் வேலை செய்பவர்களுக்கு ஓவர்டயம் அலவுன்ஸ் இல்லாமற் போய் விட்டதா?

(பி)1908ம் வருஷம் மே மாதம் 12ம் தேதியுள்ள நம்பர் 172 (மாரைன்)கவர்ன்மெண்டு உத்திரவுக்குப் பிறகு ஹெட்கிளார்க்குகளைத் தவிர மற்ற குமாஸ்தாக்களுக்கு சம்பள உயர்வு செய்து கொடுக்கப் படவில்லை யென்பது வாஸ்தவமா?

(ஸி)கடற் சுங்க இலாகா உத்தியோகஸ்தர்களுடைய ஓவர்டயம் அலவுன்ஸானது 1916ம் வருஷம் ஜுலை மாதம் 4ம் தேதியுள்ள 548ம் நம்பர் (Separate Revenue)கவர்ன்மெண்டு உத்திரவினுல் இன்னமும் உயர்த்தப் பட்டிருப்பது கவர்ன் மென்டாருக்குத் தெரியுமா?

(டி)இந்த விவரங்களெல்லாம் கவர்ன் மெண்டாருக்குத் தெரிந்திருக்கும் பட்சத்தில், வியாபரிகளிடமிருந்தும் கப்பலேற்றுமதி செய்யும் கம்பெனிகளிடமிருந்தும் ஓவர்டயம் அலவுன்ஸ் வசூலித்துக் கொள்ள துறைமுக ஆபீஸ் உத்தியோகஸ்தர் களுக்கு கவர்ன்மெண்டார் அனுமதி கொடுப்பார்களா?

(இ) குமாஸ்தாக்கள் ஓவர்டயம் அலவுன்ஸ் வசூலித்துக் கொள்ளும்படி விடுவது உசித மல்லவென்று கவர்ன்மெண்டாருக்குத் தோன்றினுல் 1908ம் வருஷத்திற்குப் பிறகு அவர்களுக்கு சம்பள உயர்வு செய்து கொடுக்கப் படாமலிருப்பதை உத்தேசித்து அவர்களுடைய சம்பளத்தையாவது கவர்ன்மெண்டார் உயர்த்துவார்களா?

பதில்:—(ஏ) இது விஷயமாக கனம் மெம்பர் ஏற்கனவே கேட்டிருந்த கேள்விக்கு கொடுக்கப்பட்ட பதில்தான் உள்ள விஷயம். துறைமுக உத்தியோகஸ்தர்களின் கீழ் வேலை செய்துவரும் குமாஸ்தாக்களுக்கு கொடுக்கப்பட்டு வந்த ஓவர்டயம் அலவுன்ஸ் கனம் மெம்பர் குறிப்பிட்ட உத்திரவுப்படி நிறுத்தி விடப்பட்டது.

(பி)1908-ம் வருஷத்திற்குப் பிறகு துறைமுக இலாகாவில் காயமாக வேலை பார்த்து வரும் குமாஸ்தாக்களின் குறைந்த சம்பளமானது 15 ரூபாயிலிருந்து 20 ரூபாயாக உயர்த்தப்பட்டிருக்கிறது.

(ஸி) கணக்கு எழுதுவதற்கு சுலபமாக யிருப்பதற்காகவும் பல கிரேட் உத்தியோகஸ்தர்களும் பெற்றுவந்த வருமானங்கள் ஒழுங்காக இல்லாமலிருந்ததினுல் அவைகளைச் சீர்படுத்துவதற்காகவுமே கடற்சுங்க உத்தியோகஸ்தர்களுக்குக் கொடுபட்டுவந்த ஓவர்டயம் பீஸ் திட்டம்

மாற்றப்பட்டதே தவிர அவர்களுடைய அலவுன்ஸை உயர்த்துவதற்காக அவ்விதம் செய்யபபடவில்லை. இவ்விதம் மாற்றியதின் பலனாக அவர்களுடைய அலவுன்ஸ்கள் கொஞ்சம் அதிகரிக்கலாமென்று எதிர்பார்க்கப்படுகிறது. துறைமுக ஆபீஸ்களைப்போலவே கடற்சுங்க ஆபீஸ்களிலும் சாதாரணமாக குமாஸ்தாக்களுக்கும், கணக்கர்களுக்கும், மேன்பார்வை பார்க்கும் அதிகாரிகளுக்கும் ஓவர்டயம் அலவுன்ஸ் கொடுக்கப்படுவதில்லை.

(டி) இப்பொழுது அனுஷ்டானத்திலிருக்கும் உத்திரவுகளை மாற்ற வேண்டியதவசியமென்று கவர்ன்மெண்டாருக்குத் தோன்றவில்லை.

(இ) துறைமுக இலாகாவிலுள்ள எல்லா சிப்பந்திகளின் சம்பளவிகிதங்களையும் மாற்றவேண்டியஅவசியம் ஏற்பட்டுவிட்டதாக கவர்ன்மெண்டார் நினைக்கவில்லை.

கே.—82 (ஏ) 1916-ம் வருஷம் அக்டோபர் மாதம் 3-ம் தேதி தூத்துக்குடியில் ஹிந்துக்கள் பெரிய காட்டன் ரோடிலுள்ள மசூதிவாயில் வழியாக மேளவாத்தியங்களுடன் தசரா ஊர்வலம் நடத்திக்கொண்டுபோகையில் ஹிந்துக்களுக்கும் முகம்மதியர்களுக்கும் கலகம் ஏற்பட்டது கவர்ன்மெண்டாருக்குத் தெரியுமா?

தூத்துக்குடியில் மதசம்பந்தமான கலகங்கள்.

(பி) இம்மாதிரியான கலவரங்கள் அடிக்கடி நடந்து வருவதை நான் அப்போதைக்கப்போது கவர்ன்மெண்டின் அறிவிப்புக்குக் கொண்டு வந்திருக்கிறேன். ஆகவே கவர்ன்மெண்டார் பள்ளிவாசல்களுக் கெதிரே இனி வாத்தியம் வாசித்துக்கொண்டு போகக்கூடாதென்றும், தம்பட்டம் கொட்டக்கூடாதென்றும் உத்திரவு செய்து விடுவார்களா?

பதில்:—முதற்சொன்ன சங்கதியும் கவர்ன்மெண்டாருக்குத் தெரியாது. இரண்டாவது கேட்கிறபடிக்கும் உத்திரவு செய்ய முடியாது.

கே.—83 (ஏ) சிலோனிலிருந்துவந்து பிளேக்கினால் இறந்திருக்கலாமென்று சந்தேகிக்கப்பட்ட ஒரு முகம்மதிய ஸ்திரீயின் பிரேதத்தை மதுரை முனிசிபல் ஆஸ்பத்திரி அஸிஸ்டெண்டு சர்ஜன் டாக்டர் விட்டல் ராவ் கிறுகையில் கையில் காயம்பட்டதின்பலனாக 1916-ம் வருஷம் செப்டம்பர்மாதம் 21-ம் தேதி இறந்துவிட்ட விஷயமாக அக்டோபர்மாதம் 2-ம் தேதியுள்ள "நியூஇந்தியா"ப் பத்திரிகையில் பிரசுரமாகி யிருக்கும் வியாசத்தை கவர்ன்மெண்டார் பார்வை யிட்டார்களா?

மதுரையில்பிரேத சோதனை செய்யஸ்திரீடாக்டரை ஏற்பாடு செய்யாத விஷயம்.

(பி) டாக்டர் விட்டல்ராவின் மரணத்திற்காக நான் மிகவும் வருந்துகிறேனாயினும், 12-6-1915-தேதியுள்ள 1309-ம் நம்பர் கவர்ன்மெண்டு உத்

திரவின்படி ஏன்பிரேத சோதனை செய்ய ஒரு ஸ்திரீ டாக்டரை ஏற்பாடு செய்யவில்லையென்று கவர்ன்மெண்டார் விசாரணை செய்வார்களா?

பதில் :—(ஏ) கவர்ன் மெண்டார் அந்த வியாசத்தைப் பார்வை யிட்டார்கள்.

(பி) அந்தஸ்திரீ பிளேக்கினால் இறந்திருக்கலாமென்று சந்தேகிக்கப்பட்டது. ஸ்திரீ டாக்டர்கள் அடிக்கடி பிரசவகேசுகளுக்குப் போக வேண்டியிருந்ததை உத்தேசித்து, அவர்களை பிளேக்கண்டவர்களின் பிரேதங்களைப் பரிசீலனை செய்து பிரசவ கேஸ்களையும் போய் பார்க்கவிடுவது உசிதமானதல்லவென்றுகருதப் பட்டது. ஆகவே ஜில்லா சர்ஜனே தம்முடைய அஸிஸ்டெண்டுகளின் உதவியைக் கொண்டு பிரேதபரிசோதனை நடத்தினர்.

கே:— 84 (ஏ) 1914ம் வருஷத்திய IV வது வைத்தியப் பதிவு சட்டத்தின் 4 (2) பிரிவின்படி தமக்கு சர்ட்டிபிகேட் கொடுக்க வேண்டுமென்று திருச்சினாப்பள்ளி மிஸ்டர் டி கே மகம்மது அப்துல்ரஹிமான் 1916-ம் வருஷம் ஏப்ரல் மாதம் 19 தேதியிலும் ஜூலைமாதம் 31-ம் தேதியிலும் கவர்ன்மெண்டாருக்கு இரண்டுமகஜர்கள் அனுப்பியிருக்கிறாரா?

வைத்தியப் பதிவு சட்டத்தின்படி சர்ட்டிபிகேட்.

(பி) அந்த மனுக்கள் கிடைத்திருக்கும் பட்சத்தில், அவைகளில் சொல்லப்பட்டிருக்கும் காரணங்களை உத்தேசித்து கவர்ன் மெண்டார் அவருக்கு சர்ட்டிபிகேட்டு கொடுப்பார்களா?

பதில்:—(ஏ) அவருடைய இரண்டு மனுக்களும் கிடைத்திருக்கின்றன.

(பி) 1914-ம் வருஷத்திய வைத்தியப் பதிவு சட்டத்தின்படி பதிவு செய்யப்பட மனுதாரருக்கு யோக்கியதை இல்லாததினால், அந்த யோக்கியதையை அவர் பெறும்படி 1917-ம் வருஷத்தில் நடைபெறப் போகும் முடிவான சப் அஸிஸ்டெண்டு சர்ஜன் பரிட்சைக்கு ஆஜராக அவருக்கு ஸ்பெஷலாக அனுமதிகொடுக்கப்பட்டிருக்கிறது. இன்னும் ஒரு வருஷ காலத்திற்குப் வைத்திய சட்டத்தின்படிபதிவில்லாமலே அவரை தென்னிந்தியா ரெயில்வே வைத்திய உத்தியோகவருக்கத்தில் வைத்திருக்கவும் அனுமதி கொடுக்கப் பட்டிருக்கிறது.

1917

## [பீப்பிரவரி மாதம் 6-ம் தேதி சென்னையில் நடந்த மீட்டிங்]

ஈரோடு ஜல சப்ளை திட்டமும் தண்ணீர் வரியும்.

கே:— 85 (ஏ) ஈரோடு முனிசிபாலிட்டியார் ஜனங்களிட மிருந்து மூன்று வருஷங்களாக தண்ணீர் வரி வசூலித்து வரு வதுகவர்ன்மெண்டாருக்குத் தெரியுமா? யுத்தங்காரண மாக என்ஜின்வந்து சேரமுடியாததினால் ஜலசப்ளை வேலைகள் இன்னமும் ஆரம்பமாக வில்லையென்பதும் கவர்ன்மெண்டாருக்குத் தெரியுமா?

(பி) தண்ணீர் சப்ளை செய்யப்படாமலிருக்கையில் தண்ணீர் வரி வசூலிக்கப் படுவது வாஸ்தவமாயிருந்து, என்ஜின் வந்து சேருவதற்கு இன் னும் காலதாமத மேற்படுவதாக இருந்தால், ஜலத்தை சப்ளை செய்யும் வரை யில் தண்ணீர் வரிவசூலிக்காமல் நிறுத்தி வைக்கும்படி கவர்ன்மெண்டார் ஈரோடு முனிசிபாலிட்டிக்கு உத்திரவு செய்வார்களா?

பதில்:— (ஏ) ஆம்.

(பி) 1917-18-ம் வருஷத்திற்குள் ஜலசப்ளை சம்பந்தமான வேலை கள் முடிந்து விடுமென்று எதிர்பார்க்கப்படுகிறது. ஆகவே வரிவசூலிப்ப தைத் தள்ளி வைக்கும் விஷயத்தை ஆலோசிக்க வேண்டிய பிரமேயமே யில்லை.

சரீராரோக்கிய சர்ட்டிபிகேட்டுகள் கொடுக்க சிவில் சர் ஜன்களுக்கு அதிகா ரம்.

கே:— 86. சென்ற நவம்பர் மாதம் 21-ம் தேதி நடந்த மீட்டிங்கில் நான் கேள்வி கேட்டு அதற்கு கவர்ன்மெண்டார் கொடுத்திருக்கும் பதிலை அனுசரித்து, விலோனுக் குச் செல்லும் பிரயாணிகளுக்கு சரீராரோக்கிய சர் ட்டிபிகேட்டு கொடுக்க கவர்ன்மெண்டார் சிவில் சர் ஜன்களுக்கு அதிகாரம் கொடுப்பார்களா?

பதில்:— கனம் மெம்பர் சொல்லும் யோசனை கவனிக்கப்படும்.

## (ஏப்பிரல் மாதம் 2ம் தேதி சென்னையில் நடந்த கூட்டம்)

கதிரியில் ஹிந்து முஸ்லீம் கலவரம்.

கே:— 87 (ஏ) அனந்தப்பூர் ஜில்லா கதிரியில் 1916-ம் வருஷம் நவம்பர் மாதம் 9-ம்தேதி பள்ளிவாசலுக்கு எதிராக ஹிந்துக்கள் மேளதாளத்துடன் ஊர்வலம் நடத்திக் கொண்டு போனதின் பலனாக, ஹிந்துக்களுக்கும் முஸ் லீம்களுக்கும் கலகம் ஏற்பட்டதா?

(பி) இது சம்பந்தமாக ஜில்லா மாஜிஸ்திரேட்டிடமிருந்தும் ஜில்லா போலீஸ் சூப்பரின்டெண்டிடமிருந்தும் ரிபோர்ட்டு கேட்டு விட்டு, அவைகள் கிடைத்தவுடன் கவர்ன்மெண்டார் சபையின் முன் ஆஜர்படுத்துவார்களா?

பதில்:— (ஏ) கலவரம் நடந்தது கவர்ன்மெண்டாருக்குத் தெரியும்.

(பி) போலீஸ் சூப்பரின்டெண்டின் 1916-ம் வருஷத்திய நிர்வாக ரிபோர்ட்டிலிருந்து சில பாகங்கள் சபையின் முன்பாக ஆஜர்ப்படுத்தப்பட்டிருக்கின்றன. மீண்டும் ரிபோர்ட்டு கேட்டுவிடுவது அனுவசிய மென்று கவர்ன்மெண்டார் கருதுகிறார்கள்.

மதராஸா இ இஸ்லாமியாவைக் கலாசாலையாக உயர்த்துதல்.

கே:— 88 (ஏ) வாணியம்பாடி முஸ்லீம் கல்விச்சங்கத்தார் மதராஸா இ இஸ்லாமியாவை "இஸ்லாமியா காலேஜ்" என்னும் பெயருடன் ஒரு கலாசாலையாக உயர்த்த முயற்சி எடுத்துக் கொண்டிருப்பது கவர்ன்மெண்டாருக்குத் தெரியுமா?

(பி) அதற்காக ஒருலட்ச ரூபாய்க் கதிகமாக அவர்கள் நன்கொடைகள் வசூலித் திருப்பதும் கவர்ன்மெண்டாருக்குத் தெரியுமா?

(பி) தென்னிந்தியாவிலுள்ள முஸ்லீம்களின் அபிவிருத்தியை உத்தேசித்து அந்த நிகழ்ச்சிக்கு கவர்ன்மெண்டார் ஆதரவளித்து உதவி செய்வார்களா?

பதில்:— (ஏ) சென்ற ஜனவரிமாதம் 28-ம் தேதி வாணியம்பாடி முகம்மதியகல்விச்சங்கத்தின் நிர்வாக சபையினர் கூடி இவ்விஷயமாகச் செய்திருக்கும் தீர்மானத்தின் பிரதி யொன்று கவர்ன்மெண்டாருக்குக் கிடைத்திருக்கிறது.

(பி) அந்த விவரங்கள் கவர்ன்மெண்டுக்குத் தெரியா.

(ஸி) ஒழுங்காக செய்யப்படும் காரிய மெதற்கும் பொருளுதவி கோரிசெய்துகொள்ளும் விண்ணப்பங்களை கவர்ன்மெண்டார் கவனிக்க சித்தமாக யிருக்கிறார்கள்.

ஸ்தலஸ்தாபனங்களில் முஸ்லீம்களுக்குப் பிரதிநிதித்துவம்.

கே:— 89. (ஏ) ஸ்தலஸ்தாபனங்களில் தேர்ந்தெடுக்கப்பட வேண்டிய ஸ்தானங்களில் சிலவற்றை முஸ்லீம்களுக்கு ஒதுக்கிவைக்கவேண்டிய விஷயமாக இப்பொழுதாவது இந்தியா கவர்ன்மெண்டாரின் அபிப்பிராயம் கிடைத்துவிட்டதா?

(பி) இல்லையேல், மார்ச்சுமாதம் 15-ம் தேதி வெளியான "ஜஸ்டிஸ்" பத்திரிகையில் குறிப்பிடப்பட்டிருக்கும் காரணங்களை உத்தேசித்தாவது, இது விஷயமாக இந்த கவர்ன்மெண்டார் இந்தியா கவர்ன்மெண்டாருக்கு விஞ்ஞாபனம் செய்து கொள்ளுவார்களா?

பதில்;—(ஏ) இது விஷயமாக இந்தியா கவர்ன்மெண்டாரின் அபிப்பிராயம் இன்னமும் கிடைக்கவில்லை.

(பி) கனம் மெம்பர் சொல்லும் யோசனையை கவர்ன்மெண்டார் அங்கீகரிக்கக் கூடவில்லை.

## [மேமாதம் 22ம் தேதி உதகமண்டலத்தில் நடந்த கூட்டம்]

கே:—90 (ஏ) 1917-ம் வருஷம் மார்ச்சு மாதம் 27-ம் தேதி வெளியான "ஹிந்து" ப்பத்திரிகையில் "மண்ணெண்ணெயின் விலை" என்று பிரசுரமாகியிருக்கும் வியாசத்தை கவர்ன்மெண்டார் பார்வையிட்டார்களா?

மண்ணெண்ணெயின் விலை.

(பி) அதில் சொல்லப்பட்டிருக்கும் குறைகளை நிவர்த்திக்க கவர்ன்மெண்டார் தகுந்த ஏற்பாடுகளைச் செய்வார்களா?

பதில்:—(ஏ) கவர்ன்மெண்டார் இப்பொழுது அந்த வியாஸத்தைப் பார்வை யிட்டார்கள்.

(பி) இந்த விஷயம் கவர்ன்மெண்டாருடைய ஆலோசனையிலிருந்து வருகிறது.

கே:—91 (ஏ) ராமனுதபுரம் ஜில்லா பரமக்குடி தாலூகா இளையாங்குடி கிராமத்தில் கால்ராவினால் அதிக மரணங்கள் நேர்ந்து வருவதை உத்தேசித்து தலையேடுடன் கூடிய கிணறு கட்டி வைத்துத் தருவதாக நான் கேட்ட கேள்விக்கு கவர்ன்மெண்டார் பதிலளித்திருந்த பிரகாரம், ஜில்லா போர்டார் எவ்வித ஏற்பாடும் செய்யவில்லையென்பது கவர்ன்மெண்டாருக்குத் தெரியுமா?

இளையாங்குடியில் குடிதண்ணீர்க் கிணறு.

(பி) இனியும் உயிர்ச் சேதங்கள் நேரிடாமல் பாதுகாக்கும் பொருட்டு இந்தக் கிணறைக் கட்டிக் கொடுக்கும்படி செய்ய கவர்ன்மெண்டார் உடனே முயற்சி செய்வார்களா?

பதில்:—(ஏ) கவர்ன்மெண்டாருக்கு அதைப்பற்றின தகவல் ஒன்றும் தெரியவில்லை.

(பி) இது ஸ்தலஸ்தாபனமே கவனிக்கவேண்டிய விஷயம். ஆகவே இவ்விஷயத்தில் கவர்ன்மெண்டார் தலையிட உத்தேசமில்லை.

சென்னை கார்ப்பொரேஷனில் முஸ்லீம்களுக்குப் பிரதிநிதித்துவம்.

கே:—92 (ஏ) சென்னை கார்ப்பொரேஷனில் முஸ்லீம்களுக்குப் பிரத்தியேகப் பிரதிநிதித்துவம் ஏற்படுத்தவேண்டுமென்று 1917-ம் வருஷம் ஏப்பிரல் மாதம் 16-ம் தேதி நடந்த கார்ப்பொரேஷனின் விசேஷக் கூட்டத்தில் கனம் மிஸ்டர் யாகுப் ஹாசன் சேட் கொண்டு வந்த தீர்மானம் நிராகரிக்கப்பட்டுப் போன விவரம் கவர்ன்மெண்டாருக்குத் தெரியுமா?

(பி) கனம் மீர் அஸத் அலிகான் பகதூர் 1917-ம் வருஷம் மே மாதம் 2-ம் தேதி வெளியான "ஜஸ்டிஸ்" பத்திரிகையில் எழுதியிருப்பதிலிருந்து படித்த முஸ்லீம்கள் தங்களுக்குப் பிரத்தியேகப் பிரதிநிதித்துவம் ஏற்படவேண்டுமென்று விரும்புகிறார்களென்பதை கவர்ன்மெண்டார் தெரிந்துகொண்டிருக்கிறார்களா?

(ஸி) சென்னையில் ஏராளமாக வசித்து வரும் முஸ்லீம் வாசிகளின் உரிமைகளைப் பாதுகாப்பதற்காக புதிய சட்டத்திலாவது முஸ்லீம்களுக்குக் குறைந்தது நான்கு ஸ்தானங்களை கவர்ன்மெண்டார் ஒதுக்கி வைப்பார்களா?

பதில்:—(ஏ) கனம் மிஸ்டர் யாகுப் ஹாசன் சேட்டின் தீர்மானம் கார்ப்பொரேஷனில் அடிபட்டுப்போய்விட்டது கவர்ன்மெண்டாருக்குத்தெரியும்.

(பி) கவர்ன்மெண்டார் அந்த வியாசத்தைப் பார்த்திருக்கிறார்கள்.

(ஸி) 1917-ம் வருஷம் ஏப்பிரல் மாதம் 2-ம்தேதி நடந்த கூட்டத்தில் கேட்கப்பட்டிருந்த 51-வது கேள்விக்கு கவர்ன்மெண்டார் அளித்திருக்கும் பதிலை கனம் மெம்பர் பார்த்துக் கொள்வாராக (கேள்வி 89).

நாகப் பட்டணம் முனிசிபாலிட்டியில் தேர்ந்தெடுக்கப்படும் ஸ்தானங்களின் விநியோகம்.

கே:—93 (ஏ) நாகப்பட்டணம் முனிசிபாலிட்டியில் தெரிந்தெடுக்கப்படவேண்டிய கவுன்சிலர்களின் ஸ்தானங்களை 12-லிருந்து 13 ஆக உயர்த்தி, நாகப்பட்டணம் கஸ்பா, காடம்பாடி, நாகூர் இவைகளுக்கு முறையே பிரதிநிதி ஸ்தானங்களை 8,2,3, ஆக நிஷ்கரிஷை செய்திருக்கும் 1916-ம் வருஷம் ஏப்பிரல் மாதம் 19-ந்தேதியுள்ள

740-ம் நெம்பர் கவர்ன்மெண்டு உத்திரவானது இன்னமும் அனுஷ்டானத்திற்குக் கொண்டுவரப்பட வில்லையென்பது கவர்ன்மெண்டாருக்குத் தெரியுமா?

(பி) 1917-ம் வருஷம் ஜூலை மாதம் 21-ம்தேதி காலியாகும் நாகூர் ஸ்தானமொன்றைக் குறைத்து, அதை நாகப்பட்டணத்திற்குக் கொடுத்து, நாகப்பட்டணம் அதிகப்படியாக ஒரு பிரதிநிதியைத் தெரிந்தெடுக்கச் செய்வதன் மூலமாக அந்த கவர்ன்மெண்டு உத்திரவை அனுஷ்டானத்திற்குக் கொண்டு வந்து விடும்படி சீக்கிரம் கவர்ன்மெண்டார் உத்திரவு செய்வார்களா?

பதில்:—(ஏ) பிரிவில் கண்டமாறுதல்கள் சம்பந்தமாக வார்டுகளை மறுபடியும் பிரிவினை செய்வதைப்பற்றிய பிரேரணைகள் ஆலோசனையிலிருந்து வருகின்றன.

## [நவம்பர் மாதம் 20ம் தேதி சென்னையில் நடந்த கூட்டம்]

தூத்துக்குடித் துறை முகம்.

கே:—94 (1)(ஏ) தூத்துக்குடித் துறைமுகத்தில் கப்பல்கள் வந்துதங்குவதற்கு கடலைத்தோண்டும் திட்ட விஷயமாகமேலே என்ன நடவடிக்கைகள் எடுத்துக் கொள்ளப்பட்டிருக்கின்றனவென்று கவர்ன்மெண்டார் அறிவிப்பார்களா?

(பி) சென்ற வருஷக் கோடியில் அது சம்பந்தமாக பூமியில் குழிகள் தோண்டிப் பரிசிலனை செய்து முடிவாகிக் கொண்டிருந்த சமயத்தில் நேரில் வந்து பார்வையிட்ட மராமத்து இலாகா சீப் இஞ்சினீர் கனம் மிஸ்டர் எஸ் பி. முர்ரேஇந்த திட்ட சம்பந்தமாக ஏதேனும் ரிபோர்ட்டு அனுப்பியிருக்கிறாரா?

(ஸி) இப்பொழுது வியாபாரம் படுத்திருப்பதினால் தொழிலாளர்கள் குறைந்த சம்பளத்திற்குக் கிடைக்கக்கூடிய சந்தர்ப்பத்தைக் கைக்கொண்டு, தீவுகளுக்கு மத்தியில் கால்வாய் தோண்டுதல் போன்ற ஆட்களைக்கொண்டு செய்யக்கூடிய கஷ்டமில்லாத வேலைகளைச் செய்து முடித்து உள் துறை முகம் தூர்ந்துபோகாமல் பாதுகாப்பதுடன், கூடியசீக்கிரத்தில் வேலையையும் ஆரம்பித்து, யுத்தம் முடிந்தபிறகு வியாபாரம் மறுபடியும் வலுவுறுமென்று எதிர்பார்க்கப் படுவதற்குத் தயாராக இருப்பதற்காக இந்த வேலை சம்பந்தமான திட்டத்தையும் மற்ற விவரங்களையும் தயாரிப்பது உசிதமல்லவா?

(டி) இதற்காக இப்பொழுது சரசமான விலைக்கு ரெங்கூன்துறைமுக பரிபாலன சபையாரிடமிருந்து கிடைக்கக்கூடிய "பெலிகன்" என்னும் தூரு எடுக்கும் இயந்திரத்தை (Dredger) கவர்ன்மெண்டார் வாங்கமுன் வருவார்களா?

(இ) மேல் ஓடையை 25000 ரூபாய் செலவில் மூடித்து வெட்டிவிடலாமென்று கடைசியாக எக்ஸிகியூடிவ் எஞ்சினீர் இரண்டுவருஷங்களுக்கு முன்பாக சிபார்சு செய்திருந்தும், அதன் படி செய்யாமல், வருஷம் 1க்கு 50000 ரூபாய் செலவில் "மானுர்" என்னும் தூர்வெடுக்கும் இயந்திரத்தை வேலைக்கு வைத்துக்கொண்டிருப்பதின் காரணங்களென்ன வென்பதை கவர்ன்மெண்டார் அறிவிப்பார்களா?

பதில் (எ) தூத்துக்குடித் துறைமுகத்தில் கப்பல்கள் வந்து தங்கும்படி கடலைத்தோண்டுவதற்குப் பூர்வ பீடிகையாக பூமியில் குழிகள் தோண்டி சோதனைசெய்யப்பட்டு வருகிறது.

(பி) கனம் முர்ரேயிடமிருந்து ரிபோர்ட்டு கிடைக்கவில்லை.

(ஸி) இது விஷயமாக மேல் நடவடிக்கைகள் எடுத்துக் கொள்ளுமுன் கப்பல்கள் வந்து தங்குவதற்குக் கடலை எந்த இடத்தில் தோண்டலாமென்றும், அதற்கு கப்பல்கள் வந்து சேரும்படி எந்த வழியாய் கால்வாய் தோண்டலாமென்றும், மற்றும் துறைமுகத்தை எவ்விதத்தில் அபிவிருத்தி செய்யலாமென்றும் நிபுணர்களின் அபிப்பிராயத்தை அறிந்து கொள்ளத் தீர்மானிக்கப்பட்டிருக்கிறது.

(2) மேல் ஓடையிலிருந்து குடாவில் கொஞ்சம் மண் வந்து விழுந்தாலும், அதனால் துறைமுகத்திற்குக் கெடுதி அதிகமில்லை, நிபுணரின் முன்பாக இத்துறைமுக சம்பந்தமான யோசனைகளைச் சொல்லிக் கொள்ளும் பொழுது, மேல் ஓடையைத் திருப்பிவிடும் விஷயத்தைப்பற்றியும் தெரிவித்துக் கொள்ளப்படும்.

கே:—95 (எ) பள்ளிவாசல்களுக்கெதிரில் வாத்தியங்கள் வாசிக்கக்கூடாதென்றும், தம்பட்டம் கொட்டக்கூடாதென்றும் தடுத்துவிட வேண்டுமென்று தூத்துக்குடி முஸ்லீம் லீக் பிரசிடெண்டும், பள்ளிவாசல் கமிட்டி தலைவருமான கான்சாகிப் மொஹிதீன் காதர்ஷா மரக்காயர் சாகிப் பகதூர் 1917-ம் வருஷம் அக்டோபர் மாதம் 5-ம் தேதி கவர்ன்மெண்டாருக்கு மகஜர் அனுப்பியிருக்கிறாரா?

**பள்ளிவாசல்களுக்கெதிரில் வாத்தியங்கள் கூடாதென்று தடை.**

(பி) கான் சாகிப் எஸ். கே. மொஹிதீன் காதர்ஷா மரக்காயர் சாகிப் பகதூர்மகஜரில் வேண்டிக்கொண்டிருக்கிற பிரகாரம் கவர்ன்மெண்டார் 1861-ம் வருஷத்திய 5-வது போலீஸ்ஆக்டைத் திருத்துவார்களா?

பதில்:—(எ) கான்சாகிப்பினிடமிருந்து மகஜர் கிடைத்திருக்கிறது.

(பி) மகஜர் நாமாவில் கண்ட பிரகாரம் நடவடிக்கை எடுத்துக் கொள்ள கவர்ன்மெண்டார் தயாராக இல்லை.

கே.—96 (1) திருச்சினுப்பள்ளி தாலூகா போர்டில் உத்தியோகஸ்தர்களல்லாத முஸ்லீம்களுக்குப் பிரதிநிதித்துவமில்லாத விஷயமாக அக்டோபர் மாதம் 21-ம் தேதி வெளியான "மெட்ராஸ் டைம்ஸ்" பத்திரிகையில் பிரசுரமாகி யிருக்கும் வியாசத்தை கவர்ன்மெண்டார் பார்வையிட்டார்களா?

திருச்சி தாலூகா போர்டில் முஸ்லீம்களுக்குப் பிரதிநிதித்துவம்.

(2) 1913ம் வருஷம் ஏப்பிரல் மாதம் 2-ம் தேதி நடந்த சட்டசபை மீட்டிங்கில் நான் கேட்டிருந்த கேள்விக்கு கவர்ன்மெண்டார் அளித்திருக்கும் பதிலை அனுசரித்து, திருச்சிதாலுகா போர்டில் முஸ்லீம்களுக்குப் போதிய பிரதிநிதித்துவமிருக்கும்படி கவர்ன்மெண்டார் ஏற்பாடு செய்வார்களா?

பதில்:-(1) கவர்ன்மெண்டார் அந்த வியாசத்தை பார்வையிட்டார்கள்.

(2) தாலூகா போர்டு மெம்பர்கள் ஸ்தானங்களுக்கு ஜில்லாபோர்டு பிரசிடெண்டாலேயே நியமனங்கள் செய்யப்படுவதால், கனம் மெம்பருடைய வேண்டுகோள் அவருடைய அறிவிப்புக்குக் கொண்டு வரப்படும்.

கே;—97 (ஏ) புதை பூமி விஷயமாக திண்டுக்கல் முஸ்லீம்கள் 22-10-1917-ல் கவர்ன்மெண்டாருக்கு மகஜர் அனுப்பி யிருப்பது வாஸ்தவமா?

திண்டுக்கல்லில்முஸ்லீம்களின்புதைபூமி.

(பி) 1898-ம் வருஷம் ஜூலை மாதம் 4-ம் தேதியுள்ள 1183-ம் நம்பர் கவர்ன்மெண்டு உத்திரவை ரத்து செய்வதன் மூலமாக கவர்ன்மெண்டார் திண்டுக்கல் முஸ்லீம்களின் அபீஷ்டத்தைப் பூர்த்தி செய்து வைப்பார்களா?

பதில்:—(ஏ) திண்டுக்கல் முஸ்லீம்களிடமிருந்து புதை பூமி விஷயமாக மகஜர் கிடைத்திருக்கிறது.

(பி) புதிதாக புதை பூமியொன்றைத் தெரிந்தெடுக்கும் விஷயத்தைப்பற்றி கலெக்டருக்கு விஞ்ஞாபனம் செய்து கொள்ளும்படி மனுதார்களுக்கு ஆலோசனை சொல்லப்பட்டது; அதன்படியே அவர்கள் நடந்து கொண்டிருப்பதாகத் தெரிகிறது.

கே:—98 (ஏ) தஞ்சம் ஜில்லாவில் 1892-ம் வருஷத்தில் தான் சாகிப் லால் பேக்ஸாகிப் பென்ஷன் பெற்றுக்கொண்ட பிறகு, முகம்மதியர்களெவரேனும் டிப்டி தாசில்தார் அந்தஸ்துக்கு உயர்த்தப்பட்டிருக்கிறார்களா?

தஞ்சம் ஜில்லாவில் முகம்மதிய டிப்டி தாசில்தாரின் நியமனம்.

(பி) டிப்டி தாசில்தார் ஸ்தானத்திற்கு அருகதை யுள்ளவர்களென ஒப்புக்கொள்ளப்பட்ட முஸ்லீம்கள் தஞ்சம் ஜில்லாவிலிருக்கிறார்களா?

(ஸி) அந்த ஸ்தானத்திற்கு அருகதையுள்ளவர்களிருக்கும் பட்சத்தில் ஒருவரையாவது கவர்ன்மெண்டார் அந்தப் பதவிக்கு நியமிப்பார்களா?

பதில்:—(ஏ) இல்லை.

(பி) (ஸி) டிப்டி தாசில்தார் பதவிக்கு அருகதை யுள்ளவராக ஒரு முகம்மதிய உத்தியோகஸ்தர் தஞ்சம் ஜில்லாவிலிருக்கிறார். அந்த பதவிக்கு ஒப்புக்கொள்ளப்பட்ட பேர் வழிகளின் ஜாப்தாவிலிருந்து நியமனம் செய்யும் அதிகாரம் கலெக்டருடைய தாதலால் அந்த உத்தியோகஸ்தர் அவருக்குத் திருப்திகரமாக தம்முடைய வேலைகளைச் செய்து வரும் பட்சத்தில் அந்தப் பதவிக்கு உயர்த்தப்படுவாரென்பதில் தடையில்லை.

கே:—99 (ஏ) முனிசிபல் எல்லைகளுக்குள் ஆரம்ப இலவச கட்டாயக் கல்வியை ஏற்படுத்துவதற்காக ஜில்லா முனிசிபாலிட்டிகள் சட்டத்தைத் திருத்தும் நகல் மசோதாவில் ஏதேனும் ஏற்பாடுகள் சொல்லப்பட்டிருக்கின்றனவா?

முனிசி பாலிட்டிகளில் ஆரம்ப இலவசக் கட்டாயக் கல்வி.

(பி) இல்லையேல், திருத்த மசோதாவில் அந்தப் பிரிவொன்றை கவர்ன்மெண்டார் சேர்க்க ஏற்பாடு செய்வார்களா?

பதில்:—(ஏ) ஜில்லா முனிசிபாலிட்டிகள் சட்டத்தைத் திருத்தும் மசோதா இன்னமும் முடிவாகத் தயாராகி விடவில்லை.

(பி) சென்னை மாகாணத்தில் ஆரம்பக் கல்வியைப் பரப்புவதற்கு தகுதியான ஏற்பாடுகளைச் செய்ய எவ்விதச் சட்டத்தை இயற்றலாமென்று கவர்ன் மெண்டார் ஆலோசித்துக் கொண்டிருக்கிறார்கள்.

கே:—100 (ஏ) சென்னை கவர்ன் மெண்டு காரியஸ்தலம், (பி) ரெவினியு போர்டாபீஸ் (ஸி) சென்னை கலெக்டர் ஆபீஸ் இவைகளிலுள்ள பல இலாகாக் களிலும் 50 ரூபாய்க்கு மேற்பட்டு 100 ரூபாய்க் குள்ளும், 100 ரூபாய்க்கு மேற்பட்டு 300 ரூபாய்க் குள்ளும், 300 ரூபாய்க்கு மேற்பட்டு 500 ரூபாய்க் குள்ளும், 500

கவர்ன் மெண்டு ஆபீஸ்களில் பற்பலவகுப்பினருக்கும் பிரதி நிதித்துவம்

ரூபாய்க்கு மேற்பட்டும் மாதச் சம்பளமுள்ள உத்தியோகங்கள் எத்தனை உளவென்றும், அவைகளில் இப்பொழுது வேலை பார்த்து வருகிறவர்களில் பிராமணரல்லாத ஹிந்துக்கள், முகம்மதியர்கள், இந்திய கிறிஸ்தவர்கள், பிராமணர்கள், மற்றவர்கள் எத்தனை பேர்களென்றும்;

(2) சென்னை நகரத்தின் மொத்த ஜனத்தொகையில் அந்தந்த வகுப்பினரின் விதாசார மென்ன வென்றும், அந்தந்த வகுப்பின் மொத்த ஜனத் தொகையில் உத்தியோகம் வகித்துவருகிறவர்களின் விதாசார மென்னவென்றும் கவர்ன் மெண்டார் விவரமாக புள்ளி விவரங்களைக் கொடுப்பார்களா?

(பி)முந்தின கேள்வியில் குறிப்பிடப் பட்டிருக்கும் பற்பல வகுப்பினரும் கவர்ன் மெண்டு உத்தியோகங்களைப் போதிய வளவு வகித்து வரவில்லை யென்று கவர்ன் மெண்டார் அபிப்பிராயப் படும் பட்சத்தில், புதிதாக நியமனங்களைச் செய்வதிலும், வேலைபார்த்துவரும்உத்தியோகஸ்தர்களை உயர் பதவிகளுக்கு உயர்த்து வதிலும் பல வகுப்பினரின் பாத்தியதைகளும் பாது காக்கப் பட வேண்டு மென்றும், தற்பொழுது எந்த வகுப்பினரிலேனும்போதியவளவு உத்தியோகம்வகித்து வருகிறவர்களில்லாவிடில், காலி ஏற்படும் போதெல்லாம் அந்தந்த வகுப்பினரை இட்டு நிரப்ப வேண்டு மென்றும் அந்தந்த இலாகாத் தலைவருக்கு கவர்ன் மெண்டார் அறிவிப்பார்களா?

பதில்:—(ஏ) (1) கனம் மெம்பர் கேட்டிருக்கும் ஆபீஸ்களைப்பற்றிய தகவல்கள் சபையின் முன் ஆஜர் படுத்தப் பட்டிருக்கின்றன.

(2) கீழ் கண்ட கணக்கிலிருந்து கனம் மெம்பர் கோருகிற தகவல்கள் தெரியவரும்:—

(1) சென்னை நகரின் மொத்த ஜனத்தொகையில் அந்தந்த சமூகத்தாரின் விதாசாரம்:—

| | | | |
|---|---|---|---|
| பிராமணரல்லாத ஹிந்துக்கள் | ... | ... | 73.9 |
| முகம்மதியர்கள் | ... | ... | 11.4 |
| இந்திய கிறிஸ்தவர்கள் | ... | ... | 5.3 |
| பிராமணர்கள் | ... | ... | 6.3 |
| இதர வகுப்பினர் | ... | ... | 3.1 |

(ii) ஒவ்வொரு வகுப்பின் மொத்த ஜனத்தொகையில் உத்தியோகம் வகித்து வருபவர்களின் விதாசாரம்:—

| | | | |
|---|---|---|---|
| பிராமணரல்லாத ஹிந்துக்கள் | ... | ... | .019 |

| | | | |
|---|---|---|---|
| முகம்மதியர்கள் | ... | ... | .017 |
| இந்திய கிறிஸ்தவர்கள் | ... | ... | .106 |
| பிராமணர்கள் | ... | ... | .64 |
| இதர வகுப்பினர் | ... | ... | .15 |

(பி) இந்த விஷயம் கவர்ன்மெண்டாரின் கவனத்திலிருந்து வருகிறது.

கே:— 101 (ஏ) சில நிலச்சுங்க ஆபீஸ்களில் உத்தியோகஸ்தர்களும், மேன் பார்வை பார்க்கும் அதிகாரிகளும் குறிப்பிட்ட காலத்திற்கு அதிகமாகவும், ஞாயிற்றுக்கிழமைகளிலும், விடுமுறை தினங்களிலும் வேலை செய்ய வேண்டி யிருப்பது கவர்ன்மெண்டாருக்குத் தெரியுமா?

(பி) அவ்விதம் வேலை செய்வதற்காக கடற்சுங்க ஆபீஸ் உத்தியோகஸ்தர்களுக்கு ஓவர்டயம் அலவுன்ஸ் கொடுபடுவதுகவர்ன்மெண்டாருக்குத்தெரியுமா?

(ஸி) கடற் சுங்க இலாகா உத்தியோகஸ்தர்களுக்கு இருந்து வரும் சுதந்தரங்களை சென்னமங்கலம், நந்தலாறு, காரைக்கால், பேரளம், புதுச்சேரி, கண்டமங்கலம் முதலிய முக்கியமானவும், அதிக வேலையுள்ளவுமான இடங்களில் வேலை பார்த்துவரும் உத்தியோகஸ்தர்களுக்கும் கவர்ன்மெண்டார் மனமுவந்து அளிப்பார்களா?

பதில்:— (ஏ) இராக்காலங்களில் போக்கு வரத்து அனுமதிக்கப்பட்டிருக்கும் மார்க்கங்களில், உத்தியோகஸ்தர்கள் சாதாரணமான வேலைகாலத்திற் கதிகமாகவும், ஞாயிற்றுக்கிழமைகளிலும் மற்ற விடுமுறை நாட்களிலும் வேலைசெய்யவேண்டி யிருக்கிறது.

(பி) கடற்சுங்க ஆபீஸ் உத்தியோகஸ்தர்களுக்கு அவ்விதம் வேலை செய்வதற்காக ஓவர்டயம் அலவுன்ஸ் கொடுபடுவது கவர்ன்மெண்டாருக்குத்தெரியும்.

(ஸி) முடியாது. கடற்சுங்க சட்டத்தில் வேலை காலம் என்னவென்று வரையறுத்துச் சொல்லப்பட்டிருக்கிறது. ஆனால் ஏற்றுமதி இறக்குமதி செய்பவர்களின் சவுகரியத்தை உத்தேசித்து வேலை செய்வதற்காக ஓவர்டயம் பீஸ் வசூலிக்கலாமென்று விதிகள் செய்யப்பட்டிருக்கின்றன. நிலச்சுங்கச் சட்டத்தில் வேலை செய்ய வேண்டிய நேரம் வரையறுக்கப்படவில்லை.

கே.—102(ஏ) ஈரோடு முனிசிபாலிட்டியில் காலரா நோய் பரவியிருப்பதும், பரவி வருவதும், முனிசிபல் சபையார் அந்தத் தொத்து நோய் பரவாமற் தடுக்க ஸ்பெஷல் உத்தியோகஸ்தர்களை நியமனம் செய்யா மலிருப்பதும் உண்மையா?

ஈரோட்டில் காலரா.

(பி) இந்த விஷயத்தில் முனிசிபல் கவுன்சில் அலட்சியமா யிருப்பதைப் பற்றி ஈரோடு வாசிகளிடமிருந்து கவர்ன் மெண்டாருக்கு மகஜர்கள் கிடைத்திருக் கின்றனவா?

(ஸி) இந்தத் தொத்து நோய் பரவாமல் தடுக்க கவர்ன்மெண்டார் என்ன நடவடிக்கை எடுத்துக் கொள்ள உத்தேசித் திருக்கிறார்கள்?

பதில்:—(ஏ)ஈரோடு நகரில் காலராவினால் சென்ற ஆகஸ்டு மாதத்தில் 61 மரணங்களும் செப்டம்பர் மாதத்தில் 10 மரணங்களும் ஏற்பட்டன. அக்டோபர் மாதம் முதற்கொண்டு புதிய கேஸ்கள் இல்லை. ஸ்பெஷலாக உத்யோகஸ்தர்கள் நியமிக்கப்பட்டார்களா வென்பதைப்பற்றி கவர்ன் மெண்டாருக்கு எவ்விதத் தகவலும் தெரியாது.

(பி) அக்டோபர் மாதம் 31-ம் தேதி இது சம்பந்தமாக ஒரு மகஜர் கிடைத்திருக்கிறது.

(ஸி)கவர்ன் மெண்டார் எவ்வித நடவடிக்கையும் எடுத்துக் கொள்ள உத்தேச மில்லை.

கே:— 103(ஏ)ஈரோடில் இப்பொழுது இருந்துவரும் முகம்மதியர்களின் புதைபூமி அதிக நெரிசலாகப் போய்விட்டதால் வேறொரு இடத்தை உடனே ஏற்படுத்தித் தர வேண்டு மென்று 1917-ம் வருஷம் அக்டோபர் மாதம் 8-ம் தேதியன்று ஈரோடு முஸ்லீம்கள் கவர்ன் மெண்டாருக்கு மகஜர் அனுப்பி யிருப்பது வாஸ்தவமா?

புதை பூமி வாங்குவதற்காக ஈரோடு முனிசிபாலிட்டிக்குகிரான்டு.

(பி) 1911ம் வருஷத்தில் முனிசிபாலிட்டியார் இதற்காக வாங்கிய பூமியானது மலைப் பாங்காக இருந்ததினால் உபயோகமாக இருக்க வில்லை யென்பது கவர்ன் மெண்டாருக்குத் தெரியுமா?

(ஸி) இப்பால் வாங்கப்பட்டமற்றொரு ஸ்தலமும் விவகாரத்திலிருப்பதும், அது நகரின் கோடியிலிருப்பதும் கவர்ன் மெண்டாருக்குத் தெரியுமா?

(டி) கோயமுத்தூர் ஜில்லா சர்ஜனால் இதற்காக ஒப்புக் கொள்ளப் பட்டிருக்கும் வேறொரு ஸ்தலத்தை வாங்குவதற்கு மாகாண பண்டி-

விருந்து கிராண்டு கொடுக்க வேண்டு மென்று ஈரோடு முனிசிபாலிடியார் கவர்ன் மெண்டாருக்கு விஞ்ஞாபனம் செய்து கொண்டிருக்கிறார்களா?

(இ) புதை பூமிக்காக புதிய ஸ்தலத்தை வாங்கு வதற்கு வேண்டிய தொகையை கவர்ன் மெண்டார் தயவு கூர்ந்து சாங்கிஷன் செய்வார்களா?

பதில்:—(ஏ) கனம் மெம்பர் பிரஸ்தாபிக்கிற மகஜர் எதுவும் கவர்ன் மெண்டாருக்குக் கிடைக்கவில்லை.

(பி) (ஸி) இது சம்பந்தமான தகவல்கள் கவர்ன்மெண்டாருக்குத் தெரியா.

(டி) ஆம். முனிசிபாலிட்டியார் கேட்டிருக்கிறார்கள்.

(இ) முனிசிபல் கவுன்சிலால் சமீபத்தில் தேர்ந் தெடுக்கப்பட்ட ஸ்தலம் சுகாதாரக் கமிஷனரால் ஒப்புக்கொள்ளப்படவில்லை. ஆகவே கிராண்டுக்காக முனிசிபல் கவுன்சில் செய்து கொண்ட விண்ணப்பம் கவனிக்கப்படவில்லை.

## 1918

## [பிப்ரவரி மாதம் 12-ம் தேதி சென்னையில் நடந்த கூட்டம்]

பிச்சைக்காரர்களின் உபத்திரவம்.

கே:—104 (1) (ஏ) பம்பாய் மாகாணத்தில் பிச்சைக்காரர்களின் உபத்திரவத்தை நிவர்த்திப்பதற்கான மார்க்கங்களைச் சொல்ல கவர்ன்மெண்டார் ஒருகமிட்டியை நியமிக்க உத்தேசித்திருப்பது கவர்ன்மெண்டாருக்குத் தெரியுமா?

(பி) சென்னை மாகாணத்தில் பிச்சைக்காரர்களின் உபத்திரவம் வெகுவாக அதிகரித்திருப்பது கவர்ன்மெண்டாருக்குத் தெரியுமா?

(2) இந்த மாகாணத்திலும் பிச்சைக்காரர்களின் பிரச்னையைப் பரிசீலனை செய்ய கவர்ன்மெண்டார் உத்தியோகஸ்தர்களும் உத்தியோகஸ்தர்களல்லாதவர்களு மடங்கிய கமிட்டியை நியமனம் செய்வார்களா?

பதில்:—(1) (ஏ) பம்பாய் கவர்ன்மெண்டார் ஒரு கமிட்டியை நியமிக்க உத்தேசித்திருப்பது தெரியும்.

(பி) இந்த மாகாணத்தில் பிச்சைக்காரர்களின் உபத்திரவம் அதிகரித்திருக்கிறதாவென்று கவர்ன்மெண்டாருக்குத் தெரியாது.

(2) கனம் மெம்பர் கோருகிற பிரகாரம் கமிட்டி யொன்றை நியமிக்க முடியாது.

பத்திரப் பதிவு இலாகா உயர்தர உத்தியோகங் களின் விநியோகம்.

௫- (ஏ) பத்திரபபதிவு இலாகாவில் மொத்தமுள்ள 24 ஜில்லா ரிஜிஸ்தரார் உத்தியோகங்களில் பிராமணரல்லாதார் ஒருவரே இருப்பதும், 17 உத்தியோகங்களை பிராமணர்கள் வகித்து வருவதும், முகம்மதியர்களும் மற்றவர்களும் முறையே 4, 2 ஸ்தானங்களை வகித்து வருவதும் கவர்ன்மெண்டாருக்குத் தெரியுமா?

(பி) இனி ஏற்படும் காலி ஸ்தானங்களுக்கு சிபார்சு செய்வதில், போதியவளவு பிரதி நிதித்துவ மில்லாத வகுப்பினரின் நன்மையைப் பாது காக்கும் பொருட்டும், இந்த வித்தியாசத்தை நிவர்த்திக்கும் பொருட்டும், சப்ரிஜிஸ்தரார் பதவியில் முதலிரண்டு கிரேடுகளிலிருக்கும் அவ்வகுப்பினரில் தகுதியானவர்களை சிபார்சு செய்யும்படி பத்திரப்பதிவு இலாகா இன்ஸ் பெக்டர் ஜெனராலுக்கு கவர்ன்மெண்டார் அறிவிப்பார்களா?

பதில்:—(ஏ) ஆம்; ஆனல் பிராமணரல்லாதாரில் இருவர் இருக்கிறார்கள்; பிராமணர்களின் சங்கியை 17 அன்று; 16 தான்.

(பி) இந்த விஷயம் ஆலோசனையிலிருந்து வருகிறது.

திருச்சி முனிசிபாலிட்டி யில் ஒரு குடி தண்ணீர்க் கால்வாய்.

கே:—106 (ஏ) திருச்சினுப்பள்ளி நத்தர் அவுலியாதர்க்காவிலும் அதன் சுற்றுப்புறத்திலும் வசிப்பவர்கள் தர்க்காவுக்கு அடுத்தாற்போலோடும் குடிதண்ணீர்க் கால்வாயில் சின்னக் கம்மாளத் தெரு, பெரிய கம்மாளத் தெரு ஜாபர்சாகிப் தெரு, சாக்கடைகளை விழச் செய்து குடி தண்ணீரைக் கெடுத்துவிடும் விஷயமாக திருச்சினுப்பள்ளி முனிசிபல் சேர்மனுக்கு ஒரு மகஜரனுப்பி, அதன் பிரதியொன்றை 1917-ம் வருஷம் ஜூலை மாதம்29-ந்தேதி கவர்ன்மெண்டாருக்குஅனுப்பியிருக்கிறார்களா? அது சம்பந்தமாக 1918-ம் வருஷம் ஜனவரி மாதம் முதல் தேதியிலும் அவர்கள் கவர்ன்மெண்டாருக்கு நினைப்பூட்டு கடிதமொன்று அனுப்பி யிருக்கிறார்களா?

(பி) தர்க்காவிலும் அதைச்சுற்றிலும் வசிப்பவர்களின் தேகாரோக்கியத்தைக் காப்பாற்றும் பொருட்டு சாக்கடைத் தண்ணீரைக் கால்வாயில்விழாமல் வேறிடத்தில் திருப்பி விடும்படி திருச்சினுப்பள்ளி முனிசிபல் சேர்மனுக்கு கவர்ன்மெண்டார் உடனே உத்திரவு அனுப்புவார்களா?

பதில்:—கனம் மெம்பர் பிரஸ்தாபிக்கும் மகஜராவது நினைப்பூட்டு கடிதமாவது கவர்ன்மெண்டாருக்குக் கிடைக்கவில்லை.

கே:—107 (ஏ) 1917-ம் வருஷம் அக்டோபர் மாதம் 5-ம் தேதியுள்ள கவர்ன் மெண்டு உத்திரவை தங்களாவில் விலக்கு செய்துவிட வேண்டுமென்று நாகப்பட்டணம் முனிசிபாலிட்டியில் வேலை பார்த்து வரும் சானிட்டெரி இன்ஸ்பெக்டர்கள் 1917-ம் வருஷம் டிசம்பர் மாதம் 17-ம் தேதி கவர்ன்மெண்டாருக்கு மகஜர் அனுப்பியிருப்பது வாஸ்தவமா?

நாகப்பட்டணம் முனிசிபல் சானிட்டேரி இன்ஸ்பெக்டர்கள்.

(பி) சானிட்டேரி இன்ஸ்பெக்டர்களுடைய மகஜரை கவர்ன்மெண்டார் அனுகூலமாக கவனிப்பார்களா?

பதில்:—கனம் மெம்பர் பிரஸ்தாபித்திருக்கிற மகஜர் கிடைத்து கவர்ன்மெண்டாரின் ஆலோசனையிலிருந்து வருகிறது.

கே:—108 (ஏ) "ஒரு முஸ்லீம் தலைவருக்கு அவமதிப்பு" என்று மகுடமிட்டு 1917-ம் வருஷம் நவம்பர் மாதம் 21-ம் தேதி வெளியான "இந்தியன் பேட்ரியட்" பத்திரிகையில் பிரசுரமாகியிருக்கும் வியாசத்தை கவர்ன் மெண்டார் பார்வை யிட்டார்களா?

ஒரு முஸ்லீம் தலைவரும் திருப்பத்தூர் முன்சிப்பும்

(பி) இதைப்பற்றி கவர்ன் மெண்டார் விசாரணை செய்வார்களா?

பதில்:—(ஏ) அவமதிக்கப் பெற்ற நபரிடமிருந்து கவர்ன் மெண்டாருக்கு மனுக் கிடைத்திருக்கிறது.

(பி) டிஸ்திரிக்ட் முன்சிப்புகளின் நடத்தையைக்கண்காணித்து வரும் ஹைகோர்ட்டாருக்கு அந்த மனு அனுப்பப் பட்டிருக்கிறது.

கே:—109 (ஏ) திருச்சி டிஸ்திரிக்ட் கோர்ட்டு சிரஸ்தார் வேலை பார்த்து வந்த முகம்மதியர் இறந்து போன தினால் காலியாயிருந்த அந்த ஸ்தானத்திற்கு, மாதம் 1-க்கு 110 ரூபாய் சம்பளம் பெறும் பிராமணரல்லாத சப்கோர்ட்டு சிரஸ்தா ரொருவரிருந்தும், 100-ரூபாய் சம்பளம் வாங்கி வந்த டிஸ்திரிக்ட் கோர்ட்டு ஹெட் கிளார்க்கு வேலை பார்த்து வந்த ஒரு பிராமணரை நியமனம் செய்திருக்கும் விஷயமாக 1918-ம் வருஷம் ஜனவரிமாதம் 5-ம் தேதி வெளியான "ஜஸ்டிஸ்" பத்திரிகையில் பிரசுரமாகியிருக்கும் வியாசத்தை கவர்ன் மெண்டார் பார்வையிட்டார்களா?

திருச்சினப் பள்ளி டிஸ்திரிக்ட் கோர்ட்டு சிரஸ்தார் ஸ்தானம்.

(பி) கவர்ன் மெண்டு உத்தியோகங்களில் போதிய வளவு பிராமண ரல்லாதார் இல்லாமலிருப்பதைப் பற்றி கவர்ன் மெண்டார் தக்க கவனம் செலுத்தி வருவதை உத்தேசித்து, பிராமணரல்லாதார் ஒருவர் இருக்கையில் பிராமணரை நியமித்திருப்பதின் காரண மென்ன வென்று கவர்ன்மெண்டார் அறிவிப்பார்களா?

(ஸி) இந்த விஷயத்தை கவர்ன்மெண்டார் பரிசீலனை செய்து அவசியமான மாறுதல்களைச் செய்வார்களா?

பதில்:—(எ) கனம் மெம்பர் குறிப்பிட்ட வியாசத்தை கவர்ன் மெண்டார் படித்துப்பார்த்தார்கள்.

(பி) 1873-ம் வருஷத்திய சென்னை சிவில் கோர்ட்டுகள் சட்டத்தின் 22-வது பிரிவின்படி ஜில்லா கோர்ட்டு சிரஸ்தார் வேலைகளுக்கு நியமனம் செய்யும் அதிகாரம் டிஸ்திரிக்ட் ஜட்ஜைச் சேர்ந்தது. ஹைகோர்ட்டாரின் கண் காணிப்புக்குட்பட்டு அவருடைய உத்திரவே ஊர்ஜிதமானதாகும்.

கே:—(எ) 110 திருச்சி முனிசிபாலிட்டியில் இப்பொழுது சேர்மன் வேலைபார்த்து வருபவரின் காலவரையறைமுடிந்ததும், கௌரவ சேர்மனொருவரைத் தெரிந்தெடுத்துக் கொள்ளும் சுதந்தரத்தைக் கொடுக்கும்படி கவர்ன் மெண்டாரைக் கேட்டுக் கொள்ளுவதாய் திருச்சி முனிசிபல் கவுன்சில் செய்திருக்கும் தீர்மானத்தைப் பற்றி 1918 ம் வருஷம் ஜனவரி மாதம் 22ம் தேதி வெளியான "ஹிந்து" பத்திரிகையில் பிரசுரமாகியிருக்கும் வியாசத்தை கவர்ன் மெண்டார் பார்வை யிட்டார்களா?

திருச்சி முனிசிபாலிடி சேர்மன் ஸ்தானம்.

(பி) திருச்சினப் பள்ளி முனிசிபல் கவுன்சிலின் அபீஷ்டத்தை கவர்ன் மெண்டார் பூர்த்தி செய்துவைப்பார்களா?

பதில்:—(எ)கனம் மெம்பர் குறிப்பிடும் வியாசத்தை கவர்ன் மெண்டார் பார்வையிட்டார்கள்.

(பி) கவுன் சிலின் வேண்டுகோள் கிரமப்படி ஆலோசிக்கப்படும்.

கே:—111(1) டச்சு கவர்ன் மெண்டைச் சேர்ந்தவரான டாக்டர் வாண்டர்வீன் சென்னையிலிருந்து கால் நடைகளை ஏற்றுமதி செய்வதைப் பற்றி 1917 ம் வருஷம் நவம்பர் மாதம் 20 ம் தேதி கூடிய மீட்டிங்கில் கனம் வெங்கடபதி ராஜு கேட்டிருந்த கேள்விக்கு கவர்ன் மெண்டார் அளித்திருக்கும் பதில் சம்பந்தமாக,

ஈஸ்டு இன்டீசுக்குக் கால் நடைகள் ஏற்றுமதி

(ஏ) இந்திய வியாபாரிகளால் சென்னையிலிருந்தும் நாகப் பட்டணத்திலிருந்தும் ஈஸ்ட் இண்டீஸிலுள்ள டச்சுத் தீவுகளுக்கு நீண்ட காலமாக கால் நடைகள் ஏற்றுமதி செய்யப்பட்டு வந்ததும், சென்ற 8 வருஷங்களாக அது நின்று போய்விட்டதும் கவர்ன் மெண்டாருக்குத் தெரியுமா?

(பி) 1910ம் வருஷம் சென்னை மாகாணத்தில் கால்நடைகளுக்கு ரத்தக் கழிச்சல் கண்டிருந்ததுபற்றி சென்னையி லிருந்தும் நாகப்பட்டணத்தி லிருந்தும் தங்களுடைய துறை முகங்களில் கால்நடைகளைக் கொண்டுவந்திறக்கக் கூடாதென்று டச்சு கவர்ன்மெண்டார் 15-2-1910ல் உத்திரவு செய்ததும், அந்த உத்திரவு இன்னமும் அமுலிலிருந்து வருவதும் கவர்ன்மெண்டாருக்குத் தெரியுமா?

(ஸி) தங்களுடைய கால் நடை வழிகளை வலுப் படுத்தி பாது காப்பதற்காகவே அந்த கவர்ன் மெண்டாரால் அவ்வித உத்திரவு பிறப்பிவிக்கப் பட்டிருக்கிறதென்பது கவர்ன்மெண்டாருக்குத் தெரியுமா?

(டி) அந்த உத்திரவினால் இந்தியாவின் கால் நடை வியாபாரம் வெகுவாக பாதிக்கப்பட்டு விட்ட தென்பது கவர்ன்மெண்டாருக்குத் தெரியுமா?

(2) இந்தியாவின் வியாபாரத்தைக் காப்பாற்றும் பொருட்டு டச்சு துறை முகங்களுக்கு கால்நடைகளை ஏற்றுமதி செய்ய முடியாமல் நீண்ட காலமாக இருந்து வரும் நிர்ப்பந்தங்களை அகற்றி விடும்படி டச்சு கவர்மெண்டாருடன் இந்த கவர்ன்மெண்டார் கலந்து ஏற்பாடு செய்வார்களா?

(3) டச்சு கவர்ன்மெண்டார் அந்த உத்திரவை ரத்து செய்ய இஷ்டப்படாவிடில், டச்சு கவர்ன்மெண்டின் பிரதிநிதிகள் தங்களுடைய குடியேற்ற நாடுகளுக்கு ஏற்றி அனுப்புவதற்காக இந்தியாவில் கால் நடைகளை வாங்கமுடியாமல் தடுத்து விடும்படி இந்தியா கவர்ன்மெண்டாரை இந்த கவர்ன்மெண்டார் கேட்டுக் கொள்ளுவார்களா?

பதில்:—(1) (ஏ) (டி):—அடியிற்கண்ட புள்ளி விவரங்கள் கிடைத்திருக்கின்றன:—

சென்னையிலிருந்தும் நாகப்பட்டணத்தி லிருந்தும் சுமட்ரா, ஜாவா தீவுகளுக்கு ஏற்றுமதி செய்யப்பட்ட கால் நடைகளின் சங்கியை:—

| | | | | |
|---|---|---|---|---|
| 1900—01 முதல் 1905—06 வரையில் | | | | பூச்சியம். |
| 1906—07 | ... | ... | ... | 264 |
| 1907—08 | ... | ... | ... | 600 |

| | | | | |
|---|---|---|---|---|
| 1908—09 | ... | ... | ... | 466 |
| 1909—10 | ... | ... | ... | 466 |
| 1910—11 | ... | ... | ... | |
| 1911—12 | ... | ... | ... | 405 |
| 1912—13 | ... | ... | ... | |
| 1913—14 | ... | ... | ... | 1,110 |
| 1914—15 | ... | ... | ... | 800 |
| 1915—16 | ... | ... | ... | ... |
| 1916—17 | ... | ... | ... | ... |

1912-13-ம் வருஷத்திற்கு முந்தின வருஷங்களுக்குக் கொடுக்கபட்டிருக்கும் புள்ளி விவரங்களில் குதிரைகளைத் தவிர மற்ற எல்லா மிருகங்களும் அடங்கியிருக்கின்றன. கால் நடைகளுக்கு மட்டில் அந்த வருஷங்களுக்கு பிரத்தியேகமாக கணக்கில்லை.

(பி) 1910 வருஷம் மார்ச்சுமாதம் முதல்தேதி வெளியான போர்ட்டு செயிண்டு ஜார்ஜு கெஜட்டின் முதல் பாகம் 277ம் பக்கத்தில் பிரசுரமாகியிருக்கும் 1910ம் வருஷம் பிப்பிரவரிமாதம் 24ம் தேதியுள்ள 104ம் நம்பர் அறிக்கையில் கண்டதடையை கனம்மெம்பர் குறிப்பிடுவதாகக் காண்கிறது. சுமட்ரா தீவிலுள்ள துறைமுகங்களுக்கு மட்டில் இந்தத் தடை உத்திரவு பிரயோகப்படுமே தவிர இதர டச்சு குடியேற்ற நாடுகளுக்கு செல்லும்படிபடியுள்ள தாகமாட்டாது.

(வி) என்ன எண்ணத்தின் மேபரில் டச்சு கவர்ன்மெண்டார் தடை உத்திரவு பிறப்பி வித்தார்களென்று தெரியவில்லை. சென்னையிலும் நாகப்பட்டணத்திலும் ரத்தக் கழிச்சல் வியாதி வியாபித்திருந்தது அந்த உத்திரவுக்குக் காரணமா யிருக்கலாம்.

(2) & (3) இவ்விஷயம் பரிசிலனை செய்யப்படும்.

கே:—112 இந்த ராஜதானியில் டிப்டி தாசில்தார் உத்தியோகங்கள் எவ்விதம் பல வகுப்பினருக்குள்ளும் விதாசாரமாகவில்லாமல் விநியோகிக்கப்பட்டிருக்கின்றன வென்பதைப் புள்ளிவிவரங்களுடன் எடுத்துக்காட்டி 1918-ம் வருஷம் ஜனவரி மாதம் 24-ம் தேதி வெளியான ,'ஜஸ்டிஸ்'' பத்திரிகையில் எழுதப்பட்டிருக்கும் தலையங்கத்தை கவர்ன்மெண்டார் பார்வை யிட்டார்களா?

**உமேதவாரிடிப்டி தாசில்தார்களைத் தேர்ந்தெடுத்தல்:**

(பி) 1917-ம் வருஷம் நவம்பர் மாதம் 20-ம் தேதி கூடிய மீட்டிங்கில் நான் கேட்டிருந்த 9-வது கேள்வியின் (பி) உட்பிரிவுக்கு கவர்ன்மெண்டார் அளித்திருக்கும் பதிலை அனுசரித்து, 1917-ம் வருஷம் செப்டம்பர் மாதம் 30-ம் தேதியுள்ள 3061-ம் நம்பர் கவர்ன்மெண்டு உத்திரவின் மூலமாக மனுக்கள் அழைக்கப்பட்டிருக்கும் 6 உமேதவாரி டிப்டி தாசில்தார் ஸ்தானங்களையும், டிப்டி தாசில்தார் வேலைகளை எந்த வகுப்பினர் குறைவாக வகித்து வருகிறார்களோ அவர்களுக்கே கொடுக்கும் விஷயத்தை கவர்ன்மெண்டார் ஆலோசனைசெய்வார்களா?

பதில்:—(ஏ) கவர்ன்மெண்டார் அந்த வியாசத்தை பார்வையிட்டார்கள். ஆனால் அந்த வியாசத்தில் கொடுபட்டிருக்கும் புள்ளிவிவரங்கள் சரியல்ல.

(பி) இந்த வேலைகளுக்கும் ஏற்கனவே நியமனம் செய்தாகிவிட்டது.

கவர்ன்மெண்டு கார்ய ஸ்தலத்தில் பல வகுப்பினருக்கும் இருந்து வரும் பிரதி நிதித்துவம்.

கே—113 சென்னை கவர்ன்மெண்டு கார்யஸ்தலத்தின் ஒவ்வொரு இலாகாவிலும் வேலை பார்த்து வரும் சூப்பரின்டெண்டுகளின் சங்கியை; ஒவ்வொரு கிரேடிலும் எத்தனை பேர்களிருந்து வருகிறார்களென்கிற விவரம்; அந்த வேலைகளைக் காயமாக இப்போது வகித்து வருகிறவர்களின் வகுப்பு வாரி விவரம் (பிராமணரல்லாத ஹிந்துக்கள், முகம்மதியர்கள், இந்திய கிறிஸ்தவர்கள், பிராமணர்கள்) சென்னை நகரின் மொத்த ஜனத்தொகையில் அந்தந்த வகுப்பினரின் விதாசாரம்; ஒவ்வொரு இலாகாவிலும் வேலைபார்த்து வரும் சூப்பரின்டெண்டுகளின் மொத்த சங்கியையில் அந்தந்த வகுப்பினரின் விதாசாரம்; இவைகளடங்கிய ஜாப்தாவை கவர்ன்மெண்டார் சபையின் முன்பாக ஆஜர் படுத்துவார்களா?

(பி) ஒவ்வொரு கார்யஸ்தலத்தில் மேல் வகுப்பிலும் கீழ் வகுப்பிலும் வேலை பார்த்து வரும் குமாஸ்தாக்களைப்பற்றியும் மேற்கண்டவாறு கவர்ன்மெண்டார் ஜாப்தாவொன்றைத் தயாரித்து ஆஜர் படுத்துவார்களா?

பதில்:—(ஏ) கனம் மெம்பருடைய வேண்டுகோளின்படி ஜாப்தா தயாரித்து சபையின் முன்பாக ஆஜர்ப்படுத்தப்பட்டிருக்கிறது. சென்னையின் மொத்த ஜனத்தொகையில் அந்தந்த வகுப்பினரின் விதாசார சம்பந்தமாக சென்ற கூட்டத்தில் கனம் மெம்பர் கேட்டிருந்த கேள்விக்கு கவர்ன்மெண்டார் அளித்திருக்கும் பதிலை கனம் மெம்பர் பார்த்துக் கொள்வாராக.

| எத்தனை ரூபாய் சம்பளமுள்ள உத்தியோகங்கள். | பிராமண ரல்லாத ஹிந்துக்கள் | முகம்மதியர்கள் | இந்திய கிறிஸ்தவர்கள் | பிராமணர்கள் | மொத்தம். |
|---|---|---|---|---|---|
| | சீப் சேக்ரிடேரியட் ஆபீஸ் | | | | |
| | சூப்பரின்டேண்டேகள் | | | | |
| ரூ. 350 | ... | ... | ... | 1 | 1 |
| „ 300 | ... | ... | ... | 1 | 1 |
| „ 250 | ... | ... | ... | 1 | 1 |
| „ 200 | ... | ... | 1 | 1 | 2 |
| „ 175 | ... | ... | 1 | ... | 1 |
| „ 150 | ... | ... | ... | 2 | 2 |
| மொத்தம். | ... | ... | 2 | 6 | 8 |
| மொத்தசங்கியையில் விதாசாரம் | ... | ... | 25 | 75 | ... |
| | உயர்தர குமாஸ்தாக்கள் | | | | |
| ரூ. 80—5—180 | 1 | ... | ... | 3 | 4 |
| „ 120 | ... | ... | 1 | 1 | 2 |
| „ 100 | 1 | ... | 1 | 1 | 3 |
| „ 80 | 3 | ... | ... | 2 | 5 |
| „ 60 | 2 | ... | ... | 2 | 4 |
| „ 40 | 1 | ... | 1 | 2 | 5 * |
| மொத்தம். | 8 | ... | 3 | 11 | 23 |
| விதாசாரம். | 34·7 | ... | 13·40 | 47·08 | |
| | லோயர் டிவிஷன் குமாஸ்தாக்கள் | | | | |
| ரூ. 80 | ... | ... | ... | ... | 1 † |
| „ 70 | 1 | ... | ... | ... | 1 |
| „ 60 | ... | 1 | ... | 1 | 2 |
| „ 50 | ... | ... | 1 | 1 | 2 |
| „ 40 | 1 | ... | ... | 1 | 2 |
| „ 35 | ... | ... | 1 | 1 | 2 |
| „ 30 | 1 | ... | ... | 1 | 2 |
| „ 25 | 1 | ... | ... | 1 | 2 |
| மொத்தம், | 4 | 1 | 2 | 6 | 14 |
| விதாசாரம். | 28·5 | 7·1 | 14·2 | 42·8 | ... |

* ஒரு ஐரோப்பியரும் அடங்கியிருக்கிறுர்.
† ஒரு யுரேஷியர் வேலை பார்த்து வருகிறுர்.

| எத்தனை ரூபாய் சம்பளத்தில் | பிராமணரல்லாத ஹிந்துக்கள் | முகம்மதியர்கள் | இந்தியக் கிறிஸ்தவர்கள் | பிராமணர்கள் | மொத்தம். |
|---|---|---|---|---|---|
| | ஹோம்சக்ரிடேரியட் சூப்பரின் டெண்டுகள் | | | | |
| ரூ. 350 | ... | ... | ... | 1 | 1 |
| ,, 250 | ... | ... | ... | 1 | 1 |
| ,, 200 | ... | ... | ... | 1 | 1 |
| ,, 175 | ... | ... | ... | 1 | 1 |
| ,, 150 | ... | ... | ... | 1 | 2 † |
| மொத்தம். | ... | ... | ... | 5 | 6 |
| மொத்த விதாசாரம் | ... | ... | ... | 83·3 | ... |
| | உயர்தர குமாஸ்தாக்கள் | | | | |
| ரூ. 120 | ... | ... | ... | 1 | 2 † |
| ,, 100 | ... | ... | ... | 4 | 4 |
| ,, 80 | 3 | ... | ... | 3 | 6 |
| ,, 60 | 1 | ... | ... | 4 | 5 |
| ,, 40 | 4 | ... | ... | 2 | 6 |
| மொத்தம் | 8 | ... | ... | 14 | 23 |
| விதாசாரம். | 34·7 | ... | ... | 60·8 | ... |
| | லோயர் டிவிஷன் குமாஸ்தாக்கள் | | | | |
| ரூ. 40—2—70 | ... | ... | ... | 1 | 1 |
| ,, 60 | 1 | ... | ... | 1 | 2 |
| ;, 50 | 2 | ... | ... | ... | 2 |
| ,, 40 | 1 | ... | ... | 1 | 2 |
| ,, 35 | ... | ... | ... | 2 | 2 |
| ,, 30 | 1 | ... | ... | 1 | 2 |
| ,, 25 | ... | ... | ... | 2 | 2 |
| ஆக | 5 | ... | ... | 8 | 13 |
| விதாசாரம் | 38·4 | ... | ... | 61·15 | ... |
| | ரெவினியுசிக்ரிடரியட் சூப்பரின்டெண்டுகள் | | | | |
| ரூ. 350 | ... | ... | 1 | ... | 1 |
| ,, 250 | ... | ... | ... | 1 | 1 |
| , 200 | ... | ... | 1 | ... | 1 |
| ,, 175 | ... | ... | ... | 1 | 1 |
| ,, 150 | ... | ... | 1 | 1 | 2 |
| மொத்தம் | ... | ... | 3 | 3 | 6 |
| விதாசாரம். | ... | ... | 50 | 50 | ... |

† ஒரு யுரேஷியரும் வேலை பார்த்திருக்கிறார்.

| எத்தனை ரூபாய் சம்பளத்தில் | பிராமணரல்லாத ஹிந்துக்கள் | முகம்மதியர்கள் | இந்திய கிறிஸ்தவர்கள் | பிராமணர்கள் | மொத்தம். |
|---|---|---|---|---|---|
| | உயர்தர குமாஸ்தாக்கள் | | | | |
| ரூ. 120 | 1 | ... | ... | 1 | 2 |
| „ 100 | ... | ... | ... | 3 | 3 |
| „ 80 | 1 | ... | ... | 5 | 6 |
| „ 60 | ... | ... | 1 | 3 | 4 |
| „ 40 | 2 | ... | 1 | 2 | 5 |
| ஆக | 4 | ... | 2 | 14 | 20 |
| விதாசாரம் | 20 | ... | 10 | 70 | ... |
| | லோயா டிவிஷன் குமாஸ்தாக்கள் | | | | |
| ரூ. 60 | 1 | ... | 1 | 1 | 3 |
| „ 50 | 3 | ... | ... | ... | 3 |
| „ 40 | 1 | ... | ... | 2 | 4* |
| „ 30 | 1 | 1 | ... | 1 | 4† |
| „ 40—2—70 | ... | ... | ... | 1 | 1 |
| ஆக | 6 | 1 | 1 | 5 | 15 |
| விதாசாரம் | 40 | 6·6 | 6·6 | 33·3 | ... |
| | மராமத்திலாகா சிக்ரிடேரியட் சுப்பரின்டேண்டேகள் | | | | |
| ரூ. 250—20—350 | ... | ... | ... | 1 | 1 |
| „ 250 | ... | ... | ... | 1 | 1 |
| „ 200 | ... | ... | ... | 1 | 1 |
| „ 175 | ... | ... | 1 | ... | 1 |
| „ 150 | ... | ... | ... | 3 | 3 |
| ஆக | ... | ... | 1 | 6 | 7 |
| விதாசாரம் | ... | ... | 14.3 | 85.7 | ... |

* 40 ரூபாய் ஸ்தான மொன்று காலி.

† ஒரு யூரேஷியரும் வேலைபார்த்து வருகிறார்.

| எத்தனை ரூபாய் சம்பளத்தில் | பிராமணரல்லாத ஹிந்துக்கள் | முகம்மதியர்கள் | இந்திய கிறிஸ்தவர்கள் | பிராமணர்கள் | மொத்தம். |
|---|---|---|---|---|---|
| | | | குமாஸ்தாக்கள் ‡ | | |
| ரூ. 120 | ... | ... | ... | 2 | 2 |
| ,, 100 | ... | ... | ... | 2 | 2 |
| ,, 80 | ... | ... | ... | 3 | 3 |
| ,, 70 | 1 | ... | ... | 3 | 4 |
| ,, 60 | ... | 1 | 1 | 2 | 4 |
| ,, 50 | 1 | ... | ... | 4 | 5 |
| ,, 45 | 1 | ... | 2 | 3 | 6 |
| ,, 40 | ... | ... | 2 | 5 | 7 |
| ,, 35 | 1 | ... | ... | 7 | 8 |
| ,, 30 | ... | ... | ... | 7 | 7 |
| ரூ. 30—2—70 | ... | ... | ... | 1 | 1 |
| ,, 30—2—40 | ... | ... | ... | 1 | 1 |
| ,, 20—2—30 | ... | ... | ... | 1 | 1 |
| ஆக | 4 | 1 | 5 | 41 | 51 |
| | 7·8 | 2·00 | 9·8 | 80·4 | ... |
| | | | மராமத்திலாகா தொடர்ச்சி. (நீர்ப்பாசன இலாகா) சூப்பரிண்டெண்டுகள். | | |
| ரூ. *350—20—450 | ... | ... | ... | 1 | 1 |
| ,, 200—10—250 | ... | ... | ... | 1 | 1 |
| ,, 150 | ... | ... | ... | 1 | 1 |
| ஆக | ... | ... | ... | 3 | 3 |
| விகிதாசாரம் | ... | ... | ... | 100 | ... |

‡ அப்பர் டிவிஷனென்றும் லோயர் டிவிஷனென்றும் வித்தியாசமில்லை. எல்லாரையும் ஒரே ஜப்தாவில் சேர்த்திருக்கிறது.

* மானேஜர்.

| எத்தனை ரூபாய் சம்பளத்தில் | பிராமணரல்லாத ஹிந்துக்கள் | முகம்மதியர்கள் | இந்திய கிறிஸ்துவர்கள் | பிராமணர்கள் | மொத்தம் |
|---|---|---|---|---|---|
| | குமாஸ்தாக்கள் † | | | | |
| ரூ. 125 | ... | ... | ... | 1 | 1 |
| ,, 100 | ... | ... | ... | 2 | 2 |
| ,, 75 | ... | ... | ... | 2 | 2 |
| ,, 60 | 1 | 1 | ... | ... | 2 |
| ,, 50 | ... | ... | ... | 3 | 3 |
| ,, 40 | 1 | ... | ... | 2 | 3 |
| ,, 35 | ... | ... | ... | 3 | 3 |
| ,, 30 | ... | ... | ... | 4 | 4 |
| ஆக | 2 | 1 | ... | 17 | 20 |
| | லோகல் அண்டு முனிசிபல் சிக்ரிடேரியட் | | | | |
| | சூப்பரின்டெண்டுகள் | | | | |
| ரூ. 350 | ... | ... | ... | 1 | 1 |
| ,, 250 | ... | ... | ... | 1 | 1 |
| ,, 200 | ... | ... | ... | 1 | 1 |
| ,, 175 | ... | ... | ... | 1 | 1 |
| ,, 150 | ... | ... | ... | 2 | 2 |
| ஆக | ... | ... | ... | 6 | 6 |
| விதாசாரம் | ... | ... | ... | 100 | ... |
| | உயர்தர குமாஸ்தாக்கள் | | | | |
| ரூ. 120 | 1 | ... | ... | 1 | 2 |
| ,, 100 | 2 | ... | ... | 2 | 4 |
| ,, 80 | 1 | ... | 1 | 4 | 6 |
| ,, 60 | ... | ... | 1 | 3 | 4 |
| ,, 40 | 2 | ... | ... | 4 | 6 |
| மொத்தம் | 6 | ... | 2 | 14 | 22 |
| விதாசாரம் | 27·3 | ... | 9·1 | 63·6 | ... |
| | லோயர் டிவிஷன் குமாஸ்தாக்கள் | | | | |
| ரூ. 30—2—70 | 1 | ... | ... | ... | 1 |
| ,, 60 | 1 | ... | 1 | 1 | 3 |
| ,, 50 | 1 | ... | ... | 2 | 3 |
| ,, 40 | 1 | ... | ... | 1 | 2 |
| ,, 35 | 1 | ... | ... | 2 | 3 |
| ,, 30 | 1 | ... | ·1 | 0 | 2 |
| ஆக | 6 | ... | 2 | 6 | 14 |
| விதாசாரம் | 42·9 | ... | 14·2 | 42·9 | ... |

† அப்பர் டிவிஷன் லோயர்டிவிஷன் என்கிற வித்தியாசம் கிடையாது.

கே:—114. ரெவினியூ இலாகாவில் வேலை செய்துவரும் உத்தியோகஸ்தர்களின் விவரங்களடங்கிய ஜாப்தா அச்சாகி விற்பனை செய்யப்படுவதுபோல் சென்னை நகரிலுள்ள கவர்ன்மெண்டு காரியஸ்தலத்தின் பல இலாகாக்கள், சென்னையிலுள்ள மற்ற கவர்ன்மெண்டு ஆபீஸ்கள் இவைகளில் வேலைபார்த்து வருபவர்களின் ஜாப்தாவையும் அச்சிட்டு விற்பனைசெய்யும்படி கவர்ன்மெண்டார் ஏற்பாடு செய்வார்களா?

கவர்ன்மெண்டு ஆபீஸ்களில் வேலை பார்ப்பவர்களின் ஜாப்தா.

பதில்:—கனம் மெம்பர் யோசனை சொல்லுகிறபடி செய்ய கவர்ன்மெண்டார் தயாராக இல்லை.

கே:—115. சென்ற 5 வருஷங்களாக வருஷந்தோறும் கவர்ன்மெண்டு காரியஸ்தலத்தில் ஒவ்வொரு இலாகாவிலும் எத்தனை கேள்விகளும், தீர்மானங்களும் கவனிக்கப்பட்டனவென்னும் விவரங்களைக்காட்டும் ஜாப்தாவொன்றை கவர்ன்மெண்டார் தயாரித்து சபையின் முன்பாக ஆஜர்ப்படுத்துவார்களா?

கவர்ன்மெண்டு காரிய ஸ்தலத்தில் கவனிக்கப்பட்ட கேள்விகளும் தீர்மானங்களும்.

பதில்:—கனம் மெம்பர் கேட்கும் புள்ளிவிவரங்களை எவ்வளவு வரையில் சேகரிக்க முடியுமோ அவ்வளவு சேகரித்துத் தயாரித்த ஜாப்தாவை சபையின் முன்பாக ஆஜர் செய்திருக்கிறது.

**1917-ம் வருஷத்துடன் முடிவடைந்த 5 வருஷங்களில் சென்னை கவர்ன்மெண்டு காரிய ஸ்தலத்தின் ஒவ்வொரு இலாகாவிலும் பிரதிவருஷமும் கவனிக்கப்பட்ட கேள்விகள் தீர்மானங்களைக் காட்டும் ஜாப்தா.**

| வருஷம். | பப்ளிக் செக்ரிடேரியட். | ரெவினியூ செக்ரிடேரியட். | லோகல் அண்டு முனிசிபல் செக்ரிடேரியட். | ஹோம் செக்ரிடேரியட். | மராமத்து இலாகா (ரோட்டு) செக்ரிடேரியட். | மராமத்து இலாகா (நீர்ப்பாசன செக்க்ஷன்) செக்ரிடேரியட். |
|---|---|---|---|---|---|---|
| | | | கேள்விகள். | | | |
| 1913 | 108 | 120 | 152 | ... | 32 | 70 |
| 1914 | 111 | 123 | 183 | ... | 45 | 55 |
| 1915 | 127 | 177 | 247 | ... | 58 | 39 |
| 1916 | 140 | 173 | 181 | ... | 37 | 39 |
| 1917 | 54 | 191 | 158 | 218 | 64 | 47 |
| ஆக, | 540 | 784 | 921 | 218 | 236 | 250 |
| | | | தீர்மானங்கள். | | | |
| 1913 | 14 | 18 | 68 | ... | 13 | 4 |
| 1914 | 9 | 37 | 54 | ... | 8 | 3 |
| 1915 | 28 | 51 | 61 | ... | 7 | 4 |
| 1916 | 22 | 49 | 62 | ... | 5 | 7 |
| 1917 | 19 | 44 | 62 | 65 | 6 | 10 |
| ஆக, | 92 | 199 | 307 | 65 | 39 | 28 |

*குறிப்பு:—பல கேள்விகளும் தீர்மானங்களும் பல இலாகாக்களிலும் சம்பந்தப்பட்டவை.*

## [ஏப்பிரல் மாதம் 30-ம் தேதி சென்னையில் நடந்த கூட்டம்].

**தனிப்பட்ட நபர்களுடைய பாடசாலைகளில் முகம்மதியப் பிள்ளைகளுக்கு சம்பள விகிதம்.**

கே.—116 (ஏ) கவர்ன்மெண்டாருடைய உதவிபெற்று தனிப்பட்ட நபர்களால் நடத்தப்பெற்று வரும் பாடசாலைகளில் முகம்மதியப் பிள்ளைகளிடமிருந்து அரைச் சம்பளம் வாங்கிக்கொள்ளும் விஷயமாக 1914-ம் வருஷம் மே மாதம் 19-ம் தேதியில் கூடிய இந்த சபையில் நான் கேள்விகேட்டு அதற்கு கவர்ன்மெண்டார் பதிலளித்

திருக்கிற பிரகாரமல்லாது, தஞ்சாவூரிலுள்ள எஸ். பி. ஜி. செகண்டரி ஸ்கூல், கலியாணசுந்தரம் ஹைஸ்கூல் போன்ற கவர்ன்மெண்டாருடைய உதவி கொண்டு நடந்து வரும் பாடசாலைகளின் மானேஜர்கள் கிராண்டு சட்டம் 32-வது பிரிவின் திருத்தத்தை கவனியாது முகம்மதியப் பிள்ளை களிடமிருந்து இன்னமும் முழுச்சம்பளம் வசூலித்து வருவது கவர்ன்மெண் டாருக்குத் தெரியுமா?

(பி) முகம்மதியர்களுக்குள் கல்வி அறிவைப் பரவச் செய்யவேண்டிய அவசியத்தை உத்தேசித்து, கவர்ன்மெண்டார் இவ்விஷயமாக விசாரணை செய்து அத்தகைய பள்ளிக்கூடங்களின் மானேஜர்களை முகம்மதியப் பிள்ளை களிடமிருந்து அரைச் சம்பளமே வசூலிக்கும்படி வற்புறுத்துவார்களா?

பதில்:—(ஏ) கிராண்டு சட்டத்தின் 32-வது பிரிவானது முகம்மதி யப் பிள்ளைகளிடம் அரைச் சம்பளமே வாங்கும்படி பாடசாலை மானேஜர் களைக் கட்டுப்படுத்தவில்லை; ஆகவே சில மானேஜர்கள் அவ்விதம் செய்கிற தில்லை.

(பி) சம்பளம் விதிக்க மானேஜர்களுக்கு இப்பொழுதிருந்து வரும் அதிகாரங்களைப் பிடுங்கிவிட கவர்ன்மெண்டாருக்கு உத்தேசமில்லாததால் இதைப்பற்றி விசாரணை செய்யவேண்டிய தவசியமென்று கவர்ன்மெண் டாருக்குத் தோன்றவில்லை. ஆயினும் பாடசாலைகளுக்குக் கொடுபடவேண் டிய கிராண்டு தொகைகளை நிர்த்தாரணம் செய்வதில் முகம்மதியப் பிள்ளை களை அரைச் சம்பளத்தில் சேர்த்துக் கொண்டதினால் பாடசாலை மானேஜர் களுக்கு நேரிட்டிருக்கும் கஷ்டம் கவனிக்கப்படுவதை கனம் மெம்பர் அறிவாராக.

பயிற்சி பெறாத முகம்மதிய உபாத்தி யாயர்களுக்கு அதி கச் சம்பளம்.

கே.—117 (ஏ) முகம்மதிய ஆரம்பப் பாடசாலைகளுக்கு கேவலம் 8 ரூபாய் சம்பளத்தில் பயிற்சி பெறாத முகம்மதிய உபாத்தியாயர்களைத் தேடிப் பிடிப்பது கல்வி இலாகா அதிகாரிகளுக்குக் கஷ்டமாக யிருக்கிற விஷயம் கவர்ன்மெண்டாருக்குத் தெரியுமா?

(பி) சில தாலுகா போர்டுகள் அவ்வித உபாத்தியாயர்களுக்கு 10 ரூபாய் சம்பளம் கொடுத்து வருவது கவர்ன்மெண்டாருக்குத் தெரியுமா?

(ஸி) ஆரம்ப முகம்மதியப் பாடசாலைகளிலுள்ள பயிற்சி பெறாத முகம்மதிய உபாத்தியாயர்களுக்கு 10 ரூபாய் சம்பளம் கொடுபட வேண்டு மென்று கவர்ன்மெண்டார் உத்திரவு பிறப்பிவிப்பார்களா?

பதில்:—13-வது கேள்விக்கு கவர்ன்மெண்டார் கொடுத்திருக்கும் பதிலை கனம் மெம்பர் கவனிப்பாராக.

13வது கேள்விக்கு பதில்:—8 ரூபாய் சம்பளத்திற்கு பயிற்சிபெறாத உபாத்தியாயர்களைத் தேடுவதில் பொதுவாக சிரமமிருப்பதாகத் தெரியவில்லை. அந்தசம்பளத்துக்கு உபாத்தியாயர்கள் அகப்படுவதுகஷ்டமாகயிருக்கிறதென்று கவர்ன்மெண்டுக்கு அறிவிக்கப்பட்ட கேஸ்களில் பயிற்சி பெற்ற உபாத்தியாயர்களுக்குக் கொடுபடும் சம்பளத்தை அவர்களுக்கும் கொடுக்க கவர்ன்மெண்டார் அனுமதி கொடுத்திருக்கிறார்கள். 10 ரூபாய் சம்பளத்தில் உபாத்தியாயரை அமர்த்திக் கொள்ள பொதுவாக அனுமதி கொடுத்துவிட கவர்ன்மெண்டார் தயாராக இல்லை.

தென் கன்னடம் ஜில்லா காளி நாட்டில் மத சம்பந்தமான கலவரம்

கே:—118 (ஏ) தென் கன்னடம் ஜில்லா காஸர்கோடு தாலூகா காளி நாட்டில் ஏற்பட்ட ஹிந்து முஸ்லீம் கலவர விஷயமாக 1918ம் வருஷம் மார்ச்சு மாதம் 16ம் தேதி வெளியான 'மெட்ராஸ் மெயில்' பத்திரிகையில்பிரசுரமாகியிருக்கும் வியாசத்தை கவர்ன்மெண்டார் பார்வையிட்டார்களா?

(பி) காஸர்கோடு சப் மாஜிஸ்திரேட் போலீசாரை ஜனக்கூட்டத்தின் மீது சுடும்படி உத்திரவு செய்ததின் பலனாக மூவர் கொல்லப்பட்டும் பலர் காயப்பட்டும் போனது கவர்ன்மெண்டாருக்குத் தெரியுமா?

(ஸி) இது விஷயமாக கவர்ன்மெண்டார் உடனே விசாரணை செய்வித்து, விசாரணையின் பல்ாபலனை சபையின் முன்பாக அறிவிப்பார்களா?

பதில்:—கனம் மெம்பர் குறிப்பிடும் வியாசத்தை கவர்ன்மெண்டார் பார்வை யிட்டார்கள். டிஸ்திரிக்ட் மாஜிஸ்திரேட்டிடமிருந்தும் இது சம்பந்தமாக ரிபோர்ட்டு கிடைத்திருக்கிறது. இந்தக் கலக விஷயமாக கிரிமினல் நடவடிக்கைகள் எடுத்துக் கொள்ளப்படக் கூடுமாதலால் கவர்ன்மெண்டார் இப்பொழுது எவ்வித நடவடிக்கைகளும் எடுத்துக்கொள்ள உத்தேசிக்கவில்லை.

தேசப்பாதுகாப்பு சட்டத்தின் விதிகளிலிருந்துகோஷா ஸ்த்ரீகளுக்கு விலக்கு.

கே.—119 (ஏ) இந்திய தேசப் பாதுகாப்பு சட்டத்தின் கீழ் செய்யப்பட்டிருக்கும் விதி முறைகளிலிருந்து கோஷா ஸ்திரீகளை விலக்கு செய்யவேண்டு மென்று 1917ம் வருஷம் நவம்பர் மாதம் 22-ம் தேதி இந்தசட்டசபையில் நான் தீர்மானங்கொண்டு வந்ததன் மேல் இந்திய கவர்ன்மெண்டாருக்கு எழுதியிருந்த கடிதத்திற்கு பதில் கிடைத்துவிட்டதா?

(பி) இதுவரையில் பதில் கிடைக்காவிடில் கவர்ன்மெண்டார் மறுபடியும் இந்தியா கவர்ன்மெண்டாருக்கு இவ்விஷயத்தைப் பற்றி எழுதுவார்களா?

பதில்:— (ஏ) இந்தியா கவர்ன்மெண்டாரிட மிருந்து பதில் கிடைக்க வில்லை.

(பி) இந்தியா கவர்ன்மெண்டாருக்கு இவ்விஷயத்தைப் பற்றி ஞாபக மூட்டப்படும்.

கே:— 120 (ஏ) தங்கள் தங்கள் அதிகார எல்லைக்குள் வசிக்கும் இந்தியர்களுக்கு மேன்மை தங்கிய ராஜப்பிரதிநிதியின் பேரால் பிரயாணச் சீட்டுகள் கையெழுத்திட்டுக் கொடுக்க சில ஜில்லா கலெக்டர்களுக்கு அதிகாரம் கொடுத்திருப்பதாக 1917-ம் வருஷம் ஜூலை மாதம் 24-ம் தேதி ஹோம் (மிஸலேனியஸ்) டிபார்ட்டுமெண்டில் வெளியிடப்பட்டிருக்கும் கவர்ன்மெண்டு அறிக்கையை அனுசரித்து, தென்னாற்காடுஜில்லா கலெக்டருக்கும் அந்த அதிகாரத்தைக் கொடுக்க வேண்டுமென்று இந்த கவர்ன்மெண்டார் இந்தியா கவர்ன்மெண்டாருக்கு சிபார்சு செய்வார்களா?

பிரயாணச் சீட்டுகள் கொடுக்க அதிகாரம் பெற்ற அதிகாரிகள்.

(பி) மதுரை, ராமனாதபுரம், தஞ்சாவூர், திருநெல்வேலி, மலபார், தென்னாற்காடு ஜில்லாக்களிலுள்ள ரிவினியூ டிவிஷனல் ஆபீசர்களுக்கும் பிரயாணச்சீட்டுகள் கொடுக்க அதிகாரம் தரும்படி இந்தியா கவர்ன்மெண்டாருக்கு இந்த கவர்ன்மெண்டார் சிபார்சு செய்வார்களா?

பதில்:— (ஏ) கனம் மெம்பர் கோருகிற பிரகாரம் இந்தியா கவர்ன்மெண்டாருக்கு சிபார்சு செய்வார்கள்.

(பி) முடியாது.

## (ஆகஸ்டு மாதம் 13-ந்தேதி நடந்த கூட்டம்)

கே:— 121 (ஏ) பத்திரப் பதிவு இலாகா உத்தியோகஸ்தர்கள் ஆபீஸ் நேரங்களல்லாத காலத்தில் தனிப்பட்ட நபர்களின் வீடுகளுக்குச் செல்லவேண்டி யிருப்பதால், அவ்விதம் அவர்கள் செலவிடும் நேரங்களுக்கு ஈடாக ரஜாபெற அவர்களுக்கு பாத்தியமுண்டா?

பத்திரப் பதிவு இலாகாஉத்தியோகஸ்தர்களுக்குரஜா.

(பி) அந்த பாத்தியம் அவர்களுக்கு இல்லாத பட்சத்தில் குறிப்பிட்ட காலத்திற்கு அதிகமாக அவர்கள் வேலை செய்யும்நேரத்திற்கு ஈடாக அவர்களுக்கு ரஜா கொடுக்க கவர்ன்மெண்டார் முன்வருவார்களா?

பதில்:— (ஏ) தனிப்பட்ட நபர்களின் வீடுகளில் பத்திரப்பதிவு இலா கா உத்தியோகஸ்தர்கள் செலவிடும் காலத்திற்கு ஈடாக அவர்களுக்கு ரஜா கொடுக்கப்படுவதில்லை.

(பி) கனம் மெம்பர் சொல்லுகிற யோசனை கவர்ன்மெண்டாருக்குப் பிடித்தமாக இருக்கவில்லை.

கே:— 212 (ஏ) திருநெல்வேலி ஜில்லா மணப்பாடு லைட்ஹவுசில் 1918-ம் வருஷம் பிப்ரவரி மாதம் 26-ம் தேதி லைட் கீப்பர் மிஸ்டர் வி. பிரான்விஸ் இறந்துபோனதற்குரிய காரணங்கள் கண்ட அறிக்கையை கவர்ன்மெண்டார் சபையின் முன்பாக ஆஜர்ப்படுத்துவார்களா?

திருநெல்வேலி ஜில்லாவில் ஒரு லைட்ஹவுஸ் கீப்பரின் மரணம்.

(பி) லைட் கீப்பருக்கு சீக்கு கண்டவுடன் சென்னை ஜெனரல் ஆஸ்பத்திரியில் வந்து சேர்ந்து சிகிச்சை செய்து கொள்வதற்காக தம்மை உடனே வேலையிலிருந்து விடுவிக்க வேண்டுமென்று அவர் கேட்டுக் கொண்டது வாஸ்தவமா? பதிலசாமி அனுப்பி அவரை விடுவிக்க இரண்டு வாரங்களுக்கு அதிகமாகப் பிடித்ததா? அவர் தமது ஜாமீன் பணத்திலிருந்து ஒரு கல்லறை கட்டி வைக்கும்படி கேட்டுக் கொண்ட பிரகாரம் சாங்கிஷன் செய்ய பிரசிடென்ஸி துறைமுக உத்தியோகஸ்தர் மறுத்து விட்டாரா?

(ஸி) மேலே கண்ட விஷயத்தைப் பற்றி கவர்ன்மெண்டார் விசாரணை செய்வார்களா?

(டி) இவ்வித காலதாமதங்கள் இனி ஏற்படாமலிருக்கும்படி கவர்ன்மெண்டார் உத்திரவு செய்வார்களா?

பதில்:—(ஏ) (பி) லைட்ஹவுஸ்கள் இன்ஸ்பெக்டர் 1917ம் வருஷம் நவம்பர் மாதம் மணப்பாடுக்கு சென்றிருந்தபொழுது லைட்ஹவுஸ் கீப்பர் பிரான்விஸ் சுக சரீரியாகத் தானிருந்தார். 1918ம் பிப்ரவரிமாதம் 5ந்தேதியன்று தமதுதேகம் அசௌக்கியமாக இருப்பதாகவும், சென்னையில் தகுந்த வைத்தியம் செய்து கொள்ளலாமாதலால் அங்கு மாற்றிவிட வேண்டுமென்றும் அவர் மாகாண துறைமுக உத்தியோகஸ்தருக்கு விண்ணப்பம் செய்து கொண்டார். வேறு இடத்திற்கு மாற்ற வேண்டுமென்று அவர் கேட்டிருந்தாரே தவிர, உடனே தம்மை வேலை யினின்று விடுவித்து விடவேண்டுமென்று அவர் கேட்டுக் கொள்ள வில்லை தேகஸ்திதியை உத்தேசித்து அவரை வேலையினின்று உடனே விடுவித்து விடவேண்டிய தவசியமென்று ருசிப்பிக்கக் கூடிய அம்சங்களும் அவருடைய விண்ணப்பத்தில் காணப்படவில்லை. அவருடைய வேண்டுகோளின் பிரகாரம் அவரை மாற்று

வதற்கு ஏற்பாடு செய்து, மாற்றல் உத்திரவும் பிப்பிரவரி மாதம் 21-ம்தேதி பிறப்பிவிக்கப்பட்டது. ஆயினும், அதற்குள்ளாக, தமக்கு சீக்கு அதிகரித்துக் கொண்டு வருகிறதென்றும், தாம் உடனே சென்னை சென்று ஜெனரல் ஆஸ்பத்திரியில் இன்பேஷன்டாகச் சேர்ந்து வைத்தியம் செய்துகொள்ளுவதற்காக தம்மை வேலையினின்றும் விடுவித்துவிட வேண்டுமென்றும் அவர் அனுப்பிய மற்றொரு மனு பிப்பிரவரி மாதம் 21-ம் தேதி துறைமுக உத்தியோகஸ்தரிடம் கிடைத்தது. அவரை உடனே விடுவித்து விடும்படி மறுதினம் தந்திமூலமாக உத்திரவு அனுப்பப்பட்டது. அதற்குள்ளாக அவ்வூர் வைத்திய உத்தியோகஸ்தருடைய ரிபோர்ட்டின் மேல் ஹெட்லைட் ஹவுஸ் கீப்பரே பிரான்விஸை வேலையினின்று விடுவித்தார்.

கல்லறை கட்டும் விஷயத்தில், காலஞ்சென்ற லைட்ஹவுஸ் கீப்பரின் ஜாமீன் தொகையும், சொத்துக்களும் அவருடையவார்சுகளின் சுவாதீனத்திலிருக்கின்றன. ஒருவிதத்திலும் அந்தப்பணமானது மாகாண துறை முக உத்தியோகஸ்தருடைய ஆதீனத்திலில்லை. ஆகவே கல்லறை கட்டுவதற்கு அவருடைய அனுமதி தேவையில்லை.

(வி) (டி) இது சம்பந்தமான சகல தகவல்களையும் ஆராய்ந்து பார்த்ததில் லைட்ஹவுஸ் கீப்பருடைய விண்ணப்பத்தைப் பைசல் செய்வதில் அனுவசியமான காலதாமத மேற்பட்டதாக கவர்ன்மெண்டாருக்குத் தெரியவில்லை.

பவுன் விநியோகம்.

மே:—123 (ஏ) உயர்ந்த விலைக்கு பவுன்கள் விற்கப்படும் விஷயமாக 1918-ம் வருஷம் ஜூன்மாதம் 18-ம்தேதி வெளியான "ஜஸ்டிஸ்" "பத்திரிகையில் பிரசுரமாகி யிருக்கும் வியாசத்தை கவர்ன்மெண்டார் பார்வையிட்டார்களா?

(பி) சாவுகார்களால் பவுன்கள் 19-ரூபாய் விதமும் சில சமயங்களில் அதற்கதிகமாகவும் விற்கப்படுவது கவர்ன்மெண்டாருக்குத் தெரியுமா?

(வி) ஏப்பிரல் மாதம் வாக்கில் கரென்ஸி ஆபீஸிலிருந்து வெள்ளிக்கு பதிலாக பவுன் 1 க்கு 15 ரூபாய் விதம் ஏராளமாக சாவுகார்களுக்கு பவுன்கள் கொடுக்கப்பட்டது கவர்ன்மெண்டாருக்குத் தெரியுமா!

(டி) பவுன்கள் 15 ரூபாய்க்கு அதிகமான விலைக்கு விற்கப்படாமல் தடுக்க கவர்ன்மெண்டார் தக்க ஏற்பாடுகளைச் செய்வார்களா?

(இ) கிலிப்தமாக பவுன் வியாபாரம் செய்து வரும் சாவுகார்களுக்கு பவுன்களைக் கொடுக்கக்கூடாதென்றும், பாங்குகள் தங்களுடைய வாடிக்கைக்காரர்களுக்கு உண்மையாக பவுன் வேண்டியிருந்தால் பவுன் 1-க்கு 15 ரூபாய் விதம் 20 பவுன்களுக்கு அதிகப்படாமல் கொடுத்து வரும்படி

பாங்குகளிடம் பவுன்களைக் கொடுக்கும்படிக்கும் கவர்ன்மெண்டார் உத்திரவு செய்வார்களா?

பதில்:—(ஏ) கனம் மெம்பர் குறிப்பிட்ட வியாசத்தை கவர்ன்மெண்டார் பார்த்திருக்கிறார்கள்.

(பி) பவுன்கள் அதிகவிலைக்கு விற்கப்படுவது கவர்ன்மெண்டாருக்குத் தெரியும்.

(ஸி)1918ம் வருஷம் ஏப்பிரல்மாதத்தில் கரென்ஸி நோட்டுகளுக்கு பதிலாக கரென்ஸி ஆபீஸிலிருந்து பவுன்கள் கொடுக்கப்பட்டன. ஆனால், நோட்டுகளை மாற்றுவதற்காக ஆஜர்படுத்தியவர்கள் யார்! அவர்களுடைய தொழிலென்ன வென்பதை விசாரித்து எவ்வித வித்தியாசமும் பாராட்டவில்லை.

(டி) (இ) இந்த விஷயங்கள் மாகாண கவர்ன்மெண்டாரின் அதிகாரத்திற்குட்பட்டவைகளன்று.

கே.—124 (ஏ) "திருச்சினாப்பள்ளியில் கல்வி" என்னும் மகுடமிட்டு, திருச்சி முஸ்லீம் கல்விச் சங்கத்தில் நிறைவேறியிருக்கும் தீர்மானங்கள் 1918-ம் வருஷம் ஜுன் மாதம் 26-ம் தேதி வெளியான "ஹிந்து"ப் பத்திரிகையில் பிரசுரமாகியிருப்பதை கவர்ன்மெண்டார் பார்வையிட்டார்களா?

திருச்சியில் முகம்மதியர்களுக்கு நடுத்தரப் பாடசாலை

(பி) இந்த மாகாணத்தில் புதிதாக ஏற்படுத்தும்படி சாங்க்ஷன் செய்யப்பட்டிருக்கும் 18 நடுத்தரப் பாடசாலைகளில் ஒன்றை திருச்சினாப்பள்ளியில் முகம்மதியர்களுக்காக கவர்ன்மெண்டார் ஏற்படுத்துவார்களா?

பதில்.—(ஏ) அந்த வியாஸத்தை கவர்ன்மெண்டார் பார்வையிட்டார்கள்.

(பி) கனம் மெம்பர் குறிப்பிடும் புதிதாக ஏற்படப்போகிற பள்ளிக்கூடங்கள் எல்லா வகுப்பினருக்கும் கல்வி கற்பிப்பதற்காக உத்தேசிக்கப்பட்டவை. திருச்சினாப்பள்ளியில் முகம்மதியர்களுக்காக பூர்த்தியில்லாத நடுத்தரப் பாடசாலை யொன்று தனிப்பட்ட நபரொருவரின் விசாரணையில் இப்பொழுது நடந்து வருகிறது. அதைக் கல்வி இலாகாவின் விசாரணையிலெடுத்துக்கொண்டு தகுந்தபடி அபிவிருத்தி செய்ய வேண்டுமென்கிற பிரேரணையை கவர்ன்மெண்டார் அங்கீகரித்திருக்கிறார்கள். அந்தப் பாடசாலையை கவர்ன்மெண்டாரின் விசாரணையில் மாற்றுவதற்கான ஏற்பாடுகள் நடந்து வருகின்றன?

கே.—125 (எ) "காரைக்கால் நிலச்சங்கம்" என்று மகுடமிட்டு 1918-ம் வருஷம் ஜுன் மாதம் 26-ம் தேதி வெளியான "ஹிந்து"ப்பத்திரிகையில் பிரசுரமாகியிருக்கும் வியாசத்தை கவர்ன்மெண்டார் பார்வையிட்டார்களா?

காரைக்கால் பிராந்தியத்தில் நிலச்சுங்கம்.

(பி) அந்த வியாசத்தில் கண்டிருக்கும் காரணங்களை உத்தேசித்து எல்லாருடைய நன்மையையும் கருதி கவர்ன்மெண்டார் நிலச்சுங்கத்தையே அடியுடனெடுத்து விட்டு, கடற்சுங்க முறையை அநுஷ்டானத்திற்குக் கொண்டு வருவார்களா?

பதில்:—(எ) கவர்ன்மெண்டார் அந்த வியாசத்தை பார்வை யிட்டார்கள்.

(பி) சென்னை மாகாணத்தின் பிரஞ்சு எல்லைப்புறத்தில் அநுஷ்டானத்திலிருந்து வரும் சுங்க முறைகளைத் திருத்தும் விஷயம் கவர்ன்மெண்டாரின் ஆலோசனையிலிருந்து வருகிறது.

கே.—126 (எ) தூத்துக்குடி ஜல சப்ளைக்காக மொரப்பனுடில் செய்து பார்த்த பரிட்சைகள் பலன் தரத்தக்கனவாக இருந்தனவா?

தூத்துக்குடி ஜல சப்ளை திட்டம்.

(பி) அவ்விதமாயின், இப்பொழுதிருக்கும் நிலைமையில் சுமார் 5-வருஷங்களுக்குள்ளாகவாவது தூத்துக்குடிக்கு நல்லகுடி தண்ணீர்சப்ளைசெய்ய சாத்தியப்படுமோ?

(வி) அவ்விதம் செய்ய சாத்தியமில்லாவிடில், ராமேசுவரத்திற்கு ஜல சப்ளை செய்வதற்காக இப்பொழுது வேலை செய்து வருகிறதுபோல் அலங்காரத் தட்டுக் கருகாமையில் நல்ல தண்ணீர் கிடைக்கக்கூடிய பிராந்தியத்தி லிருந்து தூத்துக்குடிக்கு ஜல சப்ளை செய்வது உசிதமாக யிராதா?

பதில்:—மொரப்பனுடில் பரிட்சைசெய்து பார்த்ததில் போதிய ஜலம் அங்கு கிடைக்குமென்று தெரிகிறது. ஆனால் எவ்வளவு காலத்திற்குள் வேலை முடிந்து விடுமென்று சொல்ல முடியாது. தூத்துக்குடிக் கருகாமையிலுள்ள சந்தை வெளியில் கிணறுகள் வெட்டி ஜலசப்ளை செய்வது சாத்தியமில்லாத காரியமென்று நிபுணர்கள் அபிப்பிராயப்படுகிறார்கள்.

கே:—127 (ஏ) திருச்சினுப்பள்ளி பாத்வே கிடங்கு சந்துக்கு மேல் புறத்தில் கொண்டுவிடும் பொது ஜன நடைபாதையை ஆரியன் செக்கண்டரி ஸ்கூல் ஹெட் மாஸ்டர் அடைத்து விட்டதை ஆட்சேபித்து 1918ம் வருஷம் ஜுன் மாதம் 16-ம் தேதி நடந்த திருச்சி மகா ஜனங்களின் பொதுக்கூட்டத்தில் நிறைவேறிய தீர்மானத்தின் பிரதியை பாரிஸ்டர் மிஸ்டர் டி. வி. தங்கவேலுப் பிள்ளை, பி. ஏ., கவர்ன்மெண்டாருக்கு அனுப்பி யிருப்பது வாஸ்தவமா?

திருச்சியில் ஒரு பொது ஜன நடைபாதையை மூடி விட்ட விஷயம்

(பி) கவர்ன்மென்டார் அதைப்பற்றி விசாரணை செய்து தக்க ஏற்பாடுகளைச் செய்வார்களா?

பதில்:—(ஏ) ஆம்; அனுப்பி யிருக்கிறார்.

(பி) அது சம்பந்தமாக கவர்ன்மெண்டார் ரிபோர்ட்டு கேட்டுவிட்டிருக்கிறார்கள்.

கே.—128 (ஏ) சென்ற பிப்பிரவரி மாதத்தில் வேலூரிலில் நடந்த வட ஆற்காடு ஜில்லா முஸ்லீம் கல்விக் கான்பரென்ஸில் தீர்மானம் நிறைவேறியிருந்தும் அதற்கு விரோதமாக, வேலூர் தாலூகா போர்டார் தங்களுடைய விசாரணையிலிருந்த சில முகம்மதிய ஆரம்பப் பாடசாலைகளை அந்தந்த இடத்திலுள்ள முஸ்லீம்களின் அபிப்பிராயத்திற்கு மாறாக, ஹிந்துக்களுடைய பாடசாலைகளுடன் இணைத்துவிட்டது கவர்ன்மெண்டாருக்குத் தெரியுமா?

வேலூர் தாலூகா போர்டும் மகம்மதிய ஆரம்பப் பாடசாலைகளும்.

(பி) இனி அவ்விதம் செய்யாமலிருக்கும்படி கவர்ன் மெண்டார் தாலூகா போர்டாருக்கு உத்திரவு செய்வார்களா?

பதில்;—(ஏ) பள்ளிக்கொண்டாவிலிருந்த முகம்மதிய ஆரம்பப் பாடசாலை அந்த ஊரிலுள்ள ஹிந்து ஆரம்பப் பாடசாலையுடன் இணைக்கப் பட்டிருப்பதாகத் தெரிகிறது. ஆயினும் முகம்மதியப் பிள்ளைகளுக்கு இரண்டாவது பாஷையாக உருதுவைக்கற்றுக் கொடுக்க பிரத்தியேகமாக ஒரு முகம்மதிய உபாத்தியாயரை ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது. இதைத் தவிர கவர்ன் மெண்டாருக்கு வேறெவ்விதத் தகவல்களும் தெரியவில்லை.

(பி) ஸ்தல ஸ்தாபனத்தின் சுதந்தரத்தில் கவர்ன்மெண்டார் தலையிடத் தயாராக இல்லை.

கே:—129. வட ஆற்காடு ஜில்லாவில் பயிற்சி பெற்ற ஆரம்பப் பாடசாலை உபாத்தியாயர்கள் மிகவும் குறைவாக இருப்பதை உத்தேசித்து, சத்தியாக ஏற்படுத்தப் பட்ட போர்டு செஷனல் பாடசாலையை சாசுவத மாகச் செய்துவிட கவர்ன் மெண்டார் ஏற்பாடு செய்வார்களா?

வட ஆற்காடு ஜில்லாவில் போர்டு செஷனல் பாடசாலை.

பதில்:—இதைப்பற்றி ஆலோசனை செய்து முடிவு சொல்ல வேண்டியது வேலூர் தாலூகா போர்டாரே கவர்ன் மெண்டார் இதில் தலையிட உத்தேசமில்லை.

கே:—130. முஸ்லீம்கள் கல்வி விஷயமாக கல்வி இலாகா டைரக்டருக்கு ஆலோசனைகள் சொல்ல முகம்மதியரொருவரை அவருடைய உதவி உத்தியோகஸ்தராக கவர்ன் மெண்டார் நியமனம் செய் வார்களா?

கல்வி இலாகா டைரக்டருக்கு ஒரு முகம்மதிய உதவி உத்தியோகஸ்தர்.

பதில்:—கனம் மெம்பர் சொல்லுகிற யோசனையின் பிரகாரம் இப்பொழுது செய்ய வேண்டிய தவசிய மில்லை யென்று கவர்ன் மெண்டாருக்கு யோசனை சொல்லப்பட்டிருப்பதால், கனம் மெம்பருடைய பிரேரணையை கவர்ன் மெண்டார் அங்கீகரிக்கத் தயாராக வில்லை.

கே:—131. வேலூரில் கூடிய முகம்மதிய கல்விக்கான்பரென்ஸ் கவர்ன் மெண்டாருக்கு செய்திருக்கும் சிபார்சுகளை அனுசரித்து,

முகம்மதியர்களின் கல்விக்கு ஆதரவு.

(ஏ) வங்காளத்தில் அனுஷ்டானத்திலிருப்பது போல் கவர்ன் மெண்டு கலாசாலைகளிலும், கவர்ன் மெண்டாரின் உதவியைக் கொண்டு நடைபெற்றுவரும் இதர கலா சாலைகளிலும் முகம்மதியப் பிள்ளைகளுக்காக சில ஸ்தானங்களை கவர்ன் மெண்டார் ஒதுக்கிவைப்பார்களா?

(பி) கலாசாலைகளில் படிக்கும் முகம்மதிய மாணவர்களில் இப்பொழுது உபகாரச்சம்பளம் கொடுபடுபவர்களைவிட அதிகப்பேர்வழிகளுக்கு அதிக உபகாரச்சம்பளத்தொகை கொடுக்கும்படி கவர்ன்மெண்டார் ஏற்பாடு செய்வார்களா?

(ஸி) சட்ட கலாசாலை, எஞ்சினீரிங் கலாசாலை, வைத்தியக் கலாசாலை, விவசாயக்கலாசாலை இவைகளில் படிக்கும்முகம்மதிய மாணவர்களுக்கு தாராள திட்டமாக உபகாரச்சம்பளங்களை ஏற்படுத்தி, அவர்களுக்கு விசேஷ வசதிகளைச் செய்து கொடுப்பார்களா?

(டி) போதிய வளவு முஸ்லீம் மாணவர்கள் படிக்கும் பாடசாலைகளிலும் கலாசாலைகளிலும் முஸ்லீம் மாணவர்களுக்காக பிரத்தியேக சாப்பாட்டு விடுதிகள் அமைக்க கவர்ன் மெண்டார் ஏற்பாடு செய்வார்களா?

பதில்:—(ஏ) முகம்மதியப் பையன்களுக்காக கலா சாலைகளில் சில ஸ்தானங்களை ஒதுக்கி வைக்கும் விஷயம் ஏற்கனவே யோசனையிலிருந்தது. சமீபத்தில் முகம்மதியப் பையன்களுக்காக பிரத்தியேகமாக ஒரு காலேஜ்ஏற்பட்டிருப்பதை உத்தேசித்து ஸ்தானங்களை ஒதுக்கிவைக்க வேண்டியதவசியமில்லை யென்று கவர்ன்மெண்டார் அபிப்பிராயப்படுகிறார்கள்.

பி. (வி) சாதாரண கலா சாலைகளிலும், சட்டக் கலா சாலை, வைத்தியக் கலாசாலை, இஞ்சினீரிங் கலாசாலை, இவைகளிலும் முகம்மதியப் பிள்ளைகளுக்காக உபகாரச் சம்பளங்கள் ஏற்படுத்தியிருப்பது போதுமானதென்று கவர்ன்மெண்டார் அபிப்பிராயப்படுகிறார்கள். ஆயினும் முகம்மதிய கலா சாலையின் அபிவிருத்தியை அவர்கள் கவனித்து வந்து, உபகாரச்சம்பளங்கள் விஷயமாக என்ன செய்ய வேண்டியதவசியமாகத் தோன்றுகிறதோ அவைகளைச் செய்வார்கள். விவசாயக் கலா சாலையில் இப்பொழுது உபகாரச் சம்பளம் கொடுபடுவதில்லை. முகம்மதியர்களுக்காக உபகாரச்சம்பளம் கொடுபடவேண்டிய அவசியத்தை சிருஷ்டிக்க வேண்டு மென்று கவர்ன் மெண்டார் அபிப்பிராயப்படவில்லை.

(டி) முகம்மதியர்களுக்காகட்டும், மற்றவர்களுக்காகட்டும், சாப்பாட்டு விடுதிகளை அமைக்கும் விஷயமாகச் சொல்லப் படும் பிரேரணைகளை கவர்ன் மெண்டார் கவனிக்க சித்தமாக இருக்கிறார்கள்.

கே:—132 (ஏ) செங்கல்பட்டு முனிசிபாலிட்டியில் ஜலசப்ளை துவக்க மாகும் வரையில் தண்ணீர் வரி வசூலிப்பதை நிறுத்திவைக்க கவர்ன் மெண்டார் சம்மதித்திருப்பது வாஸ்தவமா?

செங்கல்பட்டு முனிசிபாலிட்டியில் ஜலசப்ளை.

(பி) அதே பிரகாரமாக தூத்துக்குடி முனிசிபாலிட்டியிலும், சென்ற வருஷ வாக்கில் முனிசிபல் கவுன்சில் தண்ணீர் வரி வசூலிப்பதை நிறுத்தி வைக்கவேண்டுமென்று செய்து கொள்ளப்பட்டிருக்கும் வேண்டுகோளை கவர்ன்மெண்டார் அங்கீகரிப்பார்களா?

பதில்:—(ஏ) செங்கல்பட்டு முனிசிபாலிட்டியில் தண்ணீர் வரி வசூலிப்பதை நிறுத்திவைக்க கவர்ன்மெண்டார் சம்மதம் கொடுத்திருப்பது வாஸ்தவமே.

(பி) கனம் மெம்பர் சொல்லுகிற பிரகாரம் தூத்துக்குடி முனிசிபல் கவுன்சிலின் வேண்டு கோளை கவர்ன்மெண்டார் அங்கீகரிக்க முடியாது. செங்கல்பட்டின் நிலைமையும் தூத்துக்குடியின் நிலைமையும் எவ்விதத்திலும் ஒரே விதமானதன்று. தூத்துக்குடி ஜல சப்ளை திட்டம் செங்கல்பட்டு திட்டத்தை விடப்பெரியது. அந்தச் செலவுக்காக கவுன் சில் பணம்சேர்த்து வைத்து வராவிடில், கவுன்சில் அந்த வேலையைச் செய்ய முடியாது.

தூத்துக்குடி முனிசிபல் ஆஸ்பத்திரி.

கே:—133 (ஏ) (1) தூத்துக்குடி முனிசிபல் ஆஸ்பத்திரி நகரத்திற்குள் மிகவும் நெரிசலான இடத்தில், கிரேட் காட்டன் ரஸ்தாவென்கிற அதிகப் புழக்கமுள்ள பாதையில் இருப்பது கவர்ன்மெண்டாருக்குத் தெரியுமா?

(2) ஆஸ்பத்திரி கட்டிடமானது ஜீர்ணோத் தாரணமான நிலைமையிலிருக்கிற தென்பதும், அது பழைய கால கட்டிடமென்பதும் கவர்ன்மெண்டாருக்குத் தெரியுமா?

(3) ஆஸ்பத்திரி இடம் முழுவதும் சத சதவென்று ஜலம் தேங்கி நிற்பது கவர்ன்மெண்டாருக்குத் தெரியுமா?

(பி) ஆஸ்பத்திரிக்குப் புதிதாக வேறு கட்டிடம் கட்ட விக்டோரியா எக்ஸ்டென்ஷன் ரோட்டில் நிலங்களை வாங்குவதற்கு கவர்ன்மெண்டார் உடனே ஏற்பாடு செய்வார்களா?

(ஸி) ஆஸ்பத்திரியைக் கட்டுவதற்கு வேண்டிய இப்பொழுது பணத்தை ஒதுக்கிவைப்பது கஷ்டமாக யிருந்தால்கூட கீழ்நிலத்தை வாங்குவதற்காவது போதிய பணத்தை கவர்ன்மெண்டார் ஒதுக்கி வைப்பார்களா?

பதில்:—(ஏ) கனம் மெம்பர் சொல்லியுள்ள விஷயங்கள் கூடிய வரையில் சரியானவைகளென்றே தெரிகிறது.

(பி) & (ஸி) விக்டோரியா எக்ஸ்டென்ஷன் ரோட்டுக்கு அருகாமையில் புதிதாக ஆஸ்பத்திரியைக் கட்டும் விஷயமாக முனிசிபல் கவுன்சிலிடமிருந்து கவர்ன்மெண்டாருக்கு எவ்விதப் பிரேரணைகளும் கிடைக்க வில்லை. எவ்விதத் திட்டமு மில்லாமல் பண உதவி செய்யும் விஷயத்தைப் பற்றி ஆலோசிக்க கவர்ன்மெண்டார் தயாராகஇல்லை.

கே:— 134 (ஏ) ரெயில்வே பிளாட் பாரங்களிலுள்ள இந்திய போஜன சாலைகளைப் பரிசோதனை செய்வதற்காக நியமிக்கப்பட்ட கமிட்டியின் ரிபோர்ட்டு கிடைத்து விட்டதா? ரிபோர்ட்டு கிடைத்திருந்தால் அதை கவர்ன்மெண்டார் சபையின் முன்பாக ஆஜர்படுத்துவார்களா?

ரெயில்வே ஸ்டேஷன் களிலுள்ள போஜன சாலைகளைப் பார்வையிட நியமிக்கப்பட்டிருந்த கமிட்டியின் ரிபோர்ட்டு.

(பி) இதுவரையில் ரிபோர்ட்டு கிடைக்கவில்லையாயின், எப்பொழுது அதுகிடைக்கலாமென்று கவர்ன்மெண்டார் அறிவிப்பார்களா?

பதில்:— (ஏ) இதுவிஷயமாக ரெயில்வே ஸீனியர் இன்ஸ்பெக்டர், ம-า-าஸ்ரீ ராவ்பகதூர் கே. எஸ். வெங்கட்டராமய்யர் அவர்கள் இவர்களுடைய ரிபோர்ட்டானது இன்னும் வந்து சேரவில்லை.

(பி) பரிசோதனை முடிந்து விட்டதென்றும் கூடிய சீக்கிரத்தில் ரிபோர்ட்டை எதிர்பார்க்கலா மென்றும் கவர்ன்மெண்டாருக்குத் தெரிய வருகிறது.

கே:— 135 நீதி இலாகாவைத் திருத்தி அமைக்கும் விஷயமாக அநேக சப்ஜட்ஜுகளும் முன்சீப்புகளும் கை யொப்பமிட்டு கவர்ன்மெண்டாருக்கு மகஜர் அனுப்பி யிருக்கிறார்களா? அவ்விதமாயின், அதில் எத்தனை சப்ஜட்ஜுகளும் முனிசிப்புகளும் கையொப்பம் வைத்திருக்கிறார்கள்? அதன் மேல் என்ன நடவடிக்கை எடுத்துக் கொள்ளப்பட்டிருக்கிறது?

நீதி இலாகாவைத் திருத்தி அமைக்கும் விஷயம்.

பதில்:—மாகாணநீதி இலாகா உத்தியோகவருக்கத்தை மாற்றி அமைக்கும்விஷயமாக பப்ளிக் சர்விஸ் கமிஷன் செய்திருந்த சிபார்சுகளைப் பற்றி 21 சப்ஜட்ஜுகளும் 72 முன்சீப்புகளும் கையெழுத்திட்டு அனுப்பியிருக்கும் மகஜர்கள் கவர்மெண்டாருக்குக் கிடைத்திருக் கின்றன. பப்ளிக்சர்விஸ் கமிஷனுடைய சிபார்சுகள் கவனிக்கப் படுகையில் இந்தவிஷயமு ம் யோசிக்கப்படும்.

கே:—136. கட்டளைச் சேவகர்களின் சம்பளத்தை கவர்ன்மெண்டார் உயர்த்தியிருப்பதை அனுசரித்து. முன்சீப் கோர்ட்டுகளிலும் சப்கோர்ட்டுகளிலும் வேலைபார்த்து வரும் கோர்ட்டு பியூன்கள், கோர்ட்டு பாராக்காரர்கள் இவர்களுடைய சம்பளத்தையும் கவர்ன்மெண்டார் உயர்த்துவார்களா?

முன்சீப்கோர்ட்டுகளிலும் சப்கோர்ட்டுகளிலும் வேலைபார்க்கும்சேவர்களின் சம்பளம்.

பதில்:— இந்த விஷயம் கவர்ன்மெண்டாரின் ஆலோசனையிலிருந்து வருகிறது.

மாகாண நீதிஇலாகா உத்தியோக வருக்கம்.

கே:—137. 1918-ம் வருஷம் ஏப்பிரல் மாதம் 6-ம் தேதி இந்த சபையில் கனம் மிஸ்டர் கில்மான் நீதிஇலாகாவைத் திருத்தி அமைக்கும் விஷயமான பிரேரணைகள் தயாராகிவிட்டன வென்றும், அடுத்தமாதத்தில் இந்தியா கவர்ன் மெண்டுக்கும் இந்தியா மந்திரிக்கும் அனுப்பி விடப்படு மென்றும் சொல்லியிருக்கிற பிரகாரம் அந்தப்பிரேரணைகளை அனுப்பியாகி விட்டதா? அப்படியானால், எப்பொழுது அனுப்பப்பட்டது?

பதில்:—இது சம்பந்தமாக இந்தியா கவர்ன் மெண்டுக்கு 1918 வருஷம் ஆகஸ்டு மாதம் 5-ம் தேதி எழுதப்பட்டிருக்கிறது.

துறைமுக உத்தியோகஸ்தர் களின் சம்பளம்.

கே:—138 (ஏ) இந்த மாகாணத்திலுள்ள துறைமுக உத்தியோகஸ்தர்களின் சம்பள விகிதங்களை மாற்றும் விஷயமான பிரேரணைகள் கவர்ன்மெண்டாரின் ஆலோசனையிலிருந்து வருகின்றனவா?

(பி) அந்த விகிதங்களை நிஷ்கரிஷை செய்வதில் ஓவர்டயம் அலவுன்ஸ்கூடபெறும் சென்னை கப்பலோட்டிவருக்கத்தினருக்கு சமீபத்தில் சாங்கிஷன் செய்யப்பட்டிருக்கும் சம்பள விகிதங்களை கவர்ன் மெண்டார் கவனிப்பார்களா?

(ஸி) தூத்துக்குடி, கொச்சி, கள்ளிக்கோட்டை, நாகப்பட்டணம் முதலிய துறைமுகப் பட்டணங்களின் அபூர்வமான நிலைமையை உத்தேசித்து, அந்த இடங்களிலுள்ள துறைமுக உத்தியோகஸ்தர்களுக்கு லோகல் அலவுன்ஸ் கொடுக்க கவர்ன் மெண்டார் ஏற்பாடு செய்வார்களா?

பதில்:— (ஏ) (பி) ஆம்.

(ஸி) கனம் மெம்பர் சொல்லுகிறபிரகாரம் வித்தியாசம் பாராட்ட வேண்டிய தவசியமென்று கவர்ன்மெண்டார் நினைக்க வில்லை.

கடலில் சேதப்பட்ட பண்டங்களைப் பார்வையிட்டு சர்ட்டிபிகேட்கொடுக்கதுறைமுகஉத்தியோகஸ்தர்களுக்கு அதிகாரம்.

கே:—139. 1918-ம் வருஷம் ஜுன் மாதம் 12ம் தேதி வெளியாகியிருக்கும் நம்பர் 200 பப்ளிக் (மாரைன்) கவர்ன் மெண்டு உத்திரவை உத்தேசித்து, சென்னை துறைமுகச் சட்டத்தின் 28- பிரிவை ரத்துசெய்து, சேதப்பட்ட சாமான்களைப் பார்வையிட்டு சர்ட்டிபிகேட்டு கொடுக்கும் அதிகாரத்தை கவர்ன் மெண்டார் துறைமுக உத்தியோகஸ்தர்களுக்குக் கொடுப்பார்களா?

பதில்:—கனம் மெம்பர் சொல்லுகிற யோசனையை கவர்ன் மெண்டார் கவனிப்பார்கள்.

ஒரு முஸ்லீம் தலைவரும் திருப்பத்தூர் முனிசிப்பும்.

கே:—140. "ஒரு முஸ்லீம் தலைவருக்கு அவமதிப்பு" என்கிற விஷயமாக 1918-ம் வருஷம் பிப்பரவரி மாதம் 12-ம் தேதி கூடிய சட்டசபையில் நான் கேள்விகேட்டிருந்ததற்கு கவர்ன் மெண்டார் முஸ்லீம் தலைவரின் மனுவை ஹைக்கோர்ட்டாருக்கு அனுப்பியிருப்பதாகச் சொல்லியிருக்கிறார்கள். அந்த விஷயம் முடிவாக எவ்விதம் பைசல் செய்யப் பட்டதென்று கவர்ன்மெண்டார் அறிவிக்க முடியுமா?

பதில்:—ஹைகோர்ட்டார் இதைப்பற்றி விசாரணை செய்து எவ்வித நடவடிக்கையும் எடுத்துக் கொள்ள வேண்டியதில்லையென்று முடிவு செய்திருக்கிறார்கள்.

துறைமுகஉத்தியோகஸ்தர்களும் தீபஸ்தம்பங்களும்.

கே:—141 (ஏ) சமுத்திரக்கரை யோரமாகவுள்ள லைட் ஸ்டேஷன்களை துறைமுக உத்தியோ கஸ்தர்கள் பரிசோதனை செய்ய வேண்டுமென்று, 1896-ம் வருஷம் ஏப்ரல் மாதம் 8ம் தேதியுள்ள நம்பர் 242 (மாரைன்) கவர்ன் மெண்டு உத்திரவின் 12வது பாரா இன்னும் அனுஷ்டானத்தி லிருக்கிறதா?

(பி) சென்னை மாகாண துறைமுக உத்தியோகஸ்தர் சிர்வாக ஹோதாவில் துறைமுக உத்தியோ கஸ்தர்கள் அவைகளைப் பரிசீலனை செய்ய வேண்டியதில்லை யென்று தடுத்திருப்பது கவர்ன்மெண்டாருக்குத் தெரியுமா?

(஡ி) அவ்வித உத்திரவுப் பிறப்பிக்க மாகாண துறைமுக உத்தியோகஸ்தருக்கு அதிகார முண்டா?

பதில்:—(ஏ) பிரஸ்தாபத்திலுள்ள உத்திரவுகள் அனுஷ்டானத்திலிருக்கின்றன.

(பி) (஡ி) கவர்ன் மெண்டார் இவைகளைப் பற்றி விசாரணை செய்வார்கள்.

[நவம்பர் மாதம் 19ம் தேதி சென்னையில் நடந்த கூட்டம்]

வெட்டாறு-ஓடம் போக்கியாறு பாசனம்.

கே:—142 (ஏ) வெட்டாற்றிலிருந்து ஓடம் போக்கியாறு பிரியும் எண்கண் தலைப்பில், வெட்டாற்றுக்கும் ஓடம் போக்கியாற்றுக்கும் முறை அனுஷ்டிக்கப் படுகிறதா?

(பி) ஓடம் போக்கியாற்றுத் தலைப்பானது மதகில்லாமல் திறந்த தலைப்பாக யிருப்பதினால் ஒரு லேட்டர் கட்டினதற்குப் பிறகு ஓடம் போக்கியாற்றின் பூமி மட்டம் வெட்டாறு மட்டத்தைவிடத் தணிந்து கொண்டே வந்திருக்கிறதா?

(வி) வெட்டாறு முறை தினங்களில்கூட, ஒரு லேட்டருக்கு மேலே இரண்டு அடி உயரத் திற்கதிகமாக ஜலமிருந்தாலன்றி வெட்டாற்றில் ஜலம் போகாதென்பதும், அதற்குக்குறைவாக ஜலமிருந்தால் எல்லாம் ஓடம் போக்கியாற்றிலேயே போய்விடுகிற தென்பதும் வாஸ்தவமா?

(டி) ஓடம் போக்கியாற்றின் பாசன விஸ்தீரணத்தின் தாமாஷாப் படி முறையை திட்டப்படுத்த ஓடம் போக்கியாற்றுத் தலைப்பில் மராமத்திலாகாதார் கட்டை கட்ட வேண்டுமென்று ஏற்கனவே சொல்லி யிருக்கிறார்களா?

(இ) அதற்கு திட்டம் தயாராக இருந்தால் அடுத்தம்வனில் காலத்தில் (1919-ம் வருஷம் பிப்பிரவரிமாதம் முதல் மே மாதம்வரையில்) வேலையைச் செய்து முடிக்கும்படி கவர்ன்மெண்டார் உத்திரவு செய்வார்களா?

பதில்:— (ஏ) ஆம்.

(பி), (வி), (டி) (இ) கனம் மெம்பர் கேட்கிற தகவல்கள் கவர்ன்மெண்டாரிட மில்லை. ஆகவே ரிபோர்ட்டு கேட்டுவிடப்பட் டிருக்கிறது.

## 1919

[மார்ச்சுமாதம் 11-ம் தேதி சென்னையில் நடந்த கூட்டம்]

8 மாப்பிள்ளைமார்களை போலீஸார் சுட்டவிஷயம்.

கே:— 143 (ஏ) மலபார் ஜில்லாவில் ஒருகளத்தில் சமீபத்தில் ஸ்பெஷல் போலீஸாரும் மாலாபுரம் ஆங்கிலோ இந்தியப் படையினரில் ஒரு சாராரும் 8 மாப்பிள்ளைகளை சுட்டுக் கொன்று ஒருவரைக் காயப்படுத்திய விஷயம் கவர்ன்மெண்டாருக்குத் தெரியுமா?

(பி) இந்த விஷயத்தைப்பற்றி கவர்ன்மெண்டார் விசாரணை செய்து இந்த மனிதர்களை சுட்டுக்கொன்ற விவரங்களை சபையின் முன் ஆஜர்ப் படுத்துவார்களா?

பதில்:—கவர்ன்மெண்டாருக்கு பூர்வ பீடிகையாகக் கிடைத்திருக்கும் ரிபோர்ட்டுகளிலிருந்து பிரஸ்தாபத்திலுள்ள 'மாப்பிள்ளைமார்கள் கலகமானது பிப்ரவரி மாதம் 7-ம் தேதியன்று உதயாத் பூர்வம் மாலாபுரத்திற்கு

அருகாமையில் ஆரம்பமானதாகத் தெரிகிறது. வெறியாளர்கள் மொத்தம் 9 பேர். சில நம்பூதிரிகளும் மற்றவர்களும் தனக்கு அநியாயம் செய்து விட்டதாக நம்பி அவர்களிடத்தில் பகைமை கொண்டிருந்த ஒரு விடுதலையடைந்த கைதியின் தலைமையின் கீழ் அவர்கள் கிளம்பினார்கள். அவர்கள் துப்பாக்கிகள், கத்திகள் முதலிய ஆயுதங்களும் டைனமைட்டும் எடுத்துக் கொண்டு புறப்பட்டு, 5 நம்பூதிரிகளைக் கொன்று, ஒருவரை காயப்படுத்தி, ஒரு ஆலயத்தின் ஒரு பாகத்தையும் கொளுத்தித் தள்ளிவிட்டார்கள். அவர்கள் பாண்டலூர் மார்க்கமாகப் போய் இன்னும் இரண்டு கொலைகளையும் செய்து பல வீடுகளையும் நிக்கிரையாக்கி விட்டதுடன் இன்னொரு கோவிலையும் கொளுத்திவிட்டு, ஒரு தோட்டத்திலிருந்த வீட்டிற்குள் போய் சேர்ந்து கொண்டார்கள். மாலாபுரமிருந்து அன்று சாயந்திரமே சில போலீசார் பைசிக்கிள்களில் வந்து அவர்களை வளைத்துக்கொண்டார்கள். இராத்திரியில் போலீசாருக்குப் பக்க பலம் வந்து சேர்ந்தது. டிஸ்திரிக்ட் மாஜிஸ்திரேட்டும் போலீஸ் சூப்பரின்டெண்டும் கள்ளிக்கோட்டையிலிருந்து ஒரு படையுடன் வந்து சேர்ந்தார்கள். அவர்களைச் சரணமடைந்து விடும்படி எவ்வளவோ சொல்லியும் அவர்கள் கேட்காததினாலும், அவர்கள் மேல் பாய்ந்து அவர்களை வெளிப்படுத்துவதாயின் வீணான உயிர்ச்சேதங்கள் அதிகம் ஏற்படுமானதினாலும், அந்தப் பிடிப்பான இடத்திலிருந்து அவர்களை வெளிப்படுத்த மாலாபுரத்திற்கு பீரங்கிக்குச் சொல்லி யனுப்புவதென்று மறுதினம் காலையில் டிஸ்திரிக்ட் மாஜிஸ்திரேட் முடிவு செய்து கொண்டார். பீரங்கிக்கு சொல்லி அனுப்பப் பட்டிருக்கிறதென்றும் வெளியில் வந்து சரணம் புகாவிடில் அவர்கள் மீது பீரங்கி பிரயோகிக்கப் படுமென்றும் டிஸ்திரிக்ட் மாஜிஸ்திரேட் மாப்பிள்ளைகளுக்கு எச்சரிக்கை செய்தார். அவர்கள் சரணம் புகுவதா என்று பரிகசித்து விட்டு, சத்துருக்களுடன் எதிருக்கு எதிராக நின்று போராடி உயிரை விடத்தயாரென்று தெரிவித்தார்கள். பகல் 3-மணிக்கு பீரங்கி வந்து சேர்ந்தது. அதனுடன் கூட ஆங்கிலோ இந்தியப் படையினர் சிலரும் வந்து சேர்ந்தார்கள். அவர்கள் தங்கியிருந்த இடத்தின்மீது சில வெடி குண்டுகளைப் போட்டு அடித்ததின் மேல், அந்த வெறியாளர்கள் தாங்கள் அடைந்திருந்த வீட்டின் கதவைத் திறந்து விட்டார்கள். கதவைத்திறந்து விட்டு வழக்கம் போல கியால்பாடிக்கொண்டு ஒரு முறை சுட்டார்கள். சிறிது நேரம் இருதிறத்தினராலும் துப்பாக்கிப் பிரயோகம் நடந்தபிறகு அந்த வீடு கைவசப் படுத்தப்பட்டது. உள்ளே போய் பார்த்ததில் 8 பேர் செத்துக் கிடந்தார்கள்; இன்னொருவரும் படு காயப்பட்டுக்கிடந்தார். மறுநாள் காலையில் அவர் இறந்து போய் விட்டார்.

இந்தக் கலகத்தைப்பற்றி சம்பிரதாயமான விசாரணை இன்னும் நடந்து முடியவில்லை. உத்தியோக தோரணையில் முடிவான ரிபோர்ட்டு கிடைத்ததும், அதைப் பிரசுரிக்கும் விஷயத்தை கவர்ன்மெண்டார் ஆலோசிப்பார்கள்.

கே:—144. துறைமுக ஆபீஸில் தகுதியான குமாஸ்தாக்கள் பலரிருந்தும் வெளிப் பேர் வழிகளை மாகாணத்துறைமுக உத்தியோகஸ்தர் கொண்டு வந்து சேர்த்த காரணமென்ன வென்பதை கவர்ன்மெண்டார் விசாரணை செய்வார்களா?

மாகாணத் துறைமுக ஆபீஸ் குமாஸ்தாக்கள்.

பதில்:—அவ்விதம் விசாரணை செய்யமுடியாது.

கே:—145. 1918ம் வருஷம் ஏப்பிரல் மாதம் 3-ம் தேதி நடந்த மீட்டிங்கில் கனம் கே. ராமய்யங்கார் கேட்டிருந்த 41-ம் நம்பர் கேள்விக்கு கவர்ன்மெண்டார் அளித்திருக்கும் பதில் சம்பந்தமாக கவர்ன்மெண்டார் கீழ் கண்ட தகவல்களை அறிவிப்பார்களா? 1904-ம் வருஷத்திற்குப்பிறகு கடலோர லைட் உத்தியோக வர்க்கத்தில் இந்தியர்கள் சேர்த்துக்கொள்ளப் பட்டிருக்கிறார்களா? பல லைட்ஹவுஸ்களிலுமாக இப்பொழுது எத்தனை இந்தியர்கள் வேலை பார்த்து வருகிறார்கள்? அவர்களுடைய சம்பளமென்ன?

கடலோர லைட் ஹவுஸ் ஊழிய வர்க்கத்தில் இந்தியர்கள்.

பதில்:—1901-ம் வருஷத்திற்குப் பிறகுஅந்த உத்தியோக வர்க்கத்தில் இந்தியர்கள் சேர்த்துக் கொள்ளப் பட்டிருக்கிறார்கள். இப்போது அந்த வர்க்கத்தில் இரண்டு இந்தியர்கள் இருந்து வருகிறார்கள். அவர்களுடைய சம்பளம் முறையே 50, 65-ரூபாய். போர்ட்டு லைட் சர் விஸிலுள்ள ஒரு இந்தியரைக்கூட சமீபத்தில் கோஸ்டு லைட் சர் விஸுக்குப் பிரமோஷன் செய்வதாகச் சொல்லப்பட்டது. ஆனால் அவர் அந்த மாறுதலை விரும்பவில்லை.

கே:—146 அதே மெம்பர் அதே மீட்டிங்கில் கேட்டிருந்த 42-வது கேள்விக்கு கவர்ன் மெண்டார் அளித்திருக்கும் பதில் சம்பந்தமாக, அடியிற் கண்ட தகவல்களை கவர்ன் மெண்டார் அறிவிப்பார்களா?

மகாணத் துறைமுக ஊழிய வர்க்கம்.

(1) ஒன்று படுத்தப்பட்ட மாகாண துறைமுக உத்தியோக வருக்கத்தில் இப்பொழுது புரமோஷன் செய்யும் முறையும், உத்தியோகங்களை விநியோகிக்கும் தன்மையும் மிகுந்த அதிருப்தியையும் வயிற்றெரிச்சலையும் உண்டுபண்ணி வருகிறதென்பது கவர்ன் மெண்டாருக்குத் தெரியுமா?

(2) சொற்பச்சம்பளம் பெறும் குமாஸ்தாக்களை மாகாணத்தின் ஒரு கோடியிலிருந்து மற்றொரு கோடிக்கு மாற்றுவதினால் அவர்களுடைய உயிருக்கும் சவுகரியத்திற்கும் இடைஞ்சலுண்டாவது கவர்ன்மெண்டாருக்குத் தெரியுமா?

(3) இப்போதிருக்கிற முறையை மாற்ற கவர்ன் மெண்டார் உடனே முன் வருவார்களா?

பதில்:—கவர்ன் மெண்டாருக்கு ஒரு தகவலும் தெரியாததலால், கனம் மெம்பர் சொல்லியிருக்கும் விஷயங்களைப் பற்றி அவர்கள் விசாரணை செய்வார்கள்.

கோஸ்டு லெட்டுகளை துறை முக உத்தியோகஸ்தர்கள் பரிசோதனை செய்தல்.

கே:—147, ஆகஸ்டுமாதம் 13-ம் தேதி கூடிய மீட்டிங்கில் மகாண துறைமுக உத்தியோகஸ்தர் இதர துறை முக உத்தியோகஸ்தர்கள் கோஸ்டு லெட்டுகளைப் பார்வையிடவேண்டாமென்று உத்திரவு செய்திருக்கிறாரா வேன்று நான் கேட்டிருந்ததற்கு கவர்ன் மெண்டார் தங்களுக்கு ஒன்றும் தகவல் தெரியாதென்றும், அதைப்பற்றி விசாரணை செய்வதாகவும் பதிலளித்திருந்தார்கள். அதைப்பற்றி கவர்ன்மெண்டார் இப்பால் விசாரணை செய்தார்களா? விசாரணையின் பலனாக தெரிய வந்ததென்ன?

பதில்:—கவர்ன் மெண்டார் விசாரணை செய்ததில் மாகாண துறை முக உத்தியோகஸ்தர் இதர துறைமுக உத்தியோகஸ்தர்களைப் பரிசோதனை செய்யவேண்டா மென்று தடைசெய்ய வில்லை யென்று தெரிகிறது. ஆகவே எப்பொழுதும் போல் பரிசோதனை நடந்து வரும்.

75 ரூபாய்க்குக் குறைந்த சம்பளம் பெறும் உத்தியோகஸ்தர்களுக்குப் பஞ்சப்படி.

கே:—148. யுத்தங்காரணமாக காலட்சேபச் செலவுகள் அதிகரித்திருப்பதை உத்தேசித்து, 1919-ம் வருஷம் ஜனவரி மாதம் 7-ம் தேதியுள்ள 16-ம் நம்பர் கவர்ன் மெண்டு உத்திரவில் கண்ட அனுகூலங்களை மாதம் ஒன்றுக்கு 75-ரூபாய்க்கும் அதற்குக்குறைவாகவும் சம்பளம் பெறும் உத்தியோகஸ்தர்களுக்கும் கவர்ன் மெண்டார் செய்து கொடுப்பார்களா?

பதில்:—இப்பொழுதிருக்கும் செல்வ நிலையானது கனம் மெம்பர் சொல்லுகிற யோசனைப்பிரகாரம் நடக்கஇடங்கொடாததற்காக கவர்ன்மெண்டார் வருந்து கிறார்கள்.

வெளித் துறைமுக ஆபீஸ் ஹெட்கிளார்க்குகளுக்கு சம்பள உயர்வு.

கே:—149 (ஏ) சென்னை டிப்டி போர்ட்டு கன்ஸர்வேட்டர் ஆபீஸ் ஹெட்கிளார்க்கின் சம்பளத்தை சமீபத்தில் கவர்ன் மெண்டார் உயர்த்தியிருக்கிறார்களா?

(பி) அந்த உத்தியோகவருக்கத்திலிருந்து வரும் அனைவரிடமும் ஒரே விதமாக நடந்து கொள்ளும் பொருட்டு வெளித்துறை முக ஆபீஸ்கள் சிலவற்றில் வேலைபார்க்கும் ஹெட்கிளார்க்குகளின் சம்பளத்தையும் கவர்ன் மெண்டார் உயர்த்து வார்களா?

பதில்:—(ஏ) இல்லை.

(பி) இந்த ஹெட்குமாஸ்தாக்களுக்கு அவரவர்களுடைய வேலைக்குத் தக்கபடி சம்பளம் நிர்ணயிக்கப்பட்டிருக்கிறது. அநேக துறைமுக ஆபீஸ் ஹெட்கிளார்க்குகளின் சம்பள விகிதங்களை சமீப காலத்திற்குள் மாற்றியிருக்கிறது. பொதுவாக எல்லாருடைய சம்பளத்தையும் மாற்றும் அவசிய மேற்பட் டிருப்பதாக கவர்ன் மெண்டார் நினைக்க வில்லை.

மாகாணத் துறை உத்தியோகஸ்தரும் டிப்டி போர்ட்டுகன் சர்வேட்டரும்.

கே:—150. சென்னை மாகாணத் துறைமுக உத்தியோகஸ்தர் வேலைக்கும், சென்னை டிப்டி போர்ட்டு கன்ஸர்வேட்டர் வேலைக்கும் ராஜாங்க கடற்படை உத்தியோக வருக்கத்திலிருந்து நியமனம் செய்ய விசேஷ காரணங்களேதேனு முண்டா? உண்டாயின் என்னென்ன?

பதில்:—இந்த இரண்டு உத்தியோகங்களையும் ராஜாங்க கப்பற்படை உத்தியோகஸ்தர்களுக்காக இந்தியா கவர்ன் மெண்டார் ஒதுக்கி வைத்துக் கொண்டிருக்கிறார்கள்.

டிப்டி போர்ட்டு கன்ஸர் வேட்டரின் அந்தஸ்து.

கே:—151. சென்னைமாகாண துறைமுக உத்தியோகஸ்தர் கவர்ன் மெண்டாருக்கு கப்பல் இலாகா சம்பந்தமாக ஆலோசனை சொல்பவராகவும், துறைமுக இலாகாவின் தலைவராகவு மிருந்தும், டிப்டி போர்ட்டு கன்ஸர் வேட்டர் அவருடைய நிர்வாக ஆதிக்கத்துக்குட்பட்டிராமலிருப்பதன் காரண மென்ன வென்று கவர்ன் மெண்டார் அறிவிப்பார்களா?

பதில்:—சென்னை துறைமுக பரிபாலன சபையே துறைமுகத்தின் நிர்வாகத்தை நடத்திவருவதால், டிப்டி போர்ட்டு கன்ஸர் வேட்டர் அந்த சபையின் நிர்வாக ஆதிக்கத்துக்குட்பட்டிருக்கிறார். மாகாணத்துறைமுக உத்தியோகஸ்தர் அந்த சபையில் ஒருமெம்பர்.

தூத்துக்குடி துறைமுக அபிவிருத்தி

கே:—152 (1) தூத்துக்குடி துறைமுக அபிவிருத்தி விஷயம் இப்பொழுது எந்த நிலைமையிலிருக்கிறது?

(2) கனம் ஸர் ஜார்ஜு புச்சானன், கே. ஸி. ஐ. இ. சமீபத்தில் தூத்துக்குடிக்கு வந்திருந்து, துறைமுக அபிவிருத்திக்கு அங்குள்ள வசதிகளைக் கண்டறிந்த சங்கதி கவர்ன் மெண்டாருக்குத் தெரியுமா?

(3) தூத்துக்குடி வியாபாரிகள் விரும்புகிற பிரகாரம் கூடிய சீக்கிரத்தில் வேலையைத்துவக்கம் செய்வதற்கு இப்பொழுது ஆலோசனையிலிருந்து வரும் பலபிரேரணைகளையும் கவனித்து முடிவான திட்ட மொன்றைத் தயாரிப்பதற்காக வேறொருவரை நியமிப்பதற்கு பதிலாக அவரை கவர்ன் மெண்டார் நியமிப்பார்களா?

பதில்:—துறைமுகத்தை அபிவிருத்தி செய்யும் விஷயத்தைப்பற்றி ஆலோசனை சொல்ல ஒரு நிபுணரைக் கொடுத்துதவும்படி இந்த கவர்ன் மெண்டார் இந்தியா கவர்ன் மெண்டாருடன் கடிதப்போக்கு வரத்து செய்து வருகிறார்கள்.

(2) ஸர் ஜார்ஜு புச்சானன் வந்து பரிசீலனை செய்து சென்ற விவரங்கள் கவர்ன் மெண்டாருக்குத் தெரியும்.

(3) கனம் மெம்பர் சொல்லுகிற யோசனையை கவர்ன் மெண்டார் கவனிப்பார்கள்.

ஸ்டிரெயிட்ஸ் செட்டில்மெண்டுமலாய் நாடுகளுக்குச் செல்லும் பிரயாணிகளுக்குப் பிரயாணச் சீட்டு நிர்பந்தம்.

கே:—153. ஸ்டிரெயிட்ஸ் செட்டில் மெண்டு, மலாய் நாடுகள் இவைகளுக்குச் செல்லும் பிரயாணிகள் பிரயாணச் சீட்டுகள் பெறவேண்டு மென்றிருக்கிற நிர்ப்பந்தத்தினால் அவர்களுக்குஏற்படுகிற அசௌகரியங்களை உத்தேசித்தும், இப்போது யுத்தம் முடிவடைந்து விட்டதைக் கருதியும், அந்த நிர்ப்பந்தங்களை அகற்றிவிட வேண்டிய ஆவசியகத்தை கவர்ன்மெண்டார் கவனிப்பார்களா?

பதில்:— இரண்டாவது கேள்விக்குக் கொடுக்கப்பட்டிருக்கும் பதிலை கனம் மெம்பர் கவனித்துக் கொள்வாராக (2-வது கேள்விக்கு பதில்:— பிரயாணச் சீட்டுகள் விஷயமாக இனி நடந்து கொள்ளவேண்டிய முறையைப் பற்றி இந்தியா கவர்ன்மெண்டார் ஆலோசித்து வருவதாகத் தெரிகிறது.)

துறைமுக உத்தியோகஸ்தர்களுக்கு சம்பள உயர்வு.

கே:—154 (ஏ) பிரிட்டிஷ் இந்தியா ஸ்டீம் நாவிகேஷன் கம்பெனி கப்பல்களின் கமாண்டர்களுக்கும் ஆபீசர்களுக்கும் சமீபத்தில் வெகு தாராளமாக சம்பள உயர்வு செய்து கொடுக்கப்பட்டிருப்பது கவர்ன் மெண்டாருக்குத் தெரியுமா?

(பி) அந்த விவரம் கவர்ன்மெண்டாருக்குத் தெரியுமாயின், துறைமுக உத்தியோகஸ்தர்களுக்கும் அவர்கள் மனுச்செய்து கொண்டிருக்கிறபடி கவர்ன்மெண்டார் சம்பளத்தை உயர்த்திக் கொடுப்பார்களா?

பதில்:— (ஏ) கவர்ன்மெண்டாருக்கு சம்பள உயர்வு விஷயம் தெரியும். (பி) இந்த விஷயம் கவர்ன்மெண்டாரின் ஆலோசனையி லிருந்து வருகிறது.

[ஏப்பிரல் மாதம் 3-ம்தேதி நடந்த கூட்டம்]

திருச்சிறுப்பள்ளியில் சில பிராமண உபாத்தியாயர்கள் தப்பாக நடந்து கொண்டதாக.

கே:—155 (ஏ) திருச்சிறுப்பள்ளியிலும் மற்றும் சில வெளியிடங்களிலுமுள்ள நடுத்தரப் பாடசாலைகளின் பிராமண உபாத்தியாயர்கள் பிராமணரல்லாத பையன்கள் இந்த வருஷம் ஸ்கூல்பைனல் பரிட்சைக்கு ஆஜராகக்கூடாதென்று தடுத்துவிட்ட விஷயமாக, 1919-ம் வருஷம் பிப்பிரவரி மாதம் 26-ம்தேதி திருச்சிறுப்பள்ளி நலவுரிமைக் கூட்டுறவு சங்கத்தின் மெம்பர்கள் கூட்டம் கூடி நிறைவேற்றி யிருக்கும் தீர்மானங்களின் நகலை அச்சங்கத்தின் பிரசிடெண்டு கவர்ன்மெண்டாருக்கு அனுப்பியிருப்பது வாஸ்தவமா ?

(பி) அவ்விதமாயின், இனி அத்தகைய தீச் செயல்கள் நடைபெற இடமில்லாமல் தடுத்துவிட கவர்ன்மெண்டார் தக்க ஏற்பாடுகளைச் செய்வார்களா ?

பதில்:— தென்னிந்திய நலவுரிமைச் சங்க மெம்பர்களின் கூட்டத்தில் நிறைவேறி யிருக்கும் தீர்மானங்களின் நகல் கிடைத்திருக்கிறது. பிராமண உபாத்தியாயர்களைப் பற்றியாவது, பரிட்சைக்கு ஆஜராகக் கூடாதென்று தடுத்து விட்டதைப் பற்றியாவது அதில் ஒன்றும் பிரஸ்தாபமில்லை.

சிவகிரியில் ஹிந்துக்களுக்கும் முஸ்லீம்களுக்கும் மனஸ்தாபம்.

கே:—156 (ஏ) திருநெல்வேலி ஜில்லா சிவகிரியிலுள்ள ஹிந்துக்கள் முகம்மதியர்கள் பள்ளிவாசல்களில் தொழாமல் தடுக்கிறார்களென்றும், இறந்துபோன முகம்மதியரின் பிரேதமொன்றை சென்ற அக்டோபர் மாதத்தில் புதைக்கவிடாமற் தடுத்து 3-நாள் வரையில் அந்தப் பிரேதம் புதைக்கப்படாமலிருந்த தென்றும், ஸ்ரீ வில்லிப்புத்தூரிலுள்ள முஸ்லீம்கள் கவர்ன்மெண்டாருக்கு மகஜர் அனுப்பி யிருக்கிறார்களா ?

(பி) அவ்விதமாயின்; கவர்ன்மெண்டார் விசாரணைசெய்து, முகம்மதியர்களின் மார்க்க தர்மத்தைக் காப்பாற்றுவதற்கு அவசியமான காரியங்களை செய்வார்களா ?

பதில்:— சிவகிரியிலுள்ள ஹிந்துக்களின் மேல் புகாராக அந்த ஊர் முஸ்லீம்கள் சிலரால் ஜனவரி மாதத்தில் ஒரு மனு அனுப்பப்பட்டது. அது திருநெல்வேலி ஜில்லா மாஜிஸ்டிரேட்டுக்குப் பைசலுக்காக அனுப்பப்பட்டுவிட்டது.

கே:—157. 1919-ம் வருஷம் மார்ச்சு மாதம் 11-தேதி கூடிய சட்ட சடையில் கேட்டிருந்த 149- வது கேள்விக்கு மாலாபுரம் கலகத்தில் சுடப்பட்ட மாப்பிள்ளை மார்களின் பிரேதங்கள் தகனம் செய்யப் பட்டன வென்று கவர்ன் மெண்டார் பதிலளித்திருக்கிறார்கள்.

மாலாபுரம் கலகத்தில் சுடப்பட்ட மாப்பிள்ளைகளின் பிரேதங்கள்

1915-ம் வருஷம் டிசம்பர் மாதம் 2ம் தேதியுள்ள நம்பர் 450 பி. கவர்ன் மெண்டு உத்திரவில் முகம்மதியர்களின் பிரேதங்களை தகனம் செய்யக் கூடாதென்று வியக்தமாகச் சொல்லியிருந்தும், இந்தப் பிரேதங்களை தகனம் செய்யும்படி அதிகாரிகள் உத்திரவிட்டது நியாயமா?

பதில்:—கலகங்களில் சுட்டுத் தள்ளப்படும் மாப்பிள்ளை மார்களின் பிரேதங்கள் 1859 ம் வருஷத்திய மாப்பிள்ளைமார்கள் கலகச்சட்டம் 5 வது பிரிவின்படி பைசல் செய்யப்பட வேண்டும். பிளேக் கேஸ்கள் விஷயமாக பிறப்பிவிக்கப் பட்ட 450 ம் நம்பர் கவர்ன்மெண்டு உத்திரவானது இந்த கேஸிலும் செல்லுபடியுள்ளதாகுமென்று கனம் மெம்பர் நினைப்பதுசரியல்ல.

கே:—158 (ஏ) சென்னை மாகாணத்தில் எத்தனை இந்தியர்கள் ஜில்லா போலீஸ் சூப்பரின் டெண்டுகள் வேலை பார்த்து வருகிறார்கள்? அவர்களில் முகம்மதியர்கள் எத்தனை பேர்?

முகம்மதிய போலீஸ் சூப்பரின்டெண்டுகள்.

(பி) இப்போது அந்த உத்தியோகத்தில் ஒரு முகம்மதியர் கூட இல்லாததினால், ஒரு முகம்மதியரையாவது நியமனம் செய்ய கவர்ன் மெண்டார் ஏற்பாடு செய்வார்களா?

பதில்:—(ஏ) இரண்டு இந்தியர்கள் ஜில்லாசூப்பரின் டெண்டு வேலை பெற இடமிருக்கிறது. இப்பொழுது இரண்டு இந்தியர்கள் அந்த வேலையிலிருந்து வருகிறார்கள். அவர்களில் முகம்மதியரொவருமில்லை.

(பி) அந்த ஸ்தானங்களில்காலிஏற்படும்போது இதரர்களுடைய பாத்தியதைகளுடன்கூட முகம்மதியர்களின் பாத்தியதையும் கவனிக்கப்படும்.

கே:—159 (ஏ) சென்னை மாகாணத்தில் எத்தனை இந்தியர்கள் டிஸ்திரிக்ட் ஜட்ஜுகளாக இருந்து வருகிறார்கள். அவர்களில் முகம்மதியர்கள் எத்தனை பேர்?

டிஸ்திரிக்ட் ஜட்ஜு பதவிகளில் முகம்மதியர்கள்.

(பி) முகம்மதியர்களுக்காக வென்று ஒரு ஜில்லா ஜட்ஜு ஸ்தானத்தை கவர்ன் மெண்டார் ஒதுக்கி வைப்பார்களா?

பதில்:—(ஏ) கனம் மெம்பர் கோரும் விவரங்களை குவர்ட்டெர்லிலிஸ்ட் 107, 108-வது பக்கங்களில் காணலாம்.

(பி) கனம் மெம்பர் சொல்லுகிற யோசனைப் பிரகாரம் ஒரு ஜில்லா ஜட்ஜு உத்தியோகத்தை முகம்மதியருக்காக ஒதுக்கிவைக்க முடியாது.

கே:—160. 1919ம் வருஷம் மார்ச்சு மாதம் 11ம் தேதி கூடிய மீட்டிங்கில் நான் கேட்ட கேள்விக்கு இப்பொழுது இரண்டு இந்திய லேட் கீப்பர்கள் இருந்து வருவதாக கவர்ன்மெண்டார் பதிலளித் திருக்கிறார்கள். அவர்களுடைய பெயர் முதலிய விவரங்களை கவர்ன்மெண்டார் அறிவிப்பார்களா?

இந்திய லேட் கீப்பர்கள்.

பதில்:—(1) எம். எல். குன்ஹா (2) ஓ. எம். கிரேஷியாம், இவ்விருவரும் கோஸ்ட்லேட் உத்தியோக வர்க்கத்தில் இருக்கிறார்கள். (3) கே. ராமசாமி என்பவர் துறைமுக லேட்சர்விஸி லிருக்கிறார்.

கே:—161. அதே மீட்டிங்கில் நான் கேட்டிருந்த 18வது கேள்வி சம்பந்தமாக, 1918-ம் வருஷம் அக்டோபர் மாதம் 15-ம் தேதியுள்ள நம்பர் 364, பிரஸ், ரிவின்யூ (ஸ்பெஷல்) (மாரைன்) கவர்ன்மெண்டு உத்திரவில் சென்னை டிப்டிபோர்ட்டு கன்ஸர் வேட்டர் ஆபீஸ் ஹெட் கிளார்க்குக்கு சம்பள உயர்வு செய்து கொடுக்கப் படவில்லையா?

டிப்டி போர்டு கன்ஸர் வேட்டர் ஆபீஸ் ஹெட் கிளார்க்குக்கு சம்பள உயர்வு.

பதில்:—கனம் மெம்பர் குறிப்பிடுகிற கவர்ன்மெண்டு உத்திரவில் பிரஸ்தாப ஹெட்கிளார்க்குக்கு சம்பள உயர்வு கொடுக்கப்படவில்லை.

[நவம்பர்மாதம் 19-ம் தேதி சென்னையில் நடந்த கூட்டம்.]

கே:—162 (ஏ) தஞ்சாவூர் ஜில்லா நாகப்பட்டணத்திற் கருகாமையில் கடுவையாற்றுக்குப் பாலங் கட்டும் விஷயம் இப்பொழுது என்ன நிலைமையிலிருக்கிறது?

கடுவையாற்றுக்குப் பாலம்.

(பி) அந்த ஆற்றுக்குப் பாலமில்லாததினால் பொது ஜனங்களும், அதிலும் முக்கியமாக வேளாங்கண்ணிக்குச் செல்லும் கிறிஸ்தவ யாத்திரீகர்களும் மிகுந்த கஷ்டப்படுவதால், கவர்ன்மெண்டார் சீக்கிரத்தில் பாலங்கட்டி முடிப்பார்களா?

பதில்:—பிரஸ்தாப விஷயம் கவர்ன்மெண்டாரின் ஆலோசனையிலிருந்து வருகிறது.

கே:—163 (ஏ) நாகப்பட்டணம் முனிசிபாலிட்டிக்காக ஏற்கனவே சாங்கிஷனாகி, யுத்தம் முடிவாகும் வரையில் நிறுத்தி வைத்துக் கொள்ளப்பட்டிருக்கிற வடிகால் வேலைகளை ஆரம்பிக்க என்ன ஏற்பாடுகள் செய்யப்பட்டிருக்கின்றன?

நாகப்பட்டணம் முனிசிபாலிட்டி வடிகால் வேலைகள்.

(பி) நாகப்பட்டணம் வாசிகள் வடிகால் இல்லாத கஷ்டத்தை வெகுவாக அனுபவிப்பதனுல், யுத்தம் இப்பொழுது முடிவடைந்து விட்டதை உத்தேசித்து, அந்த வேலையை உடனே துவக்கம் செய்ய கவர்ன்மெண்டார் ஏற்பாடு செய்வார்களா?

பதில்.—நாகப்பட்டணம் முனிசிபாலிடிக்காக வடிகால் திட்டம் எதுவும் இதுவரையில் கவர்ன்மெண்டாரால் சாங்கிஷன் செய்யப்படவில்லை. ஆலோசனையிலுள்ள திட்டத்தின்படி வேலை செய்வதிலுள்ள கஷ்டங்களை 1918-ம் வருஷம் மேமாதம் 22-ம் தேதியுள்ள 8371 ம் கவர்ன்மெண்டு உத்திரவில் வியக்தமாகச் சொல்லியிருக்கிறது. அந்த கவர்ன்மெண்டு உத்திரவின் பிரதி இப்பொழுது சபையின் முன்பாக ஆஜர்படுத்தப் பட்டிருக்கிறது. சாக்கடைத் தண்ணீர் தெருக்களில் வந்து விழுவதினுல் ஏற்படும் அசங்கியத்தை நிவர்த்திப்பதற்காக, சுகாதார எஞ்சினீரால் சிபார்சு செய்யப்பட்ட Filter Trenches ஐ வைத்துப் பரீட்சை செய்து பார்க்கும்படி கவர்ன்மெண்டார் சொல்லியிருக்கிற பிரகாரம் முனிசிபல் சேர்மன் செய்து பாக்கப் போகிறுர்.

(பி) முனிசிபல் கவுன்சிலுக்கு அதிக வரி விதிக்க அதிகார மிருக்கும்படி சட்டத்தைத் திருத்தும் வரையில் மூடிய சாக்கடை திட்டத்தைச் செய்து முடிப்பதற்கு வேண்டிய பணத்தை முனிசிபல் கவுன்சில் செலவழிக்க சக்தியுடையதாக இருக்குமென்று கவர்ன்மெண்டார் நினைக்கவில்லை.

உபகேள்வி:—Filter Trenches ஐ ஏற்படுத்திப் பார்த்ததில் பிரயோஜனமில்லை யென்பதும், அதனுல் டவுனில் அசங்கியம் தான் அதிகப்பட்டதென்பதும் கவர்ன்மெண்டாருக்குத் தெரியுமா? இதனுல் ஏற்படும் அசங்கியத்தை நிவர்த்தி செய்வதற்காக கவர்ன்மெண்டார் திறந்த சாக்கடைகளையாவது ஏற்படுத்த வழி தேடுவார்களா?

கனம் கான்பகதூர் மகம்மது ஹபிபுல்லா சாகிப் பகதூர்:—இந்தக் கேள்வியைப்பற்றி கனம் மெம்பர் நோட்டீஸ் கொடுக்கவேண்டும்.

போர்டு பாடசாலை உபாத்தியாயர்கள்.

கே:—164. காலட்சேபச் செலவுகள் அதிகமாகயிருப்பதை உத்தேசித்து, லோகல் போர்டு பாடசாலைகளில் வேலை பார்த்து வரும் உபாத்தியாயர்களுடைய சம்பள விஷயத்தையும் பரிசீலனை செய்யும்படி கவர்ன்மெண்டார் சம்பளக் கமிட்டியாரைக் கேட்டுக் கொள்ளுவார்களா?

பதில்:—56-வது கேள்விக்கு அளிக்கப்பட்டிருக்கும் பதிலை கனம் மெம்பர் பார்த்துக்கொள்வாராக. [56-வது கேள்விக்கு பதில்:—சம்பளக் கமிட்டியாரின் பரிசீலனைக்கு அனுப்பப்பட்ட விஷயங்களைப்பற்றி அவர்கள் செய்யும் சிபார்சுகள் ஸ்தல ஸ்தாபனங்களுக்கு அறிவிக்கப்படும். எந்த

ஸ்தல ஸ்தாபனமேனும் குறிப்பிட்ட ஏதேனுமொரு விஷயத்தை அக் கமிட்டியாரின் பரிசீலனைக்கு அனுப்பவேண்டு மென்று விரும்பினால் அதைப்பற்றி கவர்ன்மெண்டார் கவனிப்பார்கள்.]

உயர்தர கவர்ன் மெண்டு உத்தியோ கஸ்தர்களைச்சொந்த ஊர்களுக்கு மாற்று தல்.

கே:—165 உயர்தர கவர்ன்மெண்டு உத்தியோகங்களிலுள்ளவர்கள், தங்களுடைய சொந்த ஊர்களுக்கு மாற்றப்படக்கூடா தென்று ஏதேனும் விதிகளாவது, கவர்ன்மெண்டு உத்திரவுகளாவது, இருக்கின்றனவா? அவ்வித உத்திரவுகளாவது விதிகளாவது இருந்தால், அவைகள் எல்லா இலாகாக்களிலும் வேலை பார்த்து வரும் நிர்வாக உத்தியோகஸ்தர்கள், நிர்வாக உத்தியோகஸ்தரல்லாதவர்கள் ஆகிய இருதிறத்தார் விஷயத்திலும் செல்லுபடி யுள்ளனவா?

பதில்:—அத்தகைய விதிகளாவது உத்திரவுகளாவது இல்லை.

ஸ்தல ஸ்தாபனங் களின் கீழ்வேலை பார்க்கும் கம்பவுண்டர் களுக்கு வீட்டுவாட கை அலவுன்ஸ்.

கே—166. வீட்டுவாடகைகள் உயர்வாக இருக்கும் இடங்களிலாவது, அல்லது வீட்டு வாடகைக்காக அலவுன்ஸ் கொடுக்கவேண்டிய அவசியமென்று ஸ்தலஸ்தாபனங்கள் கருதும் இடங்களிலாவது, அவைகள் தங்களிடம் வேலை பார்த்து வரும் கம்பவுண்டர்களுக்கு வீட்டுவாடகை அலவுன்ஸ் கொடுக்க கவர்ன்மெண்டார் அனுமதி கொடுப்பார்களா?

பதில்:—கனம் மெம்பர் யோசனை சொல்லுகிற பிரகாரம் ஸ்தல ஸ்தாபனங்களுக்கு அறிவிக்க வேண்டிய அவசியமென்று கவர்ன்மெண்டார் நினைக்கவில்லை. ஸ்தல ஸ்தாபனங்களிடம் பணமிருந்தால், கவர்ன்மெண்டாருடைய அனுமதியின்மேல் அவைகள் கம்பவுண்டர்களுக்கு வீட்டுவாடகை அலவுன்ஸ் கொடுக்கலாம்.

மிருக வைத்திய இலாகா உத்தியோ கஸ்தர்களின் சம் பள உயர்வு.

கே—167 சப் அஸிஸ்டெண்டு சர்ஜன்களுக்கு சம்பள உயர்வு செய்யப்பட்டிருப்பதை உத்தேசித்து, மிருக வைத்திய இலாகா அஸிஸ்டெண்டுகளுக்கும் இன்ஸ்பெக்டர்களுக்கும் அந்த தாமாஷாப்படி சம்பளத்தை உயர்த்தும் விஷயத்தைப் பரிசீலனை செய்யும்படி சம்பளக் கமிட்டியாரை கவர்ன்மெண்டார் கேட்டுக்கொள்ளுவார்களா?

பதில்:—மிருக வைத்திய இலாகா அஸிஸ்டெண்டுகள், இன்ஸ்பெக்டர்கள் இவர்களுடைய சம்பள விகிதங்களை சமீபத்தில் கவர்ன்மெண்டார் உயர்த்தியிருக்கிறார்கள். ஆயினும், அதே அந்தஸ்திலுள்ள இதர கவர்ன்மெண்டு உத்தியோகஸ்தர்களைப்போலவே அவர்களுடைய விஷயத்தையும் சம்பளக்கமிட்டியார் பரிசீலனை செய்வார்கள்.

கே:—168 (ஏ) ஜில்லா ரிஜிஸ்தரார் பதவிக்கு அருகதையாக விருக்கும் சீனியர் சப்ரிஜிஸ்தரார்களின் பெயர் விவரங்களடங்கிய ஜாப்தாவொன்றை கவர்ன்மெண்டார் ஆஜர்ப்படுத்துவார்களா?

சப்ரிஜிஸ்தரார்கள் புரமோஷனும் மிஸ்டர் ரோபெல்லோவின் நியமனமும்.

(பி) ஹோம் டிபார்ட்டுமெண்டு சிக்ரிடேரியட் சூப்பரின்டெண்டு மிஸ்டர் பீடர் ராபர்ட்டி ரோபெல்லோவை ஜில்லா ரிஜிஸ்தராராக நியமனம் செய்ததற்குக் காரணமென்ன?

பதில்:—யோக்கியதையும் திறமையுமுடையவர்களா யிருந்தால் எல்லா சப் ரிஜிஸ்தரார்களும் ஜில்லா ரிஜிஸ்தரார் பதவிக்கு அருகதையானவர்கள் தான்.

(பி) 38 வது கேள்விக்கு அளிக்கப்பட்டிருக்கும் பதிலை கனம் மெம்பர் பார்த்துக்கொள்வராக (38-வது கேள்விக்கு பதில்:—பத்திரப்பதிவு இலாகாவின் நன்மையை உத்தேசித்தே மிஸ்டர் ரோபெல்லோ ஜில்லா ரிஜிஸ்தராராக நியமனம் செய்யப்பட்டிருக்கிறார்.

கே:— 169 தஞ்சாவூர் ஜில்லாவில் வெட்டாறு, ஓடம்போக்கியாறு நீர்ப்பாசன விஷயம் இப்பொழுது எந்த ஸ்திதியிலிருக்கிறது?

வெட்டாறு-ஓடம்பாக்கியாறு நீர்ப்பாசனம்.

பதில்:—வெட்டாற்றை அபிவிருத்தி செய்வதற்கான திட்டம் நீர்ப்பாசன இலாகா சீப் எஞ்சினீரின் ஆபிஸில் பரிசிலனை செய்யப்பட்டு வருகிறது. ஓடம்போக்கியாற்றுத் தலைப்பில் கட்டை கட்டுவதற்கும் திட்டம் தயாராகி வருகிறது.

கே:— 170. யுத்தம் இப்பொழுது தீர்ந்து விட்டதை உத்தேசித்து ஸ்டிரெயிட்ஸ் செட்டில்மெண்டு, மலாய் நாடுகள் இவைகளுக்குச் செல்லும் இந்தியப் பிரயாணிகள் தேசப்பாது காப்பு சட்டவிதிகளின்படி பிரயாணச் சீட்டுகள் பெறவேண்டு மென்றிருக்கும் நிர்ப்பந்தத்தை அகற்றி விடும்படி இந்தியா கவர்ன்மெண்டாருக்கு இந்த கவர்ன்மெண்டார் சிபார்சு செய்வார்களா?

பிரயாணச் சீட்டுகள்.

பதில்:— இந்த விஷயம் இந்தியா கவர்ன்மெண்டாரின் ஆலோசனையிலிருந்து வருகிறது.

கே:— 171 கூடிய சீக்கிரத்தில் கவர்ன்மெண்டார் கட்டாய இலவச ஆரம்பக் கல்வி மசோதாவை சபையின் முன் ஆஜர்ப்படுத்துவார்களா?

கட்டாய இலவச ஆரம்பக் கல்வி மசோதா.

பதில்;—கூடிய சீக்கிரத்தில் "சென்னை ஆரம்பக் கல்வி மசோதா ஆஜர்ப்படுத்தப்படும்.

**டிப்டி போர்ட்டு கன்ஸர்வேட்டர் ஆபீஸ் ஹெட்கிளார்க்கு ஸ்தானம்.**

கே:— 172 (எ) காலியாயிருந்த சென்னை டிப்டி போர்ட்டு கன்ஸர்வேட்டர் ஆபீஸ் ஹெட்கிளார்க்கு ஸ்தானத்திற்கு, சென்னை துறைமுக பரிபாலன சபையில் 40 ரூபாய் வாங்கிக்கொண்டிருந்த ஒரு குமாஸ்தா நியமிக்கப்பட்டிருப்பது கவர்ன்மெண்டாருக்குத் தெரியுமா?

(பி) 1906-ம் வருஷம் ஜனவரிமாதம் 10-ம்தேதியுள்ள நம்பர் 35 (மாரைன்) கவர்ன்மெண்டு உத்திரவின் 5-வது பாராவின்படி மாகாணத் துறைமுக உத்தியோக வருக்கத்திலிருந்தே அந்த ஸ்தானத்திற்கு நியமனங்கள் செய்யப்பட வேண்டுமென்பது கவர்ன்மெண்டாருக்குத் தெரியுமா?

(ஸி) அது கவர்ன்மெண்டாருக்குத் தெரியுமாயின், ஏன் அந்த உத்திரவின்படி அந்த இலாகா அதிகாரிகள் நடந்து கொள்ளவில்லையென்று கவர்ன்மெண்டார் விசாரணை செய்வார்களா?

பதில்:— (ஏ) கவர்ன்மெண்டாருக்கு இதைப்பற்றி ஒன்றும் தெரியாது.

(பி) (ஸி) 55-ம் நம்பர் கவர்ன்மெண்டு உத்திரவில் இவ்வித நிபந்தனைகளொன்றுமில்லை.

**பிரெஞ்சு பிராந்தியங்கள் ஓரமாய் சுங்க ஏற்பாடுகள்**

கே:— 173. 1918-ம் வருஷம் ஆகஸ்டுமாதம் 1-ம்தேதி கூடிய சென்னை சட்டசபையில் பிரெஞ்சு பிராந்தியத்தில் நிலச்சுங்க வழக்கத்தை எடுத்துவிட்டு கடற்சுங்க முறையை ஏற்படுத்த முடியுமாவென்று நான் கேட்டிருந்ததற்கு, கவர்ன்மெண்டார் இந்த விஷயத்தைப் பரிசீலனை செய்வதாகச் சொல்லியிருக்கிறார்கள். இப்பொழுது அந்த விஷயம் என்ன நிலைமையிலிருக்கிறது? எப்பொழுது மாறுதல் ஏற்படுமென்று எதிர்பார்க்கலாம்?

பதில்:—மாஹியைச் சுற்றிலுமுள்ள சுங்கச்சாவடிகளை சத்தியாக எடுத்து விடும்படி இந்தியா கவர்ன்மெண்டார் உத்திரவு செய்திருக்கிறார்கள்; இந்த ஏற்பாடுகள் 1920-ம் வருஷம் ஜனவரி மாதம் முதல் தேதி முதல் அனுஷ்டானத்திற்கு வந்துவிடும். புதுச்சேரி, காரைக்கால் இவைகளைச் சுற்றிலுமுள்ள சுங்கசவுக்கைகள் விஷயம் இன்னமும் ஆலோசனையிலிருந்து வருகின்றன.

**எட்டு மாப்பிள்ளைமார்களைப் போலீசார்சுட்ட விஷயம்.**

கே:— 174. மலபார் ஜில்லா மாலாபுரத்தில் எட்டுமாப்பிள்ளைமார்களை ஸ்பெஷல் போலீசாரும் ஆங்கிலோ இந்தியப் படையினரில் ஒரு சாராரும் சுட்டுக்கொன்று விட்ட விஷயமாக விசாரணைசெய்து உத்தியோக தோரணையில் கவர்ன்மெண்டுக்கு செய்து கொள்ளப்பட்டிருக்கும்

ரிபோர்ட்டை ஆஜர்ப்படுத்தப்படி மார்ச்சு மாதம் 11-ம்தேதி கூடிய சட்ட சபையில் நான் கேட்டிருந்த பிரகாரம், அந்த ரிபோர்ட்டை கவர்ன்மெண்டார் ஆஜர்ப்படுத்துவார்களா?

பதில்:—பிப்பிரவரிமாதம் 7-ம் தேதி நடந்த மாப்பிள்ளைமார் கலகத்தைப்பற்றி ஜில்லா மாஜிஸ்திரேட் முடிவாக அனுப்பியரிபோர்ட்டு கவர்ன்மெண்டாருடைய உத்திரவுடன் சபையின் முன்பாக ஆஜர்ப்படுத்தப் பட்டிருக்கிறது.

ஸ்டிரேயிட்ஸ் செட்டில் மெண்டுகளிலிருந்து சென்னையில் கொண்டு வந்திறக்கப்பட்ட பவுன்களின் பறிமுதல்.

கே:—175 (ஏ) ஸ்ட்ரெயிட்ஸ் செட்டில் மெண்டுகளிலிருந்து சென்னையில் கொண்டு வந்திறக்கப் பட்ட பவுன்களைப் பறி முதல் செய்திருக்கும் விஷயமாக செப்டம்பர் மாதம் 15-ம் தேதி வெளியான "மெட்ராஸ் மெயில்" பத்திரிகையில் பிரசுரமாகி யிருக்கும் வியாசத்தை கவர்ன்மெண்டார் பார்வையிட்டார்களா?

(பி) சுங்க இலாகா அதிகாரிகள் பிரிட்டிஷ் பிரஜைகளுக்கும் பிரெஞ்சு பிரஜைகளுக்கும் வித்தியாசம் பாராட்டியது நியாயமா?

(ஸி) ஒரு பிரெஞ்சு பிரஜையை அவர்கள் விலக்கு செய்துவிட்டு மற்றொருவரை விலக்கு செய்யாதிருந்தது நியாயமா?

(டி) பிரெஞ்சு வியாபாரிகள் தாராளமாக பவுன்களைக் கொண்டு வந்திறக்கலாமாயின், ஏன் சிலபவுன்களைக் கைப்பற்றிக் கொண்டு அவைகளைத் திரும்பக்கொடுக்க கடுமையான தண்டத்தீர்வை விதித்திருக்க வேண்டும்?

(இ) பிரெஞ்சுப் பிரஜைகள் பிரெஞ்சுத் துறை முகங்களில் பவுன்களைக் கொண்டுவந்து இறக்கலாமாயின், ஒருதடவையில் அவர்கள் எத்தனை பவுன்கள் கொண்டுவரலாம்? இப்போதிருக்கிற உத்திரவுகளின்படி அன்னியநாடுகளிலிருந்து பிரிட்டிஷ் எல்லைக்குள் ஒருதடவைக்கு 20-பவுன்கள் கொண்டு வரலாமாதலால், பிரெஞ்சு துறை முகங்களிலிறக்கப்பட்ட பவுன்கள் பிரிட்டிஷ் எல்லைக்குள் வந்து சேராவென்பதற்கு பாதுகாப்பென்ன?

பதில்: (ஏ) கவர்ன் மெண்டார் அந்த வியாசத்தைப் பார்வை யிட்டார்கள்.

(பி) சுங்க இலாகா அதிகாரிகள் பிரிட்டிஷ் பிரஜைகளுக்கும் பிரெஞ்சுபிரஜைகளுக்கும் வித்தியாசம் பாராட்டுவது நியாய மில்லை. அவர்கள் வித்தியாசம் பாராட்டுவது மில்லை. பவுன்களை இறக்குமதி செய்கிறவர்கள் பிரிட்டிஷ் பிரஜைகளா அல்லது பிரெஞ்சு பிரஜைகளாவென்கிற கேள்விக்கிடையாது. பவுன்கள் பிரிட்டிஷ் எல்லைக்குள் இறக்கப்படுகின்றனவா அல்லது பிரஞ்சு எல்லைக்குள் இறக்கப்படுகின்றனவா வென்றே கவனிக்கப்படும்.

(வி) ஒருவரை விலக்கு செய்து மற்றொருவரை அவர்கள் பிடித்துக்கொள்ள நியாய மில்லை. அவ்விதம் அவர்கள் செய்கிறதில்லை. சிட்சை செய்யப்படாத பிரெஞ்சுப் பிரஜைகள் காங்கள் பிரெஞ்சுத்துறை முகங்களுக்குப் பவுன்களை ஏற்றிச் செல்லுவதாக ஒப்புக் கொண்டார்கள். சில பிரெஞ்சு இறக்குமதியாளர்கள் தங்களுடைய சுவாதீனத்தில் பவுன்களை வைத்துக் கொண்டிருந்தும், சுங்க அதிகாரிகள் விசாரணைசெய்த போது இல்லையென்று மறுத்தபடியினால் கடற் சங்கச்சட்டம் 167 (7) வது பிரிவின்படி அபராதம் விதிக்கப் பட்டார்கள்.

(டி). (பி). (வி). பிரிவுகளுக்கு அளிக்கப்பட்டிருக்கும் பதிலைப்பார்த்துக் கொள்ளவும்.

(இ) பிரெஞ்சு பிரதேசத்திற்குள் பவுன்களை இறக்குமதி செய்யக்கூடாதென்று இப்பொழுது எவ்வித நிர்ப்பந்தங்களு மில்லை. பிரெஞ்சுராஜாங்கத்திலிருந்து பிரிட்டிஷ் எல்லைக்குள் பவுன்கள் வராமற் தடுக்க கவர்ன்மெண்டார் ஏற்பாடு செய்து கொண்டிருக்கிறார்கள்.

துறைமுக உத்தியோகஸ்தர் களுக்கு சம்பள உயர்வு.

கே:—176 (ஏ) 1919 ம் வருஷம் ஆகஸ்டு மாதம் 16-ம் தேதி "வெளியான மெட்ராஸ் டைம்ஸ்" பத்திரிகையில் "துறை முக உத்தியோகஸ்தர்களுடைய சம்பளம்" என்று பிரசுரமாகி யிருக்கும் வியாசத்தை கவர்ன்மெண்டார் பார்வையிட்டார்களா?

(பி) அந்த வியாசத்தில் குறிப்பிடப்பட்டிருக்கும் காரணங்களை உத்தேசித்து, குறைந்த சம்பளம் பெறும் துறைமுக உத்தியோகஸ்தர்களுடைய சம்பளங்களை கவர்ன்மெண்டார் உயர்த்துவார்களா?

பதில்:—(ஏ) கவர்ன்மெண்டார் அந்த வியாசத்தைப் பார்வையிட்டார்கள்.

(பி) இந்த விஷயம் கவர்ன்மெண்டாரின் ஆலோசனையிலிருந்து வருகிறது.

முகம்மதியக்கைதிகளுக்குத் தொழுவதற்கு வசதிகள்.

கே:—177 (ஏ) சென்னை சிறைச்சாலையிலுள்ள முகம்மதியக் கைதிகளுக்குத் தொழுவதற்கு சில வசதிகள் செய்து கொடுக்கவேண்டுமென்று சென்னை அஞ்சுமானி இஸ்லாஹுல் முஸ்லிமின் காரியதரிசி சிறைச்சாலை சூப்பரின்டெண்டுக்கு எழுதியிருக்கும் கடிதத்தின் பிரதியொன்று செப்டம்பர் மாதம் 26-ம்தேதி வெளியான "ஹிந்து"ப் பத்திரிகையில் பிரசுரமாகி யிருப்பதை கவர்ன்மெண்டார் பார்வையிட்டார்களா?

(பி) அதில் செய்து கொள்ளப்பட்டிருக்கும் பிரார்த்தனைகளை கவர்ன்மெண்டார் அங்கீகரிப்பார்களா?

பதில்:—கவர்ன்மெண்டார் இப்பால் அந்தக் கடிதத்தைப் பார்வை யிட்டார்கள். இது சம்பந்தமான சிறைச்சாலை விதிகளை மாற்றுவதற்குப் போதிய காரணங்களிருக்கின்றனவா கவர்ன்மெண்டார் பரிசிலனை செய் வார்கள்.

கே:—178 (ஏ) லோகல் போர்டுகள் சட்டம் எப்பொழுது திருத்தப் படுமென்று கவர்ன்மெண்டார் அறிவிப்பார்களா?

லோகல்போர்டு கள்ஆக்டின்திருத்தம்

(பி) முனிசிபல் கவுன்சில்களில் அனுஷ்டிக்கப் படுவது போல், தாலுகா போர்டு மெம்பர்கள் எலெக் ஷன்களை தாலுகா போர்டு பிரசிடெண்டுகளே நடத்தி வைக்க அதிகாரம் கொடுக்கும் விஷயத்தை கவர்ன்மெண்டார் ஆலோசிப்பார்களா ?

(ஸி) அவ்விதமாயின், அதை அனுசரித்து இப்பொழுது அனுஷ் டானத்திலிருக்கும் எலெக்ஷன் விதிகளை கவர்ன்மெண்டார் திருத்துவார் களா?

பதில்:—(ஏ) சென்னை லோகல் போர்டுகள் சட்டத்தைத் திருத்தும் விஷயத்தைப்பற்றி சமீபத்தில் இந்தியா கவர்ன்மெண்டாருக்கு எழுதப்படும்.

(பி) (ஸி) தாலுகா போர்டு எலக்ஷன்களுக்கும் முனிசிபல் எலெக் ஷன்களுக்கும் வித்தியாசமுண்டு. தாலுகா போர்டு எலெக்ஷன்கள் கிராமாந்தரங்களிலுள்ள ஓட்டர்களைக் கொண்டு நடைபெற வேண்டியவை. இருந்தாலும், எலெக்ஷன்களை பகிரங்கப்படுத்தும் விஷயத்திலும், எலெக் ஷன்களை நடத்தும் விஷயத்திலும் உத்தியோகஸ்தர்களல்லாத தாலுகா போர்டு பிரசிடெண்டுகள், யூனியன் பஞ்சாயித்து சேர்மன்கள் இவர்களு டைய உதவியை எவ்வளவு உபயோகித்துக் கொள்ளலாமோ அவ்வளவு உபயோகித்துக் கொள்ளும்படி எல்லா ரிவினியூ டிவிஷனல் ஆபீசர்களுக் கும் அறிவிக்கவேண்டு மென்று 1916-ம் வருஷத்திலேயே கலெக்டர்களைக் கேட்டுக் கொள்ளப்பட்டிருக்கிறது.

கே:—179 மண்டபம் கோரண்டைன் காம்பைப்பற்றி செப்டம்பர் மாதம் 20-ம் தேதி கவர்ன்மெண்டாரால் வெளியிடப் பட்டிருக்கும் அறிக்கை சம்பந்தமாக,

ஸிலோன் கோ ரண்டைன் நிர்ப்பந் தங்கள்.

(ஏ) ஸிலோன் பிளேக் கமிட்டியாரால் கொடுக்கப் படும் அனுமதிச் சீட்டுகளின் பேரில் பல பிரயாணிகள் இந்தியாவிலிருந்து தாராளமாக ஸிலோனுக்குச் செல்ல அனுமதிக்கப்படுவது கவர்ன்மெண்டாருக்குத் தெரியுமா?

(பி) ஐரோப்பிய உத்தியோகஸ்தர்களுடைய வேலையாளர்களும் ஸில க்கு செய்யப்பட்டு நேராக செல்ல அனுமதிக்கப்படுவது கவர்ன்மெண்டாருக் குத் தெரியுமா?

(ஸி) 1918-ம் வருஷம் எப்பிரல் மாதம் 5-ந்தேதி இந்த சபையில் நான் தீர்மானங்கொண்டு வந்து பேசியபோது நான் குறிப்பிட்ட பிரயாணிகளுடைய கஷ்டங்களையும் அசவுகரியங்களையும் நிவர்த்தித்து விடும்படி இந்த கவர்ன்மெண்டார் ஸிலோன் கவர்ன்மெண்டாருக்கு அறிவிப்பார்களா?

பதில்:— (ஏ) தெரியும்.

(பி) இல்லை. உயர்தர வகுப்புப் பிரயாணிகளுடன் செல்லும் வேலையாளர்கள், அவர்களுடைய எஜமானர்கள் அவர்களை சிலோனில் விட்டுவிட்டுப் போய் விடுவதாக யிருந்தாலொழிய, அவர்களுடைய எஜமானர்களுடைய நம்பிக்கையின் பேரில் செல்ல அனுமதி கொடுக்கப்படலாமென்று ஒரு விதி யிருக்கிறது. ஆனால் ஐரோப்பியப் பிரயாணிகளின் வேலையாளர்களுக்கும் இதர பிரயாணிகளின் வேலையாளர்களுக்கும் இந்த உத்திரவினால் எவ்வித வித்தியாசமும் பாராட்டுவதில்லை.

(ஸி) இப்போது ஸிலோன் கவர்ன்மெண்டாரை இந்த கவர்ன்மெண்டார் கேட்டுக்கொள்ளத் தயாராக இல்லை.

டிரெட்ஜர் "பென்ட் லாண்டு."

கே—180 (ஏ) நாகப்பட்டணம் துறை முகத்தைத் தூரு எடுப்பதற்கு டிரெட்ஜர் "பெண்ட் லாண்டு" உபயோகமில்லாமற் போய்விட்டது கவர்ன்மெண்டாருக்குத் தெரியுமா?

(பி) அதைவைத்து சம்ரக்ஷிப்பதில் லாண்டிங் அண்டு ஷிப்பிங் கமிட்டியார் பெருத்த நஷ்டமடைந்து வருவதால், அதைக் கூடிய சீக்கிரத்தில் விற்றுவிட கவர்ன்மெண்டார் ஏற்பாடு செய்வார்களா?

பதில்:—டிரெட்ஜர் பெண்ட்லாண்டினால் நாகப்பட்டணத்தில் ஏற்பட்ட பலன் ஏமாற்றத்தைத் தரத்தக்கதாக யிருக்கிறதென்று கவர்ன்மெண்டாருக்குத் தெரியும். எவ்வளவு தூரு எடுத்தாலும் சாசுவதமான பிரயோஜன மேற்படுமோ வென்பதிலேயே அதனால் சந்தேக மேற்பட்டிருக்கிறது.

(பி) துறைமுகத்தை அபிவிருத்தி செய்யும் விஷயம் ஒரு நிபுணரின் பரிசீலனையிலிருந்து வருகிறது. அவருடைய ரிபோர்ட்டு கிடைக்கும் வரையில் டிரெட்ஜரை விற்பனை செய்து விடும் விஷயத்தை கவனிக்க கவர்ன்மெண்டார் தயாராக இல்லை.

நாகப்பட்டணம் துறைமுகம்.

கே—181 (ஏ) சிறிது காலத்திற்கு முன் நாகப்பட்டணம் துறைமுகத்தை ஒரு நிபுணர் வந்து பார்வையிட்டுச்சென்றதைப் பற்றிய விவரங்களை கவர்ன்மெண்டார் அறிவிப்பார்களா?

(பி) நாகப்பட்டணம் துறைமுக அபிவிருத்தி வேலை எப்பொழுது ஆரம்பிக்கப்படும்?

பதில்:—(ஏ) நிபுணருடைய ரிபோர்ட்டு இன்னும் கிடைக்கவில்லை.

(பி) அவருடைய ரிபோர்ட்டு கிடைக்கும் வரையில் துறைமுகத்தை அபிவிருத்தி செய்வதற்கான முயற்சிகள் எடுத்துக் கொள்ளப்படமாட்டா.

நெல்லூர் கலவரம்.

கே—182 (ஏ) 1919-ம் வருஷம் அக்டோபர் மாதம் வெளியான "மெட்ராஸ் மெயில்" பத்திரிகையில் "நெல்லூரில் கலவரம்" என்றும், அதே தேதியில் வெளியான "ஹிந்து" பத்திரிகையில் "நெல்லூரில் ஹிந்து முஸ்லீம் கலவரம்" என்றும் பிரசுரமாகியிருக்கும் வியாசங்களை கவர்ன்மெண்டார் பார்வையிட்டார்களா?

(பி) பட்சபாதமில்லாமல் விசாரணை செய்ய கவர்ன்மெண்டார் உடனே ஏற்பாடுசெய்து, அந்த ரிபோர்ட்டை சபையின் முன்பாக ஆஜர்ப்படுத்துவார்களா?

(ஸி) பள்ளிவாசல்களுக்குக் கெதிரில் தம்பட்டம் கொட்டக் கூடாதென்றும், வாத்தியம் வாசித்துக்கொண்டு போகக்கூடாதென்றும் கவர்ன்மெண்டார் உத்திரவு செய்வார்களா?

பதில்:— (ஏ) கவர்ன்மெண்டார் பார்த்திருக்கிறார்கள்.

(பி) இந்த சம்பவ விஷயத்தைப் பரிசீலனை செய்யும்படி கவர்ன்மெண்டார் ஏற்பாடு செய்திருக்கிறார்கள்.

(ஸி) கனம் மெம்பர் கோருகிற பிரகாரம் உத்திரவு பிறப்பிவிக்க கவர்ன்மெண்டார் தயாராக இல்லை.

தென்னிந்தியா ரேயில்வே மூன்றுவது வகுப்புவண்டிகளில் ஜன நெரிசல்.

கே:—183 (ஏ) தென்னிந்தியா ரெயில்வே மூன்றுவது வகுப்பு கம்பார்ட்டு மெண்டுகளில் இடத்தட்டு வெகு அதிகமாகயிருப்பது கவர்ன்மெண்டாருக்குத் தெரியுமா?

(பி) இரண்டாவது வகுப்புக்கும் மூன்றுவது வகுப்புக்கு மிடையே இண்டர் மீடியேட் வகுப்பை ஏற்படுத்த ரெயில்வே கம்பெனியாருக்கு உத்தேச மிருக்கிறதா வென்று கவர்ன்மெண்டார் அறிவிக்க முடியுமா?

பதில்:—(ஏ) கவர்ன்மெண்டாருக்குத் தெரியும்.

(பி) ரெயில்வே கம்பெனியாருக்கு அந்த உத்தேச மிருப்பதாகத் தெரியவில்லை.

கே.—184 தஞ்சாவூர் ஜில்லாவிற்காகப் புதிதாக உத்தேசிக்கப்பட்டிருக்கும் டிஸ்திரிக்ட் கோர்ட்டை நாகப்பட்டணத்தில் ஏற்படுத்த கவர்ன்மெண்டாருக்கு உத்தேசமா?

நாகப்பட்டணத்தில் அடிஷனல் டிஸ்திரிக்ட் கோர்ட்.

பதில்.—அந்த கோர்ட்டை எங்கே ஏற்படுத்துவதென்கிற விஷயம் இன்னமும் ஆலோசனையிலிருந்து வருவதால், கவர்ன்மெண்டார் இந்த சந்தர்ப்பத்தில் நிலவரமாக ஒன்றும் சொல்ல முடியாது.

## 1920

## மார்ச்சு மாதம் 10-ம் தேதி சென்னையில் நடந்த கூட்டம்.

கே.—185. நெல்லூரில் நடந்த ஹிந்து முஸ்லீம் கலவரா விஷயமாக 1919-ம் வருஷம் நவம்பர் மாதம் 19-ம் தேதி கூடிய மீட்டிங்கில் நான் கேட்ட கேள்விக்கு கவர்ன்மெண்டார் அளித்திருக்கும் பதிலை அனுசரித்து, இந்த விஷயத்தைப் பரிசீலனை செய்வதற்காக நியமிக்கப்பட்ட ஸ்பெஷல் உத்தியோகஸ்தரின் ரிபோர்ட்டை கவர்ன் மெண்டார் சபையின் முன்பாக ஆஜர் படுத்துவார்களா?

நெல்லூரில் ஹிந்துமுஸ்லீம் கலவரம்.

பதில்:—ஸ்பெஷல் உத்தியோகஸ்தருடைய ரிபோர்ட்டு கவர்ன்மெண்டாரின் ஆலோசனையிலிருந்து வருகிறது. இது சம்பந்தமாகத் தொடுக்கப்பட்ட கிரிமினல் கேஸுகளும் கோர்ட்டுகளில் விசாரணையிலிருந்து வருகின்றன. ஆகவே இது சம்பந்தமான தஸ்தா வேஜிகளை இப்பொழுது சபையின் முன்பாக ஆஜர் படுத்த முடியாது.

கே.—186. திருநெல்வேலி ஜில்லா சிவகிரி முஸ்லீம்கள் தொழுகையைச் செய்ய முடியாமலும் மரித்த பிரேதங்களைப் புதைக்க முடியாமலும் அந்த ஊர் ஹிந்துக்கள் நடந்து கொண்ட விஷயமாக 1919-ம் வருஷம் ஏப்பிரல் மாதம் 3-ம் தேதி கூடிய மீட்டிங்கில் நான் கேட்ட கேள்விக்கு கவர்ன் மெண்டார் கொடுத்திருந்த பதிலை அனுசரித்து, திருநெல்வேலி ஜில்லா மாஜிஸ்திரேட் இது விஷயமாகச் செய்திருக்கும் முடிவான உத்திரவை கவர்ன் மெண்டார் சபையின் முன்பாக ஆஜர்ப் படுத்துவார்களா?

சிவகிரி ஹிந்து முஸ்லீம் கலவரம்.

பதில்:—கவர்ன் மெண்டார் ரிபோர்ட்டுக் கேட்டு விடவில்லை. ஜில்லா மாஜிஸ்திரேட்டின் உத்திரவு சங்கதியும் கவர்ன் மெண்டாருக்குத் தெரியாது.

கே.—187. வேறு பல சௌகரியங்களுடன் கூட 1919-ம் வருஷம் ஏப்பிரல் மாதம் முதல்தேதி முதல் சத்தியாக தங்களுக்கு அலவுன்ஸ் கொடுத்து வரவேண்டுமென்றும், டைம்ஸ் கேலை ஏற்படுத்தி தங்களுடைய அந்தஸ்தைச் செப்பனிட்டுத் தரவேண்டுமென்றும் பள்ளிக்கூடசப் அஸிஸ்டெண்டு இன்ஸ்பெக்டர்கள் அனுப்பியிருக்கும் இரண்டு மகஜர்களின் மேல் எப்பொழுது உத்திரவு பிறப்பிக்கப்படுமென்று கவர்ன்மெண்டார் அறிவிப்பார்களா?

பள்ளிக்கூட சப் அஸிஸ்டெண்டு இன்ஸ்பெக்டர்களின் சம்பளம்.

பதில்:—மற்ற உத்தியோகஸ்தர்களுடைய விஷயமாக சம்பளக் கமிட்டியாரைக் கேட்டு விட்டிருக்கும் யோசனைகளுடன் இந்த உத்தியோகஸ்தர்கள் சம்பந்தமான சிபார்சுகளும் கிடைத்ததும் கவர்ன்மெண்டார் அவைகளைப்பற்றி யோசனை செய்வார்கள்.

கே.—188. சென்னை மாகாணத்திற்குள் ஒரு ஜில்லாவிலிருந்து மற்றொரு ஜில்லாவிற்கு அரிசி நெல் இவைகளை ஏற்றுமதி செய்வதிலிருந்து வந்த நிர்ப்பந்தங்களை அடியுடன் சிவில் சப்ளைஸ் டைரக்டர் நிவர்த்தித்து விட்டதற்குப் பிறகு தஞ்சாவூர் ஜில்லாவில் புது நெல்லின் விலை மிகவும் உயர்ந்திருக்கிறது வாஸ்தவமா?

தஞ்சை ஜில்லாவில் ஏற்றுமதி நிர்ப்பந்தங்கள்.

பதில்:—நிர்ப்பந்தங்களை நீக்குவதற்கு முந்தின வாரங்களிலும் பிந்தின வாரங்களிலும் தஞ்சை ஜில்லாவில் வழங்கி வந்த விலை விவரங்களைக் கீழே காணலாம்.

| வாரம். | | ரூபாய்க்கு |
|---|---|---|
| 31—1—20 | உடன் முடிந்த வாரம் | 4·5 சேர் |
| 7—2—20 | ,, | 4·6 ,, |
| 14—2—20 | ,, | 4·7 ,, |
| 21—2—20 | ,, | 4·6 ,, |
| 28—2—20 | ,, | 4·6 ,, |

## மார்ச்சு மாதம் 29-ம் தேதி சென்னையில் நடந்த கூட்டம்.

கே:—189. கவர்ன்மெண்டு சிக்ரிடரிகள், கலெக்டர்கள், ஜில்லா போலீஸ் சூப்பரின்டெண்டுகள் முதலிய உயர்தர உத்தியோகங்களில் எத்தனை ஹிந்துக்களும் முஸ்லீம்களுமிருந்து வருகிறார்கள்?

முகம்மதியர்களுக்கு உயர் பதவிகள்.

பதில்:—கனம் மெம்பர் கோருகிற தகவல்களை குவார்ட்டர்லி ஸிவில்லிஸ்டைப் பார்த்துத் தெரிந்து கொள்ளலாம். அதன் பிரதியொன்று கனம் மெம்பருக்குக் கொடுக்கப்பட்டிருக்கிறது.

உபகேள்வி:—கவர்ன்மெண்டு சிக்ரிடரி, கலெக்டர், ஜில்லா போலீஸ் சூப்பரின்டெண்டு முதலிய உயர்தர உத்தியோகங்களில் இப்பொழுது முகம்மதியர்கள் ஒருவருமிருந்து வராததால், அவர்களுக்கு அந்த ஸ்தானங்களிலெதையேனும் கவர்ன்மெண்டார் கொடுப்பார்களா?

கனம் மிஸ்டர் நாப்:— இதை ஒரு உபகேள்வியாகக் கருதமுடியாது. இதைத் தீர்மான ரூபமாகக் கொண்டு வரவேண்டும்.

காப்பிஸ்டுகள் கிராம சிப்பந்திகள் இவர்களின் சம்பளம்.

கே:—190. 1920-ம் வருஷம் மார்ச்சு மாதம் 10-ம்தேதி நடந்த கூட்டத்தில் கேட்கப்பட்ட 301-வதுகேள்வியின்மேல் கவர்ன்மெண்டார் சபையின் முன்பாக ஆஜர்படுத்திய சம்பளக் கமிட்டித் தலைவரின் மத்திய கால ரிபோர்ட்டை அனுசரித்து, காப்பிஸ்டுகள், கிராம சிப்பந்திகள் இவர்களுடைய சம்பளங்களை ஏன் இன்னும் கவர்ன்மெண்டார் உயர்த்தவில்லை யென்று சொல்லுவார்களா?

பதில்:—கார்ப்பிஸ்டுகளுக்கு பீஸ்தொகையிலிருந்து சம்பளம்கொடுக்கப்படுகிறது. பீஸ் தொகையை உயர்த்தாதவரையில் அவர்களுடைய சம்பளத்தை உயர்த்தமுடியாது. கிராம உத்தியோகஸ்தர்கள் விஷயமாக சம்பளக் கமிட்டியாருடைய சிபார்சுகள் கிடைக்கும் வரையில் கிராம சிப்பந்திகளின் சம்பளங்களை உயர்த்துவது உசிதமில்லையென்று கவர்ன்மெண்டார் அபிப்பிராயப்படுகிறார்கள்.

கிராம உத்தியோகஸ்தர்களுடைய சம்பளம்.

கே:—191 கிராம உத்தியோகஸ்தர்களுடைய சம்பளங்களை ஏன் இதுவரையில் உயர்த்தவில்லை யென்பதை கவர்ன்மெண்டார் அறிவிப்பார்களா?

பதில்:—சம்பளக்கமிட்டி யாருடைய இதர சிபார்சுகளுடன் கூட கிராம உத்தியோகஸ்தர்களுடைய சம்பளத்தை உயர்த்தும் விஷயமும் கவனிக்கப்படும்.

யுத்த சேவகம் செய்தவர்களின் குறைகள்.

கே:—192. திருவாங்கூர் சமஸ்தானத்தின் 22-வது கியூ. வி. ஓ. எஸ். எம். படைக்கு ஆள் சேர்த்துக்கொடுத்து வந்த டாக்டர் எஸ் என். நாயர் என்னுமொருவர்படைமுகத்திற்குப் போய் திரும்பி வந்தவர்களுக்கு இருந்து வரும் குறைகளைக் குறிப்பிட்டு கவர்ன்மெண்டாருக்கு ஒரு மகஜர் அனுப்பி யிருக்கிறாரா?

பதில்:— அவர் ஒரு மகஜர் அனுப்பி யிருக்கிறார்.

கே:—193. சென்னை மாகாணத்திலுள்ள நடுத்தரப் பாடசாலைகளில், வேலை பார்த்துவரும் பண்டிதர்கள் தங்களுடைய சம்பளங்களை உயர்த்தித்தர வேண்டுமென்று கவர்ன்மெண்டாருக்கு பல மகஜர்கள் அனுப்பி யிருக்கிறார்களா?

நடுத்தரப் பாடசாலைப்பண்டிதர்களின் சம்பளம்.

பதில்:— அனுப்பியிருக்கிறார்கள்.

கே:—194. சென்னை மாகாணத்திலுள்ள போதனா பாடசாலை மாணவர்கள் தங்களுடைய உபகாரச் சம்பள விகிதங்களை உயர்த்தித் தரவேண்டு மென்று கவர்ன்மெண்டாருக்கு மகஜர்கள் அனுப்பி யிருக்கிறார்களா?

போதனா பாடசாலை மாணவர்களுக்கு உபகாரச் சம்பளம்.

பதில்:— அனுப்பியிருக்கிறார்கள்.

கே:— 195. (ஏ) "தஞ்சாவூர் ஜில்லா மிராசுதார்களின் கதி" என்று மகுடமிட்டு 11-11-19-ல் வெளியான நியூ இந்தியாப் பத்திரிகையில் பிரசுரமாகி இருக்கும் வியாசத்தை கவர்ன்மெண்டார் பார்வை யிட்டார்களா?

தஞ்சாவூர் ஜில்லா நீர்ப்பாசனத் துறைகள்.

(பி) காவிரி யாற்றிலிருந்து பிரியும் முக்கிய ஆறுகளின் பூமி மட்டம் உயர்ந்திருப்பது வாஸ்தவமா?

(ஸி) வெண்ணாறு டிவிஷன் எக்ஸிகியூடிவ் எஞ்சினீர் டெல்டா கோடியிலுள்ள தலைப்பு மதகுகளின் பூமி மட்டத்தை மாற்றினாரா?

(டி) கீழ் கோடியிலுள்ளவர்கள் அவ்விதம் செய்வதினால் தங்களுக்கு பாதக முண்டாகுமென்று ஆட்சேபித்தார்களா?

(இ) அதன் பேரில் கீழக்கோடியிலிருந்து மட்டப் படுத்திவந்ததை நிறுத்தி தலைப்பிலிருந்து மட்டப்படுத்த ஆரம்பிக்கப்பட்டதா?

(எப்) ஆற்றில் நடப்பட்டிருக்கும் பல அடி அளவுகள் மணலில் இரண்டடி ஆழம் பதிந்து போய் விட்டனவா? பதிந்துபோன அளவைத் தள்ளி பாக்கி அளவு கணக்கிடப்படுகிறதா?

(ஜி) தஞ்சாவூர் ஜில்லாவில் ஏற்பட்ட உடைப்புகளைப் பற்றியாவது, அல்லது மேலே கண்ட வியாசத்தில் காணப்படும் குறைகளைப் பற்றியாவது விசாரணை செய்யப் பட்டதா?

(எச்) பரிசீலனை செய்வதற்கேற்றவைக ளென்று அந்த வியாசத்தில் குறிப்பிடப் பட்டுள்ள விஷயங்கள் நிபுணர்களால் பரிசீலனை செய்யப் பட்டனவா?

பதில்:—(ஏ) கவர்ன்மெண்டார் அந்த வியாசத்தைப் பார்வையிட்டார்கள்.

(பி) காவிரி யாற்றிலிருந்து பிரியும் எல்லா ஆறுகளின் பூமிமட்டமும் உயர்ந்து விடவில்லை யென்று கவர்ன்மெண்டாருக்குத் தெரிய வந்திருக்கிறது. சில பாய்ச்சல் வாய்க்கால் தலைப்புகளின் பூமி மட்டம் உயர்ந்திருக்கிறது. மேட்டு நிலங்களுக்கு தண்ணீரைத் தேக்கிப் பாய்ச்சுவதற்காக சத்தியாக அணைகளைப்போட்டதே அதற்குக் காரணம்.

(ஸி முதல் எச் வரையில்) கவர்ன்மெண்டாரிடம் தகவல்களில்லை. அவைகளைப்பற்றி விசாரணை செய்யப்படும்.

## ஜூலை மாதம் 13-ம் தேதி சென்னையில் நடந்த கூட்டம்.

நெல்லூர் ஹிந்து-முஸ்லிம் கலவரம்.

கேள்வி:—196. 1919-ம் வருஷம் நவம்பர் மாதம் 19-ம் தேதி கூடிய மீட்டிங்கில் நான் கேட்ட 21-வது கேள்விக்கு கவர்ன்மெண்டார் அளித்திருக்கும் பதிலை அனுசரித்து, நெல்லூரில் ஹிந்துக்களுக்கும் முஸ்லீம்களுக்கும் நடந்த கலவர விஷயமாக ரிவினியூ போர்டு முதல் மெம்பர் கனம் கூச்மான் அனுப்பியுள்ள ரிபோர்ட்டை கவர்ன்மெண்டார் சபையின் முன்பாக ஆஜர்ப்படுத்துவார்களா?

பதில்:—மிஸ்டர் கூச்மானுடைய ரிபோர்ட்டை இப்பொழுது சபையின் முன்பாக ஆஜர்படுத்த கவர்ன்மெண்டார் தயாராக வில்லை. அந்த ரிபோர்ட்டில் காணப்படும் சிற்சில அம்சங்கள் மாஜிஸ்திரேட்டினால் அவருடைய தீர்ப்பில் விவாதிக்கப்பட்டிருக்கின்றன. அப்பீல் கோர்ட்டார் இன்னும் அவைகளை கவனித்து முடிவு செய்யவில்லை.

நாகப்பட்டணம் டிஸ்திரிக்ட் கோர்ட்டு, கடுவையாற்றுப் பாலம், மிருக வைத்திய சாலை முதலியன.

கே.—197 (ஏ) நாகப்பட்டணத்தில் இந்த வருஷம் டிஸ்திரிக்ட் கோர்ட்டை ஏற்படுத்த இடமுண்டா?

(பி) கடுவையாற்றுப் பாலத்திற்காக 65000 ரூபாயும், நாகப்பட்டணம் மிருக வைத்திய சாலைக்காக ரூ 10000-ம் வரவு செலவு திட்டத்தில் ஒதுக்கி வைக்கப்பட்டிருந்ததை இந்த வருஷம் கவர்ன்மெண்டார் செல விடுவார்களா?

(ஸி) மேலே கண்ட இனங்களுக்கு ஒதுக்கி வைக்கப்பட்ட பணம் சம்பளக் கமிட்டியாருடைய சிபார்சுகளை நிறைவேற்றிவைக்க உபயோகித்துக் கொள்ளப்படப் போகிறதா?

பதில்:—(ஏ) இந்த வருஷம் நாகப்பட்டணத்தில் டிஸ்திரிக்ட் கோர்ட்டு ஏற்படுத்தப் போவதில்லை.

(பி) (1) கடுவையாற்றுப் பாலத்திற்காக 65000 ரூபாய் ஒதுக்கி வைக்கப்படவில்லை. 60000 ரூபாய் தான் சத்தியாக ஒதுக்கிவைக்கப்பட்டது. அந்தப் பணத்தைக்கூட இப்பால் எடுத்துக் கொண்டாகிவிட்டது.

(2) இதற்காக ஒதுக்கிவைத்த 10000 ரூபாயையும் எடுத்துக் கொண்டு விடவில்லை. திட்டத்தை அங்கீகரித்து கூடியசீக்கிரத்தில் உத்திரவு பிறப்பிவிக்கப்படும். வேலையும் ஜெரூராக நடத்தி வைக்கப்படும்.—

ஒரு உப்பள கமிஷனரின் விண்ணப்பம்.

கே.—198. உப்பள இலாகா ஆக்டிங் உதவிக் கமிஷனர் மிஸ்டர் மாரியட்டிடமிருந்து தமது சம்பளத்தை உயர்த்த வேண்டுமென்று விண்ணப்பம் கிடைத்திருக்கிறதா?

பதில்:—மனு கிடைத்திருக்கிறது.

கோஷா ஸ்திரீகளும் பத்திரப்பதிவும்.

கே:—199. சென்ற நவம்பர் மாதம் 19-ம் தேதி நடந்த மீட்டிங்கில் கோஷாஸ்திரீகளுடைய வீடுகளுக்குப்போய்அதிகாரப் பத்திரங்களை ரிஜிஸ்தர் செய்து வைக்க சப்மாஜிஸ்திரேட்டுகளுக்கு அதிகாரம்கொடுக்க வேண்டுமென்று நான் கொண்டு வந்த தீர்மானத்தை கவர்ன்மெண்டார் அபிமானித்து பதில் அளித்திருப்பதை அனுசரித்து, இந்த கவர்ன்மெண்டார் ஸ்டிரெயிட்ஸ் மலாய் நாடுகள் இவைகளின் கவர்ன்மெண்டுகளுக்கு எழுதியிருந்ததற்கு என்ன பதில் கிடைத்திருக்கிறது ?

பதில்:—ஸ்டிரெயிட்ஸ், மலாய் நாடுகள் இவைகளின் கவர்ன்மெண்டார்கள் இந்த மாகாணத்திலுள்ள சப்ரிஜிஸ்தரார்கள் ரிஜிஸ்டர் செய்யும் அதிகாரப்பத்திரங்களை ஏற்றுக்கொள்ள முடியாதென்று சொல்லிவிட்டார்கள்.

உபகேள்வி:—ஆகவே கவர்ன்மெண்டார் சப்மாஜிஸ்திரேட்டுகளை அதிகாரப் பத்திரங்களை ரிஜிஸ்டர் செய்துவைக்கும்படி உத்திரவு செய்வார்களா?

கனம் கில்மான்:—சப்மாஜிஸ்திரேட்டுகள் அதிகாரப்பத்திரங்களை ரிஜிஸ்டர்செய்து வைக்கவேண்டுமென்று நாளது மாதம் 9 ம் தேதி உத்திரவு எழுதியாகிவிட்டது. கூடிய சீக்கிரத்தில் உத்திரவு வெளிப்படும்.

முகம்மதியர்களை ஹிந்துக்கள் உபத்திரவம் செய்ததாக.

கே:—200. ராமநாதபுரம் ஜில்லாவைச்சேர்ந்த ராமசுவாமிபுரம் காஞ்சிபுரம், மதுரைஜில்லா காமாபட்டி இவைகளிலுள்ள முஸ்லீம் வாசிகள் தங்களை ஹிந்துக்கள் கஷ்டப் படுத்துவதாக கவர்ன்மெண்டாருக்கு மகஜர் அனுப்பிக் கொண்டிருக்கிறார்களா?

பதில்:—மகஜர் அனுப்பியிருக்கிறார்கள்.

கே:—201. ஸிவில் அஸிஸ்டெண்டு சர்ஜன்களுக்கு செய்து கொடுக்கப்பட்டிருக்கும் சம்பள உயர்வு எப்பொழுது முதல் அனுஷ்டானத்திற்கு வரும்?

ஸிவில் அஸிஸ்டெண்டு சர்ஜன்களின் சம்பளம்.

பதில்:—கவர்ன்மெண்டார் நிச்சயமாக இப்பொழுது பதில் சொல்லுவதற்கில்லை.

கே:—202. நீதி இலாகா உத்தியோகஸ்தர்களுக்கு செய்து கொடுக்கப்பட்டிருக்கும் சம்பள உயர்வு எப்பொழுது அனுஷ்டானத்திற்குக் கொண்டுவரப்படும்?

நீதிஇலாகா உத்தியோகஸ்தர்கள்.

பதில்:—புதிய திட்டமானது 1919-ம் வருஷம் டிசம்பர் மாதம் முதல் தேதி முதல் அனுஷ்டானத்திற்கு வரும்.

கே:—203. கிராமமுனிசீப்புகளுடைய சம்பளத்தை உயர்த்தாததில் பெருத்த வயிற்றெரிச்சல் ஏற்பட்டிருப்பது கவர்ன்மெண்டாருக்குத் தெரியுமா?

கிராம உத்தியோகஸ்தர்கள் சம்பளம்.

(பி) கர்ணங்களுக்கும் இப்பொழுது கொடுக்கப்பட்டிருக்கும் சம்பள உயர்வில் திருப்தி ஏற்படவில்லை யென்பது கவர்ன்மெண்டாருக்குத் தெரியுமா?

பதில்:—கிராமமுனிசீப்புகளுக்கு சம்பள உயர்வு செய்து கொடுக்காததில் அவர்களுக்கு விசேஷ அதிருப்தி ஏற்பட்டிருக்கலா மென்று கவர்ன்மெண்டார் நினைக்கிறார்கள். ஆனால் சம்பள உயர்வு பெற்றிருக்கும் கர்ணங்களும் அவ்விதமே அதிருப்தி அடைந்திருப்பதாக கவர்ன்மெண்டார் நினைக்கவில்லை.

கே:—204 "பிராமணரல்லாத ஹிந்துக்களும் பத்திரப்பதிவு இலாகவும்" என்று மகுடமிட்டு 20-5-20 தேதியில் வெளியான "ஜஸ்டிஸ்" பத்திரிகையில் பிரசுரமாகி யிருக்கும் வியாசத்தை கவர்ன்மெண்டார் பார்வையிட்டார்களா?

பிராமணரல்லாதார்களும் பத்திரப்பதிவு இலாகாவும்.

பதில்:—கவர்ன் மெண்டார் அந்த வியாசத்தைப் பார்வை யிட்டார்கள்.

கே.—205. தென்னிந்தியா ரெயில்வேயிலுள்ள முக்கியமான ஸ்டேஷன்களில் முகம்மதியர்களுக்குப் பிரத்தியேகமாக போஜன சாலைகளை ஏற்படுத்தும் விஷயமாக எவ்வித நடவடிக்கையும் எடுத்துக்கொள்ளப்படாமலிருப்பது கவர்ன் மெண்டாருக்குத் தெரியுமா?

ரெயில்வேஸ்டேஷன்களில் முகம்மதியர்களுக்குப்போஜன சாலைகள்.

பதில்:—முகம்மதியர்களுள்பட இந்தியர்களனைவருக்கும் போஜன சாலைகளை ஏற்படுத்துவதற்கு எவ்விதம் கட்டிடங்களை அமைக்கலாமென்கிற விஷயம் ஆலோசனையிலிருந்து வருவதாகத் தெரிகிறது. திருச்சினுப்பள்ளி ஸ்டேஷனில் முகம்மதியர்களுக்குப் பிரத்தியேகமாக போஜன சாலை ஏற்படுத்தியாகி விட்டது. தகுதியான கட்டிடதிட்டம் கண்டு பிடிக்கப் பட்டதும் மற்ற இடங்களிலும் அவசியத்திற்குத் தகுந்தபடி போஜன சாலையை தென் இந்தியா ரெயில்வே கம்பெனியார் ஏற்படுத்தத் தகுந்த நடவடிக்கைகள் எடுத்துக்கொள்ளுவார்கள்.

கே:—206. உத்தியோகஸ்தர்களல்லாதவர்களை தாலுக்கா போர்ட்டு பிரசிடெண்டுகளாக நியமித்துங்கூட தாலுக்கா போர்ட்டு மெம்பர் ஸ்தானங்களுக்கு பெயர் வழிகளை சிபார்சு செய்யும் அதிகாரம் இன்னமும் டிவிஷனல் ஆபீசர்களிடம் இருந்து வருவது கவர்ன் மெண்டாருக்குத் தெரியுமா?

தாலூகாபோர்டு மெம்பர்கள் நியமனம்.

பதில்:—தாலூகா போர்டு மெம்பர்கள் ஸ்தானங்களுக்கு ஜில்லா போர்டு பிரசிடெண்டுகளாலேயே நியமனங்கள் செய்யப்பட்டுவருகின்றன. அவர்கள் நியமனங்கள் செய்யுமுன் தங்களுக்கு யுக்தமாகத்தோன்றுகிறவர்களைக்கலந்து கொள்ளலாம்.

கே:—207. சப் அஸிஸ்டெண்டு இன்ஸ்பெக்டர்களின் மாகாணச் சங்கத்தார் அடியிற் கண்ட பிரகாரம் தங்களுடைய சம்பள விகிதங்களை நிர்ணயம் செய்ய வேண்டு மென்று நான்காவது தடவையாக கவர்ன்மெண்டாருக்கு மகஜர் அனுப்பி யிருக்கிறார்களா?

சப் அஸிஸ்டெண்டு இன்ஸ்பெக்டர்களின் சம்பளம்.

(1) ஆரம்பச் சம்பளம் ரூ. 100.

(2) 100 ரூபாயிலிருந்து வருஷம் 1-க்கு 15 ரூபாய் வீதம் 250 ரூபாய் வரையில் உயர்வு.

(3) மாகாண கல்வி இலாகா உத்தியோக வருக்கத்தில் சில ஸ்தானங்களை தங்களுக்காக ஒதுக்கிவைக்கவேண்டுமென்பது.

(4) தங்களுக்கு மாதம் 1-க்கு 50 ரூபாய் சாசுவதப்படி கொடுத்து விடவேண்டு மென்பது.

பதில்:— கனம் மெம்பர் பிரஸ்தாபிக்கிற வேண்டு கோளடங்கிய மகஜர் கிடைத்திருக்கிறது.

## ஆகஸ்டுமாதம் 17-ம்தேதி சென்னையில் நடந்த கூட்டம்.

கே:— 208. திருநெல்வேலி ஜில்லா காயல் பட்டணம் வாசிகள் தங்களுடைய ஊருக்கு ஜல வசதி செய்து தர ஏற்படக் கூடிய செலவில் ஒரு பாதியைக் கொடுப்பதாக ஒப்புக் கொண்டிருக்கிறார்களா?

காயல் பட்டணம் ஜல சப்ளை.

பதில்:— இந்த யூனியனுக்கு ஜல சப்ளை செய்ய முடியுமா வென்று பரிசீலனை செய்வதற்காக காயல் பட்டணம் குடிகள் ஆரம்பச் செலவிற்காக 1250 ரூபாய் கொடுத்திருக்கிறார்கள்.

கே:— 209. திருநெல்வேலி - திருச்செந்தூர் ரெயில் பாதை எப்பொழுது போடப்படும்? இப்பொழுது அந்த விஷயம் என்ன நிலைமையிலிருக்கிறது?

திருநெல்வேலி-திருச்செந்தூர் ரெயில்வே.

பதில்:— இந்த ரெயில் பாதைக்குப் பணம் கொடுக்கும் விஷயம் இப்பொழுது ஜில்லா போர்டின் ஆலோசனையிலிருந்து வருகிறது. வேலை திட்டங்களை தென்னிந்தியா ரெயில்வே கம்பெனியார் பரிசீலனை செய்து வருகிறார்கள். எப்பொழுது தான் வேலை தொடங்கப்படு மென்று இப்பொழுது நிச்சயமாகச் சொல்ல முடியாது. ஆயினும் தாம்பரபரணி பாலத்தைப் பூர்த்தி செய்வதற்கு வேண்டிய கொடர்களுக்கு ஆர்டர் செய்தாகிவிட்டது.

கே:— 210. (எ) திருநெல்வேலி ஜில்லா காயல் பட்டணத்திற்கு அருகாமையிலுள்ள பொட்ட மலைக்காடுகளை அவ்வூர் வாசிகள் தங்களுடைய கால் நடைகளை மேய்ப்பதற்காக உபயோகித்து வந்தார்களா?

பொட்டமலைக் காட்டில் கால்நடை மேய்ச்சல்.

(பி) இந்தக் காடானது பாரி கம்பெனிக்கு அடைமானம் செய்யப் பட்டிருப்பது வாஸ்தவமா?

பதில்:— கவர்ன்மெண்டாருக்குத் தகவல் தெரியவில்லை. அவர்கள் விசாரணை செய்வார்கள்.

கே:— 211. 1918-ம் வருஷம் நவம்பர் மாதம் 19-ம்தேதி கூடிய மீட்டிங்கில் வெட்டாறு ஓடம்போக்கியாறு பாசன விஷயமாக நான் கேட்ட கேள்விக்கு கவர்ன்மெண்டார் அளித்திருக்கும் பதிலை அனுசரித்து, கவர்ன்மெண்டார் கேட்டுவிட்ட ரிபோர்ட்டை சபையின் முன்பாக ஆஜர்ப் படுத்துவார்களா?

வெட்டாறு, ஓடம்போக்கியாறு நீர்ப்பாசனம்.

பதில்:— 1919-ம் வருஷம் நவம்பர் மாதம் 19-ம்தேதி கூடிய மீட்டிங்கில் கனம் மெம்பர் கேட்ட கேள்விக்கு கவர்ன்மெண்டார் அளித்திருக்கும்

பதிலே கனம் மெம்பர் பார்த்துக்கொள்வாராக. மத்தியகாலரி போர்ட்டுத்தான் கிடைத்திருக்கிறது. ஆயினும் வெட்டாறு பாசனத்தை அபிவிருத்தி செய்வதற்கான வேலை திட்டம் சென்ற பிப்பிரவரி மாதத்தில் சாங்கிஷனுகி விட்டது. ஓடம் போக்கியாற்றுத் தலைப்பில் மதகு கட்டும் விஷயமான பிரேரணைகள் நீர்ப்பாசன இலாகா சிப் எஞ்சினீருக்கு மார்ச்சு மாதத்தில் அனுப்பப்பட்டிருக்கின்றன. இந்த விஷயத்தை ஜில்லா கலெக்டருக்கு அறிவித்து அவருடைய அபிப்பிராயத்தை அறிந்து தெரிவிக்கும்படி சூப்பரின்டெண்டிங் எஞ்சினீருக்கு உத்திரவு செய்யப்பட்டிருக்கிறது. கள்ளிக்குடி அணைக்கு மேலே ஓடம் போக்கியாற்றில் சில சில்லரை அபிவிருத்திகளைச் செய்யும் விஷயம் ஸ்தலத்ததிகாரிகளின் ஆலோசனையிலிருந்து வருகிறது.

பெட்ரோல் கஷ்டம்.

கே:—212. வெளியிடங்களில் பெட்ரோல் கஷ்டமேற்பட்டிருப்பது வாஸ்தவமா?

பதில்:—கவர்ன்மெண்டாருக்கு உத்தியோக தோரணையில் தகவல் தெரியவில்லை. ஆனால் முன்னைவிட இப்பொழுது குறைவாகவே சப்ளை செய்யப்படுகிறதென்று தெரிகிறது.

நாகப்பட்டணம், தூத்துக்குடி பள்ளத் துறை முகங்கள்.

கே:—213 நாகப்பட்டணத்திலும் தூத்துக்குடியிலும் பள்ளத் துறைமுகங்களை ஏற்படுத்தும் விஷயமாக துறைமுக நிபுணர் அனுப்பியுள்ள ரிபோர்ட்டை கவர்ன்மெண்டார் சபையின் முன்பாக ஆஜர்ப்படுத்துவார்களா?

பதில்:—ரிபோர்ட்டு பிரசுரிக்கப்படும்.

ஸ்திரீ வைத்திய மாணவிகளுக்கு உபகாரச் சம்பளம்.

கே:—214. ஸ்திரீகளுக்கு வைத்தியத் தொழிலில் புக சிரத்தை ஏற்படும் பொருட்டு பம்பாய் கவர்ன்மெண்டார் நான்கு டிவிஷன்களிலும் மாதம் 1-க்கு 40 ரூபாய் வீதம் 4 ஸ்திரீகளுக்கு உபகாரச் சம்பளங்களும், 26 ஜில்லாக்களிலும் 26 பேர்களுக்கு மாதமொன்றுக்கு 20 ரூபாய் வீதம் உபகாரச் சம்பளங்களும் கொடுக்கும்படி உத்திரவு செய்திருப்பதாக "ஸ்திரீ வைத்திய மாணவிகளுக்கு உதவி" என்று மகுடமிட்டு 28-7-20ல் வெளியான "ஹிந்து"ப் பத்திரிகையில் பிரசுரமாகி இருக்கும் வியாசத்தை கவர்ன்மெண்டார் பார்வையிட்டார்களா?

பதில்:—கனம் மெம்பர் பிரஸ்தாபிக்கிற தந்தியை கவர்ன்மெண்டார் பார்வையிட்டார்கள்.

கே:—215. கோரையாறு வெட்டு விஷயம் இப்பொழுது எந்த நிலைமையிலிருந்து வருகிறது?

கோரையாறு வெட்டு.

பதில்:—கவர்ன்மெண்டார் இது விஷயமாக ரிபோர்ட்டு கேட்டு விட்டிருக்கிறார்கள்.

கே:—216. விருதுப்பட்டி ராமனாதபுரம் ரெயில் பாதை போடும் விஷயம் இப்பொழுது எந்த நிலைமையிலிருந்து வருகிறது?

விருதுப்பட்டி-ராமனாதபுரம் ரெயில்வே.

பதில்:—பம்பாய் கம்பெனியார் சில நிபந்தனைகளுக்குட்பட்டு இந்த லயனைப்போட ஏற்றுக் கொண்டிருக்கிறார்கள். அவைகள் ரெயில்வே போர்ட்டாரின் அங்கீகாரத்திற்கு அனுப்பப்பட்டிருக்கின்றன. ரெயில்வே போர்டார் அவர்கள் சொன்ன நிபந்தனைகளை ஒப்புக்கொள்ளாமல், இப்பொழுது இருக்கும் நிலைமையில் இதனால் ஏற்படக்கூடிய லாப லோபங்களை அறிவதற்கு அனுகூலமாயிருக்கும்படி புனர்திட்டங்களைக் கேட்டுவிட்டிருக்கிறார்கள். ஆதிதிட்டத்தை தென்னிந்தியா ரெயில்வே கம்பெனியார் மறுபடியும் பரிசீலனை செய்து வருகிறார்கள்.

கே;—217. ஹத்துக்குட்பட்டு அரிசி விற்பனை செய்துவந்த விஷயமாக குண்டூர் ஜில்லாவில் சில அதிகாரிகள் மீது சிவில் சப்ளைஸ் டைரக்டர் கவர்ன்மெண்டாருக்கு புகார் செய்து கொண்டிருக்கிறாரா?

குண்டூரில் அரிசி விற்பனை.

பதில்:—முதலில் சிவில் சப்ளைஸ் டைரக்டர் வாய் மொழியாக கவர்ன்மெண்டாருக்கு இந்த விஷயத்தைப்பற்றித் தெரிவித்துக் கொண்டார். இப்பால் கலெக்டர் இதைப்பற்றி விஸ்தாரமாக ரிபோர்ட்டு செய்திருக்கிறார்.

கே:—218. புதியதிட்டப்படி டிப்டி கலெக்டர்களுக்கு ஆரம்பத்தில் 300 ரூபாயும் 8-வது வருஷத்தில் 600 ரூபாயும் 13-வது வருஷத்தில் 850 ரூபாயும் கிடைக்கையில் டிஸ்திரிக்ட் முன்சீப்புகள் காயமான தேதி முதல் டெம்பரரி சப்ஜட்ஜு பதவியை அடைய 11, 12, வருஷங்களாவது அதற்கதிகமாவது பிடிக்கிறதும், ரூ 650 சம்பளத்தில் அவர் சப்ஜட்ஜாக காயம் செய்யப்படுவதற்கு 13, 14 வருஷம் செல்லுகிறதும் வாஸ்தவமா?

டிஸ்திரிக்ட் முன்சீப்புகள் சப் ஜட்ஜுகள் இவர்களின் சம்பளம்.

பதில்.—புதிய திட்டப்படி டிப்டி கலெக்டர்களுக்கு கொடுக்கப்பட்டிருக்கும் சம்பள உயர்வு விஷயத்தை 11—6—20 தேதியுள்ள 1352 (ரெவினியு) கவர்ன்மெண்டு உத்திரவில் காணலாம். அந்த உத்திரவு சபையின் முன்பாக ஆஜர்ப்படுத்தப்பட்டிருக்கிறது. டிஸ்திரிகட்டு முனிசிப்புகள் சப் ஜட்ஜுகள் இவர்களுடைய சம்பள விஷயமாக இன்னமும் இந்தியா கவர்ன்மெண்டாருடன் கடிதப்போக்குவரத்து நடந்து வருகிறது.

கே:—219 கவர்ன்மெண்டு பென்ஷனர்கள் உத்தியோகஸ்தர்களா? உத்தியோகஸ்தர்களல்லாதவர்களா? அவர்கள் சட்டசபைக்கும் லோகல்போர்டுகளுக்கும் அபேக்ஷகர்களாக நிற்கலாமா?

கவர்ன்மெண்டு பென்ஷனர்கள்.

பதில்:—புதிய சட்டசபைகளுக்கும் லோகல்போர்டுகளுக்கும் நடைபெறும் எலெக்ஷன்களில் அவர்கள் உத்தியோகஸ்தர்களல்லாதவர்களாகவே பாவிக்கப்படுவார்கள். அவர்கள் அந்த ஸ்தானங்களுக்குத் தெரிந்தெடுக்கப்படலாம்.

கே:—220 முகம்மதியர்களின் பள்ளிவாசல்களுக்கும் தர்க்காக்களுக்கும் நீதி இலாகா உத்தியோகஸ்தர்கள் முகம்மதியர்களல்லாதவர்களை ரிஸீவர்களாக நியமனம் செய்து வருவது வாஸ்தவமா?

முகம்மதியப்பள்ளிவாசல்களுக்கு முகம்மதியரல்லாத ரிஸீவர்கள்.

பதில்:—ஒரு நியமன விஷயமாகத்தான் கவர்ன்மெண்டாருக்குத் தகவல் எட்டியிருக்கிறது. அதைப்பற்றி விசாரித்ததில் ஹைகோர்ட்டாரின் விசாரணையில் இருந்து வருவதாகவும் அவர்கள் கீழ்க்கோர்ட்டாருடைய உத்திரவை நிறுத்திவைத்து புதிதாக நியமிக்கப்பட்டிருக்கும் ரிஸீவரை வேலையை ஒப்புக்கொள்ளாமலிருக்கும்படி உத்திரவு செய்திருப்பதாகவும் தெரிய வருகிறது.

கே:—221 ஜில்லா கலெக்டரின் தலைமை ஸ்தானமாயிராத துறைமுகங்களில் ரிவினியூ டிவிஷனல் ஆபீசர்கள் லாண்டிங் அண்டு ஷிப்பிங் கமிட்டி பிரசிடெண்டுகளாக இருந்து வருவது வாஸ்தவமா?

லாண்டிங் அண்டு ஷிப்பிங்கமிட்டி பிரசிடெண்டுகள்.

பதில்:—ஆம்.

# சென்னை சட்டசபை



## பிரிவு II



### வரவுசெலவு திட்டத்தைப்பற்றிய பிரசங்கங்கள்.



சென்னை சட்டசபையில் வரவு செலவு திட்டத்தைப்பற்றிய விவாதம் நடக்கையில் கனம் கான்பகதூர் அ. க. கு. அகமது தம்பி மரக்காயர் செய்த பிரசங்கங்களின் சாராம்சம் பின்வருமாறு:—

## 1913

[எப்பிரல் மாதம் 2ம் தேதி நடந்த கூட்டம்]

மேன்மைதங்கிய பிரபுவே,

கனம் வரவுசெலவு மெம்பர் சபையின் முன்பாக மிகவும் தெளிவாகவும் ருசிகரமாகவுமுள்ள வரவு செலவு திட்டத்தை ஆஜர்ப்படுத்தியிருப்பதற்காக அவருக்கு என்னுடைய சந்தோஷத்தைத் தெரிவித்துக் கொள்ளுகிறேன். இந்தியா கவர்ன் மெண்டார் இந்த மாகாணத்திற்கு தாராளமாக கிராண்டுகள் கொடுத்திருப்பதற்கு நாம் மிகவும் வந்தனம் செலுத்த வேண்டும். இந்த சமயத்தில் தங்களுடைய கவனத்தைக் கவருவதற்குரிய கீழ்கண்ட சில விஷயங்களைப் பற்றி தங்களுக்கு சில சங்கதிகளைத் தெரிவித்துக் கொள்ள விரும்புகிறேன்.

நகர்ப்புறங்கள், கிராமாந்தரங்கள் இவைகளின் சுகாதார நிலைமையை அபிவிருத்தி செய்வதற்காக இந்த மாகாண கவர்ன்மெண்டார் ஸ்தலஸ்தாபனங்களுக்கு கிராண்டு கொடுப்பதில் வெகு தாராள புத்தி காட்டியிருக்கிறார்கள். 1913-14ம் வருஷம் முதல் சுகாதார அபிவிருத்திக்காக இந்தியா கவர்ன் மெண்டார் பிரதி வருஷமும் 6 லட்சம் ரூபாய் மனமுவந்து கொடுக்க இசைந்திருக்கிறார்கள். ஸ்தலஸ்தானங்களுக்கு ஸ்பெஷல் கிராண்டுகள் கொடுப்பதற்காக 56 லட்சம் ரூபாய் முதல் 98 லட்சம் ரூபாய்வரையில் ஒதுக்கி வைக்கப்பட்டிருக்கிறது. ஆனால் விஷய விவரங்களை கவனிக்குமளவில் ரஸ்தாக்கள் போடுதல் பாலங்கள் கட்டுதல் முதலிய வேலைகளுக்காக ஜில்

லா போர்ட்டுகளுக்கு 11 லட்சம் ரூபாய் கொடுபடுகையில் முனிசிபாலிடிகளுக்கு எவ்வித உதவியையும் காணவில்லை. சுங்கான் வரும்படி மிகக் குறைவாக வுள்ளதும், ரஸ்தாக்களுக்குக் கப்பி போடுவதற்கு சாதாரணமாகவே அசௌகரியங்களிலிருந்து ரஸ்தாக்களை சரியான ஸ்திதியில் வைத்திருக்க முடியாதவுமான முனிசிபாலிட்டிகளுக்கு அவசியமாயிருந்தால் விசாரணை செய்து கவர்ன்மெண்டார் பொருளுதவி செய்ய வேண்டுமென்று நான் ஆலோசனை சொல்லிக்கொள்ள விரும்புகிறேன்.

அனேக போலீஸ் ஸ்டேஷன்களை எடுத்து விட்டு குறைவான போலீஸ் ஸ்டேஷன்களுடன் புதிதாக சர்க்கிள்களை சிருஷ்டித்ததானது திருப்திகரமாக இருந்து வருகிறதாவென்று கவர்ன்மெண்டார் சொல்வதற்குப் போதிய பரிட்சை காலம் ஆகி விட்டதோ என்னமோ ஆனால் இதன் பலனாக திவட்டிக்கொள்ளைகள் அதிகப்படுகின்றன வென்பதும் அதிகப்படுமென்பதும் கொடுங்குற்றங்களைப்பற்றிய விசாரணை மொதலாக நடைபெறுமென்பதுமே என்னுடைய அபிப்பிராயம். கொஞ்சகாலங் கழிந்த பின்னர் இந்தப் புதிய முறையின் பலாபலன்களை அறிய கவர்ன்மெண்டாரே அருகதையு முள்ளவர்கள். இப்பொழுது போலீஸ் கான்ஸ்டேபிள்களுக்கு மிகவும் குறைந்த சம்பளம் கொடுபடுவதின் காரணமாக சம்பளத்தோடு தப்பு வழியில் அவர்கள் பணஞ்சேர்க்க முயற்சிப்பது எவ்விதத்திலும் ஆச்சரியகரமானதல்ல வானதினால், அவர்களுடைய சம்பளத்தைக் குறைந்தது 12 ரூபாயாகவாவது உயர்த்த வேண்டும்.

அநேக திருட்டுக் கேஸ்கள் வெளிக்கு வராமலும் கண்டு பிடிக்கப் படாமலு மிருக்கும் துறைமுகங்களில் கடல் போலீசாரென்று சிலரை வேலைக்கு அமர்த்திக் கொள்ளலாமென்று தெரிவித்துக் கொள்ள விரும்புகிறேன். இதன் காரணமாக அக்கம் பக்கத்திலுள்ள பிரெஞ்சு துறைமுகங்களை விட பிரிட்டிஷ் துறைமுகங்களில் வியாபாரம் குறைந்து விடுவதை புள்ளி விவரங்களிலிருந்து கவர்ன்மெண்டார் காணலாம். முக்கியமாக கூடலூர், பரங்கிப்பேட்டை, நாகப்பட்டணம் இந்தத் துறை முகங்களில் மணிலாக் கொட்டை ஏற்றும் வியாபாரிகள் போடும் கூக்குரலுக்கு அளவில்லை. மணிலா மூட்டைகள் குறிப்பிட்ட இடங்களுக்குப் போய் சேர்ந்ததும் பார்த்தால் நிறை வெகு குறைவாக இருக்கிறது. கப்பலில் ஏற்றும் காலத்தில் கரைக்கும் கப்பலுக்கும் நடுவே நடக்கும் திருட்டுத்தான் அதற்குக் காரணம். ஸ்பெஷல் போலீஸ் படையை ஏற்படுத்துவதினால் இந்தத் திருட்டை நிவர்த்தித்து விடலாம்.

ஆஸ்பத்திரிகளில் சரியாகப் பயிற்சி பெற்ற தாதிமார்களை வேலைக்கமர்த்திக் கொண்டால் ஆஸ்பத்திரியிலேயே இருந்து வைத்தியம் செய்து கொள்ளுகிறவர்களுக்கு (In patients) நிரம்ப சவுகரியமாக யிருக்குமென்று 1913-ம் வருஷம் ஜனவரி மாதம் 20-ந் தேதி வெளியான நம்பர் 114-எம்

கவர்ன்மெண்டு உத்திரவில் கவர்ன்மெண்டார் குறிப்பிட்டிருப்பது நிரம்பவும் சரியே. கவர்ன்மெண்டார் ஸ்திரீகளுக்குப் பயிற்சி செய்து கொள்ள உபகாரச் சம்பளம் கொடுத்து அவர்களைப் பயிற்சி செய்து கொள்ளும்படி செய்யலாம். சாத்தியமானால் ஸ்திரீகளைத் தாதித் தொழிலில் பழக்குவதற்காக பிரத்தியேகமாக பாடசாலை யொன்றையும் கவர்ன்மெண்டார் ஏற்படுத்தலாம். 40 பிணியாளர்கள் ஆஸ்பத்திரியிலேயே இருந்து வைத்தியம் செய்து கொள்ள இடமிருந்து, ஏககாலத்தில் 40 பிணியாளர்கள் தக்க வைத்தியம் செய்து கொள்ளும் ஆஸ்பத்திரிகளில் தாதி யொருத்தியை நியமிக்கும்படி கவர்ன்மெண்டார் வற்புறுத்த வேண்டும். ஆஸ்பத்திரிகளை நடத்திவரும்ஸ்தலஸ்தாபனங்களுக்கு அவர்களுக்கும் சம்பளம் கொடுக்க சாத்தியப்படாதானதால், கவர்ன்மெண்டாரே அவர்களுடைய சம்பளத்தைக் கொடுத்து வரவேண்டும்.

மராமத்திலாகாவில் ஒவ்வொரு எக்ஸிக்யூடிவ் எஞ்சினீரும் ஒவ்வொரு சப் டிவிஷனல் ஆபீசரும் அடுத்த 5 வருஷங்களுக்குள் என்னென்ன வேலைகள் செய்வதென்று முற்கூட்டியே திட்டம் போடுகிறார்களா வென்பது எனக்குத் தெரியவில்லை. அந்தந்த டிவிஷன்களில் ஏற்படும் செலவானது அந்தந்த டிவிஷனில் வேலை பார்க்கும் உத்தியோகஸ்தர்களின் சிரத்தையையும், திறமையையும் பொறுத்திருக்கிறது. ஏராளமாக செலவாகும் பெரிய வேலைகளைத்தவிர, மராமத்துச் செலவுகள் என்கிற தலைப்பின் கீழுள்ள புள்ளி விவரங்களை ஒத்திட்டுப் பார்ப்போமானால் விசேஷ வித்தியாசங்கள் காணப்படும். எந்த டிவிஷனிலும் ஒரு குறிப்பான உத்தியோகஸ்தர் இருந்த காலத்தில் தான் அதிக மராமத்து செய்யவேண்டியிருந்ததென்பதில்லை. நிலச்சுவான்தார்களில் சில பொறுக்கி எடுத்த பிரதிநிதிகளுடன் கலந்து கொண்டு உத்தேசவேலைகளுக்கு நிரந்தரமான திட்டமொன்றைத் தயாரித்து விடலாம். இந்த மாதிரி செய்திருந்தால் சீர்கேடான நிலைமையிலிருக்கும் அநேக நீர்ப்பாசன மதகுகள் வெகுகாலத்திற்கு முன்னேயே பழுது பார்க்கப்பட்டிருக்கும்; மிராசுதார்களுடன் கலந்து கொண்டு வேலை செய்வதாயின், ஆள்கிடைக்காததினால் வேலை குதாவடைப்படுகிறதென்று சொல்வதற்கும் இடமிராது.

முனிசிபாலிட்டிகள் செய்ய வேண்டிய வேலைகளுக்கு கிராண்டுகள் கொடுப்பதற்காக பிரஸ்தாப வருஷத்தில் 451 லட்சம் ரூபாய் தான் ஒதுக்கிவைக்கப்பட்டிருக்கிறது. விஷய விவரங்களை கவனிக்குமளவில் நாகப்பட்டணம் வடிகால் வேலைக்காவது, திருநெல்வேலி தூத்துக்குடி ஜலசப்ளை திட்டத்திற்காவது பணம் ஒதுக்கி வைக்கப்படவில்லை. இந்த இரண்டு திட்டங்களும் மிகவும் முக்கியமானவை. இரண்டு வருஷங்களுக்கு முன்னதாகவே பரிசீலனை செய்து முடிந்த திட்டங்கள். என் அவைகள் இன்னும் சாங்க்ஷனாகி பணம் ஒதுக்கி வைக்கப்படாமலிருக்கின்றனவென்று அறிவிக்கும்படி கவர்ன்மெண்டாரைக் கேட்டுக்கொள்ளுகிறேன்.

நல்ல கல்விச்சாலைகளிருந்து வரும் திருச்சினாப்பள்ளி, சென்னை போன்ற முகம்மதியர்கள் பெருத்த இடங்களில், கவர்ன்மெண்டார் கல்விப் பெருக்கு விஷயத்தில் விசேஷ அபிமானம் காட்டி வரும் முகம்மதிய சமூகத்தினருக்காக பிரத்தியேகமாக போஜனசாலைகளை ஏற்படுத்திப் பராமரித்து வர கவர்ன்மெண்டார் தாராளமாக கிராண்டுகள் கொடுக்க வேண்டும்.

ஒழுங்காக வேலை நடக்கக்கூடிய கிராமப் பஞ்சாயத்து முறையைக் கண்டு பிடித்து அனுஷ்டானத்திற்குக் கொண்டு வருவதற்காக ஜில்லா நிர்வாகிகள் பொறுக்கி எடுத்த பிரதிநிதிகளை கான்பரென்ஸாகக் கூட்டியோசனை செய்யும்படி கவர்ன்மெண்டார் அறிவிக்க வேண்டும்.

தஞ்சை ஜில்லா போர்டு ரெயில்வேயின் விஸ்தரிப்பும், திருநெல்வேலி, மதுரை, தென்னாற்காடு முதலிய இடங்களில் ஜில்லா போர்டுகள் ரேயில்வே லயன்களைப் போடும் விஷயமும் வெகு காலமாகத் தொங்கிக் கொண்டிருக்கின்றன. தங்களுடைய நிர்வாக காலத்திலேயே இந்த லயன்களெல்லாம் போட்டு முடிந்து விடும்படி, ரெயில்வே லயன்களைப்போட்டு வேலை செய்து வரவேண்டிய ரெயில்வே கம்பெனியாருக்கும் ஜில்லாபோர்ட்டுகளுக்கும் ஒருவித ஏற்பாட்டைச் செய்து விடவேண்டும்.

இன்னும் ஒரேவிஷயம். வரவர ஜனங்கள் நகர்வாசத்திற்கு ஆசைப்பட்டு அங்கு வந்து குவிவதால் முக்கியமான நகரங்களிலும் தாலூகாத் தலை நகர்களிலும் ஜனநெரிசல் அதிகரித்து வருகிறது. கவர்ன்மெண்டு உத்தியோகஸ்தர்கள் புதிதாக ஒரு இடத்துக்கு மாற்றப்பட்டால் அங்கு குடியிருக்கிற இடத்திற்கு அவர்கள் படும்பாடை என்னென்று சொல்வது! சப் ஜட்ஜுகள், டிஸ்திரிக்ட் முன்சீப்புகள, டிப்டிகலெக்டர்கள், தாசில்தார்கள், சப்மாஜிஸ்திரேட்டுகள் முதலிய இந்திய உத்தியோகஸ்தர்கள் குடியிருப்பதற்குத் தகுதியான இடமில்லாமல் சத்திரங்களிலும், சுகாதாரக் கேடானதும் ஜனநெரிசலதிகமாகவுள்ளதுமான பாகங்களிலிருந்துவரும் காற்றோட்டமில்லாத இடங்களிலும் அநேக இடங்களில் வசித்து வருவது எனக்கு நேரில் தெரிந்தவிஷயம். இவர்களுக்குக் குடியிருப்பதற்கு கவர்ன்மெண்டார் இடவசதி செய்து கொடுத்தால், அவர்கள் தங்களுடைய கடமையைச் செய்ததாகும். ரிவினியூ டிவிஷனில் ஆபீசர்கள், போலீஸ் சூப்பரின்டெண்டுகள், அஸிஸ்டெண்டு போலீஸ் சூப்பரின்டெண்டுகள் இவர்களுக்கு வீடுகள் கட்டிவைத்திருந்து அவர்களுடைய சம்பளத்திலிருந்து வாடகையைக் கழித்துக்கொள்ளுவதுபோல் இந்த உத்தியோகஸ்தர்களுடைய சம்பளத்திலிருந்தும் வாடகையை எடுத்துக் கொண்டு விடலாம். நான் மேலே குறிப்பிட்ட உத்தியோகஸ்தர்களைத் தவிர, போலீஸ் இன்ஸ்பெக்டர்கள், கஸ்டம்ஸ் கலெக்டர்கள், சிவில் சர்ஜன்கள், அஸிஸ்டெண்டு சர்ஜன்கள் இவர்களுக்கும் வீட்டுப்பாடு பெரும்பாடாகயிருக்கிறது. ஆகவே கவர்ன்மெண்டார் இந்த வேலையை அங்குரார்ப்பணம் செய்து, கஷ்டம் அதிகமாகவுள்ள இடங்களில் முதலில் வீடுகளைக் கட்டிக் கொடுப்பார்களென்று நம்புகிறேன்.

## கனம் மிஸ்டர் ஏ. டி. ஜாக்ஸன்

பேசியதாவது:—

மேன்மைதங்கிய பிரபுவே,

விவாதத்தை வளர்த்திக் கொண்டுபோக எனக்கு இஷ்டமில்லை யாயினும் இரண்டொரு விஷயங்களைப்பற்றி சில வார்த்தைகள் சொல்லிக் கொள்ள விரும்புகிறேன். அவைகளில் சிலவற்றைப் பற்றி எனக்கு முன் பேசியவர்களே சொல்லிவிட்டார்கள். சில துறை முகங்களில் வெகு பலமாக நடக்கும் திருட்டுகளை அடக்குவதற்காக அந்தத் துறைமுகங்களில் போலீஸ் மேன்பார்வை ஏற்படுத்தவேண்டியதவசியமென்று கனம் மிஸ்டர் மரக்காயர் சொல்லியிருக்கிறார். இப்பொழுது நடக்கும் திருட்டுகளைப்போல கேவலமானது வேறெதுவுமில்லையென்று சொல்வது மிகையாகாது. ஐரோப்பிய மார்க்கட்டுகளில் சென்னை வியாபாரிகளுக்கு யோக்கியதைப் பொறுப்பே இல்லாதபடியும் இந்தத் திருட்டுகள் செய்து விடுகின்றன. இவைகளை நிறுத்துவது ஸ்தலத்ததிகாரிகளால் முடியாத காரியமென்று கேள்விப் படுகிறேன். சென்னை ஆங்கில வியாபாரச் சங்கத்தார் இது விஷயமாக சமீபத்தில் தங்களுடைய கவர்ன்மெண்டுக்கு விஞ்ஞாபனம் செய்து கொண்டிருக்கிறார்கள். இந்த சந்தர்ப்பத்தில் நமக்கெல்லாம் சகஜமான ஒரு பழமொழி எனக்கு ஞாபகத்திற்கு வருகிறது. ஆங்கில வியாபாரச் சங்கத்தின் விஞ்ஞாபனத்தை தங்களுடைய கவர்ன்மெண்டார் அனுகூலமாக கவனிப்பார்களென்று நம்புகிறேன்.

கனம் மிஸ்டர் மரக்காயரும் கனம் மிஸ்டர் சர்மாவும் இந்த மாகாணத்தின் ரெயில்வே அபிவிருத்தியைப்பற்றியும் பேசியிருக்கிறார்கள். கனம் சர்மா விசாகப்பட்டணம் துறைமுக திட்டத்தைப்பற்றி சேர்த்துப் பேசி யிருக்கிறார். இந்த விஷயங்களில் சென்னை ஆங்கில வியாபாரச் சங்கத்திற்கும் விசேஷ அக்கரையுண்டு. கவர்ன்மெண்டார் இவ்விஷயத்தில் எடுத்துக் கொண்டிருக்கும் தீவிர சிரத்தை காரணமாக கூடிய சீக்கிரம் நல்ல பலனேற்படு மென்று நம்புகிறேன்.

## கனம் மிஸ்டர் பி. எஸ். சிவஸ்வாமிய்யர்.

* * * *

நாகப்பட்டணம் வடிகால் திட்டம், திருநெல்வேலி தூத்துக்குடி ஜல சப்ளை திட்டம் இவைகள் எந்தஸ்திதியி லிருக்கின்றன வென்று கனம் மிஸ்டர் மரக்காயர் கேட்டார். நாகப்பட்டணம் வடிகால் திட்ட சம்பந்தமாக மொத்தம் ஏற்படக் கூடிய செலவு விஷயத்தைப்பற்றி முன்னதாகவே யோசித்துக் கொள்ளுவதற்காக, பலவகை திட்டங்களுக்கும் உத்தேசமாக என்ன செலவு பிடிக்கு மென்று சுகாதார எஞ்சினீரைக் கேட்டுவிட் டிருக்கிறது. திருநெல்வேலி - தூத்துக்குடி ஜலசப்ளை திட்டம் தொழில் முறை

யில் இருக்கும் தன்மையைப்பற்றி சீப் எஞ்சினீரின் பரிசீலனையி லிருந்து வருகிறது. அதற்கு ஏற்படக் கூடிய செலவு அம்சமும் ஆலோசனையி லிருந்து வருகிறது. அந்த திட்டத்தின் குணத்தை எவ்விதத்திலும் குறைத்து விடாமல் செலவை மட்டுக் கட்டிவிடுவது சாத்தியமா வென்பதை தெரிந்து கொள்ள வேண்டி யிருக்கிறது. இந்த திட்டம் சம்பந்தமாக தாம்பரபாணி ஆற்றுக்கு 1050 ரூபாயில் ஒரு திட்டம் காங்கிஷன் செய்யப்பட்டிருக்கிறது. இந்த திட்டத்தை ஆரம்பம் செய்வதற்கு அது பூர்வ பீடிகையான வேலையாகும். ஜில்லா போர்டுகள் ரெயில் பாதைகள் போடும் விஷயம் என்ன நிலைமையி லிருக்கிற தென்று கனம் மிஸ்டர் மரக்காயர் கேட்டார். தென்னிந்தியா ரெயில்வே கம்பெனியுடன் எக்ரிமெண்டு அநேகமாக முடிந்து விட்டது. மன்னார்குடி - நீடாமங்கலம் லயனும், திருத்துரைப் பூண்டி—வேதாரணியம் லயனும் வேலை ஆரம்பிக்கப்படும். இவைகளைப்பற்றி கனம் ஸர் ஹாரோல்டு ஸ்டுவர்ட் விரிவாகச் சொல்லுவார். இந்த விஷயத்தில் கவர்ன்மெண்டார் அயர்ந்திருந்து விடவில்லை. இந்த ரெயில்வே லயன்களை சீக்கிரம் போட்டு முடிக்க கவர்ன்மெண்டார் தங்களாலியன்ற பிரயத்தினங்களைச் செய்து வருகிறார்கள்.

* * * *

## கனம் ஸர் ஹாரோல்டு ஸ்டுவேர்ட்

சில விஷயங்களைப் பற்றியே நான் பிரஸ்தாபிக்கப் போகிறேன். நான் பதிலளிக்காத விஷயங்களை கவர்ன்மெண்டார் அலட்சியம் செய்து விட்டதாக கனம் மெம்பர்கள் நினைத்து விடக்கூடாது. கனம் ஸர்ஜான் அட்கின்ஸன் சொல்லிய பிரகாரம் கனம் மெம்பர்களுடைய பிரசங்கங்களை நாங்கள் ஆர அமர பரிசீலனை செய்து, என்ன நடவடிக்கைகள் எடுத்துக் கொள்ள வேண்டுமென்று யோசிக்கிறோம்.

முதலாவதாக, போலீஸ் விஷயத்தை எடுத்துக் கொள்ளுகிறேன். நான் வெகுகாலம் போலீஸ் இன்ஸ்பெக்டர் ஜெனரலாக இருந்தவனாதினால், போலீசாரைப் பற்றி இந்த சபையில் எவ்வித புகாரும் சொல்லப் படாதது எனக்கு ரொம்ப திருப்தியா யிருக்கிறது. இன்னும் இரண்டொரு வருஷத்தில் போலீஸ் படைகளைப்பற்றி கனம் மெம்பர்கள் புகழும் நிலைமை ஏற்பட்டு விடுமென்றே நினைக்கிறேன். போலீசாருடைய நடத்தையைப் பற்றி எவ்விதப் புகாரு மில்லாவிடினும் குற்றங்கள் அதிகரித் திருப்பதைப் பற்றி பிரஸ்தாபம் செய்யப்பட்டிருக்கிறது. நமது போலீஸ் ஸ்டேஷன்களின் அதிகார வரம்பை மாற்றி, அவைகளின் அதிகார எல்லையை அதிகப் படுத்தி, பல அவுட் போஸ்டுகளை எடுத்துவிட்டதில் கொள்ளைகள் அதிகரித்து விட்டதாகச் சொல்லப்பட் டிருக்கிறது. மேன்மை தங்கிய பிரபுவே, தென்னாற்காடு ஜில்லாவில் சொல்லப்பட்ட இந்த புகார்களைப்பற்றி ஸ்பெஷலாக விசாரணை செய்தோம். த்வேஷயத்தின் பேரிலேயே அவ்விதம் சொல்லப்பட்டதாக விசாரணையில் தெரிய வந்தது.

குற்ற ஜாப்தாக்களை எடுத்துப்பார்த்ததிலும் குற்றங்கள் அதிகரித்திருப்பதாகத் தெரியவில்லை. அதன் மேல் கொள்ளைகள் அதிகரித்து விட்டதாகச் சொன்னவர்கள், கொள்ளைகள் பல நடந்திருக்கின்றன வென்றும் அவைகள் வெளிப்படுத்தப் படவில்லை யென்றும் சொல்ல ஆரம்பித்தார்கள். போலீஸ் ஸ்டேஷன்களை மாற்றிப் போட்டதில் கொள்ளைகள் அதிகரிக்கவில்லை யென்றே நான் நம்புகிறேன். குற்ற பரம்பரையினரின் வியாபகம் அதிகப்படுவதினாலேயே கொள்ளைகள் ஏற்படுகின்றன. நாம் அடியிலேயே கையை வைத்திருக்கிறோம். இந்த துர்ப்பாக்கிய சாலிகளில் எத்தனை பேர்களை குடியேற்ற முடியுமோ அத்தனை பேர்களைக் குடியேற்றி ஒழுங்காகச் செய்வதற்கும் நாம் ஏற்பாடு செய்திருக்கிறோம். பிழைக்க வழியில்லாமற் போனதினாலேயே அவர்கள் குற்றம் செய்வதிலிறங்கியதினால் அவர்களை துர்ப்பாக்கிய சாலிகளென்றழைத்தேன். அவர்கள் யோக்கியப் பொறுப்புடன் தங்களுடைய சகோதரர்களை பட்சித்து விடாமல் வாழ்ந்து வரும்படி செய்வதற்கு அவர்களைக் குடியேற்றி வைக்க நாம் ஏற்பாடு செய்திருக்கிறோம்.

போலீஸாரைப்பற்றி மற்றொரு சில்லரை விஷயத்தை கனம் ஜாக்ஸன் பிரஸ்தாபித்தார். சிறிய துறை முகங்களில் திருட்டு அதிகம் நடப்பதாக அவர் புகார் பண்ணினார். கூடலூர் துறைமுக விஷயமாக கவர்ன் மெண்டுக்கே புகார்கள் எட்டின. ஆங்கில வியாபாரச் சங்கத்தாரால் அந்த புகார் செய்யப்பட்டது. அதைப் போலீஸ் இன்ஸ்பெக்டர் ஜெனராலுக்கு அனுப்பியிருக்கிறோம். கூடிய சீக்கிரத்தில் அவர் அதைப் பற்றி ரிபோர்ட்டு செய்வார்.

இனி ஜில்லா போர்ட்டு ரெயில்வே விஷயத்திற்கு வருகிறேன். இதைப்பற்றி எனது நண்பர் மிஸ்டர் சிவஸ்வாமிய்யர் பேசியிருக்கிறார். இப்பொழுது உள்ள நிலைமை என்ன வெனில்:—நீடாமங்கலமிருந்து மன்னார் குடிக்கு லயன் போடப்பட்டு வருகிறது. திருத்தரைப்பூண்டி வேதாரணியம் ரெயில்பாதை வேலை இது வரையில் ஆரம்பிக்கப்படாமலிருந்தால் கூடிய சீக்கிரத்தில் ஆரம்பிக்கப்படும். ஆனால் இந்த இரண்டு லயன்களையும் இணைக்கும் லயனும் கூடிய சீக்கிரத்தில் போட ஆரம்பிக்கப்படும். ஆனால் அந்த லயனைப் போட்டால் குறுக்கு வழி ஏற்பட்டுப்போய் விடுமென்றும் தங்களுடைய வருமானம் போய்விடு மென்றும் தென்னிந்தியா ரெயில்வே கம்பெனியார் பாத்தியம் கொண்டாடியிருக்கிறார்கள். அந்த விஷயம் பரிசீலனை செய்யப்பட்டு வருகிறது.

## 1914

### [ஏப்பிரல் மாதம் 4-ம்தேதி நடந்த கூட்டம்]

மேன்மை தங்கிய பிரபுவே,

தங்களுடைய அனுமதியின்பேரில் சில வார்த்தைகள் சொல்லிக்கொள்ள விரும்புகிறேன். மிகவும் திருப்திகரமான வரவு செலவு திட்டத்தை

அஜாப்படுத்தியதற்காக கனம் வரவு செலவு மெம்பரைப் பாராட்ட வேண்டும். கீழ்க்கண்ட விஷயங்களை கவர்ன்மெண்டின் அறிவிப்புக்குக் கொண்டுவர விரும்புகிறேன்:—

மாகாண கவர்ன்மெண்டு ஜில்லா போர்டுகளுக்குச் செய்யும் பொருளுதவியை அந்தந்த போர்டு வசூல் செய்திருக்கும் லாண்டு செஸ் துகையின் தாமாஷாவின் பேரில் விதித்துக் கொடுப்பதென்று உத்தேசித்து, லாண்டு செஸ் துகையில் நான்கிலொரு பாகத்தைக் கொடுப்பதென்று தீர்மானித்திருப்பதன் மூலமாக எல்லா ஜில்லா போர்டுகளையும் சமத்துவமாக நடத்த உத்தேசித் திருப்பதற்கு ஜில்லா போர்டுகள் கவர்ன்மெண்டுக்கு நன்றி செலுத்தக் கடமைப்பட்டிருக்கின்றன. இதனால் ஜில்லா போர்டுகளுக்கு வருஷந்தோறும் தங்களுக்கு எவ்வளவு தொகை கிடைக்குமென்று தெரிந்து விடும். அதன் மேல் வருமானத்திற்குத் தக்கபடி அவைகள் செலவினங்களைச் சரிக்கட்டிக் கொள்ளலாம். ஆனால் பணதரித்திரத்தின் காரணமாக தங்களுடைய எல்லைக் குட்பட்டிருக்கும் ரஸ்தாக்களை சரியான ஸ்திதியில் வைத்திருக்க சக்தியில்லாமலிருக்கும் முனிசிபாலிட்டிகளுக்கு, கவர்ன்மெண்டார் ஜில்லா போர்டுகளுக்குப் பொருளுதவி செய்வது போலவே செய்ய வேண்டுமென்று மீண்டும் நான் வேண்டிக் கொள்ளுகிறேன். மொத்தம் ரஸ்தாக்களுள்ள அளவு, மொத்த வருமானம், தளவாடக் கிரயம், ஆட்கூலி, இந்த அம்சங்களை யெல்லாம் கவனித்துக் கொண்டு கவர்ன்மெண்டார் பொருளுதவி செய்யலாம். ஒவ்வொரு கவுன்சிலுக்கும் என்ன பொருளுதவி தேவையாக இருக்குமென்பதை கவர்ன்மெண்டார் சுலபமாக கலெக்டர்கள் மூலமாக அறிந்து கொண்டு விடலாம். ஜில்லா போர்டுகளை ஒருவித மாகவும் முனிசிபாலிட்டிகளை வேறு விதமாகவும் ஏன் நடத்த வேண்டுமென்று எனக்கு விளங்கவில்லை.

கவர்ன்மெண்டு உத்தியோகஸ்தர்கள் ஸ்தல ஸ்தாபனங்களுக்கு செய்து வரும் ஊழியத்திற்காக இதுவரையில் அவைகளிட மிருந்து பணம் வசூலித்து வந்த வழக்கத்தை தாராளபுத்தியுடன் கவர்ன்மெண்டார் விட்டுவிட்டதற்காகவும் நான் வந்தனம் செலுத்துகிறேன்.

பிளேக், அல்லது காலரா போன்ற தொத்து வியாதிகள் பரவுவதன் காரணமாக ஏற்படும் சகல செலவுகளையும் கவர்ன்மெண்டாரே ஏற்றுக்கொள்ளவேண்டுமென்று நான் தெரிவித்துக் கொள்ளவேண்டியது என்னுடைய கடமை யென்று நினைக்கிறேன். சொற்ப அவகாசத்திற்குள் இந்த இனங்களுக்காக ஏராளமான செலவுகளைச் செய்யக்கூடிய நிலைமையில் ஸ்தல ஸ்தாபனங்களில்லை. இவ்வித எதிர்பாராத செலவுகளினால் ஒடுங்கவிட்டுப் போன ஸ்தல ஸ்தாபனங்களுக்கு உதவி செய்ய கவர்ன்மெண்டார் தயாராகவிருப்பது எனக்குத் தெரியாமலில்லை. ஆனால் கவர்ன்மெண்டாரிட மிருந்து எவ்வளவு தூரம் செலவுக்கு ஈடாகுமென்று ஸ்தல ஸ்தாபனங்களுக்குத் தெரியாததால், சொற்ப ஐவேஜியுள்ள ஸ்தல ஸ்தாபனங்கள்,

அவசியமான செலவுகளைச் செய்யத் தயங்குகின்றன. வெளியூர்களிலிருந்து கொண்டு வரப்பட்ட கேஸ்கள் விஷயமாக ஸ்தல ஸ்தாபனங்களே செலவு செய்து கொள்ளக்கூடுமாயினும், பெருவாரியாக தொத்து வியாதிகள் பரவுமானல் அந்தச் செலவுகளை கவர்ன்மெண்டே ஏற்றுக்கொண்டு, ஸ்தல ஸ்தாபனங்களை மீத்துவிடவேண்டிய தவசியம். இந்த செலவுகள் பூராவையும் கவர்ன்மெண்டு உடனே ஏற்றுக்கொள்ள இஷ்டப்படாமலிருந்தால் ஒரு பாதிச்செலவையாவது ஆரம்பத்தில் கொடுக்கும்படி கேட்டுக்கொள்ளுகிறேன்.

நமது திறமைவாய்ந்த சர்ஜன் ஜெனரலின் சிபார்சின் பேரில் கவர்ன்மெண்டார் மேனுடுகளில் பயிற்சி பெற்ற தாதிகளின் உத்தியோக வருக்கமொன்றை சிருஷ்டித்திருக்கிறார்கள். ஆனல் அந்தச் செலவுகளை ஸ்தல ஸ்தாபனங்கள் ஏற்றுக்கொள்ள வேண்டுமென்று கவர்ன்மெண்டார் சொல்லியிருக்கிறார்கள். இந்தச் செலவை ஸ்தல ஸ்தாபனங்கள் ஏற்றுக்கொள்ள முடியாது. சில வருஷங்களாக கவர்ன்மெண்டார் ஆஸ்பத்திரிகளுக்கு ஏராளமாகப் பொருளுதவி செய்து ஆஸ்பத்திரிகளை விஸ்தரித்ததில், வைத்தியச் செலவுகள் வெகுவாக அதிகப்பட்டுவிட்டன. வரவர ஆஸ்பத்திரிகளின் செல்வாக்கும் அதிகப்பட்டுவருகிறது. அதன் பலனக ஸ்தல ஸ்தாபனங்கள் சிப்பந்திகளையும் அதிகப்படுத்தி, மருந்துகள், தளவாடங்கள், சாமான்கள் இவைகளை வாங்குவதற்காக அதிகச் செலவு செய்ய வேண்டியிருக்கிறது. சென்ற 4 வருஷங்களின் செலவு கணக்குகளை எடுத்துக்கொண்டு ஒத்துப்பார்த்தால் நான் சொல்வதின் உண்மை புலப்படும். ஆகவே ஸ்தல ஸ்தாபனங்கள் அனுமத்தாக வருஷம் 1-க்கு 1000 ரூபாய் அதிகச்செலவை ஏற்றுக்கொள்ளமுடியாது. திறமையான வைத்திய வசதி ஜனங்களுக்குக் கிடைப்பதற்காக இந்தச் செலவுகளை மாகாண கவர்ன்மெண்டாரே ஏற்றுக்கொள்ள வேண்டும்.

தூத்துக்குடியில் நீண்டகாலமாக ஜலசப்ளை இல்லாமல் அவ்வூர் வாசிகள் படும் கஷ்டம் கவர்ன்மெண்டுக்குத் தெரிந்ததே. நீண்டகாலமாக ஜல சப்ளை திட்டம் பரிசீலனையிலிருந்தும், இன்னமும் சாங்கிஷனுனபாடில்லை. தூத்துக்குடி திருநெல்வேலி பாளையங்கோட்டை கூட்டு ஜல சப்ளை திட்டத்திற்காவது, அல்லது கவர்ன்மெண்டார் சொன்ன பிரகாரம் தூத்துக்குடிக்குப் பிரத்தியேகமாக ஜல சப்ளை செய்யும் திட்டத்திற்காவது வரவு செலவு திட்டத்தில் பணம் ஒதுக்கிவைக்கப்படவில்லை. நாகப்பட்டணம் வடிகால் வேலைகள் 1914-15-ம் வருஷத்தில் ஆரம்பிக்கப்படு மென்று கவர்ன்மெண்டார் சொல்லியிருந்தும் நடைமுதல் வருஷ வரவு செலவு திட்டத்தில் அதற்காக பணம் ஒதுக்கிவைக்கப்படவில்லை. இந்த இரண்டு திட்டங்களையும் கவர்ன்மெண்டார் உடனே கவனிப்பார்களென்று நம்புகிறேன்.

நாகப்பட்டணம், கூடலூர் இரண்டு துறை முகங்களுக்கும் துறைமுகப் போலீசாரை ஏற்படுத்த கவர்ன்மெண்டார் ஒப்புக்கொண்டிருக்கிறார்

கள். ஆனால் அந்தச் செலவுசுளை லாண்டிங் அண்டு ஷப்பிங் பீஸ் கமிட்டி ஏற்றுக்கொள்ள வேண்டுமென்று கவர்ன்மெண்டார் சொல்லி யிருக்கிறார் கள். நாகப்பட்டணம் துறைமுகத்தை அபிவிருத்தி செய்வதற்காக ஏற்று மதி இறக்குமதிக் கட்டணத்தை ஏராளமாக உயர்த்தியிருப்பதால், துறை முகப்போலீஸுக்காக மறுபடியும் கட்டணத்தைஉயர்த்துவது வியாபாரிகளு க்குப் பெருத்த கஷ்டத்தை விளைவிக்கும். ஆகவே சாதாரணபோலீஸ் படை களுக்கு கவர்ன்மெண்டார் செலவிடுவதுபோல இந்தப்படையின் செலவை யும் கவர்ன்மெண்டாரே ஏற்றுக்கொள்ள வேண்டுமென்று மிகவும் மரியாதை யுடன் தெரிவித்துக் கொள்ளுகிறேன்.

கவர்ன்மெண்டார் துறைமுகப் போலீசாரை வேலைக்கு ஏற்படுத்தும் வரையில் சென்னை ஸிட்டி போலீஸ் ஆக்ட் (1888-ம் வருஷத்திய 111-வது ஆக்டு) 65-வது செக்ஷன்படி சாதாரண போலீசாருக்கு அதிகாரம் கொடுக் கும்படி கேட்டுக் கொள்ளுகிறேன்.

ஆரம்பக்கல்வியைப் பரப்புவதற்காக கவர்ன்மெண்டார் தாராளமாக பணம் ஒதுக்கிவைத்திருக்கிறார்கள். ஆனால் தொழிற்கல்விக்காகப் பணம் அதிகமாக ஒதுக்கிவைக்கப்படக்காணேன். முக்கியமான வியாபார ஸ்தல ங்களில் தொழிற்பள்ளிக்கூடங்களை ஏற்படுத்த வேண்டியது அவசியம். மர்மமான தொழில்களை நடத்திவரும் முதலாளிகளுக்கு இந்த கஷ்டம் தெரிகிறது.

மாயில்வேக்களின் பெரிய ஒர்க்ஷாப்புகளிலும் நாடெங்கும் புதி தாக ஏற்படுத்தப்பட்டிருக்கும் அநேக மில்களிலும் தேர்ச்சி பெற்ற தொழி லாளர்களுக்கு வேலை கிடைக்கும். குமாஸ்தாக்கள் வேலைக்கு விண்ணப்பங் கள் வந்து குவிகின்றனவே தவிர மெக்கானிக் தச்சு கொல்லு வேலை களுக்கு ஆள் கிடைப்பதில்லை யென்பது அனுபோகத்தில் தெரிந்த விஷ யம். ஆகவே பொறுக்கான சில இடங்களில் தொழிற் பாடசாலைகளை ஏற்ப டுத்த வேண்டியது கவர்ன் மெண்டாரின் கடமை; அல்லது அந்தப்பாடசா லைகளின் செலவு பூராவையும் கொடுப்பதாகவாவது சொல்லி ஸ்தலஸ்தா னங்களை தொழிற்பாட சாலைகளை ஏற்படுத்தச் சொல்ல வேண்டும். தொழில் விஷயங்களில் ஆலோசனை கேட்டால் தொழில் இலாகா அதிகாரிகள் கட்ட ணம் கேட்கிறார்கள். அவர்கள் இலவசமாக யோசனை சொல்ல வேண்டும். அப்படிச் செய்து விட்டால் ஓய்வு ஒழிவில்லாமல் அவர்களைத் தொந்திரவு செய்வார்களென்ற பயம் கவர்ன்மெண்டுக்கிருந்தால் அதற்கிடமிரா மல் ரிவினியூ டிவிஷனல் ஆபீசர்களால் சிபார்சு செய்யப்படும் விண்ணப் பதார்களுக்கே தொழில் இலாகாதார் இலவசமாக யோசனை சொல்லவேண்டு மென்று உத்திரவு செய்து விடலாம்.

இந்திய உத்தியோகஸ்தர்களுக்கு குடியிருக்க வீடுகள் கட்டிக் கொடுக்க வேண்டுமென்று சென்ற வருஷத்தில் தெரிவித்துக் கொண்

டேன். நகர்ப்புறங்களில் குடியிருப்பு விடுகளுக்கு வரவர கிராக்கி அதிகப்பட்டு வருகிறது. கிராமாந்தர வாசிகள்கூட கிராம வேலைகளை விட்டு விட்டு அதிகச்சம்பளம் பெறலாமென்கிற எண்ணத்துடன் பட்டணங்களில்வந்து குவிகிறார்கள். அதன் பலனாக நகரங்களில் நெரிசல் அதிகமாகப் போய் சுகாதாரக் கேடு யேற்பட்டு விடுகிறது. தளவாடங்களின் விலைகளும் ஆட்கூலியும் வெகுவாக அதிகரித்து விட்டதினால் தனிப்பட்டநபர்கள் குடியிருப்புக்காக வீடு கட்டத்துணிகிறதில்லை. ஆகவே குடியிருக்க வீடு அகப்படாமல் திண்டாடும் அதிகாரிகளின் கஷ்டத்தைச் சொல்ல வேண்டியதில்லை. நீதி இலாகா உத்தியோகஸ்தர்கள் தனிப்பட்ட நபர்களின் வீடுகளில் குடியிருந்து கொண்டு அவர்களுடைய தாட்சண்யத்திற்குக் கட்டுபட்டு விடுவது சரியல்ல வென்பதை நான் அதிகமாக சொல்லத் தேவையில்லை. ஆகவே கஷ்டம் அதிகமாக வுள்ள இடங்களிலாவது கவர்ன்மெண்டார் இந்த விஷயத்தில் அங்குரார்ப்பணம் செய்வார்களென்று நம்புகிறேன்.

## கனம் மிஸ்டர் பி. எஸ். சிவஸ்வாமிய்யர்.

முனிசிபாலிட்டிகள் தங்களுடைய ரஸ்தாக்களை நல்ல ஸ்திதியில் வைத்திருக்க கவர்ன்மெண்டார் கிராண்டு கொடுக்க வேண்டுமென்று கனம் அகமது தம்பி மரக்காயர் கேட்கிறார். இதற்காக வெல்லாம் கவர்ன்மெண்டார் கிராண்டு கொடுக்கமுடியாது. முனிசிபாலிட்டிகள் தங்களுடைய ரஸ்தாக்களை நல்ல ஸ்திதியில் வைத்திருப்பதற்காக கிராண்டு கொடுக்க கவர்ன்மெண்டார் கட்டுப்படமுடியாது. முனிசிபல் வருமானத்திலிருந்தே கிரமமாக அந்தச் செலவுகள் செய்யப்படவேண்டும்.

தொத்து வியாதிகள் பரவுவதன் காரணமாக ஏற்படும் செலவுகளை கவர்ன்மெண்டாரே ஒத்துக் கொள்ளவேண்டுமென்று கனம் அகமது தம்பி மரக்காயர் கேட்கிறார். அந்த யோசனையையும் நாம் அங்கீகரிக்கமுடியாது. ஏதேனும் ஸ்பெஷல் கேஸ்களில் முனிசிபல் கவுன்சில்களின் சக்திக்குமீறி செலவு ஏற்பட்டுவிட்டால் அந்த சமயங்களிலெல்லாம் கவர்ன்மெண்டார் உதவி செய்ய முன் வந்து முனிசிபாலிட்டிகளுக்கு கிராண்டு கொடுத்து அதன்பொக்கிஷத்தை இட்டு நிரப்பியிருக்கிறார்கள். ஆனால் முனிசிபாலிட்டிகளில் தொத்து வியாதி காணுவதின் காரணமாக ஏற்படும் செலவுகளை மாகாண கவர்ன்மெண்டே ஒத்துக்கொள்ள வேண்டுமென்கிற யோசனையை கவர்ன்மெண்டார் அங்கீகரிக்கமுடியாது.

தூத்துக்குடி ஜல சப்ளை விஷயம் என்ன நிலைமையிலிருக்கிறதென்று அவர் கேட்கிறார். தூத்துக்குடியில் ஏற்படுத்தப்பட்டிருக்கும் தொழிற்சாலைகளுக்கு ஜலம் விற்பனை செய்வதன் மூலமாக ஏதேனும் வருமானம் தேடமுடியுமா வென்று முனிசிபல் கவுன்சிலைக் கேட்டுவிட்டிருக்கிறோம்.

இப்பொழுது அந்த திட்டத்திற்காக என்ன செலவாகு மென்று ஆபீசில் கணக்குப் போட்டுப் பார்த்ததில், இதற்காக ஏற்படக்கூடிய செலவானது முனிசிபல் கவுன்சிலின் சக்தியை மீறினதாக இருக்கிறது. இருந்தாலும் தொழிற்சாலைகளுக்கு ஜலத்தை விற்பதன் மூலமாக கொஞ்சம் பணம் சம்பாதிக்கும் பட்சத்தில் இந்த திட்டத்திற்குப் பணம் செலவிடுவது கொஞ்சம் சுலபப்படும்.

நாகப்பட்டணத்தில் துறைமுகப் போலீஸை வைத்திருக்கும் செலவை கவர்ன்மெண்டே ஒத்துக் கொள்ளவேண்டு மென்றும், ஏற்றுமதி இறக்குமதிக் கமிட்டியின் தலையில் அதை சுமத்தக்கூடாதென்றும் கனம் மெம்பர் சொல்லுகிறார். அவர் சொன்ன கஷ்டங்கள் நாகப்பட்டணத்தில் மாத்திரம் ஏற்படுகிறவைகளல்ல. காக்கினடா, கூடலூர் இந்த இரண்டு துறை முகங்களிலும் அந்தக் கஷ்டங்கள் உண்டு. இருந்தாலும் அங்கும் இதே முறை தான் ஏற்படுத்தப்பட்டிருக்கிறது. துறைமுகப் போலீசுக்காக மாகாண வருமானத்தைச் செலவிடுவது சரியல்லவென்றும், அந்தச் செலவு துறைமுகங்களில் வசூலாகும் ஏற்றுமதி இறக்குமதிக் கட்டணங்களிலிருந்தே ஈடாக வேண்டுமென்றும் கவர்ன்மெண்டார் முடிவு செய்திருக்கிறார்கள். ஆகவே இதேவிதமான உத்திரவு கூடலூர், காக்கினடா, ஆகிய இருதுறைமுகங்களுக்கும் பிறப்பிவிக்க பட்டிருக்கையில் நாகப்பட்டணத்திற்கு மாத்திரம் வேறுவிதமாக நடந்து கொள்ள எவ்விதக் காரணமுமில்லை.

சென்னை நகர்ப் போலீஸ் சட்டத்தின் 65 வது பிரிவை நாகப்பட்டணத்தில் அனுஷ்டானத்திற்குக் கொண்டு வரவேண்டுமென்று கனம் மெம்பர் சொல்லுகிறார். இந்தப் பிரேரணையை கவர்ன்மெண்டார் நன்ருக யோசித்து சாத்தியமில்லை யென்று விட்டுவிட்டார்கள்.

## 1915

### [மார்ச்சு மாதம் 31-ம்தேதி நடந்த கூட்டம்]

மேன்மைத் தங்கிய பிரபுவே,

தங்களுடைய அனுமதியின் பேரில் சில விஷயங்களைப் பற்றி என்னுடைய அபிப்பிராயத்தைத் தெரிவித்துக் கொள்ள விரும்புகிறேன். கவர்ன்மெண்டு உத்தியோகஸ்தர்கள் குடியிருக்க இடமில்லாமல் தவிக்கும் தவிப்பை இரண்டு வருஷமாக நான் கவர்ன்மெண்டாருக்கு எடுத்துச் சொல்லி வந்திருக்கிறேன். அநேக சந்தர்ப்பங்களில் சப்ஜட்ஜுகள், டிஸ்திரிக்ட் முனிசிப்புகள், தாசில்தார்கள், டிப்டி கலெக்டர்கள் இவர்கள் குடியிருக்க இடம் கிடைக்காமல் சத்திரங்களிலா

வது வேறு யாருடைய வீட்டிலேனும் ஒண்டிக் குடியாகவாவது, இரு ந்து வருவது எனக்குத்தெரியும். அதிலும் நீதி இலாகா உத்தியோகஸ்தர்க ளுடைய நிலைமை மிகவும் கஷ்டமாக இருக்கிறது. நான் சந்தித்த பல சப் ஜட்ஜுகளும் முன்சிப்புகளும் தங்களுக்குக்குடியிருக்க சவுகரியமான இடமில்லை யென்று என்னிடம் தெரிவித்துக் கொண்டிருக்கிறார்கள். சுற்றுப் பிரயாணம் செய்யும் உத்தியோகஸ்தர்களுக்குத் தலைமைஸ்தலங்களை விட்டு வெளியில் சென்று சவுகரியமான கிராமாந்தரங்களில் தங்கியிருப்பதற்கு இட மிருக்கிறது. ஆனால் நீதி இலாகா உத்தியோகஸ்தர்களோ பட்டணங்களிலே யே சுகாதாரக்குறைவான இடங்களில் கிடந்து கஷ்டப்படவேண்டி யிருக்கி றது. இந்த இடக்கஷ்டத்தினாலேயே அவர்கள் தங்களை மாற்றும்போதெல் லாம் கஷ்டப்படுகிறார்கள். உப்பள இலாகா உத்தியோகஸ்தர் களுக்கு கவர்ன்மெண்டார் பெரிய மனதுடன்வீடுகளைக் கட்டிக் கொடுத்திரு க்கிறார்கள். ஆனால் சப்ஜட்ஜுகள், முன்சிப்புகள், டிப்டிகலெக்டர்கள், தாசி ல்தார்கள், கஸ்டம்ஸ் உத்தியோகஸ்தர்கள், போலீஸ் இன்ஸ்பெக்டர்கள் இவ ர்கள் விஷயம் கேள்விமுறை இல்லாமலிருக்கிறது. நடைமுதல் வருஷத்திய வரவு செலவு திட்டத்திலும் இதற்காகப் பணம் ஒதுக்கி வைக்கப்படவில்லை. இந்திய உத்தியோகஸ்தர்கள் சார்பாக நான் செய்து கொண்ட விஞ்ஞாபனங் களை கவர்ன்மெண்டார் அனுதாபத்துடன் கவனிக்காததற்காக நான் மிகவும் வருத்தப் படுகிறேன். இந்த அசௌகரியம் மிகவும் அதிகமாகவுள்ள இடங் களிலாவது வீடுகளைக் கட்டிக் கொடுக்க கவர்ன்மெண்டார் வழி தேடுவார்க ளென்று நினைக்கிறேன்.

தொழில்களை அபிவிருத்தி செய்யும் நோக்கத்துடன் கவர்ன்மெண் டார் இந்த வருஷத்தில் "சாஸ்திர சம்பந்தமான இலாகாக்கள் வகையறா" என்கிற தலைப்பின் கீழ் அதிகப் பணத்தை ஒதுக்கி வைத்திருக்கிறார்கள். ஆனால் தொழிற் கல்விக்காகத் தனியே பணம் ஒதுக்கி வைக்கப்பட வில்லை. மர்மமான தொழில்களை நடத்தி வருகிறவர்கள் பயிற்சிபெற்ற பெயர்வழிகள் இல்லாமல் நிரம்பவும் கஷ்டப்படுகிறார்கள். பம்பாயி லிருக்கும் விக்டோரி யா தொழில் மர்மப் பாடசாலையைப் போல உயர்தரத் தொழிற் பாடசாலை களை ஏற்படுத்த முடியா விட்டாலும், மெக்கானிகல் எஞ்சினிரிங், ஆயில் எஞ்சின், ஸ்டீம் எஞ்சின் இவைகளை ஒட்டுதல் போன்ற விஷயங்களைக் கற் றுக் கொடுப்பதற்காவது நடுத்தரப் பாடசாலைகளை ஏற்படுத்தலாம். கவர்ன் மெண்டார் கணக்கெடுத்துப் பார்த்தால் அரிசி மில்களும், ஆயில் எஞ்சின், ஸ்டீம் எஞ்சின் இவைகளைக்கொண்டு வேலை செய்யும் ஸ்தாபனங்களும் ஏராள மாக ஏற்பட்டிருப்பதும், அந்த இயந்திரங்களை சரியானபடி ஒட்டி வைக்க தேர்ச்சி பெற்ற தொழிலாளர்கள் இல்லாததினால் பல முதலாளிகள் பெரு த்த நஷ்டங்களுக்காளாகி யிருப்பதும் கவர்ன்மெண்டாருக்குத் தெரிய வரும். இவ்விஷயத்தைப் பற்றி பல மெம்பர்கள் பேசி யிருக்கிறார்கள்.

ஆகவே இந்த முக்கிய விஷயத்தை கவர்ன்மெண்டார் மூலைமாடியில் போட்டு விட மாட்டார்க ளென்று நினைக்கிறேன்.

"ஜல சப்ளை திட்டங்களும் வடிகால் திட்டங்களும்" என்னும் தலைப்பின் கீழுள்ள ஜாப்தாவைப் பார்வை யிடுவதில் கவர்ன்மெண்டார் எற்கனவே எற்றுக் கொண்ட தூத்துக்குடி ஜலசப்ளை திட்டம் இன்னமும் கவர்ன்மெண்டாரால் அங்கீகரிக்கப் படவில்லை யென்றும், சென்ற வருஷத்திலேயே கவர்ன்மெண்டார் ஆரம்பிப்பதாகச் சொல்லி யிருந்த நாகப்பட்டணம் வடிகால் திட்டமானது கவர்ன்மெண்டாரால் ஒப்புக்கொள்ளப்பட வில்லை யென்றும் தெரியவருகிறது. பணத்தை ஒதுக்கிவைக்காததற்காக இந்த வேலைகள் தங்கிப்போய் விடவில்லையென்றும், இவைகளைப்பற்றிய திட்டங்கள் தயாராகாமலிருப்பதே காரணமென்றும் நினைக்கிறேன். மற்ற வேலைகளுடன்கூட இந்த இரண்டு வேலைகளையும்பற்றி நான் வெகுவாக வற்புறுத்திக் கொண்டு வந்திருக்கிறேன். அடுத்த வருஷத் துவக்கத்திலாவது வேலையை ஆரம்பிக்கும்படி கூடிய சீக்கிரத்தில் இந்த திட்டங்களை கவர்ன்மெண்டார் சாங்கிஷன் செய்து விடுவார்களென்று நம்புகிறேன்.

ராமனுதபுரம் ஜில்லா போர்டுக்கு ஸ்பெஷல் கிராண்டு கொடுக்க வேண்டுமென்று நான் கேட்டதற்கு முனிசிபல் இலாகா மெம்பர் பிரதிகூலமாக பதில் சொல்லிவிட்டார். விசாகப்பட்டணம், கொரப்பட்டு ஜில்லா போர்டுகளுக்கும், போலாவரம் தாலுகா போர்டுக்கும் கிராண்டுகள் கொடுக்கப்பட்டிருக்கும் வேலைகள், ராமனுதபுரம் ஜில்லா போர்டில் நான் குறிப்பிட்ட வேலையைவிட முக்கியமானவைகளல்ல. ராமனுதபுரம்--கீழ்க்கரை ரஸ்தாவுக்காக எந்தக் காலத்திலும் தங்களால் ஒன்றும் செய்ய முடியாதென்று ராமனுதபுரம் ஜில்லா போர்டார் சொல்லியிருந்தும் கவர்ன்மெண்டார் அந்த போர்டாரின் பாத்தியதையை அனுகூலமாக கவனியாதது மிகுந்த ஏமாற்றத்தை விளைத்திருக்கிறது.

விசாகப்பட்டணம், கொரப்பட்டு முதலிய போர்டுகளுக்கு எவ்வளவு கிராண்டு கொடுத்தாலும் எனக்கு ஆட்சேபணை யில்லையென்பதை வட ஜில்லாக்களுடைய பிரதிநிதிகள் தெளிவாக உணர்ந்து கொள்வார்களாக. எந்த வேலைகளுக்காக அந்த போர்டுகளுக்கு வரவுசெலவு திட்டத்தில் பணம் ஒதுக்கி வைக்கப்பட்டிருக்கிறதோ அதைப்போலவே ராமனுதபுரம் கீழக்கரை ரஸ்தாவும் முக்கியமான வேலை யென்பதை கவர்ன்மெண்டாருக்கு அறிவுறுத்துவதே என் கருத்து.

சில்லரை மராமத்து வேலைகளுக்கு மிலச்சுவான்தார்களின் பிரதிநிதிகளைக் கலந்து கொண்டு நிரந்தர திட்டத்தைத் தயாரிக்கச் செய்யவேண்டுமென்று நான் சொன்னயோசனையை கவர்ன்மெண்டார் அங்கீகரிக்காததற்கு வருந்துகிறேன். என்னுடைய யோசனையின் பிரகாரம் நடந்து கொண்

டால், வேலைகளைச் செய்து முடிப்பதில் எஞ்சினீரிங் இலாகாதார் குறிப்பிடும் கஷ்டங்கள் மறைந்துவிடும். எஞ்சினீரிங் இலாகாதார்களுடைய வேலைகளை ஆட்சேபிக்கவாவது அவர்கள்மீது தோஷம் கூறவாவது இடமிராது.

## 1916

### [ஏப்பிரல் மாதம் 8-ம் தேதி நடந்த கூட்டம்]

மேன்மைதங்கிய பிரபுவே,

தங்களுடைய அனுமதியின்பேரில் சில வார்த்தைகள் சொல்லிக் கொள்ள விரும்புகிறேன்.

யுத்தம் காரணமாக செலவினங்களைக் குறைக்கவேண்டியதற்குத் தக்கபடி கனம் வரவு செலவு மெம்பர் வரவுசெலவு திட்டத்தைத் தயாரித்திருப்பதற்காக வந்தனம் செலுத்தவேண்டும். அடியிற்கண்ட சில விஷயங்களை கவர்ன்மெண்டின் அறிவிப்புக்குக் கொண்டுவர விரும்புகிறேன்.

முகம்மதியர்களுக்குக் கல்வி அறிவைப் புகட்டும் விஷயத்தில் கவர்ன்மெண்டார் தாராளபுத்தி காட்டியிருக்கிறார்கள். எல்லா கவர்ன்மெண்டு பாடசாலைகளிலும் முகம்மதியப் பிள்ளைகளிடமிருந்து அரைச்சம்பளம் தான் வாங்க வேண்டுமென்றும் கவர்ன்மெண்டார் பெரிய மனதுபண்ணி உத்திரவு செய்திருக்கிறார்கள். கவர்ன்மெண்டாரிடம் உதவி பெற்று நடந்துவரும் இதர பாடசாலைகளிலும் அதே பிரகாரம் வசூல் செய்யும்படி கவர்ன்மெண்டார் உத்திரவு செய்வார்களென்று நம்புகிறேன். முகம்மதியர்கள் பெருத்த திருச்சிறாப்பள்ளி, சென்னை முதலிய இடங்களில் முகம்மதியப் பிள்ளைகளுக்காக வென்று பிரத்தியேகமாக சாப்பாட்டு விடுதிகளை ஏற்படுத்தி நடத்திவர வேண்டுமென்று நான் ஏற்கனவே தெரிவித்துக் கொண்டிருக்கிறேன். அதை கவர்ன்மெண்டார் மறந்துவிட மாட்டார்களென்றே நினைக்கிறேன்.

நாகப்பட்டணம் முனிசிபாலிட்டியில் இரண்டு முகம்மதிய பாலிகா பாடசாலைகளைக் கட்டுவதற்காக கவர்ன்மெண்டார் 9000 ரூபாய் கிராண்டு கொடுத்திருக்கிறார்கள். வெளியூர்களில் முதன் முதலாக இம்மாதிரி பள்ளிக்கூடங்கள் இப்பொழுது தான் ஏற்படுகின்றன. அவைகள் வெகு திருப்திகரமாகவும் நடந்து வருகின்றன. இரண்டு தலைமை உபாத்தியாயினிகளும் சென்னையிலுள்ள ஹொபார்ட் கவர்ன்மெண்டு போதனா முறைப்பாடசாலையில் பயிற்சி பெற்றவர்களாக இருந்தாலும், பள்ளிக்கூடங்களில் போதிய உபாத்தியாயினிகள் இல்லை. இன்னும் சில உபாத்தியாயினிகள் வேண்டுமென்று அவர்கள் இடைவிடாதுகேட்டுக்கொண்டு வருகிறார்கள். இந்த இரண்டு பள்ளிக்கூடங்களுக்கும் கட்டிடங்கள் கட்ட 12000 ரூபாய்

திட்டம் போடப்பட்டிருக்கிறது. 9000 ரூபாய் தான் கவர்ன்மெண்டார் கொடுத்திருக்கிறார்கள். முனிசிபாலிட்டியார் தங்களுடைய வருமானத்திலிருந்து பாக்கிப் பணத்தைக் கொடுக்கக் கூடிய சக்தியில்லாதவர்களாயிருப்பதால், கவர்ன்மெண்டார் இந்த இரண்டு கட்டிடங்களையும் கட்டி முடிப்பதற்கு இன்னும் வேண்டிய 3000 ரூபாயையும் கொடுக்கா விட்டால், பள்ளிக்கூட கட்டிடங்கள் அரைகுறையாகத் தானிருக்கும். சில வருஷங்களுக்கு முன் எல்லா முனிசிபாலிட்டி பாடசாலைகளிலும் இலவசமாக கல்வி கற்றுக்கொடுக்க ஏற்பாடு செய்திருந்த முனிசிபாலிட்டியார் இப்பொழுது சம்பளம் வசூலிக்க ஆரம்பித்திருப்பதால், பணதரித்திரமே அதற்குக் காரணமென்று நினைத்து, இதற்கு 3000 ரூபாய் கொடுக்க சக்தி கிடையாதென்று தைரியமாகச் சொன்னேன். வரவு செலவு திட்டத்தின் உருத்தெரியாதபடி விசேஷமாறுதலெதையும் செய்யாமல் இந்த அற்ப 3000 ரூபாய்க்கு கவர்ன்மெண்டார் வழி செய்வார்களென்று நினைக்கிறேன்.

மர்மமான தொழில்களை நடத்தி வருகிறவர்களுக்கு பயிற்சிபெற்ற தொழிலாளர்கள் கிடைக்க சவுகரியமாயிருக்கும்படி தொழில் மர்மப்பாடசாலைகளை கவர்ன் மெண்டார் ஏற்படுத்த வேண்டுமென்று முந்தின வருஷங்களில் நான்தெரிவித்துக் கொண்டு வந்திருக்கிறேன். பம்பாய் விக்டோரியா தொழில் மர்மப்பாடசாலையைப் போல உயர்தரத் தொழிற்பாடசாலையை ஏற்படுத்த முடியாமற் போனலும் குழந்தைகளுக்கு எலிமெண்டரி மெக்கானிஸம் கற்றுக்கொடுத்து அவர்களை பிட்டர்கள் வேலைக்குத்தகுதியுடையவர்களாக்கக்கூடிய பாடசாலைகளையாவது ஏற்படுத்தலாம். ஆயில் எஞ்சின், ஸ்டீம் எஞ்சின் ஆகிய இவைகளைக் கொண்டு வேலை செய்யும் ஸ்தாபனங்கள் அதிகரித்து வருவது கவர்ன்மெண்டாருக்குத் தெரியும். எஞ்சின்களை ஓட்டத்தெரிந்த ஆள்கள் இல்லாததினல் பல முதலாளிகளுக்கு பெருத்தநஷ்டமேற்பட்டிருக்கிறது. தஞ்சாவூர் ஜில்லா போர்டார் நாகப்பட்டணத்தில் ஒரு தொழிற்பாடசாலையை ஏற்படுத்த உத்தேசித்திருப்பது எனக்குத் தெரியும். பண தரித்திரம் காரணமாக செலவுகளை மட்டுக்கட்ட வேண்டிய இந்தக்காலத்தில் பள்ளிக்கூடத்தை ஏற்படுத்தி நடத்திவர முடியாவிட்டாலும் தஞ்சாவூர் ஜில்லா போர்டைப்போன்ற ஸ்தலஸ்தாபனங்களுக்குதாராளமாக இல்லாவிடினும் கொஞ்சமாவது பொருளுதவி செய்வதாக கவர்ன்மெண்டார் சொல்லி, இத்தகைய பாடசாலைகளை ஏற்படுத்தும்படி செய்யலாம்.

சப் ஜட்ஜுகள், டிஸ்திரிக்ட் முன்சிப்புகள், தாசில்தார்கள், டிப்டி கலெக்டர்கள் முதலிய இந்திய கவர்ன் மெண்டு உத்தியோகஸ்தர்களுக்கு குடியிருப்பு வசதிகள் செய்து கொடுக்க வேண்டு மென்று நான் இடைவிடாது வற்புறுத்தி வந்திருக்கிறேன். சென்னையில் சில உத்தியோகஸ்தர்களுக்கு வீடுகள் கட்டிக் கொடுப்பதற்காக கவர்ன் மெண்டார் பணத்தை

ஒதுக்கி வைத்திருந்தார்கள். சென்னையை விட வெளி யிடங்களிலேயே குடியிருப்புக் கஷ்டம் அதிகமா யிருக்கிறதென்பது பற்றியே நான் அதை ஆட்சேபித்தேன். இவ்விஷயத்தில் சென்னையை விட வெளியிடங்களுக்கு முன் பாத்தியம் கொடுக்க வேண்டும். ஒவ்வொரு வெளியூரின் முடையும் அடங்கும் வரையில் வருஷத்திற்குக் கொஞ்சமாக இந்தக் காரியத்திற்கு கவர்ன் மெண்டார் பணம் ஒதுக்கிவைத்துக் கொண்டு வருவார்களென்று நம்புகிறேன்.

சில்லரை மராமத்து வேலைகளுக்காவதுஜில்லாபோர்டுக்கமிட்டிகளைக் கலந்து கொண்டு நிரந்தர திட்டங்களைத் தயார் செய்யவேண்டு மென்று எஞ்சினீரிங் இலாகாவுக்கு அறிவிக்கும்படி நான் சொன்ன யோசனை கவர்ன் மெண்டாரால் கவனிக்கப்பட்டதா வென்றே தெரிய வில்லை. அந்த மாதிரி செய்து விட்டால் காலதாமதமும், ஆட்சேபனைகளும் ஏற்பட இட மில்லாமற் போய் விடுமாதலால், என்னுடைய யோசனையை கவர்ன் மெண்டார் அனுகூலமாக கவனிப்பார்க ளென்று நம்புகிறேன்.

நாகப்பட்டணம் வடிகால் வேலைக்கும் தூத்துக்குடி ஜலசப்ளை வேலைக்கும் பணம் ஒதுக்கி வைக்கப்படாததற்கு வருந்துகிறேன். எனக்குத் தெரிந்த வரையில் மற்றெல்லா திட்டங்களையும் விட இவ்விரண்டும் முக்கியமானவைகளானதினால் அவைகளை எவ்வளவுசிக்கிரமாக செய்துமுடிக்கமுடியுமோ அவ்வளவு சிக்கிரமாக செய்துமுடிக்கும்படி கேட்டுக்கொள்ளுகிறேன்.

லோகல் போர்டுகளிலும் முனிசிபாலிட்டிகளிலும் என் சமூகத்தாருக்குப் பிரதிநிதித்துவம் கொடுபடவேண்டிய முக்கிய விஷயத்தைப் பற்றி கவர்ன்மெண்டுக்குத் தெரிவித்துக் கொள்ள விரும்புகிறேன். துரதிர்ஷ்டவசாத மொத்த ஜனத்தொகையில் மைனாரிட்டியாக விருக்கும் முஸல்மான்களில், திறமையும், பொதுஜன க்ஷேமத்தில் அக்கரையும் உள்ளவர்கள் பெருவாரியாக விருந்தும் இந்த மாகாணத்தின் பொது வாழ்விலும், பொது ஸ்தாபனங்களிலும் அவர்களுக்குப் போதிய பங்கு இல்லாமலிருக்கிறது. கவர்ன்மெண்டார் இதை அறிந்து, இதற்கு ஆரம்பத்திலேயே பரிகாரம் தேடியிருக்கிறார்கள். சட்ட சபைகளில் எங்கள் சமூகத்தினருக்குப் போதியவளவு பிரதிநிதித்துவ மில்லாவிடினும், குறிப்பிட்ட சில ஸ்தானங்களாவது ஒதுக்கி வைக்கப்பட்டிருக்கின்றன. ஆயினும் எங்கள் சமூகம் அபிவிருத்தி யடைந்து இந்த மாகாண வாசிகளுக்குள்ளும் ஏகாதிபத்தியத்திற்குள்ளும் தகுந்த அந்தஸ்தைப் பெறுவதற்கு இந்த சுதந்தரம் உண்மையில் உபயோகமுள்ளதாக இருக்க, கவர்ன்மெண்டார் இந்த விஷயத்தை இன்னமும் தீர்க்கமாக ஆலோசித்து, லோகல் போர்டுகளிலும் முனிசிபாலிட்டிகளிலும் எங்கள் சமூகத்தாருக்கு அதிக சுதந்தரங்களைக்

கொடுக்கவேண்டும். உதாரணமாக ஒரு சமயத்தில் சேலம் முனிஸிபாலிட்டியில் ஒரு முகம்மதிய கவுன்சிலர்கூட இல்லாமற்போய் விட்டது. அதன் பேரில் நான் இந்த சபையில் கேள்வி கேட்கவேண்டியதாயிற்று. அதற்குப் பிறகு அந்த நிலைமை மாறி என்னுடைய சமூகத்தார் ஒருவர் கவர்ன்மெண்டாரால் நியமனம் செய்யப்பட்டது வாஸ்தவம் தான். எங்கள் சமூகத்தைத் திருப்தி செய்ய இது சுத்தமாகப் போதாது. 24 ஸ்தானங்களுக்கு ஒரு ஸ்தானமென்றால் 100-க்கு 4 விதமாகிறது. மொத்த ஜனத்தொகையில் முஸ்லீம்கள் அந்த விதாசாரத்தைவிட எத்தனையோ மடங்கு அதிகமாக இருக்கிறார்கள். லோகல் போர்டுகளிலும் முனிசிபாலிடிகளிலும் குறைந்தது ஆறிலொரு பங்கு ஸ்தானங்களுக்கு முகம்மதியர்களே பிரதிநிதிகளைத் தெரிந்தெடுத்துக் கொள்ளும்படி ஒதுக்கி வைத்துவிட வேண்டுமென்று கேட்கும்படி பல பிரமுகர்கள் என்னை வற்புறுத்தி யிருக்கிறார்கள். இது மிகவும் நியாயமாகவும் கணக்கா சாரத்திற் கொத்ததாகவுமிருப்பதால் அதன்படி செய்து விடவேண்டு மென்று நான் வற்புறுத்துகிறேன். ஆகவே மாட்சிமை தங்கிய சக்கரவர்த்தியின் ராஜ விசுவாசமுள்ள பிரஜைகளாகிய முஸ்லீம்களுக்கு நீதிவழங்கி அவர்கள் அபிவிருத்தி பெறுவதற்கு உதவியாகயிருக்கும்படி இவ்விஷயத்தில் கவர்ன்மெண்டார் உடனே கவனம் செலுத்தித் தக்க ஏற்பாடுகளைச் செய்வார்களென்று நம்புகிறேன்.

## கனம் ஸர் பி. எஸ். சிவஸ்வாமிய்யர்

கனம் அகமதுதம்பி மரக்காயர் தமது சமூகத்தினருக்காக ஸ்தல ஸ்தாபனங்களின்மொத்த ஸ்தானங்களில் ஒரு விதாசாரத்தை ஒதுக்கிவைக்க வேண்டுமென்று வற்புறுத்தி,தமது சமூகத்தினருக்கு அதிகப் பிரதிநிதித்துவம் வேண்டுமென்று சொல்லியிருக்கிறார்.ஸ்தல ஸ்தாபனங்களில்முகம்மதிய சமூகத்தினருக்குப் போதிய பிரதிநிதித்துவம் இருக்கும்படி செய்வதில் கவர்ன்மெண்டார் விசேஷ கவலை காட்டி வருகிறார்களென்று மீண்டும் கனம் மெம்பருக்கு நான் உறுதி கூறுகிறேன். ஒவ்வொரு இடத்திலும் கூடிய வரையில் முகம்மதியர்களின் தொகையைக் கணக்குப் பார்த்து, ஸ்தல ஸ்தாபனங்களில் அவர்களுக்கு நியாயமாக எவ்வளவு பிரதிநிதிகளிருக்கவேண்டுமென்று நிஷ்கரிஷை செய்து வருகிறோம். காலி ஸ்தானங்களைப் பூர்த்தி செய்வதில் முகம்மதியர்களுக்குப் போதிய பிரதிநிதித்துவம் ஏற்படும்படியாகவே செய்து வருகிறோம்.

நாகப்பட்டணம் வடிகால் வேலையையும் தூத்துக்குடி ஜல சப்ளை வேலையையும் ஜரூர் படுத்த வேண்டுமென்று கனம் மிஸ்டர் அகமது தம்பி மரக்காயர் சொல்லுகிறார். இந்த திட்டங்கள் இப்பொழுது என்ன ஸ்திதியிலிருக்கின்றன வென்று இந்த சபையில் கேட்கப்பட்ட கேள்விகளுக்கு கவர்ன்மெண்டார் பதில் அளித்திருக்கிறார்கள். தூத்துக்குடி ஜலசப்ளை

திட்டங்களில் முக்கிய திட்டத்தை இப்பொழுது நிறுத்தி வைத்திருக்கிறது. சில்லரைத்திட்டம் தான் வேலைநடந்துவருகிறது. கூடிய சீக்கிரத்தில் தூத்துக்குடிக்கு நல்ல ஜலசப்ளை வசதி ஏற்பட்டுவிட வேண்டுமென்பதில் கவர்ன்மெண்டாருக்கு விசேஷ அக்கரை யுண்டு. நாகப்பட்டணம் வடிகால் வேலைகள் யுத்தம் முடியும் வரையில் பாக்கியிலிருக்க வேண்டியது தான். கவர்ன்மெண்டார் விசேஷ அக்கரையுடன் முனிசிபாலிட்டிகளில் பல வேலைகளைச் செய்வதற்காக திட்டங்களை சாங்கிஷன் செய்து வேலைகளைச் செய்து முடிக்கப் பார்த்தும், இத்தியாதி இடைஞ்சல்களினால் அவைகளைச் செய்து முடிக்க சாத்திய மில்லாமல் போய்விடுவதை கனம் மெம்பர்கள் உணர்ந்து நடந்து கொள்ளுவார்களென்று நம்புகிறேன்.

## 1917

### [ஏப்பிரல் மாதம் 5-ம் தேதி சென்னையில் நடந்த கூட்டம்]

மேன்மை தங்கிய பிரபுவே,

உலகத்தை அழிக்கும் இந்த கோர யுத்த காலத்திலும் கனம் வரவு செலவு மெம்பர் ருசிகரமான வரவு செலவு திட்டத்தை சபையின்முன் ஆஜர்ப் படுத்தியிருப்பதைப் பாராட்டுகிறேன்.

திருத்திரைப்பூண்டி வேதாரணியம் ரயில் பாதையை 13-லட்ச ரூபாய் செலவில் தஞ்சாவூர் ஜில்லா போர்டார் போட்டு முடித்து விட்டது கவர்ன் மெண்டாருக்குத் தெரியும். இந்த ரயில் பாதையின் அவசியத்தை உணர்ந்தே கவர்ன்மெண்டார் அதை சாங்கிஷன் செய்திருப்பதால், அதன் ஆவசியகத்தைப் பற்றி நான் அதிகமாக ஒன்றும் சொல்லத் தேவையில்லை. இவ்வளவு பெருத்த செலவைச் செய்து ரயில்வே லயனைப் போட்டும், இந்த லயனில் சில வண்டிகளையாவது விடும்படி தென்னிந்தியா ரயில்வே கம்பெனியைக் கேட்டும் பிரயோஜன மில்லை யென்று ஜில்லா போர்டார் சொல்லுகிறார்கள். இப்பொழுது இருக்கும் நெருக்கடியான நிலைமையை உத்தேசித்து அதிகப்படியாகவும் அனாவசிய மாகவுமுள்ள வண்டிகளை எவ்வளவு தூரம் குறைத்து, என்ஜின்களையும் வண்டித் தொடர் களையும் தேக்கிவைத்திருக்க முடியுமோ அவ்வளவுதூரம் செய்ய வேண்டிய தவசிய மென்று எனக்கு நன்றாகத் தெரிந்திருப்பதால், இந்த லயனில் ரயில்வே கம்பெனியார் வண்டி விட முடியாதென்று சொல்வதற்காக நான் புகார் செய்ய வில்லை. ஆனாலும் ரயில்பாதையை பெருந்தொகையைச் செலவிட்டுப் போட்டபிறகு, பணம் பூமியில் வியர்த்தமாகக் கிடக்கவும், தளவாடங்கள் கெட்டுப்போகவும், வட்டி நஷ்டமாகவும் விட்டுவைப்பது சரியல்ல.

இப்பொழுது மாயவரத்திற்கும் அரந்தாங்கிக்கும் இடையில் மூன்று வண்டிகள் ஓடிக்கொண்டிருக்கின்றன. எல்லா வண்டிகளும் பொது ஜனங் களுக்கு ரொம்ப சவுகரியமாகத்தா னிருக்கின்றன. இருந்தாலும் திருத்துரைப்

பூண்டிக்கும் வேதாரணியத்திற்கும் மத்தியில் ஒரு வண்டியையாவது விட்டால் ஜனங்களுக்கு நிரம்ப சவுகரியமாயிருக்கும். வண்டித் தொடர்களை இப்பொழுது அதிகப்படுத்த சாத்தியமில்லாததால், அரந்தாங்கிக்கும் மாயவரத்திற்கும் இடையே ஓடும் மூன்று வண்டிகளை இரண்டாகக் குறைத்து, அந்த ஒரு வண்டியையும் திருத்திரைப் பூண்டிக்கும் வேதாரணியத்திற்குமாக விடலாம். அவ்விதம் செய்துவிட்டால் வேதாரணியத்திற்குச் செல்லும் ஆயிரக்கணக்கான யாத்ரீகர்களுக்கும் சவுகரியமாக யிருக்கும்; அரிசி, உப்பு முதலிய சாமான்களை கடலோரம் கொண்டுபோய் கப்பலேற்றுவதற்கும் வழியுண்டாகும்.

சப் ரிஜிஸ்தரார்களை வீட்டுக்குத் தருவித்து பத்திரங்களைப் பதிவு செய்து கொள்ள 10 ரூபாய் கட்டணம் செலுத்த சக்தி யில்லாமல், பல கோஷா ஸ்திரீகளும் கௌரவமான குடும்பத்தைச் சேர்ந்த ஸ்திரீகளும் கஷ்டப்படுகிறார்கள். மேலும் சப் ரிஜிஸ்தரார்கள் ஆபீஸ்களில் ஸ்திரீகளுக்கென்று பிரத்தியேகமாக இடமில்லாததால் அங்கும் போய் பத்திரங்களை ரிஜிஸ்டர் செய்து வைக்க அவர்களுக்கு முடியவில்லை. ஆகவே, ஸ்திரீகளுடைய பத்திரங்கள் அதிகமாக பதிவுசெய்யப்படும் ஆபீஸ்களிலாவது அவர்களுக்காக பிரத்தியேகமாக அறை கட்டிவைக்க வரவு செலவு திட்டத்தில் பணம் ஒதுக்கி வைக்கும்படி நான் கேட்டுக்கொள்ளுகிறேன.

தொழிற் கல்வியை அபிவிருத்தி செய்யவேண்டிய அவசியத்தை நான் இடைவிடாது கவர்ன்மெண்டாரிடம் வற்புறுத்தி, பெரிய ஒர்க்ஷாப் புள்ள நாகப்பட்டணத்தில் ஒரு தொழிற்பாடசாலையை ஏற்படுத்த வேண்டுமென்று யோசனை சொல்லி வந்திருக்கிறேன். அது சம்பந்தமான பிரேரணை இப்போது ஜில்லா போர்டின் ஆலோசனையிலிருந்து வருகிறது. அந்தப் பிரேரணை தங்களிடம் வரும்பொழுது கவர்ன்மெண்டார் அதை அனுகூலமாக கவனிப்பார்களென்று நம்புகிறேன்.

நாகப்பட்டணம் முனிசிபல் ஆஸ்பத்திரியில் பல கட்டடங்களைக் கட்ட வேண்டுமென்று கனம் சர்ஜன் ஜெனரல் சிபார்சு செய்ததற்காகவும் அதன்படி செய்வதற்காக ஏராளமாக கவர்ன்மெண்டார் பணங் கொடுத்ததற்காகவும் நாகை வாசிகள் தங்களுடைய கவர்ன்மெண்டிடம் விசேஷ நன்றியுள்ளவர்களாக யிருக்கிறார்கள். இப்போது 90 படுக்கைகளுள்ள 13 வார்டுகள் அதிலிருக்கின்றன. வர வர அங்கு வந்து சிகிச்சை செய்து கொண்டு போகிறவர்களுடையவும், அதிலேயே தங்கியிருந்து சிகிச்சை செய்து கொண்டு போகிறவர்களுடையவும் சங்கியை வெகுவாக அதிகரித்து வருகிறது. 1914-ம் வருஷத்தில் 961 இன்பேஷண்டுகளும் 25,456 அவுட் பேஷண்டுகளும் சிகிச்சை செய்யப்பட்டிருக்கிறார்கள். 1915-ம் வருஷத்தில் அவர்களுடைய சங்கியை முறையே 1122, 35552 ஆகிவிட்டது. 1916-ம் வருஷத்திலோ என்று மில்லாதபடி அவர்களுடைய சங்கியை முறையே 1348, 42732 ஆகிவிட்டது.

இவ்விதமாக வரவர சிகிச்சை செய்து கொள்ள வருகிறவர்களின் சங்கியை மட்டும் அதிகரித்து வருகையில், போதிய உத்தியோகஸ்தர்கள் இல்லாமலிருப்பது மிகுந்த ஏமாற்றத்தை உண்டுபண்ணுவதாக இருக்கிறது. இப்பொழுது அதில் இரண்டு சப் அஸிஸ்டெண்டு சர்ஜன்களும், ஒரு தாதியும், ஒரு மருத்துவச்சியும் தானிருந்து வருகிறார்கள்.

நாகரீகம் வரவர முதிர்ந்து, ஆண், பெண் அனைவரும் மேனாட்டு சிகிச்சை முறைகளை நாடும் இந்நாளில், அவர்களுக்குத் திருப்திகரமாக சிகிச்சை செய்ய போதிய உத்தியோகஸ்தர்கள் இருந்து வரவேண்டியது இன்றியமையாததாகும். பிணியாளர்களையும், காயஸ்தர்களையும் கவனித்து தக்க சௌகரியங்களைச் செய்ய போதிய மனுஷியர்களில்லாமல், கட்டிடங்களை ஏராளமாகக் கட்டி, படுக்கைகளையும் அதிகமாகப் போட்டு வைப்பதில் என்ன பிரயோஜனம்? இப்போது இருக்கிறவர்கள் சரியானபடி பிணியாளர்களை கவனிக்கவில்லை யென்று நான் சொல்லவில்லை. ஆனால் மனுஷியர்கள் குறைவாகவும் வேலை அதிகமாகவு மிருப்பதினால் அவர்களால் சரியானபடி எல்லாப் பிணியாளர்களையும் கவனித்துக் கொள்ள முடியவில்லை யென்றே நான் தெரிவித்துக் கொள்ளுகிறேன். போதிய வைத்திய உத்தியோகஸ்தர்களில்லாததினால் ஒருவிதத்தில் பிணியாளர்கள் சரியாக கவனிக்கப்படவில்லை யென்றே நான் சொல்வேன். அதிப்படி உத்தியோகஸ்தர்களை நியமித்தால் சிகிச்சை செய்து கொள்ளவரும் பிணியாளர்களின் சங்கியை இன்னமும் அதிகரிக்குமென்று நான் நிச்சயமாய் சொல்வேன். ஆகவே, இன்பேஷன்டுகளுக்காக ஒரு சப் அஸிஸ்டெண்டு சர்ஜனையும், அவுட்பேஷண்டுகளுக்காக ஒரு சப் அஸிஸ்டெண்டு சர்ஜனையும், ஒரு தாதியையும் ஒரு தேர்ச்சி பெற்ற மருத்துவச்சியையும் நியமனம் செய்ய வரவு செலவு திட்டத்தில் போதிய பணத்தை ஒதுக்கிவைக்கும்படி நான் கவர்ன்மெண்டாரைக் கேட்டுக் கொள்ளுகிறேன்.

முனிசிபல் கவுன்ஸிலே இவர்களை நியமனம் செய்யவேண்டு மென்பது எனக்குத் தெரியாமலில்லை. ஆனால் ஜலசப்ளை திட்டத்திற்காக முனிசிபல் கவுன்சில் ஏராளமாகப் பணத்தைச் செலவழித்து சளைத்துப் போயிருக்கிறது. ஜலசப்ளை கூட திருப்திகரமாகவுமில்லை; போதவும் போதாது. ஆகவே தான் கவர்ன்மெண்டார் தயையுடன் கவனிப்பார்களென்கிற நம்பிக்கையின் பேரில் இந்த வேண்டுகோளைச் செய்து கொள்ளுகிறேன்.

## கனம் மிஸ்டர் கில்மன்.

ரயில்வேக்களைப்பற்றி கனம் அகமது தம்பி மரக்காயர் பேசுவதில், மாயவரம்-அரந்தாங்கி லயனில் ஓடும் ஒரு வண்டியை எடுத்து, திருத்துறைப் பூண்டி-வேதாரணியம் லயனில் ஒடவிடலாமென்று சொல்லுகிறார். இந்த சமத்தான யோசனை கவர்ன்மெண்டாருக்கும் தோன்றிற்று. அதை

தென்னிந்தியா ரயில்வே கம்பெனியாருக்குச் சொன்னதில், அவர்கள் அவ்விதம் செய்யமுடியாதென்றும், மாயவரம்—அரந்தாங்கி லயனில் மூன்று வண்டிகளுக்கு பதிலாக இரண்டு வண்டிகளே போதுமாயின், ஒரு வண்டியை நிறுத்திவிடுவதாகவும் பதிலளித்தார்கள். ஆகவே நாம் வாயை மூடிக்கொண்டிருப்பது தான் நல்லதென்று நினைத்திருந்து விட்டோம்.

## 1918

### [ஏப்பிரல் மாதம் 6 ம்தேதி சென்னையில் நடந்த கூட்டம்]

மேன்மை தங்கிய பிரபுவே,

இந்த வரவு செலவு திட்ட விவாத காலத்தில் சிலவார்த்தைகள் மட்டில் சொல்லி நிறுத்திக் கொள்ளுகிறேன்.

"கல்வி" "முதலிய முக்கிய செலவினங்களுக்கு கனம் வரவு செலவு மெம்பர் தாராளமாகப் பணம் ஒதுக்கி வைத்திருப்பது மிகவும் பாராட்டத் தக்கது.

எங்களுடைய சமூகத்தினரின் கல்வி அபிவிருத்தியில் தங்களுடைய கவர்ன்மெண்டார் காட்டிவரும் ஆதரவுக்கு நாங்கள் நன்றியுள்ளவர்களாக யிருக்கிறோம். தங்களுடைய ஆதீனத்தில் கூடிய சீக்கிரத்தில் எங்கள் சமூகத்தாரும் மற்ற சகோதர வர்க்கத்தினரைப் போல கல்வி விஷயத்தில் அபிவிருத்தி யடைந்து விடுவார்களென்று நம்புகிறேன்.

சென்னையில் ஒரு முகம்மதியக் கலாசாலையை ஏற்படுத்தப்போவதாக 1918-ம் வருஷம் ஜனவரி மாதம் 7-ம்தேதி யுள்ள கவர்ன்மெண்டு அறிக்கை மூலமாக வெளிப்படுத்தியதற்கு கவர்ன்மெண்டாருக்கு என்னுடைய சமூகத்தினரின் சார்பாக நான் நன்றி செலுத்துகிறேன். அதனல் விசேஷ பலனேற்படு மென்பதில் சந்தேகமில்லை. தங்களுடைய ஆட்சி காலத்திலேயே இந்தக் கலாசாலை ஏற்பட்டு விட்டால் தங்களுடைய பேர் நீண்டகாலம் நிலைத்திருக்கும். இந்த நிகழ்ச்சியில் எங்கள் சமூகத்தினர் கவர்ன்மெண்டாருடன் ஒற்றுமைப்பார்க ளென்று நான் நிச்சயமாய்ச் சொல்லுவேன்.

சில மாகாண கவர்ன்மெண்டுகள் முனிசிபாலிட்டிகளின் எல்லைக்குள் ஆரம்பக் கல்வியைக் கட்டாயமாகச் செய்வதற்கு சட்டங்களி யற்றி யிருப்பது தங்களுக்குத் தெரிந்த விஷயம். மற்ற மாகாணங்களுக்கு இவ்விஷயத்தில் நமது மாகாணம் பின் தங்கிவிடா தென்றே நினைக்கிறேன். கல்விக்கமிட்டியாருடைய ரிபோர்ட்டு கவர்ன்மெண்டாருடைய ஆலோசனையிலிருந்து வருவதாகவே நினைக்கிறேன். கூடிய சீக்கிரத்தில் ஆண் பெண் இருவருக்கும் கட்டாய ஆரம்பக் கல்வி ஏற்படுத்தும் மசோதாவை கவர்ன்மெண்டார் அஜர்ப்படுத்துவார்களென்றே நினைக்கிறேன்.

முகம்மதிய ஆரம்பப் பாடசாலைகளில் மதக் கல்வியை போதிக்கவேண்டிய அவசியத்தை இந்த சந்தர்ப்பத்தில் வற்புறுத்த விரும்புகிறேன். என்னுடைய வகுப்பைச் சேர்ந்த பிள்ளைகளுக்கு மதப்படிப்பு கட்டாயமாக போதிக்கப்பட வேண்டும். ஆரம்பப் பாடசாலைகளில் இப்பொழுது மதக் கல்வி போதிக்கப்படாததால், பிள்ளைகளை முதலில் மதப்படிப்பு சொல்லிக் கொடுக்கும் பள்ளிக்கூடங்களுக்கு அனுப்ப வேண்டி யிருக்கிறது. அங்கே 4, 5 வருஷங்கள் கழிந்து விடுகின்றன. அதன் பிறகு அவர்கள் ஆரம்பப் பாடசாலைகளில் வந்து சேருகிறார்கள். நடுத்தரப் பாடசாலைகளுக்கும் கலாசாலைகளுக்கும் அவர்கள் வரும் போது வயது முதிர்ந்தவர்களாக யிருப்பதற்கு இதுவே காரணம். மற்ற வகுப்புகளைச் சேர்ந்த சின்னப் பையன்களுடன் சேர்ந்து உட்கார அவர்களுக்கு வெட்க முண்டானவுடன், படிப்பையே அவர்கள் விட்டு விட்டுப் போய் விடுகிறார்கள். எங்களுடைய வகுப்புப் பிள்ளைகளுக்காவது ஆரம்பப்பாடசாலைகளில் மதக்கல்வியை போதித்தால், இந்தக் கஷ்டம் நீங்கிவிடும். மதப்படிப்புக்கு வழி பண்ணுகிற வரையில் இனி புதிய கஷ்ட மேற்படும். கூடிய சீக்கிரத்திலோ, கொஞ்ச காலத்திலோ நமது மாகாணத்தில் ஆரம்பக் கல்வி மசோதா சட்டமாகப் போகிறது. அதாவது 6, அல்லது 7-வயதில் ஒவ்வொரு பிள்ளையும் பள்ளிக்கூடத்திற்குப் போகவேண்டு மென்றேற்படும். எங்கள் வகுப்புப் பிள்ளைகளை சாதாரணக் கல்வி கற்றுக்கொள்வதற்காக பள்ளிக்கூடங்களுக்கு அனுப்பு முன் அவர்களுக்கு மதப்படிப்பு சொல்லிக் கொடுக்க வேண்டு மாகையால், இந்தப் பள்ளிக்கூடங்களில் மதப்படிப்பு சொல்லிக் கொடுக்காத வரையில், குறிப்பிட்ட வயதில் அந்தப் பள்ளிக்கூடங்களுக்கு அவர்களை அனுப்ப முடியாது. அதன் பலனாக பள்ளிக்கூடத்திற்கு அனுப்ப வேண்டிய வயதில் பிள்ளைகளை அனுப்பாததற்காக முகம்மதியப் பிதாக்களுக்கு அபராதம் விதிக்க நேரிடும். ஆகவே இந்தக் கஷ்டம் ஏற்படாமல் பாதுகாப்பதற்கு, முகம்மதியப் பிள்ளைகள் படிக்கும் பள்ளிக்கூடங்களில் மதக்கல்வியையும் போதிப்பது தான் சரியான உபாயம்.

இது சம்பந்தமாக பிப்ரவரி மாதம் 19-ம் தேதி கல்வி இலாகா காரியதரிசிக்கு ஒரு கடிதம் எழுதினேன். எல்லா முனிசிபல் முகம்மதிய ஆரம்பப் பாடசாலைகளிலும் மதக்கல்வியை போதிப்பதற்காக வரவு செலவு திட்டத்தில் பணம் ஒதுக்கி வைக்க வேண்டு மென்று மார்ச்சு மாதத்திய கூட்டத்தில் ஒரு தீர்மானம் கொண்டு வருவதாகவும் அறிவித்திருந்தேன். அந்தத் தீர்மானத்தைத் தாங்கள் ஏற்றுக் கொள்ளவில்லை.

கவர்ன்மெண்டார் மத சம்பந்தமான விஷயங்களில் நடு நிலைமையை வகித்து வருவதால் தங்களுடைய ஆதிக்கத்திற் குட்பட்ட பாடசாலைகளில் மதப்படிப்பை கட்டாயமாக ஏற்படுத்தக் கூடவில்லை யென்பது எனக்குத் தெரியாமலில்லை. மாணவர்கள் எந்தெந்த வகுப்பைச் சேர்ந்தவர்களோ

அந்தந்த மத சம்பந்தமான கல்வியை போதிக்க வேண்டுமென்று ஏற்பாடு செய்வதினால் கவர்ன்மெண்டாருடைய நடு நிலைமை எவ்விதத்திலும் தவறி விடாது. பல வகுப்புகளையும் சேர்ந்த எல்லாப் பிள்ளைகளுக்கும் ஒரே மத சம்பந்தமான கல்வியை போதிப்பதாயின் அது கவர்ன்மெண்டார் தங்களுடைய நடு நிலைமையை மீறி நடந்ததாகும். ஆனால் ஒவ்வொரு பையனுக்கும் அவனுக்கு இஷ்டப்பட்ட மத அறிவை போதித்தால் அதைப் பிசகென்று எவரும் சொல்லமுடியாது.

தொழில் மர்மக்கல்வி, விவசாயக் கல்வி ஆகிய இவைகளின் அபிவிருத்திக்காக இந்தியா கவர்ன்மெண்டார் 2 லட்சம் பவுன் உபகிராண்டு கொடுத்திருப்பதைக் கண்டு நான் சந்தோஷப்படுகிறேன். மற்ற மாகாணங்களை விட சென்னை தொழில் மர்மக் கல்வி விஷயத்தில் பின்னடைந்திருப்பதால், இந்த மாகாணத்திற்கு அந்தத் தொகையிலிருந்து கொடுபடும் பங்கு குறைவாக இராதென்று நினைக்கிறேன். சென்ற மீட்டிங்கில் நாகப்பட்டணத்தில் ஒரு தொழில் மர்மப் பாடசாலையை ஏற்படுத்த வேண்டுமென்று நான் தீர்மானங் கொண்டு வந்தேன். வேறு சில பட்டணங்களில் தொழிற் பாடசாலைகளை ஏற்படுத்தப் போவதாக கவர்ன்மெண்டார் சொல்லி என்னுடைய தீர்மானத்தை அடித்துப் போட்டார்கள். நாகப்பட்டணம் தொழில் பெருத்த முக்கிய ஸ்தலமென்பதை நான் ஏற்கனவே நன்றாக எடுத்துச் சொல்லியிருக்கிறேன். தொழில் மர்மக்கல்விக்காக மத்திய கவர்ன்மெண்டார் இப்பொழுது கிராண்டு கொடுப்பதிலிருந்தாவது கவர்ன்மெண்டார் என்னுடைய வேண்டுகோளை அனுகூலமாக கவனிப்பார்களென்று நம்புகிறேன்.

ஹிந்து முஸ்லீம் கலவரங்கள் குறைகிறதாகக் காணவில்லை. ஆகவே அதைப்பற்றி சில வார்த்தைகள் சொல்லாமலிருக்க முடியவில்லை. 5-தினங்களுக்கு முன் தான் மலபார் ஜில்லா காஸர் கோடில் பள்ளிவாசல்களுக்கெதிரே ஹிந்துக்கள் தம்பட்டம் கொட்டிக்கொண்டு ஊர்வலம் நடத்த முயற்சி செய்ததில் ஹிந்துக்களுக்கும் முஸ்லிம்களுக்கும் பெருத்த கலகம் நடந்ததென்றும், போலீசார் துப்பாக்கிப் பிரயோகம் செய்து கலகத்தை அடக்கவேண்டியிருந்ததென்றும், அதினால் சில முகம்மதியர்கள் இறந்தும் மற்றும் பலர் காயப்பட்டும் போனார்களென்றும் எனக்குத் தந்தி கிடைத்தது. அதன் மேல் நான் ஒரு கேள்வி கூட அனுப்பினேன். இந்தக் கலவரங்களுக்கு ஆஸ்பதமாகவுள்ள காரணங்களை அடியுடனொழித்து இனி இவ்விதம் நடை பெற இடமிராதபடி செய்வதற்கு கவர்ன்மெண்டார் முன் வந்து உத்திரவுகளையோ வேறு ஏற்பாடுகளையோ செய்யாதவரையில் கவர்ன்மெண்டாரே இத்தகைய கலவரங்கள் நடைபெறுவதற்கு இடங்கொடுத்து வருகிறார்களென்று தோன்றும். பள்ளிவாசல்களுக்கு எதிராகவாவது, அல்லது அதற்கிருபுறத்திலும் 50 கஜத்திற் குட்பட்டாவது தம்பட்டம் கொட்டக்கூடாதென்றும், வாத்தியங்கள் வாசிக்கக்கூடாதென்

றும் உத்திரவு செய்தால் தான் இந்தத் தொல்லைகள் ஒழியும். இந்த முக்கியமான விஷயத்தைப்பற்றி ஓயாமல் தான் நானும் சொல்லிக்கொண்டு வருகிறேன். ஆனால் கவர்ன்மெண்டார் தங்களுக்கு ஒன்றும் செய்ய சக்தியில்லையென்று சொல்லி மௌனம் சாதித்து வந்திருக்கிறார்கள். இந்தியாவில் வசித்து வரும் இரண்டு முக்கிய வகுப்பினராகிய ஹிந்துக்களுக்கும் முஸ்லீம்களுக்கும் இத்தகைய சம்பவங்கள் மனக் கசப்பையும் த்வேஷத்தையும் உண்டு பண்ணுவதவாக விருப்பதால், அவ்விதம் இனியும் கலவரங்களும் கலகங்களும் நடப்பதற்கிடமில்லாமல் மேற்கண்டவாறு உத்திரவு பிறப்பிவிக்கும்படி இந்தியா கவர்ன்மெண்டாருக்கும் இந்தியா மந்திரிக்கும் சிபார்சு செய்யும்படி கேட்டுக் கொள்ளுகிறேன்.

ஸ்தல ஸ்தாபனங்களில் முகம்மதியர்களுக்குப் பிரத்தியேகப் பிரதிநிதித்துவம் ஏற்படுத்தும் விஷயத்தையும் கவனிக்க வேண்டுமென்று இந்த சந்தர்ப்பத்தில் தெரிவித்துக் கொள்ள விரும்புகிறேன். தேர்ந்தெடுக்கப்படும் மெம்பர்களின் ஸ்தானங்களை அதிகப்படுத்துவதற்கான யோசனைகளைச்சொல்லும்படி கவர்ன்மெண்டார் எல்லா முனிசிபாலிட்டிகளையும் 1918-ம் வருஷம் பிப்பிரவரி மாதம் 2-ம் தேதியுள்ள நம்பர் 907-ம் கவர்ன்மெண்டு உத்திரவு மூலமாகக் கேட்டு விட்டிருப்பதாக அறிகிறேன். என்னுடைய யோசனையின்படி செய்வதற்கு இது தான் தகுதியான சமயம். பிரத்தியேகப் பிரதிநிதித்துவத்தைப்பற்றி நான் அதிகமாக வற்புறுத்துவதாக நினைத்துவிடக்கூடாது. ஆயினும் என்னுடைய சமூகத்தினர் இப்பொழுது இருந்து வரும் நிலைமையில் ஸ்தல ஸ்தாபனங்களிலும் மற்ற பொது ஸ்தாபனங்களிலும் அவர்களுக்குச் சரியானபடி பிரதிநிதித்துவம் இருந்து வரச் செய்ய வேண்டுமென்பதை அனைவரும் ஒப்புக் கொள்வர். ஆகவே நான் சொன்ன யோசனையை தங்களுடைய கவர்ன்மெண்டார் அனுதாபத்துடன் கவனிப்பார்களென்று நம்புகிறேன்.

சிறிது காலமாக ரயில்வே பிளாட் பாரங்களில் இந்தியப் பிரயாணிகளுக்கு உணவு சப்ளை செய்யப்படும் விஷயத்தையும் கவர்ன்மெண்டார் கவனித்து வருவதை நான் பாராட்டுகிறேன். ரயில்வே ஸீனியர் இன்ஸ்பெக்டரையும் இவைகளைப் பரிசீலனை செய்யும்படி கவர்ன்மெண்டார் நியமித்திருக்கிறார்கள். இந்த விஷயத்தில் வர்த்தகம் காரணமாக ரெயில்வே பிரயாணிகளில் பெரும்பாலராகவுள்ள என்னுடைய வகுப்பினருக்கு இருந்து வரும் குறைகளையும் நிவர்த்திக்க வேண்டும். தென்னிந்திய ரயில்வேயிலுள்ள போஜன சாலைகளில் என் வகுப்பினருக்கு சாப்பாடாவது, சிற்றுண்டிகளாவது கிடைப்பது கஷ்டமாக யிருக்கிறது. போஜன விடுதிகளை வைத்திருக்கிறவர்கள் எல்லோரும் அநேகமாக பிராமணர்கள். முகம்மதியர்களைத் தீண்டாப்பேர்கள் போல் அவர்கள் நினைத்து கிட்டே வர விடுகிறதில்லை. முகம்மதியர்களுக்கும் அவ்விதம் நடத்தப்படுவதில் வருத்த முண்

டாகிறது. இதன் பலனாக ரயில்வே ஸ்டேஷன்களில் அவர்களுக்கு சாப்பாடாவது தின்பண்டங்களாவது கிடைப்பதில்லை.

நீண்டதூரம் பட்டினிகிடந்து கொண்டு அவர்கள் பிரயாணம்செய்வது மிகவும் கஷ்டமாயிருக்கிறது. இவ்விஷயத்தில் முகம்மதியப் பிரயாணிகள் படுங் கஷ்டங்களை சென்னை கவர்ன்மெண்டு மராமத்திலாகா காரியதரிசியின் அறிவிப்புக்குக் கொண்டு வந்தேன். இந்த விஷயம் முழுவதையுமே ஸீனியர் கவர்ன்மெண்டு ரயில்வே இனிஸ்பெக்டர் பரிசிலனை செய்து வருவதாக அவர் அனுதாபத்துடன் பதில் எழுதியிருக்கிறார். ஆகவே அவர் கவர்ன்மெண்டாருக்கு முடிவாக சிபார்சு செய்கையில் நான் சொன்ன யோசனைகளைப்பற்றியும் கவனிக்க சவுகரியமாயிருக்கும்படி இவ்விஷயங்களை அவருக்கு அறிவிக்கும்படி கேட்டுக் கொள்ளுகிறேன்.

நாகப்பட்டணம் மகா ஜனங்களுக்குத் தேவையாக விருக்கும் வைத்திய வசதிகளைப்பற்றியும் நான் தெரிவித்துக் கொள்ள வேண்டியிருக்கிறது. சென்ற வருஷத்தில் வரவு செலவு திட்டம் விவாதிக்கப்பட்டபோது இதைப்பற்றி நான் பிரஸ்தாபித்தேன். என்னுடைய வேண்டுகோள்களின் பேரில் கவர்ன்மெண்டார் எவ்வித நடவடிக்கையும் எடுத்துக் கொள்ளவில்லை. நாகப்பட்டணம் முனிசிபல் ஆஸ்பத்திரியில் 15 வார்டுகளிலிருக்கின்றன. 1917 ம் வருஷத்தில் 1446 இன்பேஷண்டுகளும் 42491 அவுட்பேஷண்டுகளும் சிகிச்சை செய்யப்பட்டிருக்கிறார்கள். மேலே சொன்ன புள்ளி விவரங்களிலிருந்தே வேலை வெகுவாக அதிகரித்திருப்பது தெரியவரும். இப்போது இருக்கிற உத்தியோகஸ்தர்களால் வேலை செய்து தாளவில்லை. இப்போது ஏற்பட்டிருக்கும் பண நெருக்கடி எனக்குத் தெரியாமலில்லை. ஆகவே ஆஸ்பத்திரிக்கு அத்தியாவசியமாக வேண்டியவைகளை மட்டில் குறிப்பிடுகிறேன். ஆஸ்பத்திரியின் வடவண்டைக் கோடியில் ஸ்திரீகளுக்காக 5 வார்டுகளிருக்கின்றன. அவைகளுக்காக ஸ்திரீ அப்பாத்திக்கேரியாவது சப் அஸிஸ்டெண்டு சர்ஜனாவது அவசியம். பணமிருந்தால் ஒரு தேர்ச்சி பெற்ற தாதியைக்கூட நியமிக்க வேண்டுமென்று நான் சொல்வேன். நாகப்பட்டணம் முனிசிபாலிட்டியின் வருமானம் முழுவதையும் ஜலசப்ளை வேலைகள் விழுங்கிவிட்டதால் இவர்களை நியமிப்பதற்கு முனிசிபாலிட்டியிடம் பணமில்லை. ஆகவே என்னுடைய வேண்டுகோளை கவர்ன்மெண்டாரும் கனம் சர்ஜன் ஜெனரலும் அனுகூலமாக கவனிப்பார்களென்று நம்புகிறேன்.

போக்கு வரத்து சாதனங்களைப்பற்றி சிலவார்த்தைகள் சொல்லிக் கொள்ள விரும்புகிறேன். தஞ்சாவூர் ஜில்லாவிலுள்ள ரஸ்தாக்கள் திருப்திகரமான நிலைமையிலில்லை. ரயில்வேக்களில் நெருக்கடி ஏற்பட்டு பிரயாணிகள் வண்டிகள் பல குறைக்கப்பட்டு விட்டதால், பொது ஜனங்கள் வியாபாரிகள் இவர்களுடைய சவுகரியத்தை உத்தேசித்து இருக்கிற ரஸ்தாக்

களை நல்ல ஸ்திதியில் வைத்திருக்க வேண்டுமென்றும், ஒரு முக்கிய இடத்திற்கும் மற்றொரு முக்கிய இடத்திற்கு மிடையேயுள்ள ரஸ்தாக்களுக்கு கப்பிபோட வேண்டுமென்றும் நான் கேட்டுக் கொள்ளுகிறேன்.

கடைசியாக எல்லாருடைய மனதையும் கவர்ந்திருக்கும் மகாயுத்தத்தைப்பற்றி ஒரு வார்த்தை நேசதேசத்தினர் கூடிய சீக்கிரத்தில் வெற்றி மாலை சூட்டவேண்டு மென்பதே நம்மனைவருடைய பிரார்த்தனை யாகும்.

## கனம் ஜே. எச். ஸ்டோன்

மதக்கல்வியைப் பற்றி கனம் அகமது தம்பி மரக்காயர் பிரஸ்தாபித்தார். மதவிஷயங்களில் கவர்ன்மெண்டார் எவ்விதம் நடந்து கொண்டால் நடுநிலைமையாகும்; எவ்விதம் நடந்து கொள்வது நடுநிலைமையிலிருந்து மாறியதாகும் என்கிற விஷயத்தைப்பற்றி நான் விவாதிக்கப் போவதில்லை. ஆனால் கவர்ன்மெண்டாருடைய செலவில் எல்லாப் பள்ளிக்கூடங்களிலும் எல்லா மதங்களைப் பற்றிய கல்வியையும் போதிப்பது பல விஷயங்களில் நடு நிலைமையை வகிப்பதாகுமா அல்லது அதினின்றும் பிறழ்ந்து நடப்பதாகுமா 'வென்பதை கனம் மெம்பரே சிந்தித்துப் பார்க்கும் பட்சத்தில் அனுஷ்டானத்தில் அதன்படி செய்வது மிகவும் கஷ்டமான தென்பதும், அவைகளிலிருந்து பேர் சொல்லுவது கஷ்டமான தென்பதும் அவருக்குத் தெரிய வரும்.

## கனம் மிஸ்டர் கில்மன்

கனம் அகமது தம்பி மரக்காயர் அருசிகரமான ஹிந்து முஸ்லிம் கலவர விஷயத்தைப்பற்றி பிரஸ்தாபித்து, பள்ளிவாசல்களுக்கு எதிரில் வாத்தியம் வாசிக்கக்கூடா தென்று உத்திரவு பிறப்பிக்க வேண்டுமென்று சென்னை கவர்ன்மெண்டார் இந்தியா கவர்ன்மெண்டார் மூலமாக இந்தியா மந்திரிக்கு எழுதி அங்கீகாரம் பெற்று இந்தியா முழுவதும் உத்திரவு பிறப்பி வித்துவிட்டால் இந்தத்தொல்லைகள் ஒரு அடியாக ஒழிந்து விடுமென்று யோசனை யாகும் ஹிந்து சமுகத்தார் இதை ஒப்புக்கொள்ளுவார்க ளென்று நான் நினைக்கவில்லை. இந்த விஷயத்தில் வழக்கத்தை ஒட்டியே நடந்து கொள்ள வேண்டும். இந்த மாகாணத்தில் ஒவ்வொரு பட்டணத்து வழக்கத்திற்கும் வித்தியாச மிருக்கிறது. ஒவ்வொரு இடத்தின் வழக்கம் இன்ன தென்பதைக் கண்டறிய வேண்டியது கவர்ன்மெண்டு உத்தியோகஸ்தர்களின் முக்கிய பொறுப்பு. சில இடங்களில் மேள வாத்தியங்கள் கூடா தென்கிற வழக்க மிருந்து வருகிறது. சில இடங்களில் ஹிந்துக்களுக்கு வாத்தியங்கள் வாசித்துக்கொண்டு போக சுதந்தர மிருக்கிறது. திருவல்லிக் கேணியில் நீண்டகாலமாக இருந்த தகராறு என்னுடைய நண்பர்

ஜனம் மிஸ்டர் அவிஸாடீனால் சமாசமாகத் தீர்த்து வைக்கப்பட்டது. நீண்ட காலமாக தகராறு இருந்து வருமாயின், அதில் தலையிட்டு சமரஸமான முடிவை உண்டுபண்ண அதிகாரிகளுக்கு உதவி செய்வது ஜனத்தலைவர்களுடைய கடமை. ஒரு பொது விதிமூலமாக தகராறைத் தீர்த்து வைத்து விடமுடியாது. அது முற்றிலும் அசாத்தியமான காரியம். காஸர் கோடு கலகத்தைப் பற்றின விவரங்கள் இன்னும் கிடைக்கவில்லை. மாப்பிள்ளைமார்களால் தான் ஏற்பட்டதென்று பொதுவாகத் தெரியவருகிறது. குறிப்பிட்ட ஒரு தினத்தில் அந்த ஊரில் ஹிந்துக்களின் கொண்டாட்டம் நடைபெற வேண்டும். வேறு தினத்திற்கு அதை மாற்றி வைத்துக் கொள்ள முடியாது. இருந்தாலும் அதே தினத்தில் மாப்பிள்ளைமார்கள் தங்களுடை பள்ளிவாசலில் ஒரு மதச் சடங்கை நடத்த ஆரம்பித்தார்கள். அதன் பலனாக கலகமேற்பட்டது. இது தான் எங்களுக்கு எட்டியிருக்கும் தகவல். முடிவான செய்திகள் கிடைக்கவில்லை. இருந்தாலும் இப்படித் தான் நடந்திருப்பதாகத் தெரிகிறது.

ரயில்வே பிளாட்பாரங்களில் முகம்மதியர்களுக்காக போஜன சாலைகளை ஏற்படுத்துவது உபயோகமாக இருக்குமென்று தெரிகிற இடங்களில் அவைகளை ஏற்படுத்த ரயில்வே கம்பெனியார் சித்தமாக இருக்கிறார்கள்.

## 1919

### [ஏப்பிரல் மாதம் 7-ம் தேதி நடந்த கூட்டம்]

அக்கிராஸனாதிபதி அவர்களே,

வரவு செலவு திட்டத்தைப்பற்றி என்னுடைய அபிப்பிராயத்தைத் தெரிவித்துக் கொள்ளுமுன், தங்களுக்கு இந்த சபையின் பிரசிடெண்டு ஸ்தானம் கிடைத்ததற்காக என்னுடைய சந்தோஷத்தைத் தெரிவித்துக் கொள்ளுகிறேன். வரவு செலவு திட்டம் வெகு ஒழுங்காகத் தயாரிக்கப்பட்டிருப்பதற்கு நாம் வரவு செலவு மெம்பரைப் பாராட்ட வேண்டும்.

கட்டாய ஆரம்பக் கல்விக்கு இம்மாகாணத்தில் இன்னமும் வழி ஏற்படாமலிருப்பதற்கு நான் மிகவும் வருந்துகிறேன். மற்ற மாகாணங்களெல்லாம் இவ்விஷயத்தில் முந்திக்கொண்டு விட்டன. இந்த மாகாணத்திலும் ஒரு மசோதா தயாராகி யிருப்பதாகச் சொல்லப்பட்டது. இன்னமும் கவர்ன்மெண்டாருக்கு அதை ஆஜர்ப்படுத்த நல்ல வேளை வராதது ஆச்சரியமாக இருக்கிறது. கட்டாயக் கல்வி இல்லாததினால் நமது மாகாண வாசிகள் ஆளாகியிருக்கும் பல குறைகளைப் பற்றியும் நான் இதர சந்தர்ப்பத்தில் சொல்லிக்கொண்டிருக்க வேண்டியதில்லை. ஆகவே கூடிய சீக்கிரத்தில் கவர்ன்மெண்டார் இந்த மசோதாவை ஆஜர்ப்படுத்தி விடுவார்களென்று நம்புகிறேன்.

என்னுடைய வேண்டுகோளின்மேல் கவர்ன்மெண்டார் இந்தியரைக் கப்பலோட்டும் சாஸ்திரத்தில் பயிற்சிசெய்து வைக்க சிரத்தை எடுத்துக் கொண்டிருப்பதாக நான் கவர்ன்மெண்டாருக்கு வந்தனம் செலுத்துகிறேன். அதற்காக வேண்டிய பணத்தை கவர்ன்மெண்டார் ஒதுக்கிவைப்பார்களென்றே நம்புகிறேன். சமீபத்தில் மாகாணத் துறைமுக உத்தியோகஸ்தர் ஆபீசில் நடந்த கான்பரென்ஸில் கப்பலோட்டும் சாஸ்திரத்தைக் கற்றுக்கொடுப்பதற்கு கடலில் பயிற்சி செய்து வைப்பது தான் சரியான உபாயமென்று தீர்மானிக்கப்பட்டிருக்கிறது. அவ்விதம் கல்வி கற்றுக் கொடுப்பதற்காகவும், துறைமுகத்து வியாபாரத்திற்காக உபயோகித்துக் கொள்ளுவதற்காகவும், இரண்டு மரக்கலங்களை வாங்கவாவது அல்லது வாடகைக்குஅமர்த்திக்கொள்ளவாவதுவேண்டும். இதனால் கவர்ன்மெண்டாருக்கு முடிவில் லாபமே கிடைக்கலாம். ஆகவே ஆரம்பத்தில் இதற்கு வேண்டிய செலவுகளுக்காக கவர்ன்மெண்டார் பணத்தை ஒதுக்கி வைக்க வேண்டும்.

தொழிற் கல்வியை அபிவிருத்தி செய்ய வேண்டிய அவசியத்தை நான் ஓயாமற் கவர்ன்மெண்டுக்கு எடுத்தோதி பெரிய ஒர்க் ஷாப்பிருந்து வரும் நாகப்பட்டணத்தில் ஒரு தொழிற்பாடசாலையை ஏற்படுத்த வேண்டுமென்று சொல்லியிருக்கிறேன். நான் சொன்ன யோசனையை கவர்ன்மெண்டார் அனுகூலத்துடன் ஏற்றுக்கொண்டும் கிரியாம்சையில் ஒன்றும் செய்யாதது எனக்கு ஆச்சரியமாக இருக்கிறது. பணமில்லாத கஷ்டத்தை ஒரு சாக்காகச் சொல்லலாம். இருந்தாலும் கல்வி சம்பந்தமான அம்சத்தில் இதைப்போன்ற ஒரு பரிட்சார்த்த முறையை கவர்ன்மெண்டார் நீண்ட காலத்துக்கு ஒத்திப் போடுவது சரியல்லவென்று நான் அதிகம் சொல்லத் தேவையில்லை. கவர்ன்மெண்டாருக்கு முழுப்பணத்தையும் கொடுக்க சக்தியில்லாவிடில் இந்த மாகாணத்திற்குள்ளேயே கொழுத்ததான தஞ்சாவூர் ஜில்லா போர்டையாவது இதற்குப் பணம். கொடுத்துதவும்படி கவர்ன்மெண்டார் சொல்லியிருக்கலாம்.

சென்னை நகர முனிசிபல் மசோதாவில் முகம்மதியர்களின் பிரதிநிதித்துவ விஷயமாக தக்க பாதுகாப்புகளை ஏற்படுத்தாததைக் கண்டு என்னுடைய சமுகத்தார் மிகுந்த ஏமாற்றத்தை அடைந்திருக்கிறார்கள். இனி ஜில்லா முனிசிபாலிட்டிகள் சட்டமும் திருத்தப்படப் போவதால் ஸ்தலஸ்தாபனங்களில் பிரத்தியேகப் பிரதிநிதித்துவமும் வேண்டுமென்று விரும்பும் என் சமுகத்தாரின் ஆவலை அதிலாவது கவர்ன்மெண்டார் பூர்த்தி செய்து வைப்பார்களென்று நம்புகிறேன்.

யாத்ரீகர்கள் கமிட்டி ரிபோர்ட்டு விஷயமாக கவர்ன்மெண்டார் சமீபத்தில் வெளியிட்டிருக்கும் அறிக்கைக்காகவும் நாகூரின் சுகாதார நிலைமையை அபிவிருத்தி செய்ய கவர்ன்மெணடார் 12000 ரூபாய் கிராண்டு

கொடுத்திருப்பதற்காகவும் நாகூர் நாகப்பட்டணம்வாசிகள் கவர்ன் மெண்டாருக்கு விசேஷ நன்றியுள்ளவர்களாக இருக்கிறார்கள். ரயில்வே ஸ்டேஷனுக்கு அருகாமையில் பொது ஜனங்கள் தங்கியிருப்பதற்காக சத்திரங்கள் கட்டவேண்டுமென்று கமிட்டியார் செய்திருந்த சிபார்சுகளை கவர்ன்மெண்டார் அங்கீகரித்து அதற்காகப் பணம் ஒதுக்கி வைக்காதது விசனிக்கத் தக்கது. யாத்ரீகர்கள் கமிட்டி ரிபோர்ட்டிலிருந்து நாகூர் ஒரு பிரபல புண்யஸ்தலமென்பதும் இந்தியா, சிலோன், பர்மா முதலிய இடங்களின் எல்லா பாகங்களிலிருந்தும் முகம்மதியர்களும் ஹிந்துக்களும் கந்தூரி உற்சவத்திற்காக ஆயிரக்கணக்காக வருஷந்தோறும் வந்து கூடுகிறார்களென்பதும் கவர்ன் மெண்டாருக்குத் தெரிந்திருக்கும். வருஷந்தோறும் ஆயிரக்கணக்கான ஜனங்கள் கூடுமிடத்தில் அவர்களுக்கு தங்கியிருக்க இடவசதிகள் வேண்டியதவசிய மென்பதை நான் அதிகம் சொல்லத் தேவையில்லை. இப்போது தங்கியிருக்க போதிய இடங்களில்லாததால் யாத்ரீகர்கள் சுகாதாரக் கேடாகவும் அசுத்தமாகவுள்ள பக்கங்களில் ஏற்கனவே நிறைந்து கிடக்கும் வீடுகளில் வந்து அடைந்து நகரின் க்ஷேமத்திற்கே அபாயத்தை விளைவிக்கிறவர்களாகி விடுவார்கள். ஆகவே சமயம் வாய்க்கும்போது இவ்விஷயத்தில் கமிட்டியார் செய்திருக்கும் சிபார்சுகளின்படி கவர்ன்மெண்டார் ஏற்பாடு செய்வார்களென்றே நம்புகிறேன்.

கூடிய சீக்கிரத்தில் நாகப்பட்டணத்தில் வடிகால் வசதியை ஏற்படுத்தி விடவேண்டுமென்று அந்தக் கமிட்டியார் செய்திருக்கும் மற்றொரு சிபார்சை நிறைவேற்றி வைக்க கவர்ன்மெண்டாருடைய செல்வ நிலை இடந்தராதது துர்ப்பாக்கிய வசமேயாகும். நாகப்பட்டணத்திலும் நாகூரிலும் வடிகால் வேலைகளைச் செய்து முடிக்கவேண்டிய அவசியத்தை பல தடவைகளில் நான் இந்த சபையில் வற்புறுத்தியிருக்கிறேன். ஆனால் யுத்தம் காரணமாக ஒன்றும் செய்ய முடியாமற் போய்விட்டது. இப்பொழுது யுத்தம் தீர்ந்து விட்டபடியாலும், நாகப்பட்டணம் வாசிகள் சாக்கடை வசதிகள் இல்லாத கஷ்டத்தை மிகவும் அனுபவிப்பதாலும் அதிலும் ஜலசப்ளை ஏற்பட்ட பிறகு வடிகாலில்லாத கஷ்டங்கள் மிகவும் அதிகமாகி விட்டபடியாலும், கூடிய சீக்கிரத்தில் கவர்ன்மெண்டார் நாகப்பட்டணத்தில் வடிகால் வேலைகளைச் செய்துமுடிக்க ஏற்பாடு செய்வார்களென்று நம்புகிறேன்.

வெளியிடங்களில் இந்திய உத்தியோகஸ்தர்களுக்கு குடியிருப்பு வசதிகள் செய்து கொடுக்க வேண்டுமென்று வெகு காலமாக கவர்ன்மெண்டாரை நான் வற்புறுத்திக் கொண்டு வந்திருக்கிறேன். என்னுடைய வேண்டுகோள் தக்கவாறு கவனிக்கப்படாததற்கு வருந்துகிறேன். சென்னையிலுள்ள அவர்களுடைய சகோதர உத்தியோகஸ்தர்களுக்கு தகுதியான இடங்களை அமைத்துக் கொடுத்திருந்தும், வெளியிடங்களிலுள்ள உத்தியோகஸ்தர்கள் வீடுகளைத் தேடிக்கொண்டு தெருக்களில் திரியவிடப்பட்டி

ருக்கிறார்கள். முக்கியமான எல்லா நகரங்களிலும் இந்த முடைதீரும் வரை யில் வருஷத்திற்குக் சொந்சமாக் கவர்ன்மெண்டார் பணம் ஒதுக்கி வைக் துக்கொண்டு வரவேண்டு மென்பதே நான் சொல்லும் யோசனை. யுத்த காலத்தில் இந்த யோசனையை கவர்ன்மெண்டார் கவனிக்காமலே இருந்திருக் கலாம். ஆனால் நாம் சமாதான தாரையை ஊதும் காலத்திற்கு வந்த பிறகு சென்னை உத்தியோகஸ்தர்களைப் போலவே வெளியூர் உத்தியோகஸ்தர்களுக் கும் கவர்ன்மெண்டார் குடியிருப்பு வசதிகள் செய்து கொடுக்க வேண்டிய தவசியம்.

கடைசியாக, உணவுபொருள்களின் விலையேற்றத்தைப் பற்றியும், அதன் பலனாக ஆயிரக்கணக்கான ஏழை ஜனங்கள் படுங்கஷ்டங்களைப்பற்றி யும் இரண்டொரு வார்த்தைகள் சொல்லிக் கொள்ளாவிடில், என்னுடைய கடமை தவறியவனாவேன். அநேக முக்கிய பட்டணங்களில் ஸ்தல ஸ்தாப னங்கள் உணவுப்பொருள்களை வாங்கி ஏழை ஜனங்களுக்கு சாதாரண விலை க்குவிற்று அவர்களுடைய அசவுகரியங்களைக் கூடியவரையில் நிவர்த்தித்து வருவது பாராட்டத்தக்கது. பணமில்லாததினால் சில முனிசிபாலிட்டிகள் அவ்விதம் செய்ய முடியாமலிருக்கின்றன. அவ்வித கேஸ்களில் அவைகள் உணவுப் பொருள்களை வாங்கி சில்லரையில் வாங்கின விலைக்கு விற்க கவர்ன் மெண்டார் அவைகளுக்குப் பணம் கொடுத்துதவும் படிக்காவது அல்லது மதராஸ் பாங்கியில் கடன் வாங்கிக் கொள்ள அனுமதிக்கும் படிக்காவது நான் கேட்டுக் கொள்ளுகிறேன்.

கடைசியாக, இது இந்த சபையின் கடைசி கூட்டமாதலால் என்னு டைய சமுகத்தினரின் சார்பாக கவர்னமெண்டார் எங்களுக்கு செய்துவரும் நன்மைக்காகவும் நாங்கள் அடைந்து வரும் சவுகரியங்களுக்காகவும், இந்த சபையிலுள்ள முஸ்லீம் பிரதிநிதிகளிடம் கவர்ன்மெண்டார் அன்பாகவும் மரியாதையாகவும் நடந்து வந்திருப்பதற்காகவும் என்னுடைய நன்றியைத் தெரிவித்துக் கொள்ளுகிறேன்.

## கனம் மிஸ்டர் ஸீ. ஜீ. டாட்ஹண்டர்

வெளியிடங்களிலுள்ள ரிவினியூ இலாகா உத்தியோகஸ்தர்களுக்கு குடியிருப்பு வசதிகள் செய்து கொடுக்க வேண்டுமென்று கனம் அகமது தம்பி மரக்காயர் கேட்கிறார். வீடுகள் கிடைப்பது கஷ்டமாயிருக்கும் இடங் களில் இவ்விதம் செய்து கொடுக்க கவர்ன்மெண்டார் இஷ்டமுள்ளவர் கள் தான். இதற்காக இனி வரப்போகும் வருஷங்களில் பணம் ஒதுக்கி வைக்கப்படும் போது அதற்காக 45 லக்ஷம் வரையில் வேலைகள் என்கிற துர்பாக்கியச் செலவினத்தை கனம் மெம்பர்கள் ஆட்சேபிக்க இடமுண்டு பண்ணிக் கொள்ள மாட்டார்களென்றே நினைக்கிறேன்.

## 1920

### [எப்ரில் மாதம் முதல் தேதி நடந்த கூட்டம்]

மேன்மை தங்கிய பிரபுவே,

வழக்கம்போல் இந்த சந்தர்ப்பத்தில் சிலவார்த்தைகள் சொல்லு முன், வரவு செலவு மெம்பர் இந்த திட்டத்தை வெகு ஜாக்கிரதையாகத் தயாரித்திருப்பதற்காகவும், கமிட்டியில் இதைப்பற்றி விவாதம் நடந்தபோது கனம மெம்பர்களிடம் அவர் காட்டிய மரியாதைக்காகவும் வந்தனம் செலுத்த கடமைப்பட்டிருக்கிறேன்.

நமது மாகாணத்தின் தொழிலபிவிருத்தியில் தாங்கள் விசேஷ சிரத்தை எடுத்துக் கொண்டிருப்பதற்கு நான் சந்தோஷப்படுகிறேன். சமீபத்தில் தாங்கள் ஒரு கான்பரென்ஸும் கூட்டி வைத்தீர்கள். தொழிலபிவிருத்திக்குற்ற அநேக விஷயங்களும் அதில் விவாதிக்கப்பட்டன. தாங்கள் முடிவான திட்ட மொன்றைத் தயாரித்து டில்லியில் கூடும் டைரக்டர்கள் கான்பரென்ஸ் முன்பாக அதை ஆஜர்ப்படுத்துவதற்காக தொழில் இலாகா டைரக்டரிடம் கொடுத்து அனுப்பியிருப்பீர்களென்று நம்புகிறேன். தொழில் விவசாயம் ஆகிய இரண்டு விஷயங்களிலும் தாங்கள் மிகால சிரத்தை எடுத்துக்கொண்டிருப்பதால் தங்களுடைய ஆட்சி காலத்திற்குள்ளேயே அன்னிய நாட்டு சாமான்களை நாம் எதிர் பார்த்திராமல் நமது தேவைகளை இங்கேயே உற்பத்தி செய்து கொள்ளும் நிலைமை ஏற்பட்டு விடுமென்று நம்புகிறேன். நமது மாகாணத்தில் தொழில்களுக்கு உபயோகமான என்னென்ன மூலப் பொருள்கள் கிடைக்குமென்று பரிசீலனை செய்து தெரிந்துகொண்டு அவசியமானால் முதலெடுப்பில் கவர்ன்மெண்டாரே அந்தத் தொழில்களை ஆரம்பித்து நாளடைவில் தனிப்பட்ட நபர்களிடம் அந்தத் தொழில்களைத் திருப்திகரமாக நடத்தி வைக்க ஒப்புவித்து விடலாமென்று யோசனை சொல்லிக்கொள்ள விரும்புகிறேன்.

நாகப்பட்டணம், காக்கிநாடா, கள்ளிக்கோட்டை ஆகிய மூன்று இடங்களிலும் கப்பலோட்டும் சாஸ்திர போதனா பாடசாலைகளை ஏற்படுத்த அனுமதி கொடுத்ததற்காகவும் கப்பித்தான் முகம்மது அப்துல் காதர் மாலுமியாரை போதகாசிரியராக நியமனம் செய்ததற்காகவும் தங்களுக்கு எனது மனப்பூர்த்தியான வந்தனத்தைச் செலுத்துகிறேன். முதன் முதலாக இப்பொழுது தான் இத்தகைய போதனா பாடசாலைகள் இந்தியாவில் ஏற்படுவதால், வியாபாரிகளும், முக்கிய [illegible]ப்க் கப்பல்களின் சொந்தக்காரர்களும் தங்களை வெகுவாகப் பாராட்டுவார்களென்பதில் சிறிதும் ஐயமில்லை. மேட்டிகளுக்கு மாதம் 10 ரூபாயும் கப்பித்தான்களுக்கு மாதம் 15 ரூபாயும்

பாடசாலைக் கட்டணம் ஏற்படுத்தி யிருப்பதாகத் தெரிகிறது. இந்தப் பாடசாலைகளை நடத்தி வருவதில் அதிகச் செலவு ஏற்படாததாலால் இலவசமாகவே அவர்களுக்கு கற்றுக்கொடுக்க வேண்டுமென்பது எனது அபிப்பிராயம் இது வெகு முக்கியமான விஷயமானதினால் தங்களுடைய கவர்ன்மெண்டார் நான் சொல்லும் யோசனையை அனுகூலமாக கவனிப்பார்களென்று நம்புகிறேன்.

கடுவையாற்றுக்கு நீண்ட காலமாக பாலமில்லாமலிருந்த குறையை நிவர்த்திக்க நான் இடைவிடாது வற்புறுத்தி வந்ததை கவர்ன்மெண்டார் கவனித்து, அந்தப் பாலத்தைக்கட்டுவதற்காக 60000-ரூபாய் சாங்கிஷன் செய்ததற்காக நான் என்னுடைய வந்தனத்தைச் செலுத்துகிறேன். கூடிய சீக்கிரத்தில் பால வேலையைத் துவக்கிவிட கவர்ன்மெண்டார் ஏற்பாடு செய்வார்களென்று நம்புகிறேன்.

நாகப்பட்டணத்தில் மிருக வைத்திய சாலை யொன்றைக் கட்டுவதற்காக 10000 ரூபாய் ஒதுக்கி வைத்ததற்கும் எனது மனப்பூர்த்தியான நன்றியைத் தெரிவித்துக் கொள்ளுகிறேன். இந்த வருஷத்திற்குள்ளேயே இந்த வேலை முடிந்துவிடுமென்று நம்புகிறேன்.

நாகூரில் கந்தூரி உத்ஸவம் நடைபெறும்போது அங்கு ஏராளமாக யாத்திரீகர்கள் வந்து குவிவதால் ஏற்படும் ஜன நெரிசலை நிவர்த்திப்பதற்காக நாகூரில் சத்திர மொன்றைக்கட்ட 12000 ரூபாய் கவர்ன்மெண்டார் மனமுவந்து கொடுத்ததற்காக நான் வந்தனம் செலுத்துகிறேன், இதனால் நாகூரில்தான் ஜன நெரிசல் நிவர்த்தியாகுமே தவிர நாகப்பட்டணத்தில் ஜன நெரிசல் குறையாது. யாத்திரீகர்கள் ஏராளமாக அங்கு வந்திறங்கி பள்ளிவாசல்களிலும் சுகாதாரக் கேடான இடங்களிலும் தங்கி வருகிறார்கள். நாகப்பட்டணத்தில் ஏராளமாக முகம்மதியர்கள் வசித்து வருவதால் அவர்களுடைய உதவியையும் தயவையும் எதிர்பார்த்து யாத்திரீகர்கள் ஏராளமாக அங்கு வந்து இறங்கி விடுகிறார்கள், தவிரவும் ஊர்வலம் நாகப்பட்டணத்திலிருந்தே புறப்படுவதால் ஜனங்கள் அங்கேயே இறங்கி தங்கி யிருந்து ஊர்வலத்துடன் நாகூருக்கு கப்பி ரஸ்தா வழியாகப் போகிறார்கள். ஆகவே நாகப்பட்டணத்திலும் ஒரு சத்திரம் கட்ட வேண்டியது அவசியமாக இருக்கிறது. சத்திரத்தைக் கட்டி வைத்ததால் கந்தூரிக்கு வரும் முகம்மதிய யாத்ரீகர்களுக்கு உபயோகமாயிருப்பதுடன் வேளாங்கண்ணி ஆரோக்கிய மாதா உத்ஸவத்திற்காக வரும் ஏராளமான கிறிஸ்தவ யாத்திரீகர்கள் தங்கிப்போவதற்கும் அது பிரயோஜனப்படும், நாகப்பட்டணத்திலேயே நடைபெறும் ஹிந்துக்களுடைய உத்ஸவங்களுக்காக வருகிறவர்களுக்கும் அது உபயோகப்படும், ஆகவே நாகப்பட்டணத்தில் சத்திரம் கட்டுவது எல்லா வகுப்பினருக்கும் உபயோகமாயிருக்குமாதலால் அதற்காக

20000 ரூபாய் ஒதுக்கிவைக்கும்படி நான் வேண்டிக்கொள்ளுகிறேன். வரவு செலவு திட்டததைப் பரிசீலனை செய்த கமிட்டியின் முன்பாக நான் இந்த யோசனையைச் சொல்லிக்கொள்ளவில்லை யென்பது வாஸ்தவமே. இருந்தாலும் நாகப்பட்டணத்தில் வந்து குவியும் எல்லா வகுப்பு பிரயாணிகளினுடைய கஷ்டங்களையும் நிவர்ததிப்பதற்காக இந்த விஷயததை கவர்ன்மெண்டார் அனுகூலமாக கவனிதது தக்க ஏற்பாடுகளைச் செய்யும்படி வேண்டிக் கொள்ளுகிறேன்

நாகப்பட்டணததிற்கு சரியான வடிகாலை அமைததுக் கொடுக்க வேணடிய அவசியததையும் நான் வற்புறுத்த வேண்டி யிருக்கிறது. கனம் சர்ஜன் ஜெனரல் மூடின சாக்கடைகள் தேவலை யென்று அபிப்பிராயப்பட்டதால் கவர்ன்மெண்டார் திறந்த சாக்கடைகளைக் கட்டி முடிக்க ஒப்புக்கொள்ளவில்லை, மூடின சாக்கடைகளை ஏற்படுததும் விஷயமாகப் பரிசீலனை செய்யும்படி உததிரவு பிறந்திருக்கிறது ஆனால் சுகாதார எஞ்சினீர் திட்டததைத தயாரிதது விட்டாரா வென்று எனக்குத தெரியவில்லை. நான் எஞ்சினீரிங் சாஸ்திரததில் நிபுண னல்லவாயினும் நாகப்பட்டணம் போன்ற துறைமுகப்பட்டணததில் மழைத தண்ணீரை அடிததுக்கொண்டு போக மூடின சாக்கடைகளுடன் கூட திறந்த சாக்கடைகளு மிருக்க வேண்டிய தவசிய மென்று அபிப்பிராயப்படுகிறேன். அதற்கு வேண்டிய பணததை இப்பொழுதே கொடுக்க சாததிய மில்லாமலிருக்கலாம். இந்த மாதிரியான வேலைகள் ஒரே வருஷததில் முடியக் கூடியன வல்ல வானதினால் மூன்று வருஷங்களில் வருஷததிற்குக் கொஞ்சமாகப் பணததைக்கொடுதது வேலையை முடிததுவிடலாம. ஆகவே இந்த வேலையை ஜரூர்படுதத இந்த வருஷததில் மூன்றிலொருபங்கு பணததையாவது செலவிட ஒதுக்கி வைக்கும படி கேட்டுக் கொள்ளுகிறேன். நாகப்பட்டணம தெருக்களில் அசங்கியமாக சாக்கடைத தொட்டிகள் காணப்படுவதும தெரு நெடுக சாக்கடைத தண்ணீர் வழிந்தோடுவதும பார்க்க சகிக்காமலிருப்பதோடு, கொசுக்களுக்கும அந்த இடங்கள் உறைவிடமாகி விடுவதால் இந்தக் கஷ்டததை உடனே நிவர்ததிக்க வேண்டுமென்று எனக்கு பெருங் கவலையாக யிருக்கிறது. ஜலசப்ளை ஏற்படுததப்பட்ட பிறகு வடிகால் வேலையைத தொங்கலில் விட்டுக் கொண்டிருப்பது சரியல்ல. என்னுடைய ஊரில் கொசு உபததிரவம தொலைந்தால் போதுமானது. எந்த திட்டததை சாங்கிஷன் செய்தாலும எனக்கு அதைப்பற்றி ஆட்சேபணை யில்லை.

டிப்டி கலெக்டர்கள், தாசில்தார்கள், மாஜிஸ்திரேட்டுகள், சப் ஜட்ஜுகள், முன்சிப்புகள், சிவில் சர்ஜன்கள் ஆகிய இந்திய உததியோகஸ்தர்களுக்குக் குடியிருப்பு வசதி தரவேண்டுமென்று நான் இடைவிடாது வற்புறுததிருக்கிறேன். என்னுடைய யோசனைகளை அதுவரையில் கவர்ன்மெண்

டார் அனுகூலமாக கவனிக்கவில்லை. புதிதாக உப்பளத்தை ஏற்படுத்தினாலும், புதிதாக போலீஸ் சர்க்கிளொன்றை ஏற்படுத்தினாலும், கவர்ன்மெண்டார் உடனே அந்த உத்தியோகஸ்தர்களுக்கு குடியிருப்பு வசதி செய்து கொடுத்து விடுகிறார்கள். நான் குறிப்பிடுகிற உத்தியோகஸ்தர்களுக்கும் அவர்களுக்கும் எவ்வித வித்தியாசமுல்லை. வரவர பட்டணங்களில் ஜனநெரிசல் அதிகப்பட்டு வருவதால் அவர்களுக்குக் குடியிருக்கத் தகுதியான இடங்கிடைப்பது துர்லபமாயிருக்கிறது. அநேக இடங்களில் அந்த உத்தியோகஸ்தர்கள் வீட்டுக்காரர்களுடைய தயவை அதிகமாக எதிர்பார்த்திருக்க வேண்டியிருக்கிறது. அநேகர் கவர்ன்மெண்டு உத்தியோகஸ்தர்களுக்கு உதவி செய்ய மனமில்லாமல் தங்களாலான இடைஞ்சல்களைச் செய்கிறார்கள். வீடுகளைக் கட்டி வாடகை யில்லாமல் கொடுக்கவேண்டு மென்று நான் சொல்லவில்லை. அந்த உத்தியோகஸ்தர்கள் தங்களுடைய சம்பளத்தில் ஒரு பாகத்தை வாடகைக்காக கொடுக்கத் தயாராக இருப்பார்கள். ஆகவே இந்த விஷயத்தைப்பற்றி உடனே கவர்ன்மெண்டார் கவனிக்கவேண்டும்,

மேலும் பரிக்ஷார்த்தப் பண்ணைகளையும் விவசாயப் பண்ணைகளையும் ஏற்படுத்தவேண்டும். வரவர சாஸ்திரோக்தமான எருவுக்கு கிராக்கியிருந்து வருவதால் விவசாயப் பண்ணைகளில் சாஸ்திரோக்தமான எருவைத் தயாரிப்பதற்கு சிறிய தொழிற் சாலைகளையும் ஏற்படுத்த வேண்டும். விவசாய இலாகாவில் தேர்ந்த பெயர்வழிகளை அதிகமாக நியமித்து அவர்கள் பிரசார வேலை செய்வதின் மூலமாக விவசாயிகளுக்கு வரவர சிரத்தை அதிகரித்திருக்கிறது. மேலும் விவசாய இலாகா உயர்தர உத்தியோகஸ்தர்கள் படித்தவர்களுடனும் விவசாயத்திலேயே ஈடுபட்டவர்களுடனும் நெருங்கிப் பழகிவர வேண்டும்,

இப்போது டிஸ்திரிக்ட் மாஜிஸ்திரேட்டுகள், டிஸ்திரிக்ட் ஜட்ஜுகள், போலீஸ் சூபரிண்டெண்டுகள், கவர்ன் மெண்டு சிக்ரிடரிகள் முதலிய உயர் பதவிகளில் முகம்மதியர்களொருவருமில்லாததால் அவர்களுக்கு அந்த ஸ்தானங்களைக் கொடுக்க கவர்ன் மெண்டார் ஏற்பாடு செய்ய வேண்டும் என்று சொன்னார்.

# சென்னை சட்ட சபை.



## பிரிவு III

## தீர்மானங்கள்.



சென்னை சட்ட சபையில் கனம் கான்பகதூர் அ. க. கு. அகமது தம்பி மரக்காயர் ஸ்தானம் பெற்றது முதல் 8 வருஷ காலமாக அவர் சபையில் விவாதத்திற்குக் கொண்டுவந்திருக்கும் தீர்மானங்களின் விவரங்களையும் அவைகளைப் பற்றி அவர் செய்திருக்கும் பிரசங்கங்களின் விவரங்களையும் கீழே காணலாம்:—

### [1913-ம் வருஷம் நவம்பர் மாதம் 11-ம் தேதி நடந்த கூட்டம்]

"1. இப்பொழுது ரம்ஸான் பண்டிகைக்காக மாத்திரம் ஒரு நாள் விடுமுறை கொடுபடுவதுடன், கைம் மாறக்கூடிய தஸ்தாவேஜிகளைப் பற்றிய சட்டத்தின்படி பக்ரீத், ரம்ஸான், பாராவபாத், மொஹரம் இவைகளுக்குக் குறைந்தது 4 விடு முறை நாட்கள் ஏற்படுத்த வேண்டுமென்று இந்த சபையானது ஆலோசனை சபையுடன் கூடிய கவர்னருக்கு சிபார்சு செய்கிறது."

"2. எல்லா முகம்மதிய கவர்ன்மெண்டு உத்தியோகஸ்தர்களும் வெள்ளிக்கிழமைகளில் ஜும்மா பிரார்த்தனைகள் செய்வதற்காக குறைந்தது ஒரு மணி ரஜாவாவது கொடுக்கும்படி உத்திரவு செய்ய வேண்டுமென்று இந்த சபை ஆலோசனை சபையுடன் கூடிய கவர்னருக்கு சிபார்சு செய்கிறது."

### மேன்மைதங்கிய கவர்னர்.

மேலே கண்ட இரண்டு தீர்மானங்களும் மிஸ்டர் அகமது தம்பி மரக்காயர் பேராலிருக்கின்றன. அவரும் கனம் மிஸ்டர் வி. கே. ராமனுஜாச்சாரியாரும் தாங்கள் இன்று வர முடியாமற் போய்விட்டதென்றும், தங்களுடைய தீர்மானங்களை பாக்கியில் வைத்திருக்க வேண்டு மென்றும் சபையின் காரியதரிசிக்கு அறிவித்திருக்கிறார்கள். அந்தப் பிரகாரம் அனுமதிக்க நான் உத்தேசித்திருக்கிறேன். நாளைய தினம் விவாதத்திற்கு எடுத்துக் கொள்ளப் படுவதற்காக அவைகள் பாக்கியில் வைக்கப்படும்.

## (12—11—1913)

கனம் ஷிபால் முல்க் ஜேயினுலாப்தீன் சாகிப்:—மேன்மைதங்கிய பிரபுவே, தங்களுடைய அனுமதியின்பேரில், கனம் மிஸ்டர் அகமது தம்பி மரக்காயர் பேராலிருக்கும் தீர்மானத்தை நான் பிரேரணை செய்ய விரும்புகிறேன்.

மேன்மைதங்கிய அக்கிராசனுதிபதி:—யார்பேரால் அந்தத் தீர்மானமிருக்கிறதோ அந்த கனம் மெம்பர் அத்தீர்மானத்தை அடுத்த கூட்டம் வரையில் நிறுத்திவைத்துக்கொள்ளும்படி சபையின் காரிய தரிசிக்குக் கடிதமெழுதி யிருக்கிறுர். கனம் மெம்பருக்கு வேறு தகவல் கிடைத்திருந்தாலன்றி அந்த வேண்டுகோளின் பிரகாரம் நாங்கள் நடந்து கொள்ள வேண்டியிருக்கிறது.

கனம் ஷிபால் முல்க் ஜேயினுலாப் தீன் சாகிப்:—தங்களுடைய அனுமதியின்பேரில் அத்தீர்மானத்தைப் பிரேரணை செய்ய எனக்கு அனுமதி கொடுக்கும்படி கனம் மிஸ்டர் மரக்காயரைத் தந்தி மூலமாகக் கேட்க உத்தேசித்திருக்கிறேன்.

மேன்மைதங்கிய அக்கிராஸனுதிபதி,—அது வரையில் கனம் மெம்பர் செய்து கொண்டிருக்கும் வேண்டுகோளின் பிரகாரமே நாம் நடக்கவேண்டும். ஆகவே தீர்மானமானது அடுத்த கூட்டம் வரையில் பாக்கியிலிருக்க வேண்டும்.

பிறகு தீர்மானங்கள் நிறுத்தி வைக்கப்பட்டன.

## (13—11—1913)

### கனம் ஸர் ஜான் அட்கின்ஸன்

மேன்மை தங்கிய பிரபுவே,

கனம் மிஸ்டர் அகமது தம்பி மரக்காயரால் பிரேரணை செய்யப்பட்டிருக்க வேண்டிய XI (1) தீர்மான சம்பந்தமாக அதில் கண்ட விஷயத்தைப் பரிசீலனை செய்ய கவர்ன்மெண்டார் ஒரு கமிட்டியை நியமிக்கப்போவதாக அறிவிக்க உத்தேசித்திருந்தேன். பிறகு XVIII-வது தீர்மானத்தை கவனித்தேன். அதை இப்பொழுது கனம் மிஸ்டர் டி. வி. சேஷகிரியர் பிரேரணை செய்திருக்கிறுர். அதில் கண்டிருக்கும் விஷயமும், மற்றொரு தீர்மானத்தில் கண்ட விஷயமும், தீர்மான மூலமாக சபையின் முன்பாக விருப்பது நிற்க, கூடியவரையில் எல்லா வகுப்பின் பிரதிநிதிகளும் அடங்கிய பொதுக்கமிட்டியின் பரிசீலனைக்கு அனுப்பப்பட்டு அதன் ரிபோர்ட்டின் மேல் கவர்ன்மெண்டார் காலக்கிரமத்தில் உத்திரவு பிறப்பிவிக்க வேண்டுமென்று தோன்றுகிறது.

சுற்றுக்கடிதம் நம்பர் 1.

## ஜும்மா தொழுகைக்காக ரஜா.

நாகப்பட்டணம்,

1-12-1913.

அன்புள்ள சகோதரரே,

முகம்மதிய கவர்ன்மெண்டு உத்தியோகஸ்தர்களுக்கு வெள்ளிக்கிழமைகளில் ஜும்மா பிரார்த்தனை செய்வதற்காக ஒரு மணி நேரம் ரஜாக் கொடுக்க வேண்டுமென்று நான் கவர்ன்மெண்டாரைக் கேட்டுக் கொண்டிருந்தது உங்களுக்குத் தெரிந்த விஷயம். அதன் பிரகாரம் விடுமுறை கொடுத்திருப்பதாக கவர்ன்மெண்டார் கீழே கண்ட கவர்ன்மெண்டு உத்திரவை வெளியிட்டிருக்கிறார்கள்.

## மதராஸ் கவர்ன்மேண்டு பப்ளிக் டிபார்ட்டுமேண்டு.

1913-ம் வருஷம் நவம்பர் மாதம் 14-ம் தேதியுள்ள நம்பர் 1408-பப்ளிக்

உத்திரவு.

வெள்ளிக்கிழமைகளில் ஜும்மாப் பிரார்த்தனைகள் செய்வதற்காக ரஜாக் கோரும் முகம்மதிய கவர்ன்மெண்டு உத்தியோகஸ்தர்களுக்கு ஒரு மணி நேரம் விடுமுறை கொடுக்கும்படி ஆலோசனை சபையுடன் கூடிய கவர்னர் தயைகூர்ந்து உத்திரவு செய்கிறார்.

2. எத்தனை மணிக்கு ரஜாகொடுக்கப்பட வேண்டுமென்று அந்தந்த இடங்களிலுள்ள பள்ளிவாசல்களில் பிரார்த்தனைகள் செய்யப்படும் நேரத்தை அனுசரித்து ஆபீஸ் தலைவர்களால் நிஷ்கரிஷை செய்யப்படும்.

(ஒப்பம்) டப்ளியூ ஓ. ஹார்ன்,

ஆக்டிங் சீப் சிக்ரிட்டரி.

சுற்றுக் கடிதம் நெம்பர் II

## தஞ்சாவூரில் முகம்மதியப் பிரேதத்தை எரித்த விஷயம்.

அன்புள்ள சகோதரரே,

தஞ்சாவூரில் ஒரு முகம்மதியரின் பிரேதத்தை எரித்து விட்ட விஷயமாக 1914-ம் வருஷம் எப்பிரல் மாதம் 2-ந் தேதி கூடிய சட்டசபை மீட்டிங்கில் நான் கேள்வி கேட்டிருந்ததற்கு, ஸ்தலத்ததிகாரிகள் முகம்

மதிய சமூகத்தினரின் மத சம்பந்தமான உணர்ச்சியை மதித்து நடந்து கொள்ளுவார்களென்று இதனுடன் சேர்க்கப்பட்டிருக்கும் உத்திரவை கவர்ன்மெண்டார் வெளியிட்டிருப்பதை தங்களுடைய அன்பார்ந்த அறிவிப்புக்குக் கொண்டு வருகிறேன்.

## மதராஸ் கவர்ன்மேண்டு லோகல் அண்டு முனிசிபல் டிபார்ட்டுமேண்டு.

1914-ம் வருஷம் எப்பிரல் மாதம் 18-ம் தேதியுள்ள

நம்பர் 246—பி உத்திரவு.

அடியிற்கண்ட ரிகார்ட்டுகள் படிக்கப்பட்டன:—

1914-ம் வருஷம் எப்பிரல் மாதம் 2-ம் தேதி கூடிய சட்டசபை மீட்டிங்கில் கனம் மிஸ்டர் ஏ. டி. ஜி. எம். அகமது தம்பி மரக்காயர் கேட்டிருந்த 16-வது கேள்வியும் அதற்கு கவர்ன்மெண்டார் அளித்த பதிலும்:—

கே:—16 (ஏ) பிளேக் கண்டிருக்கலாமென்கிற சந்தேகத்தின் பேரில் தஞ்சாவூரிலுள்ள அதிகாரிகளால் ஒரு முகம்மதியப் பிரேதம் எரித்து விடப்பட்டது கவர்ன்மெண்டாருக்குத் தெரியுமா?

(பி) பிளேக் என்று சந்தேகிக்கக்கூடிய சந்தர்ப்பங்கள் ஒன்றுமில்லாமலிருந்தது வாஸ்தவமா?

(ஸி) முகம்மதியர்களின் பிரேதங்களை எரிப்பது மார்க்க விரோதமான தென்பது கவர்ன்மெண்டாருக்குத் தெரியுமா?

(டி) அடியிற்கண்ட மத சம்பந்தமான சடங்குகளை அதிகாரிகள் நடத்தி வைக்காதது நியாயமா?

(1) பிரேதத்தைக் கழுவிக்குளுப்பாட்டுதல்.

(2) கபன் போட்டு மூடுதல்.

(3) தொழுதல்.

(4) பூமியில் புதைத்தல்.

(இ) இது சம்பந்தமாக கவர்ன்மெண்டார் முழு விவரங்களுமடங்கிய ரிபோர்ட்டைக் கேட்டுவிட்டு அதை சபையின் முன் ஆஜர்ப்படுத்துவார்களா?

II

தஞ்சை ஜில்லா கலெக்டர் ஆர். பி. உட், எஸ்கொயர், ஐ. ஸி. எஸ்., இடமிருந்து, கவர்ன்மெண்டு லோகல் அண்டு முனிசிபல் டிபார்ட்டுமெண்டு காரியதரிசிக்கு 1914-ம் வருஷம் மார்ச்சுமாதம் 28-ம் தேதி யிட்டு வந்த ஆர். ஸி. 524—பி. கடிதம்.

சுருக்கம்:—பிளேக்கினால் 1914-ம் வருஷம் பிப்பிரவரி மாதம் 12-ம் தேதி தஞ்சாவூரில் இறந்துபோன முகம்மதியரின் பிரேதத்தை எரித்த விஷயமாக:—

உத்திரவு—நம்பர் 246—பி—18-4-19-14

பதிவு செய்யப்பட்டது.

2. ஜில்லா சர்ஜனுடைய யோசனையின் பேரிலும், இறந்துபோனவருடைய சகோதரரின் சம்மதத்தின்பேரிலும் இந்தப்பிரேதமானது தஞ்சாவூர் முனிசிபல் அதிகாரிகளால் எரிக்கப்பட்டதாகத் தெரிகிறது. இந்தக் கேஸில் தகனம் செய்திருக்க வேண்டிய தனுவசிய மென்று கலெக்டர் நினைப்பது போலவே கவர்ன்மெண்டாரும் அபிப்பிராயப் படுகிறார்கள். இம்மாதிரியான கேஸ்களில் இனி ஸ்தலத்த காரிகள் சம்பந்தப்பட்ட வகுப்பினரின் மதசம்பந்தமான உணர்ச்சியை மதித்து நடந்துகொள்ளுவார்களென்று கவர்ன்மெண்டார் நம்புகிறார்கள்.

(ஒப்பம்) பிரான்ஸிஸ்,
கவர்ன்மெண்டு சிக்ரிட்டரி

## விடு முறைகள்

(1914-ம் வருஷம் ஜனவரிமாதம் 12-ம்தேதியுள்ள 53-ம் நம்பர் கவர்ன்மெண்டு உத்திரவின் சுருக்கம்)

## பப்ளிக் டிபார்ட்டுமெண்டு

அடியிற் கண்ட ரிகார்ட்டுகள் படிக்கப்பட்டன:—

I

1913-ம் வருஷம் மேமாதம் 16-ம்தேதி கூடிய சட்டசபை மீட்டிங்கில் கனம் அகமது தம்பி மரக்காயர் சாகிப் பகதூர் கேட்ட கேள்வியும் அதற்கு கவர்ன்மெண்டார் அளித்தபதிலும்:—

கே:—54 (ஏ) மொகரம் பண்டிகைக்காக கைம்மாறக்கூடிய தஸ்தாவேஜிகளைப் பற்றிய சட்டத்தின்படி வழக்கமாக விடுமுறை கொடுக்கப்படுவதைத் தவிர, அதே சட்டத்தின்படி ரம்ஸான், பாராவபாத், பக்ரீது இவைகளுக்கும் பம்பாய் கவர்ன்மெண்டார் விடுமுறை ஏற்படுத்தி யிருப்பது கவர்ன்மெண்டாருக்குத் தெரியுமா?

(பி) ரம்ஸான் பண்டிகைக்காக இப்போது ஒரு நாள் விடுமுறை கொடுக்கப்படுவதற்கு பதிலாக பக்ரீது, ரம்ஸான், பாராவபாத், மொஹரம் இவைகளுக்காக கைம்மாறக் கூடிய தஸ்தாவேஜிகளைப் பற்றிய சட்டத்தின்

படி குறைந்தது நான்கு நாள் விடுமுறையாவது சென்னை கவர்ன்மெண்டார் ஏற்படுத்துவார்களா ?

பதில்:— (ஏ) கவர்ன்மெண்டாருக்கு அந்த விஷயம் தெரியும்.

(பி) கனம் மெம்பர் சொல்லுகிற யோசனையை கவர்மெண்டார் கவனிப்பார்கள்.

## II

அபீஸ் குறிப்பு நம்பர் 2920—1

பப்ளிக், 1913-ம் வருஷம் ஜுன்மாதம் 2-ம் தேதி—

கைம்மாறக் கூடிய தஸ்தா வேஜிகளைப் பற்றிய சட்டத்தின்படி முகம்மதியர்களுக்காக ஏற்படுத்தப்படும் விடுமுறைகள் விஷயமாக கனம் மிஸ்டர் அகமது தம்பி மரக்காயர் சாகிப் பகதூர் 1913-ம் வருஷம் மே மாதம் 16-ம்தேதி கூடிய சட்டசபையில் கேட்ட 54-வது கேள்வியின் பிரதியும் கவர்ன்மெண்டார் அளித்த பதிலும் ரிவினியூ போர்டாருக்கு அனுப்பப்பட்டிருக்கின்றன. அதில் கண்ட பிரேரணையைப் பற்றி போர்டார் தங்களுடைய அபிப்பிராயத்தை கவர்ன்மெண்டுக்குத் தெரிவிக்கும்படி கேட்டுக் கொள்ளப்படுகிறது.

(பி) இது சம்பந்தமாக இந்தியா சட்டசபையில் நடந்த விவாதங்கள் 1913-ம் வருஷம் ஏப்பிரல் மாதம் 8-ம்தேதி வெளியான போர்ட்டு செயிண்டு ஜார்ஜு கெஜட்டு இரண்டாவது பாகம் 306 முதல் 313 வரையிலுள்ள பக்கங்களில் மறுபிரசுரம் செய்யப்பட்டிருக்கின்றன. அவைகளை போர்டார் கவனித்துக் கொள்வார்களாக.

(உத்திரவுப்படி)

(ஒப்பம்) வி. எஸ். அனந்த ராமய்யர்;

கவர்ன்மெண்டு உதவி காரியதரிசி.

ரிவினியூ போர்டாருக்கு.

## III

சென்னை கவர்ன்மெண்டு சீப் செக்ரிட்டரியினிடமிருந்து,

சென்னை ஆங்கில வியாபாரச் சங்கம் சேர்மன்,

தென்னிந்திய வியாபாரச் சங்கம் பிரசிடெண்டு ஆகிய இவர்களுக்கு

தேதி:— 1913-ம் வருஷம் ஜுன்மாதம் 2-ம்தேதி.

நம்பர் 2526—2

கைம்மாறக் கூடிய தஸ்தா வேஜிகளைப் பற்றிய சட்டத்தின்படி பஹிரங்கப் படுத்தப்படும் முகம்மதிய விடுமுறை நாட்கள்விஷயமாக 1913-ம் வருஷம் மே மாதம் 16-ம் தேதி நடந்த சென்னை சட்டசபை மீட்டிங்கில் கனம் மிஸ்டர் அகமது தம்பி மரக்காயர் சாகிப்பகதூர் கேட்ட கேள்வியின் பிரதியையும் அதற்கு கவர்ன்மெண்டார் அளித்த பதிலையும் தங்களுக்கு அனுப்பி அதில் கண்ட பிரேரணையைப்பற்றி தங்களுடைய சபையின் அபிப்பிராயத்தை கவர்ன்மெண்டாருக்கு அறிவிக்க வேண்டுமென்று கேட்டுக் கொள்ளும்படி எனக்கு கட்டளை யிடப்பட்டிருக்கிறது.

## IV

சென்னை ஆங்கில வியாபார சபை வைஸ் சேர்மனிடமிருந்து,

கவர்ன்மெண்டு சீப் சிக்ரிட்டரிக்கு,

1913-ம் வருஷம் ஜுன்மாதம் 27-ம்தேதி.

கைம்மாறக்கூடிய தஸ்தாவேஜுகளைப்பற்றிய சட்டத்தின்படி பஹிரங்கப் படுத்தப்படும் முகம்மதிய விடுமுறை நாட்கள் விஷயமாக 1913 ம் வருஷம் மேமாதம் 16ம் தேதி நடந்த சட்டசபை மீட்டிங்கில் கேட்கப்பட்ட கேள்வியின் பிரதியை அனுப்பி அதில் கண்ட பிரேரணைகளைப்பற்றி எங்கள் சபையின் அபிப்பிராயத்தை கவர்ன் மெண்டாருக்குத் தெரிவித்துக் கொள்ளும் படியுள்ள தங்களுடைய 2ம் தேதியிட்ட நம்பர் 2526—2 கடிதம் வரப் பெற்றேன்.

இப்போது ஜாப்தாவிலுள்ள வேறு விடுமுறை நாட்களை ரத்து செய்தால்தான் பிரஸ்தாபத்திலுள்ள முகம்மதிய விடுமுறை நாட்களைக் கொடுக்கலா மென்பது எங்கள் சபையின் அபிப்பிராய மென்பதைத் தெரிவித்துக் கொள்ளுகிறேன். இந்த மாகாணமிருந்து வரும் நிலைமையில் அவ்வித மாறுதல் செய்யவேண்டியதவசிய மென்று எங்கள் சபையின் மெம்பர்கள் நினைக்கவில்லை.

## V

சென்னை தென்னிந்தியா வியாபாரச் சங்கத்தின் பிரசிடெண்டு ராவ் பகதூர் பி. தியாகராய செட்டியார், பி. ஏ., இடமிருந்து.

சென்னை கவர்ன்மெண்டு சீப்சிக்ரிட்டரிக்கு

1913ம் வருஷம் ஜுலைமாதம் 4-ம் தேதி

நம்பர் டி. 161

கைம்மாறக் கூடிய தஸ்தா வேஜுகளைப்பற்றிய சட்டத்தின்படி ஏற்படுத்தப்படும் முகம்மதிய விடுமுறை நாட்கள் விஷயமாக தங்களுடைய 2—6—13 தேதியுள்ள நம்பர் 2526—2 கடிதம் கிடைத்தது.

தங்களுடைய கடிதத்துடன்கூட அனுப்பப்பட்டிருந்த கேள்வியில் கண்ட பிரேரணையை எங்கள் கமிட்டியார் ஆலோசித்து, ஏற்கனவே கைம் மாறக்கூடிய தஸ்தாவேஜுகளைப்பற்றிய சட்டத்தின்படி இருந்து வரும் ரம்ஸான் விடுமுறையைத்தவிர (1) பாராவபாத்; (2) மொஹரம்; (3) பக்ரீது; இந்த மூன்று தினங்களையும் அந்த சட்டத்தின்படி விடுமுறை நாட்களாகச் செய்து விடவேண்டுமென்று அபிப்பிராயப்படுகிறார்கள்.

## VI

## ரிவினியூ போர்டு நடவடிக்கைகள்

(லாண்டு ரிவினியூ)

12—8—1913 தேதியுள்ள மிஸ்லேனியஸ் நம்பர் 3092.

அடியிற் கண்ட ரிகார்டுகள் பார்வையிடப்பட்டன:—

I

கவர்ன்மெண்டு பப்ளிக் டிபார்டுமெண்டிடமிருந்து 2—6—1913 தேதியிட்டு கிடைத்த நம்பர் 2526—1 குறிப்பு.

II

அதன் மேல் 16. 6. 1913ல் போர்டார் செய்த நம்பர் 1243 ஜி. டி. 13—1 ரெபரென்ஸ்.

III

சென்னை கலெக்டர் ஆர். எப். ஆஸ்டின், எஸ்கொயர். ஐ. ஸி. எஸ்., இடமிருந்து

போர்டு லாண்டு ரிவினியூ கமிஷனர்களின் காரியதரிசிக்கு,

1913 ம் வருஷம் ஆகஸ்டு மாதம் முதல் தேதி.
நம்பர். டி. டிஸ் 1375

1913-ம் வருஷம் ஜுன் மாதம் 16 ம் தேதியுள்ள நம்பர் 1243 ஜி. டி. 13—1 போர்டு ரெபரென்ஸ் விஷயமாக, சென்னை ஆங்கில வியாபார சபையாரின் அபிப்பிராயத்தை கவர்ன் மெண்டார் நேரில் கேட்டுக் கொண்டார்களென்றும், இந்த மாகாணமிருக்கும் நிலைமையில் புதிதாக சொல்லப்படும் அதிக விடுமுறை நாள்கள் நியாயமல்ல வென்றும், அத்தனைக்கத்தனை இப்பொழுதுள்ள விடுமுறை நாட்களை எடுத்தால் தான் அவைகளைக் கொடுக்கலா மென்றும் அந்த சபையார் தங்களுடைய அபிப்பிராயத்தை அறிவித்திருக்கிறார்களென்றும், தெரிவித்துக் கொள்ளுகிறேன். இந்தப்படி செய்ய வேண்டு மென்று பெருவாரியான முகம்மதிய வியாபாரிகள் விரும்ப

வில்லை யென்பதும், சமீபத்தில் செய்யப்பட்டிருக்கும் வேறு சில பிரேரணைகளைப்போல் இது குறைந்த கல்வி அறிவுள்ள முஸ்லீம் வகுப்பினரின் மத ஆவேசத்தைக் கிளப்பிவிட்டு பெருமை சம்பாதித்துக் கொள்ளச் செய்யப்படும் முயற்சி என்பதுமே என்னுடைய அபிப்பிராயம்.

தீர்மானம்—மிஸ்லேனியஸ் நம்பர் 3092, 12—9—1913.

கைமாறக்கூடிய தஸ்தாவேஜுகளைப்பற்றிய சட்டத்தின்படி முகம்மதியர்களுக்கு ஏற்படுத்தப்படும் விடுமுறை நாட்களைப்பற்றி கவர்ன் மெண்டாரிடமிருந்து கிடைத்த 2—6—13 தேதியுள்ள 2526—1 நம்பர் குறிப்பு சம்பந்தமாக சென்னை கலெக்டரிடமிருந்து கிடைத்திருக்கும் கடிதத்தை போர்டார் இதனுடன் அனுப்பியிருக்கிறார்கள். சென்னை ஆங்கில வியாபார சபையின் அபிப்பிராயங்களும் அதில் அடங்கியிருக்கின்றன. அந்த சட்டத்தின்படி கொடுக்கப்பட்டு வரும் மொத்த விடுமுறை நாட்களை அதிகப்படுத்துவதை சென்னை ஆங்கில வியாபார சபையாரைப் போல ரிவினியூ போர்டாரும் ஒப்புக் கொள்ளவில்லை. ஆனால் இப்பொழுதிருந்து வரும் வேறு சில விடுமுறை நாட்களை எடுத்து விட்டு முகம்மதியர்களுக்குக் கொடுக்கும் விடுமுறை நாட்களை அதிகப்படுத்த முடியுமா வென்பதை ஒரு சிறிய கமிட்டியின் பரிசீலனைக்கு அனுப்பலாமென்று அபிப்பிராயப் படுகிறார்கள்.

(ஒப்பம்) டப்ளியூ ஜி. மக்பார்லண்ட

சிக்ரிட்டரி.

கவர்ன்மெண்டு சீப் சிக்கிரிட்டரிக்கு.

## VII

ஆபீஸ் குறிப்பு நம்பர் 2926—3, பப்ளிக், 23—10—1913

கைம்மாறக் கூடிய தஸ்தா வேஜுகளைப் பற்றிய சட்டத்தின்படி வழக்கமாக உள்ள எத்தனை ஹிந்து விடுமுறை நாட்களும், பக்ரீது ரம்ஸான், பாராவபாத், மொஹரம் (கடைசி நாள்) ஆகிய எத்தனை முகம்மதியக் கொண்டாட்ட தினங்களும் வருகிற ஐந்து வருஷங்களில் சேர்ந்து வருகின்றன வென்றும், அல்லது சட்டப்படிக்கான வேறு விடுமுறை நாட்களோடு சேர்ந்து வருகின்றன வென்றும் கூடிய சீக்கிரத்தில் ரிபோர்ட்டு செய்யும்படி சென்னை ஆப்சர்வேட்டரி டிட்டி டைரக்டரைக் கேட்டுக் கொள்ளப்படுகிறது.

(உத்திரவுப்படி)

(ஒப்பம்) வி. எஸ். அனந்தராமய்யர்,

கவர்ன்மெண்டு உதவி காரியதரிசி.

## VIII

சென்னை ஆப்சர் வேட்டரி அபீஷியேடிங் டிப்டி டைரக்டரிடமிருந்து,

கவர்ன்மெண்டு, பப்ளிக் டிபார்ட்டு மெண்டு, உதவிக்காரியதரிசி அவர்களுக்கு.

1913-ம் வருஷம் அக்டோபர் மாதம் 27-ம் தேதி

நம்பர் 300 எம்.

தங்களுடைய 23-10-13 தேதியுள்ள நம்பர் 2926-3 குறிப்பு கிடைத்தது. 1914, 1917 வருஷங்களில் தமிழ் வருஷப் பிறப்பும் ஈஸ்டர் விடுமுறையும் சேர்ந்தவருகின்றன. தமிழ் வருஷப் பிறப்பு இரண்டு வருஷங்களிலும் ஏப்பிரல் மாதம் 13-ம் தேதிகளில் வருகிறது. ஈஸ்டர் விடுமுறை 1914-ம் வருஷத்தில் ஏப்பிரல் மாதம் 10-ம்தேதி முதல் 13-ம் தேதி வரையிலும், 1917-ம் வருஷத்தில் ஏப்பிரல் மாதம் 13-ம்தேதி முதல் 16-ம்தேதி வரையிலும் வருகிறது. இதைத் தவிர வேறு விடுமுறை நாட்கள் வரப்போகும் ஐந்து வருஷங்களில் சேர்ந்துவரவில்லை.

## IX

கவர்ன்மெண்டு ஆக்டிங் சீப்சிக்ரிடரி கனம் மிஸ்டர் டப்ளியூ.

ஓ. ஹார்ன், வி. எஸ். ஐ., ஐ. வி. எஸ்., இடமிருந்து

ஆங்கில வியாபார சபை சேர்மன்,<br>தென்னிந்திய வியாபார சங்கத்தின் பிரசிடெண்டு,<br>சென்னை வர்த்தக சங்கத்தின் சேர்மன், } இவர்களுக்கு

1913-ம் வருஷம் நவம்பர் மாதம் 14-ம் தேதி, நம்பர்—ரெபரென்ஸ் 2926—4

தங்களுடைய 27-6-1913 தேதியுள்ள / 4-7-13 தேதியுள்ள 161-ம் நம்பர் கடிதத்துடன் முடிவடைந்த விஷய சம்பந்தமாக, கைம்மாறக்கூடிய தஸ்தாவேஜிகளைப்பற்றிய சட்டத்தின்படி ஏற்படுத்தப்பட 'வேண்டிய விடுமுறை நாட்களின் ஜாப்தாவைப் பரிசீலனை செய்து, அவசியமானல், சட்ட சபைக்கு அனுப்பப்பட்டிருக்கும் இரண்டு தீர்மானங்களிலும் குறிப்பிடப்படும் வேண்டுகோளுக்கு ஒத்தவித மாகத் திருத்துவதற்கு கவர்ன்மெண்டார் ஒரு சிறிய கமிட்டியை நியமிக்க உத்தேசித்திருக்கிறார்கள். அந்தத் தீர்மானங்களின் பிரதிகளை இத்துடன் அனுப்பியிருக்கிறது.

தங்களுடைய சபையார் / தங்களுடைய சங்கத்தார் அந்தக் கமிட்டியில் ஸ்தானம் வகிக்க இஷ்டப்படும் பிரதிநிதியொருவரை நியமிக்க வேண்டுமாய் கேட்டுக் கொள்ளுகிறேன்.

## X

சென்னை, தென்னிந்திய வியாபாரச் சங்கத்தின் பிரசிடெண்டிடமிருந்து,

கவர்ன்மெண்டு சீப் சிக்ரிடரி அவர்களுக்கு,

1913-ம் வருஷம் நவம்பர் மாதம் 25-ம் தேதி

நம்பர் டி. 254.

கைம்மாறக்கூடிய தஸ்தாவேஜிகளைப் பற்றிய சட்டத்தின்படி ஏற்படுத்தப்பட வேண்டிய விடுமுறை நாட்களின் ஜாப்தாவைத் திருத்துவதற்காக நியமிக்கப்போகும் கமிட்டிக்கு ஒருபிரதிநிதியை நியமிக்கும்படி தங்களுடைய 14-11-1913 தேதிஉள்ள நம்பர் 2926-4 கடிதம் கிடைக்கப்பெற்றேன். என்னுடைய கமிட்டியார் 21-ம் தேதி நடந்த பொதுக்கூட்டத்தில் என்னை அந்தக் கமிட்டியில் தங்களுடைய பிரதிநிதியாக இருக்கும்படி நியமனம் செய்திருக்கிறார்கள்.

கமிட்டி கூடும் இடம் காலம் முதலிய விவரங்களை அறிவிக்கும்படி கேட்டுக் கொள்ளுகிறேன். இது சம்பந்தமான விவரங்களை அறிவித்தாலும், தஸ்தாவேஜுகளை அனுப்பினாலும் நான்வந்தனம் செலுத்தக்கடவேன்.

## XI

சென்னை ஆங்கில வியாபார சபையின் சேர்மனிடமிருந்து

கவர்ன்மெண்டு சீப் சிக்ரிடரி அவர்களுக்கு,

1913-ம் வருஷம் நவம்பர் மாதம் 28-ம் தேதி

கைம்மாறக்கூடிய தஸ்தாவேஜுகளைப்பற்றிய சட்டத்தின்படிஏற்படுத்தப்பட வேண்டிய விடுமுறை நாட்களின் ஜாப்தாவைப் பரிசீலனை செய்து அவசியமானால் திருத்துவதற்கு ஒரு கமிட்டியை நியமிக்க கவர்ன்மெண்டார் தீர்மானம் செய்திருப்பதாகவும், அந்தக் கமிட்டியில் ஸ்தானம் வகிக்க சம்மதப்படும் பிரதிநிதி யொருவரை இந்த சபை நியமனம் செய்யவேண்டுமென்றும் கண்டுள்ள தங்களுடைய 14—11—13 தேதியுள்ள நம்பர் 2926—4 கடிதம் கிடைக்கப் பெற்றேன்.

இந்த சபையார் இதன் வைஸ் சேர்மனும் மெஸ்ஸர்ஸ் பெஸ்டு அண்டு கம்பெனி லிமிட்டெடைச்சேர்ந்தவருமான மிஸ்டர் கார்டன் பிரே

ஸரை தங்களுடைய பிரதிநிதியாக அந்த கமிட்டியில் ஸ்தானம் வகிக்கும்படி நியமித்திருக்கிறார்க ளென்பதைத் தங்களுக்குத் தெரிவித்துக் கொள்ளுகிறேன்.

## XII

சென்னை வர்த்தகர்கள் சங்கத்தின் காரியதரிசியிடமிருந்து,
கவர்ன்மெண்டு சீப் சிக்ரிட்டரி அவர்களுக்கு.

1913-ம் வருஷம் நவம்பர் மாதம் 28-ம் தேதி,

தங்கள் 4-ம் தேதியிட்டு இந்த சபையின் சேர்மன் விலாசத்திற்கு அனுப்பிய நம்பர் 2926—4 பப்ளிக் கடிதம் வந்து சேர்ந்தது. நாளது மாதம் 27-ம் தேதி நடத்த எங்கள் சங்கத்தின் மீட்டிங்கில் அந்தக் கமிட்டியில் இந்த சங்கத்தின் பிரதிநிதியாக ஸ்தானம் வகிக்க மெஸ்ஸர்ஸ் ஸ்பென்ஸர் அண்டுகம்பெனி லிமிட்டெடைச்சேர்ந்த மிஸ்டர் ஜே. எச். தாங்கர் எங்கள் சங்கத்தின் மெம்பர்களால் நியமிக்கப்பட்டிருக்கிறார்.

## XIII

கவர்ன்மெண்டு சீப் சிக்ரிட்டரி கனம் மிஸ்டர் டப்ளியூ ஓ. ஹாரன், ஸி எஸ். ஐ., ஐ. ஸி. எஸ்., இடமிருந்து.

கனம் மிஸ்டர் ஏ. டி. ஜி. எம். அகமது தம்பி மரக்காயர் அவர்களுக்கு

1913-ம் வருஷம் டிசம்பர் மாதம் 13-ம்தேதி

நம்பர்—ரெபரென்ஸ் 2926—5

இப்பொழுது கைம்மாறக்கூடிய தஸ்தாவேஜுகளைப் பற்றிய சட்டத்தின் 25-வது பிரிவின்படி ஏற்படுத்தப்படும் விடுமுறை நாட்களின் ஜாப்தாவைப் பரிசிலனை செய்து, அவசியமானால் திருத்துவதற்கு ஆலோசனை சபையுடன் கூடிய கவர்னர் ஒரு கமிட்டியை நியமிக்கத் தீர்மானித்திருக்கிறாரென்பதைத் தங்களுக்கு அறிவித்து, தாங்கள் அந்தக் கமிட்டியில் ஸ்தானம் வகிக்க இஷ்டப்படுகிறீர்களா வென்பதை விசாரித்து அறியும்படி எனக்கு ஆக்ஞாபிக்கப்பட்டிருக்கிறது.

## XIV

சென்னை சட்டசபை அடிஷனல் மெம்பர் கனம் மிஸ்டர் ஏ. டி. ஜி. எம் அகமது தம்பி மரக்காயர் அவர்களிடமிருந்து,

கவர்ன் மெண்டு சீப்சிக்ரிட்டரி அவர்களுக்கு.

நாகப்பட்டணம், 17-12-191

தங்களுடைய 13ம் தேதியுள்ள 2926—5 நம்பர் கடிதம் வரப்பெற்றேன். விடுமுறை நாட்களின் ஜாப்தாவைப் பரிசிலனை செய்து திருத்துவதற்

க்க ஏற்படும் கமிட்டியில் ஸ்தானம் வகிக்க எனக்கு சம்மத மென்பதைத் தங்களுக்கு அறிவித்துக் கொள்ளுகிறேன்.

## XV

1914ம் வருஷம் ஜனவரி மாதம் 12ம்தேதியுள்ள

நம்பர் 53—பப்ளிக்—உத்திரவு.

1881ம் வருஷத்திய கைம்மாறக்கூடிய தஸ்தாவேஜுகளைப்பற்றிய சட்டத்தின் 25வது விதியின்படி கவர்ன் மெண்டாரால் இப்பொழுது ஏற் படுத்தப்பட்டு வரும் விடுமுறை நாட்களின் ஜாப்தாவைப் பரிசீலனை செய்து, அவசியமானல், அதைத் திருத்துவதற்கு சிபார்சுகள்செய்வதற்காக அடியிற் கண்ட கனவான்களடங்கிய ஒரு கமிட்டியை ஆலோசனை சபையுடன் கூடிய கவர்னர் மனமுவந்து நியமனம் செய்திருக்கிறார்.

### கமிட்டி மெம்பர்கள்

கனம் மிஸ்டர் எல். இ. பக்ளி, ஐ. வி. எஸ்; பிரசிடெண்டு.

கார்டன்பிரேஸர், எஸ்கொயர்., சென்னை ஆங்கில வியாபாரச் சங்கத் தின் வைஸ் சேர்மன்.

ராவ் பகதூர் பி. தியாகராய செட்டிகாரு, தென்னிந்திய வியாபாரச் சங்கத்தின் பிரசிடெண்டு.

ஜே. எச். தாங்கர் எஸ்கொயர், மெஸ்ஸர்ஸ் ஸ்பென்ஸர் அண்டு கம்பெனி லிமிடெட்.

கனம் மிஸ்டர் டி. வி. சேஷகிரிய்யர்.

கனம் மிஸ்டர் ஏ. டி. ஜி. எம். அகமது தம்பி மரக்காயர்.

கனம் திவான் பகதூர் எல். டி. சுவாமிக்கண்ணு பிள்ளை அவர்கள்.

2. 1913ம் வருஷம் நவம்பர் மாதம் 11-ம் தேதி கூடிய சட்டசபை மீட்டிங்கில் கொண்டு வருவதற்காக கனம் மிஸ்டர் அகமது தம்பி மரக்காய ரும் கனம் மிஸ்டர் டி. வி. சேஷகிரி அய்யரும் கவர்ன்மெண்டாருக்கு அனுப் பிய தீர்மானங்களில் கண்ட யோசனைகளை முக்கியமாக கவனிக்கும்படி கமிட் டியார் கேட்டுக் கொள்ளப்படுகிறார்கள்.

ஞாயிற்றுக் கிழமையிலாவது, வேறு விடுமுறைநாட்களிலாவதுவரும் கொண்டாட்டங்களுக்காக இப்போது பிரத்தியேகமாக விடுமுறை கொடுக் கும் வழக்கம் இருந்து வர வேண்டுமோ வென்றும் தெரிவித்துக் கொள்ளும் படி கமிட்டியார் கேட்டுக் கொள்ளப் படுகிறார்கள்.

(ஒப்பம்) வி. எஸ் அனந்தராமய்யர்,

சீப் ஸெக்ரிட்டரிக்காக.

## XVI

விடுமுறை கமிட்டியின் பிரசிடெண்டு மிஸ்டர் எல். இ. பக்ளி ஐ வி. எஸ்., இடமிருந்து (அரை உத்தியோக முறையில் கடிதம்,

1914ம் வருஷப் பிப்பரிவரி மாதம் 7ம் தேதி

கனம் மிஸ்டர் ஏ. டி. ஜி. எம். மரக்காயருக்கு

விடுமுறை நாட்களின் ஜாப்தாவைத் திருத்துவதற்காக ஏற்படுத்தப் பட்டிருக்கும் கமிட்டியில் தங்களை ஒரு மெம்பராக நியமித்திருப்பதாக ஜனவரி மாதம் 12 தேதியுள்ள நம்பர் 53 பப்ளிக் கவர்ன்மெண்டு உத்திரவு விஷய மாக நாம் மேலே என்ன செய்வதென்று முடிவு செய்துகொள்ள பூர்வ பீடிகையான மீட்டிங் கொன்று கூட வேண்டு மென்று எனக்கு தோன்று கிறது.

செவ்வாய்க்கிழமையாவது, புதன்கிழமையாவது தங்களுக்கு சவுகரிய மாக இருக்குமா வென்பதை தயவுசெய்து எனக்கு அறிவிப்பீர்களா? அந்த தினங்கள் சவுகரியமா யிருந்தால், எந்த இடத்தில், எத்தனை மணிக்கு மீட்டிங் கூடலாம்?

சட்டசபை மண்டபமாவது, ரிவினியூ போர்டு ஆபீசில் எனது அறை யாவது சவுகரியமாயிருக்கு மென்று நினைக்கிறேன். பிப்பிரவரி மாதம் 19-ம்தேதி முதல் 25 ம் தேதி முடியவும், மார்ச்சு மாதம் முதல் தேதி முதல் 10-ம்தேதி முடியவும் வட பிராந்தியங்களில் எனக்கு ஜோலியிருக் கிறது. மார்ச்சு மாதம் 13, 14 தேதிகளில் சட்டசபை கூடுகிறது.

பூர்வ பீடிகையான மீட்டிங்குக்குப் பிறகு சாதாரண மீட்டிங்கொன்று பிப்பிரவரி மாதம் 1-ம்தேதிக்குள் ஏற்பாடு செய்ய சாத்தியப்படு மென்று நினைக்கிறேன்; அல்லது 26, 27, 28 தேதிகளில் ஒரு தினத்தில் வைத்துக் கொள்ளலாம்.

## XVII

கனம் ஏ. டி. ஜி. எம். அகமது தம்பி மரக்காயர் அவர்களிட மிருந்து

சென்னை ரிவினியூ போர்டு,

கனம் எல். இ. பக்ளி. ஐ. வி. எஸ்., அவர்களுக்கு

நாகப்பட்டணம், 11-2-1914

தங்களுடைய 7-ம்தேதி யுள்ள முதல் நம்பர் கடிதம் 9-ம்தேதி இங்கு வந்து சேர்ந்து, அன்று நான் வெளியில் போயிருந்ததினால் 10-ம்

தேதி தான் என் கைக்கெட்டியது; வட ஜில்லாக்களுக்குத் தாங்கள் புறப்பட்டுப் போகு முன், செவ்வாய்க் கிழமையாவது,புதன் கிழமையாவது பூர்வ பீடிகையாக ஒரு மீட்டிங்கை நடத்த வேண்டுமென்று அபிப்பிராயப் படுகிறீர்கள். விடுமுறை நாட்களைத் திருத்தும் விஷயத்தைப் பற்றி விவாதிப்பதற்காக நடக்கும் பூர்வாங்க மீட்டிங்குக்கு வரும்படி தாங்கள் நேற்று அனுப்பிய தந்தியும் கிடைத்தது. நேற்று அதற்கு நான் அனுப்பி யிருக்கும் கீழ்கண்ட பதில் தந்தி சமாசாரத்தை நான் ஊர்ஜிதப்படுத்துகிறேன்.

"தந்தி கிடைத்தது. வேலைத் தொந்திரவினால் நாளை மீட்டிங்குக்கு வரமுடியாததற்கு விசனிக்கிறேன். பிப்பிரவரி மாதம் 18-ம்தேதிக்கு ஒத்தி வைத்துக் கொள்ளும்படி பிரார்த்திக்கிறேன்."

மேல்கண்ட தந்தியில் கேட்டுக் கொண்டிருக்கிற பிரகாரம் மீட்டிங்கை ஒத்திவைக்க ஏற்பாடு செய்யப்பட்டிருக்கு மென்று நினைக்கிறேன்.

திடீரென்று எனக்குத் தகவல் கொடுத்ததினால் முக்கியமான ஜோலிகளைப் போட்டுவிட்டு நான் வரக்கூடவில்லை. ஒத்திவைக்கப்படும் தேதியில் பிரசன்னமா யிருப்பதற்கு முன்னதாகவே ஏற்பாடுகளைச் செய்து வைத்துக் கொள்ளுவதற்காக ஒத்திவைக்கப்படும் தேதியை அறிவிக்கும்படி கேட்டுக் கொள்ளுகிறேன்.

## XVIII

கனம் மிஸ்டர் எல். இ. பக்ளி, ஐ. ஸி. எஸ்., இடமிருந்து.

கனம் எ. டி. ஜி. எம். அகமது தம்பி மரக்காயர் அவர்களுக்கு

சென்னை, 1914-ம் வருஷம் பிப்பிரவரி மாதம் 13-ம்தேதி

நம்பர்— டி. ஒ. 6.

விடுமுறைக் கமிட்டியின் பூர்வாங்க மீட்டிங்கு 12-ம்தேதி புதன் கிழமை பகல் 11-மணிக்கு நடைபெற்று, பிரதிநிதித்துவமான ஸ்தாபனங்களையும், வியாபார ஸ்தலங்களையும் அபிப்பிராயங் கேட்டுவிடுவ தென்றும், பல ஜாதி மதங்களிலிருந்து தகுந்த கனவான்களை சாட்சிகளாக விசாரிப்பதென்றும் தீர்மானிக்கப்பட்டிருக்கிறது. கமிட்டியின் மீட்டிங் 28-ம் தேதி சனிக்கிழமைக்கு ஒத்திவைக்கப்பட்டிருக்கிறது. அன்று பகல் 11-மணிக்கு கோட்டையிலுள்ள சட்ட சபை மண்டபத்தில் கூடுவதென்று யோசித்திருக்கிறது.

தாங்கள் அன்று வருவீர்களென்று நம்புகிறேன்.

# XIX

கனம் மிஸ்டர் ஏ. டி. ஜி. எம். அகமது தம்பி மாக்காயரிடமிருந்து,

விடுமுறைக் கமிட்டியின் பிரசிடெண்டு கனம் எல். இ. பக்ளி

ஐ. வி. எஸ்., அவர்களுக்கு,

நாகப்பட்டணம், 15-2-1914.

12-ம் தேதி பூர்வாங்கமான மீட்டிங் நடந்து 28-ம் தேதி சனிக்கிழமை பகல் 11-மணிக்கு மறுபடியும் ஒத்திவைக்கப்பட்டிருக்கிறதென்று கண்ட தங்களுடைய 13-ம் தேதியுள்ள டி. ஓ. நம்பர் 6 கடிதம் வரப்பெற்றேன். அந்த மீட்டிங்குக்கு நான் வரசாத்தியப்படுமென்றே நினைக்கிறேன்.

# XX

1914-ம் வருஷம் ஜூலை மாதம் 4-ம் தேதியுள்ள 774-ம் நம்பர்

கவர்ன்மெண்டு உத்திரவின் சுருக்கம்.

அடியிற் கண்ட ரிகார்ட்டுகள் படிக்கப்பட்டன:—

## I

1914-ம் வருஷம் ஜனவரி மாதம் 12-ம் தேதியுள்ள நம்பர் 53-பப்ளிக், கவர்ன்மெண்டு உத்திரவு. (சுருக்கம்:—கைம்மாறக்கூடிய தஸ்தாவேஜிகளைப்பற்றிய சட்டத்தின்படி ஏற்படுத்தப்படும் விடுமுறை நாட்களின் ஜாப்தாவைப் பரிசிலனை செய்து, அவசியமானால், திருத்துவதற்காக ஒரு கமிட்டியின் நியமனம்.)

## II

விடுமுறைக் கமிட்டியின் பிரசிடெண்டு கனம் மிஸ்டர் எல். இ. பக்ளி, ஐ. வி. எஸ்., இடமிருந்து,

கவர்ன்மெண்டு சீப்சிக்ரிடரி அவர்களுக்கு,

சேப்பாக்கம், 1914-ம் வருஷம் ஏப்பிரல் மாதம் முதல் தேதி,

கைம்மாறக்கூடிய தஸ்தா வேஜிகளைப்பற்றிய சட்டத்தின்படி ஏற்படுத்தப்படும் விடுமுறை நாட்களின் ஜாப்தாவைப் பரிசிலனை செய்து, அவசியமானால், திருத்துவதற்காக 1914-ம் வருஷம் ஜனவரி மாதம் 12-ம் தேதியுள்ள நம்பர் 53-பப்ளிக், கவர்ன்மெண்டு உத்திரவில்நியமிக்கப்பட்ட கமிட்டியின் ரிபோர்ட்டை நான் அனுப்பிக் கொள்ளுகிறேன்.

2. மேலே கண்ட கவர்ன்மெண்டு உத்திரவுடன் கிடைத்த இதா கார்ட்டுகள் இதனுடன் திரும்ப அனுப்பப்பட்டிருக்கின்றன.

## ரிபோர்ட்டின் சுருக்கம்.

1914-ம் வருஷம் ஜனவரி மாதம் 12-ம் தேதியுள்ள நம்பர் 53,பப்ளிக், உத்திரவில் கவர்ன்மெண்டாரால் நியமனம் செய்யப்பட்ட கமிட்டியாராகிய நாங்கள் எங்களுடைய ரிபோர்ட்டை அனுப்பிக் கொள்ளுகிறோம்.

1881-ம் வருஷத்திய கைம்மாறக்கூடிய தஸ்தாவேஜுகளைப் பற்றிய சட்டத்தின் 25-வது பிரிவின் பிரகாரம் இப்பொழுது ஏற்படுத்தப்படும் விடுமுறை நாட்களின் ஜாப்தாவைப் பரிசிலனை செய்து, அவசியமானால் சிபார்சுகளைச் செய்ய கமிட்டி நியமிக்கப்பட்டது. கனம் மிஸ்டர் அகமது தம்பி மரக்காயரும் கனம் மிஸ்டர் (இப்பொழுது ஜஸ்டிஸ்) டி. வி. சேஷகிரி யப்பரும் சொல்லியுள்ள ஆலோசனைகளைமுக்கியமாக கவனிக்க வேண்டுமென்றும், ஞாயிற்றுக்கிழமையிலாவது வேறு விடுமுறை நாளிலாவது பண்டிகைகள் நேர்ந்து விட்டால் அதற்காக இப்பொழுது பிரத்தியேகமாக வேறு விடுமுறை கொடுக்கப்படும் வழக்கம் இன்னமும் இருந்துவர வேண்டுமாவென்று அபிப்பிராயம் தெரிவிக்க வேண்டுமென்றும் கமிட்டியார் கேட்டுக் கொள்ளப்பட்டார்கள்.

சென்னை மாகாணத்தில் இப்பொழுது இருந்து வரும் விடுமுறை நாட்களின் ஜாப்தா கீழே கண்டிருக்கிறது. இப்பொழுது இருக்கிற விடுமுறை நாட்களுடன் புதிதாக சேர்க்கப்பட வேண்டுமென்கிற நாட்களை அடியிற் கண்டிருக்கிறது.

### முகம்மதியர்கள்

| சட்டபூர்வமாக | சட்டபூர்வமாக இல்லாமல் | வகுப்புவாரி விடுமுறை |
|---|---|---|
| ரம்ஸான்—1 | பூச்சியம் | மொஹரம்—4 |
| | | ஷாஹாபாரத்—1 |
| | | ரம்ஸான்(சட்டத்தில்கண்ட ஒருநாளைத்தவிர)—1 |
| | | பக்ரீது—2 |

3. இதரமாகாணங்களில் முகம்மதியர்களுக்குக் கொடுக்கப்பட்டுவரும் விடுமுறை நாட்களின் விபரங்களை சேகரிக்க முடிந்த வரையில் சேர்த்துக் கீழே பிரசுரித்திருக்கிறது. இதிலிருந்து இந்தியாவின் மற்றபாகங்களை விட சென்னையில் சட்டபூர்வமான விடுமுறை நாட்களும், பொது விடுமுறை நாட்களும் குறை வென்று விளங்கும்.

| | சட்டபூர்வமாக | சட்டபூர்வமாக இல்லாத பொது விடுமுறை நாட்கள் | வகுப்பு விடுமுறை |
|---|---|---|---|
| பம்பாய் | 4 | ... | 2 & 2 |
| மத்திய மாகாணங்கள் | 7 | ... | ... |
| பிஹார் ஒரிஸா | ... | 6 | ... |
| வங்காளம் | 3 | 2 | ... |
| பர்மா | ... | ... | ... |
| ஐக்கிய மாகாணங்கள் | 7 | 2 | ... |
| பஞ்சாப் | 6 | ... | இலாகாத் தலைவர்களின் இஷ்டத்தைப் பொறுத்தது. |
| சென்னை | 1 | ... | 8 |

4. முகம்மதியர்களுக்கு வேண்டுமென்று சொல்லுகிற விடுமுறை நாட்கள்:—பாராவபாத்—1

5. மேற்கண்ட சட்டத்தின்படி சட்டபூர்வமாக ஏற்பட்டுள்ள விடுமுறை நாட்களைப்பற்றி முதன்முதல் பிரஸ்தாபிப்பது சவுகரியமாக இருக்கும். வியாபாரம், தொழில் இவைகளை நடத்திவருகிறவர்கள் இந்த விடுமுறை நாட்களை அதிகப்படுத்தக் கூடாதென்று பலமாக அபிப்பிராயப்படுகிறார்கள். அவர்களுடைய அபிப்பிராயத்தைக் கமிட்டியார் ஒப்புக்கொள்ளுகிறார்கள். பாராவபாத், பக்ரீது, மொஹரம் இவைகளுக்காக மூன்று நாட்கள் விடுமுறை கொடுக்கப்படவேண்டு மென்று முஸ்லிம் சமுகத்தார் செய்திருக்கும் பிரேரணை விஷயமாக விசாரணை செய்ததில், அந்த சமுகத்தார் அனைவருமே அதை விரும்புவதாகத் தெரிகிறது. அவர்கள் கேட்பதும் நியாயந்தானென்றே கமிட்டியாரும் அபிப்பிராயப்படுகிறார்கள். ஆகவே இந்த மூன்று தினங்களையும் சட்டபூர்வமாக விடுமுறை நாட்களாகச் செய்துவிட வேண்டுமென்று கமிட்டியார் சிபார்சு செய்கிறார்கள்.

விடுமுறை நாட்களாவன:—

பாராவபாத்துக்காக ரபியுல் அவ்வல் 12-வது தினம்

பக்ரீத் பண்டிகைக்காக வில்ஹிக்கா 10-வது தினம்

மொஹரம் பண்டிகைக்காக 10-வது தினம்

சட்ட பூர்வமான விடுமுறை தினங்களை அதிகப்படுத்தாமல் இந்த நாட்களுக்கு விடுமுறை கொடுப்பதற்காக, கமிட்டியார் விட் திங்கட்கிழமை (Wit Monday) யையும் மகா சிவராத்திரியையும் இனி சட்டத்தின்படி விடுமுறை நாட்களாக ஏற்படுத்தக்கூடாதென்று அபிப்பிராயப்படுகிறார்கள்.

மேலே கண்ட சிபார்சுகள் அங்கீகரிக்கப்பட்டு விட்டால் முஸ்லிம்களுக்கு மாத்திரம் மொஹரம் பண்டிகைக்காக கொடுபடும் விடுமுறை 3 தினங்களாகவும், பக்ரீதுக்காகக் கொடுபடும் விடுமுறை ஒருதினமாகவும் குறைந்து விடும்.

இந்தப் பிரேரணைகளின் பிரகாரம் விடுமுறை நாட்கள் கீழ்க்கண்டவாறிருக்கும்:—

## முகம்மதியர்கள்.

| சட்ட பூர்வமான விடுமுறை தினங்கள். | பிரத்தியேக விடுமுறை தினங்கள் |
|---|---|
| மொஹரம்—1 | மொஹரம்—3 |
| பாராவபாத்—1 | ஷாஹாபாரத்—1 |
| ரம்ஸான்—1 | ரம்ஸான்—1 |
| பக்ரீது—1 | பக்ரீது—1 |

* * * * *

எல்லா விஷயங்களிலும் கமிட்டியார் ஒரே விதமாக அபிப்பிராயப்படுகிறார்கள்.

## உத்திரவு

நம்பர் 774—பப்ளிக் 1914-ம் வருஷம் ஜுலை மாதம் 4-ம் தேதி

சட்ட பூர்வமான விடுமுறை தினங்கள், சட்ட பூர்வமாக இல்லாத விடுமுறை தினங்கள் இவைகளின் ஜாப்தாவைப் பரிசீலனை செய்து, அவசியமானால் திருத்துவதற்கு சிபார்சுகளைச் செய்வதற்காக பிரதிநிதித்துவமான கமிட்டி யொன்றை ஆலோசனை சபையுடன் கூடிய கவர்னர் 1914-ம் வருஷம் ஜனவரி மாதம் 12-ம் தேதியுள்ள நம்பர் 53-பப்ளிக், உத்திரவில் நியமனம் செய்தார். கமிட்டியார் செய்திருக்கும் மேலே கண்ட சிபார்சுகளை ஆலோசனை சபையுடன் கூடிய கவர்னர் தீர ஆலோசித்து, அவைகளை அங்கீகாரம் செய்கிறார்.

இந்த உத்திரவு 1915-ம் வருஷம் ஜனவரி மாதம் முதல் தேதி முதல் அனுஷ்டானத்திற்கு வரும். கமிட்டி மெம்பர்கள் செய்த உதவிக்காக கவர்ன்மெண்டார் வந்தனம் செலுத்துகிறார்கள்.

(ஒப்பம்) ஏ. பட்லர் ஒர்த்

ஆக்டிங் சீப் செகரிட்டரி,

## சுற்றுக்கடிதம் நம்பர் III

நாகப்பட்டணம்　　　　　　　　　　　　　　　　　ஆகஸ்டு 6, 1914.

கனம் மிஸ்டர் ஏ. கே. ஜி. அகமது தம்பி மரக்காயரிடமிருந்து,

அன்புள்ள சகோதரீர்,

1913-ம் வருஷம் மேமாதம் 16-ம் தேதி நடந்த சென்னை சட்ட சபை மீட்டிங்கில் நான் கேட்டிருந்த 54-வது கேள்வியின் மேல் நானும் சேர்ந்த ஒரு கமிட்டியை கவர்ன்மெண்டார் நியமித்திருந்ததின் பலனாக, தங்களுடைய 1914 ம் வருஷம் ஜூலை மாதம் 4-ம் தேதியுள்ள 774-ம் நம்பர் உத்திரவு மூலமாக அவர்கள் நமக்கு மொஹறம், பக்ரீது, பாராவபாத் இவைகளுக்காக கைம்மாறக்கூடிய தஸ்தாவேஜிகளைப் பற்றிய சட்டத்தின்படி இன்னும் மூன்று தினங்கள் விடுமுறை கொடுத்திருக்கிறார்கள். இந்த ஏற்பாடானது 1915-ம் வருஷம் ஜனவரி மாதம் முதல் தேதி முதல் அனுஷ்டானத்திற்கு வந்துவிடும்.

(ஒப்பம்) அ. க. கு. அகமது தம்பி மரக்காயர்.

———(::)———

## வாழ்த்துக் கடிதம்

ரெங்கூன் சோளிய முஸ்லீம் அஸோஸியேஷன் கௌரவ காரியதரிசியிடமிருந்து,

நாகப்பட்டணம் கனம் அ. க. கு. அகமது தம்பி மரக்காயர் அவர்களுக்கு.

1914-ம் வருஷம் செப்டம்பர் மாதம் 8-ம்தேதி

அன்பார்ந்த சகோதரரே,

மேன்மைதங்கிய சென்னை கவர்னர் அவர்களுடைய சட்டசபையில் நாங்கள் காட்டி வரும் உத்தமமான முயற்சி, தளராத ஊக்கம் இவற்றிற்காகவும், அதிலும் முக்கியமாக நமது முகம்மதிய சமூகத்தாருக்கு பக்ரீது, மொஹறம், பாராவபாத் பெருநாள் களுக்காக மூன்று விடுமுறை நாட்கள் வாங்கிக் கொடுத்ததற்காகவும், ரெங்கூன் சோளிய முஸ்லிம் சங்கத்தின் சார்பாக தங்களுடைய மனமார்ந்த நன்றியையும் வந்தனத்தையும் தங்களுக்கு தெரிவித்துக் கொள்ளும்படி சங்கத்தின் தலைவரும் இதர மெம்பர்களும் எனக்கு ஆக்ஞைபிட்டிருக்கிறார்கள். சட்டசபையில் எங்களுடைய பிரதிநிதியாக மிகுவன்மையுடன் தாங்கள் நடந்து வருவதற்கும் நமது இனத்தார், முக்கியமாக நமது தேச மகா ஜனங்கள் இவர்களுடைய கட்சியை எடுத்து வாதிப்பதற்கும், பொதுவாக சத்தியம், நீதி இவைகளை நிலைநிறுத்துவதற

காகத்தாங்கள் போராடுவதற்கும் எங்களுடைய மனமார்ந்த வந்தனத்தை தங்களுக்குச் செலுத்த கடமைப் பட்டிருக்கிறோம். அதற்கறிகுறியாக தங்களுடைய இனத்தாரும் தேசமகாஜனங்களுமாகிய நாங்கள் எங்களுடைய கட்சியை எடுத்து வாதித்து சத்தியத்திற்காகப் போராடுவதற்கு அல்லாகுத்த ஆலா தங்களுக்கு நீண்ட ஆயுளையும் திரிடகாத்திர சரீரத்தையும் மனசமாதானத்தையும் சர்வாபீஷ்டங்களையும் கொடுக்க வேண்டுமாய்ப் பிரார்த்திக்கிறோம்.

முஸ்லிம் சமுகத்தாரின் மார்க்கதர்மத்தை மதித்து, அன்புடன் மேற்கண்ட மூன்று விடுமுறை நாட்கள் கொடுத்ததற்கு வந்தனம் செலுத்துவதாக இன்று மேன்மை தங்கிய சென்னை கவர்னருக்கு ஒரு தந்தியும் அனுப்பியிருக்கிறோம்.

(ஒப்பம்) காதிறு கன்னி

1915

[மார்ச்சுமாதம் 15ம் தேதி சென்னையில் நடந்த கூட்டம்]

## முகம்மதிய பாலிகாபாடசாலைகளுக்குக் கட்டிடங்கள் கட்ட ஸ்தல ஸ்தாபனங்களுக்குப் பொருளுதவி.

மேன்மைதங்கிய பிரபுவே,

நாகப்பட்டணத்திலும் மற்ற இடங்களிலும் முகம்மதிய பாலிகாபாடசாலைக்கட்டிடங்களைக் கட்டுவதற்காக ஸ்தல ஸ்தாபனங்களுக்கு கிராண்டு கொடுப்பதற்காக 45 ஏ, ஸிவில் வேலைகள் என்கிற தலைப்பின்கீழ் 20,000 ரூபாய் ஒதுக்கிவைக்கவும், அந்தத் தொகையை 26 பி. சாஸ்திரவகையரு இலாகாக்கள்—சில்லரைப் பரிட்சைகள்—என்கிற தலைப்பின் கீழ் ஒதுக்கி வைக்கப்பட்டிருக்கும் லட்சம் ரூபாயிலிருந்து குறைக்கவும், இந்த சபை ஆலோசனை சபையுடன் கூடிய கவர்னருக்கு சிபார்சு செய்கிறது,

சில வருஷங்களாக கல்வி ஸ்தாபனங்களுக்கு கவர்ன்மெண்டார் தாராளமாக கிராண்டுகளும பொருளுதவிகளும் கொடுத்து வருகிறார்கள். வருஷந்தோறும் கவர்ன் மெண்டார் செய்யும் பொருளுதவியைக் கொண்டு லோகல் போர்டுகளும் முனிசிபாலிட்டிகளும் புதிதாக ஆரம்பப்பாடசாலைகளை ஏற்படுத்தி வருகின்றன. கூடியவரையில் பாலிகாபாடசாலைகளையும் ஏற்படுத்தி வரும்படிக்கும் கவர்ன் மெண்டார் ஸ்தலஸ்தாபனங்களை வற்புறுத்தி அதற்குத் தாராளமாக பொருளுதவி செய்வதாகவும் வாக்களித்து வருகிறார்கள் .வரவர பாலிகாபாடசாலைகளின் சங்கியை அதிகரித்துக் கொண்டு வருகிறதென்றே நான் நினைக்கிறேன். ஆயினும் முகம்மதியப் பிள்ளைகள் கவர்ன் மெண்டார் தங்களுக்குச் செய்து கொடுக்கும் சவுகரியங்களை அவ்வளவு கன்

ருக அறிந்து கொள்ளவில்லை. முகம்மதியப் பையன்களின் நிலைமையே இவ்
வித மிருக்கையில் முகம்மதியப் பெண்களின் நிலைமை இன்னும் அதிருப்திகர
மாக இருக்கிறதென்பதை நான் சொல்லிக் கொள்ள வேண்டிய அவசியமே
இல்லை. சென்ற வருஷத்தில் நாகப்பட்டணம் முனிசிபாலிட்டியாரால் நா
கப்பட்டணத்திலும் நாகூரிலும் இரண்டு முகம்மதியப் பாலிகா பாடசாலை
கள் ஏற்படுத்தப்பட்டு, அவைகளிரண்டும் நன்றாக நடந்து வருகின்றன.
இந்த இரண்டு பள்ளிக்கூடங்களுக்கும் சென்னை ஹோபார்ட் முகம்மதிய போ
தனா முறைப் பாடசாலையில் பயிற்சி பெற்ற உபாத்தியாயினிகளும் நியமிக்கப்
பட்டிருக்கிறார்கள்.

இந்த இரண்டு பள்ளிக்கூடங்களின் பராமரிப்புக்காகவும் கவர்ன்
மெண்டார் பொருளுதவி செய்து வரும் விஷயம் எனக்குத்
தெரியாமலில்லை. இருந்தாலும் இரண்டு பள்ளிக்கூடங்களும் சவுகரிய
மில்லாத வாடகைக் கட்டிடங்களில் இருந்து வருகின்றன. வேறு நல்ல
கட்டிடங்கள் கிடைக்கவும் வழியில்லை. இந்தப் பள்ளிக்கூடங்களை முதன்
முதலாக ஏற்படுத்தி, கொஞ்ச காலத்திற்கு நடத்திவரும் வரையில் முனிசி
பல் சேர்மன் எவ்வளவு சிரமப்பட வேண்டியிருந்ததென்பது எனக்குத்
தெரியும். முகம்மதியர்களுக்குள்ளிருந்து வரும் கோஷா முறையையே
நிவர்த்தித்து விடுவதற்காக இந்தப் பள்ளிக்கூடங்கள் ஏற்படுத்தப்பட்டிருக்
கின்றனவென்று எங்களுடைய இனத்தார் எண்ணி பள்ளிக்கூடங்களுக்கு
பெண்களை அனுப்ப இஷ்டப்படவில்லை. அவர்களுக்கு உள்ள விஷயங்களை
எடுத்துச் சொல்லி தைரியத்தை உண்டு பண்ணுவதற்கு என்னுடையவும்
மற்றும் பல முகம்மதியப் பிரமுகர்களுடையவும் ஒத்துழைப்பையும் உதவி
யையும் சேர்மன் ஆதியில் தேடவேண்டியிருந்தது. ஆனால் முகம்மதிய
கோஷா உபாத்தியாயினிகளே பாடங்கற்பித்துக் கொடுக்கிறார்க
ளென்று தெரிந்ததும், பெற்றோர்களுக்கு பெண்கள் விஷயமாக
இருந்த பயமும் பீதியும் ஒழிந்து, தங்களுடைய பெண்களை தாராளமாக
பள்ளிக்கூடங்களுக்கு அனுப்ப ஆரம்பித்தார்கள். வர வர பள்ளிக்கூடங்க
ளில் மாணவிகளின் சங்கியையும் அதிகரிக்க ஆரம்பித்து இப்பொழுது
இரண்டு பள்ளிக்கூடங்களிலுமாக 200 பெண்கள் படித்து வருகிறார்கள்.
பிள்ளைகளின் சங்கியை அதிகமாகப் போகவே, உபாத்தியாயினிகளும் அதி
கம் வேண்டியதாகி விட்டது. முனிசிபாலிட்டியிடம் பணமில்லாததினால் அதி
கப்படியாக உபாத்தியாயினிகளை நியமிக்கமுடியவில்லை. அபூர்வமாக இந்தப்
பள்ளிக்கூடங்களை ஏற்படுத்தினால் என்னாகுமோவென்று சந்தேகப்பட்டு
கொண்டே ஏற்படுத்தப்பட்ட பள்ளிக்கூடங்கள் நம்முடைய சந்தேகத்திற்
குச் சிறிதும் இடமில்லாமல் வெகு நன்றாக நடந்து வருகையில், அவை
களுக்குத் தக்க பொருளுதவி செய்ய வேண்டியது கவர்ன்மெண்டாரின்
கடமை. இரண்டு பள்ளிக்கூடங்களுக்கும் கட்டிடங்கள் கட்டிவிட்டால் அவை
கள் ஸ்திரப்பட்டுவிடும். உள்ளூர் முகம்மதியர்களுக்கும் அதில் நிரம்ப திரு

ப்திஎற்படும். இந்தத் தீர்மானத்தை கவர்ன்மெண்டாருக்கு நான் அனுப்பிய பிறகு, ஒரு முகம்மதியப் பாலிகா பாடசாலைக்குக் கட்டிடம்கட்ட ரூ 9000-ம் பொருளுதவி ரூ 1200-ம் கொடுத்திருப்பதாக நாகப்பட்டணம் முனிசிபல் கவுன்சிலுக்கு அனுப்பப்பட்டிருந்த கவர்ன்மெண்டு உத்திரவைப் பார்வையிட்டேன். நாகூரிலிருக்கிற பள்ளிக்கூடத்திற்கும் சொந்தமாக ஒரு கட்டிடம் கட்டிவிட வேண்டும். மாகாணக் கல்வி நிர்வாக விஷயமாக கல்வி இலாகா டைரக்டர் 1914-ம் வருஷம் அக்டோபர் மாதம் 27 ம் தேதிகவர்ன்மெண்டாருக்கு அனுப்பி யிருக்கும் யாதாஸ்திலிருந்து முகம்மதியப் பாலிகைகளுக்காக 154 ஆரம்பப் பாடசாலைகள் இருந்து வருவதாகத் தெரிகிறது. அவைகளில் அநேக பள்ளிக்கூடங்களுக்கு சொந்தக் கட்டிடங்கள் இராவென்றே நினைக்கிறேன். முகம்மதியர்களின் கல்வி அபிவிருத்திக்காக வருஷத்திற்கு 30000 ரூபாய் ஒதுக்கி வைக்க கவர்ன்மெண்டார் தீர்மானித்திருப்பது எனக்குத் தெரியாமலில்லை. ஆனால் அந்தத் தொகையை இப்பொழுதிருந்து வரும் பள்ளிக்கூடங்களுக்கு வேண்டிய வற்றை வாங்கிக் கொடுத்து அவைகளை அபிவிருத்தி செய்வதற்கே உபயோகிக்க வேண்டும். இந்த 30000 ரூபாயையும் முகம்மதியப் பிள்ளைகளின் பள்ளிக்கூடங்களுக்காக ஒதுக்கி வைத்து விட்டு, வருஷந்தோறும் முகம்மதியப் பாலிகா பாடசாலைகளுக்குக் கட்டிடங்கள் கட்டுவதற்காக 20000 ரூபாய் ஒதுக்கிவைக்க வேண்டும். மேலும் இருவகைப் பள்ளிக் கூடங்களுக்கும் பொருளுதவியும் செய்து வர வேண்டும்.

இந்தப் பணத்தைக் கொடுப்பதற்காக முக்கியமான செலவினத்தை நிறுத்தி விடும்படி நான் சொல்லவில்லை. கணக்கை சரிக்கட்டுவதில் எவ்வித அசவுகரியத்தையும் உண்டு பண்ணாத இனமாகப் பார்த்தே இந்தப் பணத்தை எடுக்க வழி சொல்லியிருக்கிறேன். ஆகவே இந்த சபையார் ஏகமனதுடன் என்னுடைய வேண்டுகோளை அங்கீகரிப்பார்களென்று நம்புகிறேன்.

## கனம் திவான்பகதூர் பி. ராஜகோபாலாச்சாரியார்.

மேன்மைதங்கிய பிரபுவே,

கனம் போலாவரம் ஜமீன்தார் கேள்வி கேட்டதற்கு இந்தத் தலைப்பின் கீழ் ஒதுக்கிவைக்கப்பட்டிருக்கும் லட்சம் ரூபாயில் கை வைக்க முடியாதென்று ஏற்கனவே நான் சொல்லியிருக்கிறேன். நான் ஏற்கனவே சொல்லியிருக்கிற பிரகாரம் அந்தப் பணம் ஒரு வேலைக்காக உத்தேசிக்கப்பட்டுப் போய்விட்டது. இப்பொழுதே நாம் அநேக பரிட்சார்த்த வேலைகளை ஆரம்பித்திருக்கிறோம். ஒதுக்கிவைக்கப்பட்டிருக்கும் தொகை போதாமல் போய்விடுமோவென்றுகூட சந்தேகமாயிருக்கிறது.

முகம்மதிய பாலிகா பாடசாலைகளுக்குக் கட்டிடங்கள் கட்டுவதற்கு ஸ்தல ஸ்தாபனங்களுக்குப் பணம் கொடுக்க வேண்டுமென்று கனம் மெம்பர் சொல்லுகிற பிரகாரம், 1915-16ம் வருஷத்தில் பணம் ஒதுக்கிவைக்க சாத்தியப்படாமற் போனது வாஸ்தவமே. முகம்மதியப் பாலிகா பாடசாலைகளுக்கு மாத்திரம் பணம் ஒதுக்கிவைக்கப்படாமலில்லை. ஹிந்து பாடசாலைகளுக்காவது முகம்மதிய பாடசாலைகளுக்காவது (ஆண் பெண் பாடசாலைகள் இரண்டும்) பணம் ஒதுக்கிவைக்க முடியவில்லை. அதற்கு நமது செல்வ நிலைமைதான் காரணம். பிரஸ்தாப வருஷத்தில் கவர்ன்மெண்டார் இவ்விஷயமாக தாராள புத்தி காட்டியிருக்கிறார்களென்பதை கனம் மெம்பரே ஒப்புக் கொள்ளுகிறார். ஏற்கனவே ஆரம்பிக்கப்பட்டு அரைகுறையாக இருக்கும் பள்ளிக்கூடக் கட்டிடங்களைக் கட்டி முடிக்கவும், பழைய கட்டிடங்களைப் பழுது பார்க்கவும், ஸ்தல ஸ்தாபனங்களுக்கு 4. 24 லட்சம் ரூபாய் கொடுத்திருப்பதை வரவு செலவு திட்டத்திலிருந்து பார்த்துக் கொள்ளலாம். புதிதாகக் கட்டிடங்களைக் கட்டுவதை விட மேலே சொன்னது தான் அவசியமென்று நாங்கள் நினைத்தோம். பண நெருக்கடி தீர்ந்தால் புதிய கட்டிடங்களைக்கட்டுவதற்கு ஸ்தல ஸ்தாபனங்களுக்குப் பணம் கொடுக்கும்வழக்கத்தை மறுபடியும் தொட்டுக்கொள்ள சாத்தியப்படலாம். நாகப்பட்டணம் சம்பந்தப்பட்டமட்டில் நாம் வெகு தாராளமாக நடந்து கொண்டிருக்கிறோமென்பதை கனம் மெம்பரே ஒப்புக்கொண்டிருக்கிறார். அந்த ஊரில் ஒரு முகம்மதிய பாலிகாபாடசாலைக்குக் கட்டிடம் கட்டுவதற்காக சில தினங்கள் முன்தான் 9000 ரூபாய் கொடுத்தோம். நடை முதல் வருஷத்தில் இந்த ஒரு புதிய கட்டிடத்திற்குத்தான் பணம் கொடுக்கப்பட்டிருக்கிறது. அதிலிருந்து முகம்மதிய பாலிகைகளின் கல்வி அபிவிருத்தி விஷயத்தில் கவர்ன்மெண்டார் விசேஷ கவலை கொண்டிருந்தும், இதற்கு மேல் ஒன்றும் செய்ய சாத்தியமில்லையென்பதை கனம் மெம்பர் அறிந்து கொள்ளலாம்.

## கனம் மிஸ்டர் அகமது தம்பி மரக்காயர்,

சற்று முன்னல் நடந்த பிரஸ்தாபத்திலிருந்து "சில்லரை" கிலப்பின் கீழ் சில ஆயிர ரூபாய்கள் மிச்சமிருப்பதாகத் தெரிகிறது. பள்ளிக்கூடம் 1-க்கு 6000 ரூபாய் விதம் இரண்டு பள்ளிக்கூடக்கட்டிடங்களுக்குமாக 12000 ரூபாய் சரிக்கட்டிவிட குறைந்தது 3000 ரூபாயாவது எங்களுக்குக் கொடுக்கப்படுமென்று நம்புகிறேன். இது ஒரு பெருந்தொகையல்ல. ஆனல் நாங்கள் எங்களுக்குக் கிடைத்ததைக் கொண்டு தான் சரிப்படுத்திக் கொள்ள வேண்டும். எவ்விதமாவது ரூ 3000 கொடுத்தால் நாகப்பட்டணத்தில் ஒரு கட்டிடமும் நாகூரில் ஒரு கட்டிடமும் கட்டி விடலாம். இந்த விஷயத்தை கவர்ன்மெண்டார் அனுகூலமாக கவனித்து எங்களுக்கு 3000 ரூபாய் கொடுப்பார்களென்று நம்புகிறேன்.

## கனம் திவான் பகதூர் பி. ராஜகோபாலாச்சாரியார்.

கனம் மெம்பர் கல்வி இலாகா டைரக்டருக்கு விண்ணப்பம் செய்து கொண்டால் அவர் அதற்கு ஏற்பாடு செய்ய சாத்தியப்படலாம். இந்த விண்ணப்பங்கள் கல்வி இலாகா டைரக்டர் துவாராவாகவே எங்களுக்குக் கிடைக்கின்றன. கனம் மெம்பர் தம்முடைய முடையை கல்வி இலாகா டைரக்டரிடம் தெரிவித்துக் கொண்டால் அவர் வழி செய்யலாம்.

## கனம் அகமது தம்பி மரக்காயர்.

கனம் மெம்பர் கொடுத்த வாக்குறுதியின்பேரில், என்னுடைய தீர்மானத்தை நான் வாபீஸ் வாங்கிக் கொள்ளுகிறேன்.

மேன்மை தங்கிய அக்கிராசனாதிபதியின் அனுமதியின் பேரில் தீர்மானம் வாபீஸ் வாங்கிக் கொள்ளக்பட்டது.



## ராமனாதபுரம்-கீழக்கரை ரஸ்தாவுக்காக ராமனாதபுரம் தாலூகா போர்டுக்குப் பொருளுதவி.

மேன்மை தங்கிய பிரபுவே,

என் பேராலிருக்கும் மற்றொரு தீர்மானம் பின்வருமாறு:—

"ராமனாதபுரமிருந்து கீழக்கரைக்கு மண் ரஸ்தா வொன்றைப் போடுவதற்காக ராமனாதபுரம் தாலுகா போர்டுக்கு ரூ. 50,000 கொடுக்க வேண்டுமென்றும், அதற்கு ஈடு செய்வதற்காக சுகாதார வேலைகளுக்காக ஸத்ல ஸ்தாபனங்களுக்கு ஒதுக்கி வைக்கப்பட்டிருக்கும் கிராண்டு தொகை 8.22 லட்சம் ரூபாயை 7-72 லட்சமாகக் குறைத்து விடவேண்டு மென்றும் இந்த சபை சிபார்சு செய்கிறது."

இது ராமனாதபுரம் ஜில்லா போர்டைக் கேட்கவேண்டிய விஷயமே தவிர கவர்ன்மெண்டாரைக் கேட்கக்கூடிய காரியமல்லவென்று சபையாருக்குத் தோன்றலாம். இது விஷயமாக சென்ற வருஷத்தில் ராமனாதபுரம் ஜில்லா போர்டு பிரசிடெண்டுக்கு நான் எழுதியிருந்ததற்கு இப்போது ஸ்வரூபத்தில் ரஸ்தா கிடையாதென்றும், இப்போதுள்ள வண்டிப் பாதையானது கரடுமுரடான இடங்கள், மணக்காடு இவற்றின் வழியாகப் போகிறதென்றும், ரஸ்தாப்போடுவதற்கு ஏராளமாக செலவு பிடிக்குமென்றும் எனக்கு எழுதியிருக்கிறார். இருக்கிற ரஸ்தாக்களைக்கூட சரியான ஸ்திதியில் வைத்திருக்க ஜில்லா போர்டாரிடம் பணமில்லை யென்றும், இந்த ரஸ்தாவை ஜில்லா போர்டார் போட்டு வைக்க முடியுமென்று சொப்பனத்திலும் நினைக்க இடமில்லையென்றும் அவர் எனக்கு அறிவித்திருக்கிறார்.

கீழ்க்கரை ஒரு முக்கியமான துறைமுகப் பட்டணமென்பது கவர்ன் மெண்டாருக்குத் தெரிந்த விஷயம். 15,000 ஜனங்களுக்கதிகமாக அந்த ஊரில் வசித்து வருகிறார்கள். மழை காலங்களில் ஜனங்கள் ஜலத்தில் மிதந்து கொண்டுபோக வேண்டியிருக்கிறது. இந்தத் துறை முகத்தி லிருந்து விலோனுக்கு ஏராளமாக ஏற்றுமதிகள் செய்யப்படுகின்றன. ஹிந்து முஸ்லீம் புண்ய க்ஷேத்திரங்களான திருப்பலாணி என்கிற தர்ப்பசயனம், உத்தர கோசமங்கை, ஏர்வாடி முதலிய ஸ்தலங்கள் இந்த ஊருக்குச் செல் லும் மார்க்கத்திலிருக்கின்றன. போக்குவரத்து சாதனங்கள் சரியானபடி இல் லாததால், மோரக் குளத்தில் எடுக்கப்படும் உப்பு இலகுவாக ஏற்றி அனுப் ப்பட முடிகிறதில்லை. அதனால் தொலை விடங்களில் எடுக்கப்பட்டு ரயில், மார்க்கமாக அனுப்பப்படும் உப்புடன்கூட இந்த உப்பு போட்டி போட முடி யாமல், அவ்வளவு செலவு ஏற்பட்டு விடுகிறது. ஒரு ரஸ்தாவைப் போட் டுவிட்டால், இந்த ஜில்லாவில் தரிசாகக் கிடக்கும் பிராந்தியங்கள் திறந்து போய்விடும். கீழ்க்கரைவாசிகளிட மிருந்து கவர்ன்மெண்டாருக்கு இது விஷயமாக ஒருமகஜர்கூட கிடைத்திருக்கிறதென்று நினைக்கிறேன். ராமனாத புரம் ஜில்லாவின் இந்த பிராந்தியத்திலுள்ளவர்கள் படும் கஷ்டங்களும் அசவுகரியங்களும் அதில் தெளிவாகக்கண்டிருக்கின்றன. கவர்ன்மெண்டார் ஜில்லா போர்டுகளுக்கு வழக்கமாகக் கொடுக்கிற கிராண்டுகளைத்தவிர, விசா கப்பட்டணம், கொரப்பட்டு ஜில்லா போர்டுகளுக்கும் போலாவரம் தாலுகா போர்டுக்கும் ஸ்பெஷல் கிராண்டுகள் கொடுத்திருக்கிறார்கள். அந்த போர்டு களுக்கு கவர்ன்மெண்டார் பணங்கொடுப்பதைப்பற்றி நான் பொறாமைப்பட வில்லை. ஆனால் எந்த வேலைகளுக்காக அந்த போர்டுகளுக்கு ஸ்பெஷல் கிரா ண்டுகள் கொடுபட்டிருக்கிற தென்பதைக் காட்டும் ஜாப்தாவைப்பார்வை யிட்டதிலிருந்து அவைகளைவிட நான் சொல்லும் ரஸ்தாவானது அதிக முக்கியமானதாக இல்லாவிடினும், அவ்வளவு முக்கியமானதுதா னென்று தெரியும். குதிரைலாயங்கள் கட்டுதல், அற்ப ரஸ்தாக்களைப் போடுதல் முத லிய சின்ன வேலைகளுக்காக வெல்லாம் கவர்ன்மெண்டார் போலாவரம் தா லுகா போர்டுக்கு 70,000 ரூபாய் கொடுத்திருப்பதை சபையாரே வரவு செலவு திட்டத்திலிருந்து காணலாம்

ஆகவே, இந்த முக்கியமானரஸ்தாவேலையை இப்பொழுதே அங்குரார்ப் பணம் செய்து, சொற்ப வருஷங்களிலாவது அது முடிந்துவிடும்படி கொஞ் சம் கிராண்டு கொடுக்க வேண்டிய தவசியமென்று நான் நினைக்கிறேன்.

சில்லரைசுகாதார வேலைகளுக்காக கொடுபடப்போகும் கிராண்டு களிலிருந்து அந்தத்தொகையை ஈடு செய்து கொள்ளலா மென்றும் நான் யோசனை சொல்லியிருக்கிறேன். சுகாதார அபிவிருத்தி விஷயம் மிகவும் முக்கியமானதினால் அதற்காக ஒதுக்கி வைக்கப்படும் பணத்தைக்குறைக்க வேண்டுமென்று நான் சொல்லக்கூடிய வனல்ல. ஆனால் வி. நமூனவில்

அச்சிடப்பட்டிருக்கும் விவரங்களைப் பார்வையிடுவதில் குப்பைத் தொட்டிகள், இரும்புக் கக்கூஸ் வண்டிகள் முதலியவைகளை வாங்குவதற்காக பல முனிசிபாலிட்டிகளுக்கும் பொருளுதவி செய்யப் படுவதாகத் தெரிய வருகிறது. இந்த சாமான்களை யெல்லாம் முனிசிபாலிட்டிகள் தங்களுடைய சாதாரண ஆதாய மூலங்களிலிருந்து வாங்கிக் கொள்ளுவது வழக்கம். இவைகளுக்காக கவர்ன்மெண்டார் கிராண்டு கொடுக்கு முன், அந்த முனிசிபாலிட்டிகளுக்கு இந்த சாமான்களை வாங்கப் பணமில்லையா வென்பதை கவர்ன்மெண்டார் விசாரித் தறிந்து கொண்டார்களா வென்று எனக்குத் தெரியவில்லை. முந்தின வருஷங்களில் இந்த முனிசிபாலிட்டிகளுக்கு சொற்ப கிராண்டுகளே கொடுக்க பட்டிருக்கிற தென்றுவது அல்லது கவர்ன்மெண்டாருடைய உதவியைப் பெறுவதற்கு சுகாதார திட்டமொன்றையும் தயாராகவைத்திருக்க வில்லை யென்றுவதே இந்தகிராண்டுகளை கவர்ன்மெண்டார் கொடுக்கிறார்களென்று நினைக்கிறேன். வண்டிகள் வாங்குதல், கக்கூஸ் கட்டுதல் போன்ற அற்ப வேலைகளுக்காக கவர்ன்மெண்டார் பணத்தைச் சிதற அடித்து விடுவதை நான் பலமாக ஆட்சேபிக்கிறேன். ஜில்லா போர்டுகளுக்காக 5 லட்சம் ரூபாய் கொடுப்பட் டிருப்பதற்கும் விவரங்கள் காணவில்லை. குப்பைத் தொட்டிகள் முதலிய அற்ப சாமான்களை வாங்குவதற்காக ஜில்லா போர்டுகள் இந்த ஐந்து லட்சம் ரூபாயையும் செலவு செய்து விடா வென்றே நினைக்கிறேன்.

இந்த அற்பச் செலவினங்களை சுகாதாரச் செலவுகள்என்கிற தலைப்பிலிருந்து எடுத்துவிடசபையார் ஒப்புக்கொள்ளுவார்க ளென்றே நம்புகிறேன். அந்தப் பணத்தை நான் குறிப்பிடும் ரஸ்தாவைப் போடுவதற்காக உபயோகிக்கலாம். கவர்ன்மெண்டார் வேறு வழியில் பணத்தைத் தேடித்தருவதாயிருந்தால் வி. நமூனவை மாற்றுமல் அப்படியே வைத்திருப்பதில் எனக்கு ஆட்சேபனையில்லை.

## கனம் ஸர். பி. எஸ். சிவஸ்வாமிய்யர்

ராமனுதபுரம் ஜில்லா வாசிகளுக்கு நல்ல ரஸ்தா வசதிகளை ஏற்படுத்தித் தரவேண்டுமென்று கனம் அகமது தம்பி மரக்காயர் கொண்டிருக்கும் சிரத்தையில் எனக்கு ரொம்ப அனுதாப மிருக்கிறது. ராமனுத புரத்திற்கும் கீழக்கரைக்கும் மத்தியிலுள்ள பிராந்தியமானது மணல் காடென்றே நினைக்கிறேன். அந்த பாகத்தில் நல்ல ரஸ்தாக்களைப் போட்டுத் தரவேண்டுமென்றே எல்லாருக்கும் தோன்றும். ஆயினும், கவர்ன்மெண்டார் இந்தத் தீர்மானத்தை அங்கீகரிக்க முடியாது. ஒவ்வொரு ஜில்லாவின் பிரதிநிதியும் தத்தம் ஜில்லாவில் குறிப்பிட்ட ரஸ்தாக்களுக்காகப் பணம் கொடுக்கும்படி கேட்க இடங்கொடுப்பது மிகவும் கெட்ட வழக்கமாகும். இம்மாதிரியான விஷயங்களை ஸ்தலஸ்தாபனங்களின் முன்பாகக் கொண்டுவர வேண்டுமே தவிர இந்த சபைக்கு இவைகள் ஏற்ற விஷயங்களல்ல. ராம

னாதபுரம் ஜில்லா வாசிகளுக்கு ரஸ்தா வசதிகள் திருப்திகரமாக இல்லையென்பது எனக்குத் தெரியும். அந்தக் குறையை எடுத்துச் சொல்லிக் கொள்ளுவதற்கு ஜில்லா போர்டுகளே சரியான இடம்.

இம்மாதிரியான தீர்மானங்களை இந்த சபையில் கொண்டு வருவதின் உசிதா உசிதம் நிற்க, சுகாதார வேலைகளுக்காக ஒதுக்கிவைக்கப்பட்ட பணம் இப்பொழுதே மிகவும் குறைக்கப்பட்டுப் போய் விட்டது. பிரஸ்தாப வருஷத்தில் அதற்காக 25 லட்சம் ரூபாய் ஒதுக்கி வைக்கப்பட்டது; ஆனால் **1915—16**-ம் வருஷத்திற்கு 8 லட்சம் ரூபாய் தான். இந்தத் தொகையை 10-லட்சமாக உயர்த்த வேண்டுமென்று மற்றொரு கனம் மெம்பர் தீர்மானம் கொண்டு வந்திருக்கிறார். நடை முதல் வருஷத்தில் சில்லரை சுகாதார வேலைகளுக்காக எடுத்து வைக்கப்பட்ட பணத்தைவிட புது வருஷத்தில் சுகாதார வேலைக்காக 3 லட்சம் ரூபாய் வைக்கப்பட்டிருப்பது மிகவும் குறைவு தான். ஆகவே அதை இன்னமும் குறைக்க சாத்தியமில்லை.

ஜில்லா போர்டுகளின் ஆதாய மூலங்களை இட்டு நிரப்புவதற்காக ஒதுக்கி வைக்கப்பட்டிருக்கும் 14 லட்சம் ரூபாயில் ராமனாதபுரம் ஜில்லா போர்டுக்கு ரூ. 55,675 கிடைக்கிறது. பாலங்களுக்காகக் கொடுபடும் 3 லட்சம் ரூபாயில் ராமனாதபுரம் ஜில்லாவுக்கு 23000 ரூபாய் கிடைக்கிறது. தரித்திர ஜில்லாக்கள் என்பதற்காக ஸ்பெஷலாக கவனிக்கப்படுபவைகளில் ராமனாதபுரம் ஒன்று. ஆகவே லாண்டு செஸ்ஸின் விதாசாரப்படி கிராண்டுகளைப் பிரித்துக் கொடுத்தால் என்ன கிடைக்கலாமோ அதைவிட அதிகமாகவே ராமனாதபுரம் ஜில்லாவுக்குக் கொடுத்திருக்கிறது. இதைவிட அதிகமாக ஸ்பெஷலாக ஒரு ரஸ்தாவைப் போடுவதற்காக வென்று தனியாக கவர்ன்மெண்டார் ஒன்றும் செய்யமுடியாது. கனம் மெம்பர் தமது ஓட்டர்களை ஸ்தலத்ததிகாரிகளிடம் முறையிட்டுக் கொள்ளும்படி அறிவிக்க வேண்டியது தான்.

### கனம் கே. ராமய்யங்கார்

அனுபவத்தில் கவர்ன்மெண்டார் ராமனாதபுரம் ஜில்லாவை சலுகையாக நடத்துகிறார்களென்பது எனக்குத் தெரியும். மற்ற எல்லா ஜில்லாக்களில் நீண்ட தூரம் ரஸ்தாக்களிருக்கையில் ராமனாதபுரம் ஜில்லாவில் 158 மைல் நீளமுள்ள ரஸ்தாக்களே இருப்பதிலிருந்து அதனிடம் சலுகை காட்டவேண்டிய தவசியமென்று ஏற்படுகிறது. மதுரை ஜில்லாவில் ராமனாதபுரம் பாகமானது வெகு காலமாக அலட்சியம் செய்யப்பட்டு வந்திருக்கிறதென்று முன்னொரு சந்தர்ப்பத்தில் ஸர் ஹாரோல்டு ஸ்டூவர்ட்டே சொல்லியிருக்கிறார். இப்போது அந்த ஜில்லா கேவலமான நிலைமையிலிருப்பதற்கு அதுவே காரணம். அனுபவத்தில் எனக்கு அது தெரிந்த விஷயம்.

ஆகவே தான் அதற்கு ஸ்பெஷல் கிராண்டு கொடுத்து ஸ்பெஷலாக நடத்த வேண்டும். சில ஆயிர ரூபாய்கள் அதிகமாகக் கொடுபடுவது வாஸ்தவம் தான். இருந்தாலும் கிராண்டுகளை 1-க்கு 1¾ பங்காக உயர்த்தலாம்.

கனம் சிவஸ்வாமிய்யர்:—அவைகளெல்லாம் தேச சம்பந்தமான வேலைகளா?

கனம் கே. ராமய்யங்கார்:—ஆம். அவைகள் தேச சம்பந்தமான வேலைகளே. இந்தப் பிரச்னையைக் கிளப்பி விட்டுவிட்டபடியால், ஒவ்வொரு இடத்திற்கும் எவ்வளவு சவுகரியம் செய்து கொடுக்க முடியுமோ அவ்வளவு சவுகரியமும் செய்து கொடுக்க வேண்டுமென்பதே தேச க்ஷேமத்தை உத்தேசித்த காரியமென்பதை ஞாபகப்படுத்திக் கொள்ளும்படி மிஸ்டர் சிவஸ்வாமி அய்யரைக் கேட்டுக் கொள்ளுகிறேன். அந்த லட்சியத்தின் பேரிலேயே நான் பேசுகிறேன். ஒவ்வொரு இடத்திலும் கூடிய வரையில் சவுகரியங்கள் ஏற்படும் வரையில் அதற்கு வேண்டியதைச் செய்வது கவர்ன்மெண்டின் கடமை. இந்த வித்தியாசத்தை எப்பொழுதும் ஞாபகத்தில் வைத்துக் கொள்ளவேண்டும். அதற்கு மாறி நடக்கவேண்டுமென்று நான் கேட்கவில்லை. அந்த தத்துவத்தை கைக்கொண்டு அதற்குத் தகுந்தாற்போல் நடந்துகொள்ள வேண்டுமென்றே நான் கேட்கிறேன். அது தான் நான் சொல்லும் யோசனை. மதுரை ஜில்லாவின் ராமனாதபுரம் பிராந்தியம் அலட்சியம் செய்யப்பட்டிருந்தால் அதற்கு கவர்ன்மெண்டாருந்தான் ஜவாப்தாரிகள். அந்தப் பிராந்தியத்தை சரியானபடி கவனிக்காமல் நாமெல்லோரும் அலட்சியமாக இருந்து விட்டோம். அதைக் கூடியவரையில் சவுகரிய முள்ளதாகச் செய்வதற்கு அதனிடம் சலுகை காட்ட வேண்டியிருந்தால், அதை தேசகாரியமெனவே நாம் எல்லோரும் நினைத்துச் செய்ய வேண்டும்.

## கனம் மிஸ்டர் அகமது தம்பி மரக்காயர்

கனம் மிஸ்டர் சிவஸ்வாமிய்யர் கூறியதுபோல நான் என்னுடைய ஓட்டர்களைத் திருப்தி செய்வதற்காக இங்கிருக்க வில்லை யென்பதைத் தெரிவித்துக் கொள்ளுகிறேன். உண்மையிலிருந்து வரும் குறையையே நான் சபையின் முன் பிரஸ்தாபித்திருக்கிறேன். நான் ராமனாதபுரம், மண்டபம் முதலிய இடங்களுக்குச் சென்றிருக்கிறேன். கிழக்கரை வாசிகள் படுங் கஷ்டங்களும் அசவுகரியங்களும் எனக்கு நேரில் தெரியும். சத சதவென்று சேறாக விருக்கும் ரஸ்தாக்கள் வழியாக ஜனங்கள் கிழக்கரைக்குப் போக வேண்டி யிருக்கிறது. நான் ஏற்கனவே தாலுகா போர்டு ஜில்லா போர்டு இரண்டிலும் முறையிட்டுப் பார்த்தாகிவிட்டது. பணதரித்திரத்தினால் தங்களாலொன்றும் செய்ய முடியாதென்று அவர்கள் சொல்லிவிட்டார்கள். இந்த வேலையைச் செய்வதற்குத் தாலுகா போர்டிடம் பணமில்லா விடில்,

அங்கு ரார்ப்பணம் செய்வதற்காவது ஸ்பெஷலாக கொஞ்சம் பணங்கொடுத்துதவ வேண்டியது கவர்ன்மெண்டாருடைய கடமை. கவர்ன்மெண்டாரும் உதவி செய்ய மறுத்து விட்டால் ராமனுதபுரம் ஜில்லா வாசிகள் திண்டாட வேண்டியது தான். ஆகவே கவர்ன்மெண்டார் இவ்விஷயத்தைப் புனராலோசனை செய்து ஏற்கனவே கொடுத்திருக்கும் கிராண்டுடன் ராமனுதபுரம் போர்டுக்கு இந்த வேலைக்காக உப கிராண்டு கொடுக்கும்படி கேட்டுக் கொள்ளுகிறேன்.

தீர்மானம் ஓட்டுக்கு விடப்பட்டுத் தோற்றுப்போய் விட்டது.



[மார்ச்சு மாதம் 29-ம் தேதி நடந்த கூட்டம்]

## முகம்மதியப் பிரேதங்களைத் தோண்டி எடுத்தலும், பிரேத பரிசோதனையும்.

"புதைக்கப்பட்டு விட்ட முகம்மதியப் பிரேதங்களைத் தோண்டி எடுக்க வேண்டியிருந்தால், முகம்மதியர்களைக் கொண்டும், சாத்தியமானல், பந்துக்களைக் கொண்டுமே அவ்விதம் செய்ய வேண்டுமென்றும்,

முகம்மதிய ஸ்திரீ பிரேதங்களைப் பரிசோதனை செய்யவேண்டி யிருந்தால் ஸ்திரீ வைத்திய உத்தியோகஸ்தரைக்கொண்டே பிரேத பரிசோதனை செய்து வைக்க வேண்டுமென்றும்,

உத்திரவு செய்ய வேண்டுமென்று ஆலோசனை சபையுடன் கூடிய கவர்னருக்கு இந்த சபை சிபார்சு செய்கிறது."

மேலே கண்ட தீர்மானத்தைப் பிரேரணை செய்வதில் கனம் அகமது தம்பி மரக்காயர் பேசியதாவது:—

மேன்மைதங்கிய பிரபுவே,

கிரிமினல் கேஸ்களைப் பரிசீலனை செய்வதற்காக சில சமயங்களில் புதைக்கப்பட்ட பிரேதங்களையும் தோண்டியெடுக்க வேண்டிய சந்தர்ப்பங்கள் ஏற்படுவது தங்களுக்குத் தெரிந்த விஷயம். முகம்மதியப் பிரேதங்கள் புதைக்கப்பட்டு போன பிறகு அவைகளைத் தோண்டி எடுப்பது மார்க்க தர்மத்திற்கு விரோதம். ஆனல் நியாயந் தவருமல் பாதுகாப்பதற்காக சில சந்தர்ப்பங்களில் பிரேதங்களைத் தோண்டி எடுக்க நேரிடலாம். முகம்மதிய சமுகத்தாரின் மதசம்பந்தமான தர்மத்திற்கு எவ்வித பங்கமும் நேரிடாமல் பாதுகாப்பதற்காகவே இறந்து போனவர்களின் சொந்தக்காரர்களையாவது, அல்லது அவர்கள் ஒருவருமில்லாவிட்டால் முகம்மதியர்களையாவது கொண்டு, பிரேதங்களை எடுக்கச்செய்ய வேண்டு மென்று நான் கேட்டுக்கொள்ளுகிறேன்.

முகம்மதியர் எல்லோரும் கோஷா முறையை அனுஷ்டிப்பதும் தங்களுக்குத் தெரிந்த விஷயம். அதனால் முகம்மதிய ஸ்திரீகள் தங்களுடைய வாழ்நாள் காலத்தில் பரபுருஷர்கள் எதிரே வரக்கூடாது. அவர்கள் இறந்து போன பிறகும் அவர்களுடைய சரீரங்களை பரபுருஷர்கள் கண்ணிற்படாமல் காப்பாற்ற வேண்டிய தவசியம்.

முதுகுளத்தூரில் சமீபத்தில் நடந்த கேஸின் விவரம் கவர்ன்மெண்டாருக்குத் தெரியும். அது சம்பந்தமாக 1914ம் வருஷம் மே மாதம் 16ம் தேதி கூடிய சட்டசபையில் நான் கேள்விக் கேட்டிருக்கிறேன். தஞ்சாவூர் ஜில்லா ஆழியூரிலும் சமீபத்தில் கொலையாகயிருக்கலாமோ வென்கிற சந்தேகத்தின் பேரில் ஒரு முகம்மதிய ஸ்திரீயின் பிரேதம் தோண்டியெடுக்கப்பட்டதாகவும், கடைசியாக சாக்ஷியம் கிடைக்காததினால் ஒன்றும் செய்யாமல் விட்டுவிடப்பட்டதென்றும் என்னுடைய அறிவிப்புக்கு வந்திருக்கிறது. இந்தக் கேஸில் அந்த ஸ்திரீயின் பிரேதமானது அவளுடைய பந்துக்களைக் கொண்டே தோண்டி எடுக்கச் செய்யப்பட்டதென்று ஜில்லாமாஜிஸ்திரேட் எனக்கு அறிவித்திருக்கிறார். ஆனால் நாகப்பட்டணம் முனிசிபல் ஆஸ்பத்திரிக்கு அந்தப்பிரேதம் கொண்டுவரப்பட்டு அங்கு ஸ்திரீ சப் அஸிஸ்டெண்டு சர்ஜனிருந்தும் புருஷ சப் அஸிஸ்டெண்டு சர்ஜனாலேயே பிரேதசோதனை செய்யப்பட்டிருக்கிறது. எல்லா இடங்களிலும் எல்லாக் காலங்களிலும் பிரேதபரிசோதனை செய்வதற்கு ஸ்திரீகள் கிடைப்பது சாத்தியமில்லாமலிருக்கலாம். இருந்தாலும் ஸ்திரீ சப் அஸிஸ்டெண்டு சர்ஜன்களிருக்குமிடங்களில் பிரேதசோதனையானது அவர்களாலேயே செய்யப்படவேண்டுமென்பதே கவர்ன்மெண்டார் கருத்தென்று தெரிந்து விட்டால் பெருங் கவலை தீர்ந்து விடுமென்பதில் சிறிதும் சந்தேகமில்லை. எல்லா வகுப்பினருடைய மத உணர்ச்சியையும் மதித்து நடந்து கொள்வதில் தங்களுடைய கவர்ன்மெண்டார் பேர் போனவர்கள். ஆகவே தாங்கள் தீர்மானத்தை கொஞ்சமும் தவக்கமன்னியில் அங்கீகரித்து முகம்மதியர்களுடைய மார்க்க தர்மத்தைக் காப்பாற்றுவீர்களென்று நம்புகிறேன்.

## கனம் டி ஜெயினுலாபுதீன் சாகிப் பகதூர்

தீர்மானத்தை ஆமோதித்துப் பேசியதாவது:— இத்தீர்மானத்தை நான் ஆமோதிக்கிறேன். இறந்து போனவருடைய சரீரத்தை அடக்கம்செய்தபிறகு மறுபடியும் அதைத் தோண்டி எடுப்பதென்பதே முகம்மதிய தர்மப்படி இறந்து போனவர்களுக்கு இருக்கிறவர்கள் செய்யும் கடமைக்கு நேர் விரோதமானது. மனுஷியர்களுக்கு சாவு ஏற்பட்டு விட்டால் ஜாதி மத பேத வித்தியாசங்கள் போய்விடும். செத்தவர்களை கௌரவப்படுத்த வேண்டியது உயிருடனிருப்பவர்களுடைய கடமை. ஆனால் நியாயபரிபாலனத்தில் நீதியைக் காப்பாற்றுவதற்காக சிலசமயங்களில் அடக்கம் செய்யப்பட்ட பிரேதங்களை

தோண்டி எடுக்கவேண்டிய அவசியமேற்படலாம். அவ்வித சந்தர்ப்பங்களில் தங்களுடைய மததர்மத்தை மதித்து நடந்து கொள்ளும்படிக்கே இஸ்லாம் மார்க்கத்தைச் சேர்ந்தவர்கள் கேட்டுக்கொள்ளுகிறார்கள்; அதாவது, முகம்மதியரின் பிரேதத்தைத் தோண்டி எடுக்க வேண்டியிருக்குமாயின், நபிகள் நாயகத்தினுடைய உபதேசத்தில் அந்த ஆத்மாவைப் போல நம்பிக்கை யுள்ளவர்களாக இல்லாதவர்கள் தொட்டு அந்த ஆத்மா அனுசாரமாகப் போய்விடாமல், அது எந்த மதத்தைச் சேர்ந்ததோ அதே மதத்தைச் சேர்ந்தவர்களைக் கொண்டு அந்தப் பிரேதத்தை எடுக்கச் செய்யவேண்டுமென்பது தான். செத்தவர்களுக்காகத் தான் அவ்விதம் செய்யவேண்டுமென்பதில்லை. இறந்துபோனவர்களுடைய மதத்தைச் சார்ந்தவர்களுடைய உணர்ச்சியையும் மதித்து நடக்க வேண்டும். முகம்மதியப் பிரேதங்களை முகம்மதியர்களைக்கொண்டே தோண்டிஎடுக்க வேண்டுமென்றும், வேறு ஒருவரும் தொடக்கூடா தென்றும், சென்னை கவர்ன்மெண்டார் உத்திரவுசெய்து விடுவார்களானால் தென்னிந்தியாவில் மட்டிலல்லாது இந்தியா முழுவதுமுள்ள முஸல்மான்கள் இந்த கவர்ன்மெண்டுக்கு நன்றியுள்ளவர்களாக இருப்பார்கள்.

இறந்துபோனவர்கள் விஷயத்தில் எங்கள் மார்க்கத்தினருக்கு இருந்து வரும் உணர்ச்சியின் மற்றொரு அம்சத்தையும் தங்களுக்குத் தெரிவித்துக் கொள்ள விரும்புகிறேன். ஸ்திரீகளைப் பரபுருஷர்கள் பார்க்க்கூடாதென்று வெகு கண்டிப்பாக இருக்கும் எங்களுக்கு,ஸ்திரீகளுடைய பிரேதங்களையும் பரபுருஷர்கள் பார்க்கக்கூடா தென்பதே எண்ணம் பிரேத சோதனை என்பதே எங்கள் மார்க்கத்திற்கு விரோதமானது; அதிலும் ஸ்திரீகளுடைய பிரேதத்தைப் பரிசோதனை செய்வதென்றால் கேட்க வேண்டியதில்லை; அதிலும் ஒரு ஸ்திரீயின் பிரேதத்தை புருஷன் பரிசோதனை செய்கிறதென்றால் அதைப்பற்றிச் சொல்லவும் வேண்டுமோ. அதனால் தான் ஸ்திரீகளுடைய பிரேதத்தைப் பரிசோதனை செய்ய வேண்டியிருந்தால், ஸ்திரீகளைக் கொண்டே செய்யவேண்டு மென்றும், புருஷர்கள் செய்யக்கூடாதென்றும் நாங்கள் சொல்லுகிறோம்.

## கனம் ஸர்ஹாரோல்டு ஸ்டுவர்ட்

இந்தத் தீர்மானத்தை அப்படியே அங்கீகரிக்க முடியாமலிருப்பதற்கு வருந்துகிறேன். கனம் மெம்பர் விரும்புகிறபடி அவ்வளவு தூரம் கவர்ன்மெண்டார்போய்விட முடியாது. தீர்மானத்தில் கவர்ன்மெண்டார் உத்திரவு பிறப்பிவித்து விடவேண்டு மென்று கேட்கப்பட்டிருக்கிறது. ஆனால் அவ்விதம் செய்வதற்கு நிர்வாக கவர்ன்மெண்டுக்கு அதிகாரமில்லை. சில சந்தர்ப்பங்களில் பிரேதங்களைத் தோண்டி எடுக்கும்படி உத்திரவு செய்ய சட்டத்தில் மாஜிஸ்திரேட்டுகளுக்கு அதிகாரம் கொடுக்கப்பட்டிருக்கிறது. நிர்வாக தோரணையில் பிறப்பிவிக்கும் உத்திரவு மூலமாக அந்த அதிகாரத்தை

எடுத்துவிட முடியாது. இருந்தாலும், முகம்மதியர்களுடைய பிரேதங்களைத் தோண்டி எடுக்க வேண்டியிருந்தால், முகம்மதியரையே கொண்டும், சாத்தியமானல் பந்துக்களையே கொண்டும் தோண்டி எடுக்கச் செய்ய வேண்டுமென்று மாஜிஸ்திரேட்டுகளுக்கு அறிவிக்க நாங்கள் தயாராக இருக்கிறோம். தீர்மானத்தின் இரண்டாவது பாகத்தையும் அவர்களுடைய அறிவிப்புக்குக் கொண்டு வருகிறோம். ஆனல் பிரேத பரிசோதனையை ஸ்திரீ டாக்டரைக் கொண்டே எல்லா இடங்களிலும் நடத்திவைக்க சாத்தியப்படு மென்று தோன்றவில்லை. அவ்விதம் செய்ய சாத்திய முள்ள இடங்களில் நாங்கள் சொல்லுகிற பிரகாரம் மாஜிஸ்திரேட்டுகள் அவர்களைக் கொண்டே செய்து வைப்பார்க ளென்பதில் தடையில்லை. இருந்தாலும் அவ்வித சந்தர்ப்பங்கள் அபூர்வமாகவே நேருமானதினல், முகம்மதிய சமூகத்தாருக்கு அதிக மனக்கஷ்டம் நேரிடா தென்றே நினைக்கிறேன்.

## மேன்மை தங்கிய அக்கிராசனதிபதி

சாத்தியமான இடங்களில் தீர்மானத்தின் தத்துவத்திற் கிணங்கவே நடந்துகொள்ள வேண்டுமென்று மாஜிஸ்திரேட்டுகளுக்கு அறிவிப்பதாக கவர்ன்மெண்டின் சார்பாக கனம் ஸர்ஹாரோல்டு ஸ்டுவர்ட்டு உறுதி கூறி யிருப்பதை கனம் மெம்பர் தெரிந்து கொண்டிருப்பதாகவே நினைக்கிறேன். ஆகவே கனம் மெம்பர் தமது தீர்மானத்தை வற்புறுத்த மாட்டா ரென்று நினைக்கிறேன்.

## கனம் மிஸ்டர் அகமது தம்பிமரக்காயர்

இவ்வளவு தூரம் செய்ய ஒப்புக்கொண்டதற்காக கவர்ன்மெண்டாருக்கு வந்தனம் செலுத்தி என்னுடைய தீர்மானத்தை வாபீஸ் வாங்கிக் கொள்ளுகிறேன்.

மேன்மை தங்கிய அக்கிராசனதிபதியின் அனுமதியின் பேரில் தீர்மானம் வாபீஸ் வாங்கிக் கொள்ளப்பட்டது.

---

## ஜும்மா பிரார்த்தனைக்காக இன்னுமொருமணி விடுமுறை.

விஷய அட்டவணையில் கனம் மிஸ்டர் அகமது தம்பி மரக்காயரின் பேரில் அடுத்தாற்போல் கீழ்க்கண்ட தீர்மான மிருந்தது:—

"இப்பொழுது வெள்ளிக்கிழமைகளில் ஜும்மா பிரார்த்தனைகள் செய்வதற்காகக் கொடுபடும் ஒருமணி அவகாசம் தொழுவதற்குப் போதாமலிருப்பதால், எல்லா முகம்மதிய கவர்ன் மெண்டு உத்தியோகஸ்தாகளுக்கும் இன்னொரு மணி லீவு கொடுக்கும்படி உத்திரவு செய்ய வேண்டு மென்று ஆலோசனை சபையுடன்கூடிய கவர்னருக்கு இந்த சபை சிபார்சு செய்கிறது."

## கனம் மிஸ்டர் ஏ. ஜி. கார்டியூ

மேன்மைதங்கிய பிரபுவே,

தங்களுடைய அனுமதியின் பேரில் அடுத்த தீர்மானத்தைப் பற்றி ஒரு வார்த்தை சொல்லிக்கொள்ளுகிறேன். வங்காள கவர்ன் மெண்டார் பிறப்பிவித்திருப்பது போன்ற உத்திரவைச் செய்ய கவர்ன் மெண்டார் தயாராக இருக்கிறார்கள். அதாவது மாகாணத்தின் பலபாகங்களின் நிலைமைக்கும் வித்தியாசமிருக்கு மாதலால் எவ்வித நிர்ப்பந்தமுமன்னியில் உத்திரவு செய்ய கவர்ன் மெண்டார் தயாராயிருக்கிறார்கள். மதசம்பந்தமான கடமைகளைச் செய்வதற்கு கிரமமான வசதிகள் செய்து கொடுக்க வேண்டியது நியாயமென்றும், ஆகவே ஜும்மா பிரார்த்தனைகளைச் செய்வதற்காகப்போய் வர விரும்பும் முகம்மதிய உத்தியோகஸ்தர்களுக்கு, வேறு நாளில் அவர்கள் இரண்டுமணி நேரம் அதிக வேலை செய்துவிடுவதென்கிற நிபந்தனையின் பேரில் உயர்ந்தது இரண்டுமணி சாவகாசம் போய்வர அனுமதி கொடுக்க வேண்டுமென்றும் பொதுவாக ஆலோசனை சபையுடன் கூடிய கவர்னர் உத்திரவு செய்வார். வங்காளத்திலும் இந்த சவுகரியம்தான் செய்து கொடுக்கப்பட்டிருக்கிறது. கனம் மெம்பர் அதில் திருப்தியடைந்து விடுவதாக இருந்தால், அந்த சவுகரியத்தை இங்கும் செய்து கொடுக்க கவர்ன் மெண்டார் தயார் தான்.

## கனம் மிஸ்டர் அகமது தம்பி மரக்காயர்

அடுத்த வாரத்தில் ஒருமணிநேரம் அதிகமாகவேலை செய்ய வேண்டுமென்கிற எவ்வித நிர்பந்தமுமன்னியில் கவர்ன் மெண்டார் ஏற்கனவேயே ஒருமணிநேரம் ரஜாகொடுத்திருக்கிறார்கள். 1914ம் வருஷம் நவம்பர் மாதம் 14ம் தேதியுள்ள 1408ம் நம்பர் கவர்ன் மெண்டு உத்திரவின்படி கொடுபடும் ஒருமணி அவகாசத்துடன் இன்னுமொருமணிநேரம் சேர்த்துத்தர வேண்டுமென்பதே என்னுடைய பிரார்த்தனை. அவ்விதம் செய்வதற்கு கவர்ன் மெண்டாருக்குக் கஷ்டமாயிருந்தால் அதிகப்படியாக கொடுக்கும் ஒருமணி நேரத்திற்கு அடுத்தவாரத்தில் வேலை வாங்கிக் கொள்ளுவதில் எனக்கு ஆட்சேபனை யில்லை. ஏற்கனவே கொடுபட்டிருக்கும் ஒரு மணி ரஜா அப்படியே இருக்க வேண்டியதுதான். இன்னுமொரு மணி கொடுக்க வேண்டு மென்பது தான் இந்ததீர்மானம்.

அந்த ஒருமணிக்காக நிபந்தனை ஏற்படுத்துவதில் ஆட்சேபனையில்லை. முகம்மதிய உத்தியோகஸ்தர்களுக்கு பிரார்த்தனைக்கு அதிக அவகாச மிருந்தால் பிரிட்டிஷ் கவர்ன் மெண்டு நீடூழி வாழ வேண்டு மென்று பிரார்த்தனை செய்வார்கள். ஒருமணி நேரத்தில் தொழுகையை முடிப்பது எங்களுக் கு நிரம்ப கஷ்டமாயிருக்கிறது.

## கனம் மிஸ்டர் ஏ. ஜி. கார்டியூ

கனம் மெம்பர் தானங் கிடைத்த மாட்டை பல்லைப்பிடித்துப் பார்க்கிறார். ஒரு மணி நேரம் லீவு எடுத்துக் கொண்டால் அந்த ஒருமணிக்கு ஒரு மணிவேலைசெய்யும்படி இலாகாதலைவர்கள் முகம்மதியஉத்தியோகஸ்தர்களைக் கட்டாயப் படுத்த மாட்டார்கள். ஆனால் அவர்கள் இரண்டு மணி நேரம் எடுத்துக் கொண்டால் அதை ஈடு செய்துதானாக வேண்டும். அந்தந்த ஆபீஸ் தலைவர்களே இவ்விஷயத்தை முடிவு செய்து கொள்ளும்படி விட்டு விடலாமென்று நான் நினைக்கிறேன். பிரார்த்தனைகள் செய்வதற்காகமு கம்மதிய உத்தியோகஸ்தர்கள் வெகு தூரம்போக வேண்டியிருக்கிற தென்று தெரிந்தால் இரண்டுமணிநேரம் ரஜா கொடுக்காமல் கஷ்டப்படுத்த மாட்டார்கள். ஆனால் வெளியில் போவதற்கு வியாஜமாக இதை எவரேனும் உபயோகிக்கிறார்களென்று தெரிந்தால் அவர்களுக்கு இடம் கொடுக்க மாட்டார்கள். தொழுவதற்காக நீண்ட தூரம்போய் வர வேண்டியிருக்கிற தென்று காட்டுவதற்குக் காரணங்களிருந்தாலன்றி பதிலுக்கு பதில் வேலை செய்து விடுகிறதெங்கிற நிபந்தனையின் பேரில் மொத்தம் இரண்டுமணிநேரம் ரஜாக் கொடுப்போம்.

## மேன்மைதங்கிய அக்கிராசனாதிபதி

இப்பொழுது ஒருமணி நேரம் அவகாசம் கொடுக்கப்படுவதை உண்மையில் அவசியமிருந்தால் ஈடு செய்வதென்கிற நிபந்தனையன்னியில் இரண்டு மணி நேரமாகச் செய்து விட கவர்ன் மெண்டார் சம்மதப்படுவதாக கவர்ன் மெண்டாரின் சார்பாக கனம் ஸர் அலெக்ஸாண்டர் கார்டியூ சொல்லியிருக்கிறார். ஆனால் தொழவேண்டிய இடம் சமீபத்திலிருந்து ஒரு மணி நேரத்திற்குள் பிரார்த்தனைகளைச் செய்து முடித்துக் கொண்டு வந்து விடக்கூடிய கேஸ்களில் இரண்டு மணி நேரம் உபயோகிக்கப் பட்டிருந்தால் ஒரு மணியை ஈடு செய்ய வேண்டும். இதை அந்த மட்டுடன் கனம் மெம்பர் விட்டு அனுஷ்டானத்தில் எவ்விதம் நடக்கிறதென்று கவனிப்பாரென்றே நினைக்கிறேன். ஆபீஸ் தலைமை உத்தியோகஸ்தர்களுக்கு யுக்திபடி நடந்து கொள்ள சுதந்தரம் கொடுக்கப்படும். ஆகவே கனம் மெம்பர் தீர்மானத்தை வாபீஸ் வாங்கிக் கொள்ளலாம்.

## கனம் மிஸ்டர் அகமது தம்பி மரக்காயர்.

கவர்ன்மெண்டார் அனுதாபத்துடன் பதில் கூறியிருப்பதை உத்தேசித்து நான் தீர்மானத்தை வாபீஸ் வாங்கிக் கொள்ளுகிறேன்.

மேன்மை தங்கிய அக்கிராசனாதிபதியின் அனுமதியின் பேரில் தீர்மானம் வாபீஸ் வாங்கிக்கொள்ளப்பட்டது.

# 1916

## [மார்ச்சு மாதம் 14-ம் தேதி சென்னையில் நடந்த கூட்டம்]

### தொழிற் பாடசாலைகளுக்காகப் பொருளுதவி.

*மேன்மை தங்கிய பிரபுவே,*

*நான் பிரேரணை செய்யப்போகும் தீர்மானம் பின்வருமாறு:—*

"தொழிற்கல்விக்கு ஆதரவளித்து வரவேண்டிய அவசியத்தை உத்தேசித்து, 1916—17ம் வருஷத்தில் "26. B. சாஸ்திர சம்பந்தமான இலாகாக்கள்" என்கிற தலைப்பின் கீழ் தொழிற் பாடசாலைகளுக்கு கிராண்டுகள் கொடுப்பதற்காக ஒதுக்கி வைக்கப்பட்டிருக்கும், 84,000 ரூபாயை 1915—16-ம் வருஷத்திய திட்டத்தில் கண்டிருந்தது போலவே 104,000 ரூபாயாக உயர்த்தி, சில்லறைப் பரிட்சார்த்த வேலைகள் என்கிற தலைப்பில் ரூ. 25,000 ஒதுக்கி வைத்திருப்பதை 5,000 ரூபாயாகக் குறைத்து ஈடுசெய்து கொள்ள வேணடுமென்று ஆலோசனை சபையுடன் கூடிய கவர்னருக்கு இந்த சபை சிபார்சு செய்கிறது."

*இத்தீர்மானத்தைப் பிரேரணை செய்வதில் சில வார்த்தைகள் சொல்லிக் கொள்ள விரும்புகிறேன். தீர்மானம் சுலபமான விஷயம். காலத்திற்குத் தக்கபடி தொழில்களை வலுப்படுத்தி முந்திக் கொள்ளவேண்டிய இந்நாளில், தொழில்களின் அபிவிருத்திக்காக நம்மால் கூடுமான வரையில் செலவிட வேண்டியது நமது கடமை. ஐரோப்பாவில் யுத்தம் நடந்து வரும் சமயத்தைக் கொண்டு எவ்விதம் ஜப்பான் இந்திய மார்க்கெட்டுகளில் தன்னுடைய சாமான்களைக் கொண்டு வந்து குவித்து வருகிறதென்பது நமக்குத் தெரிந்த விஷயமே. ஏராளமாக அங்கு பண்டங்கள் தயார் செய்யப்படுவதினாலேயே ஜப்பான் அவ்விதம் செய்ய முடிகிறது. நித்திய வாழ்வுக்கு அவசியமான தீக்குச்சிகள் கூட ஐரோப்பாவிலிருந்து கிடைக்காததினால், ஜப்பானிலிருந்து நாம் தருவிக்க வேண்டியிருக்கிறது. இந்தியா தொழில்களில் தலையெடாமலிருப்பதினால் இன்னும் பல சாமான்களுக்கும் இங்கு வழியில்லாமலிருக்கிறது. பல நிபுணர்களை நியமித்து தோல் பதனிடுதல் முதலிய பல தொழில்களை அபிவிருத்தி செய்ய கவர்ன்மெண்டார் முயற்சி செய்து வருவது எனக்குத் தெரியும். ஆனால், யுத்தம் காரணமாக செலவினங்களைக் குறைக்கவேண்டிய அவசியமேற்பட்டதால், கவர்ன்மெண்டார் தங்கள் இஷ்டப்படி செலவிட முடியவில்லை. இந்தத் தீர்மானத்தில் நான் கேட்டிருக்கிற பிரகாரம் செய்வதனால் வரவு செலவு திட்டம் எவ்விதத்திலும் பாதகமுறாது. உபயோகமான பரிட்சைகள் ஒன்றும் செய்யப்படுவது சாத்தியமில்லையானதினால் அந்தத் தலைப்பின் கீழ் ஒதுக்கி வைத்திருக்கும் 25,000 ரூபாயில் 20,000 ரூபாயை எடுத்து இதில் சேர்க்கும்படி தான் நான் சொல்லியிருக்கிறேன்.*

தொழிற் பாடசாலைகளுக்கு கவர்ன்மெண்டார் கொடுத்து வரும் கிராண்டுகளைக் குறைத்து விடவேண்டு மென்பது என் கருத்தல்ல. அந்தப் பாடசாலைகளை நடத்திவருகிறவர்கள் ஏமாந்து போகாவண்ணம் போன வருஷத்தில் அவைகளுக்குக் கொடுத்தபடியே இந்த வருஷமும் கிராண்டு கொடுக்க வேண்டுமென்பது தான் என் கருத்து. 1915—16-ம் வருஷத்தில் திருத்திய முடிவான திட்டத்தில்கூட கவர்ன்மெண்டார் இதற்காக 1,04,000 ரூபாய் ஒதுக்கிவைத்திருந்தார்கள்: அந்தப் பிரகாரமே 1916-17-ம் வருஷத்திற்காக ஒதுக்கி வைக்கப்பட்டிருக்கும் 84,000 ரூபாயுடன் சில்லரைப் பரிட்சைகளுக்காக ஒதுக்கிவைக்கப் பட்டிருக்கும் பணத்தில் 20,000 ரூபாயையும் சேர்த்து 1,04,000 ரூபாயாகச் செய்து விடவேண்டுமென்று தான் நான் கேட்கிறேன்.

## கனம் திவான்பகதூர் பி. ராஜகோபாலாச்சாரியார்.

மேன்மைதங்கிய பிரபுவே,

பென்வில், கன்னுடி, காகிதம் முதலியவைகளைத்தயார் செய்வதற்கு யந்திரசாலை நடந்து வரும் பரிட்சைகளைச் செய்து முடிப்பதற்காக கனம் மெம்பர் குறைக்கப்பார்க்கும் 20,000 ரூபாய் உத்தேசிக்கப்பட்டிருக்கிறதென்பது அவருக்குத் தெரியாது போலிருக்கிறது. அவைகளுக்காக ஒதுக்கி வைக்கப்பட்டிருக்கும் பணத்தை வேறினத்திற்குக் கொடுத்து விட்டு, அந்த பரிட்சைகளை நிறுத்தி வைக்கமுடியாது. இந்த சந்தர்ப்பத்தைக் கைக்கொண்டு நம்முடைய தொழில் முயற்சிகளை பலப்படுத்த வேண்டுமென்று கனம் மெம்பரே சொல்லி யிருக்கிறார். இந்தப் பரிட்சைகளை யெல்லாம் செய்ய ஆரம்பித்து வெகு காலமாகி விட்டது. அவைகளைக் கூடிய சீக்கிரத்தில் செய்து முடித்து அவைகளின் பலாபலன்களைப்பற்றிய உண்மையான தகவல்களைப் பொது ஜனங்களுக்கு அறிவிக்கவேண்டு மென்பது கவர்ன் மெண்டாருடைய கருத்து. ஆகவே அதற்காக ஒதுக்கி வைக்கப்பட்டிருக்கும் பணத்தைக் குறைக்க முடியாது. இப்பொழுது கையிலிருக்கும் வேலைகளைச் செய்து முடிக்க இந்த 25,000 ரூபாய் போதாமற்போய் பின்னுடி அதிகப்பணம் கொடுக்க நேரிடலாம்.

போன வருஷத்தை விட இந்த வருஷத்தில் 20,000 ரூபாய் குறைக்கப் பட்டிருப்பதானது தொழிற் பாடசாலைகளுக்குக் கொடுபடும் போதனை கிராண்டுகளிலாவது அல்லது தளவாடங்களை வாங்குவதிலாவதன்று. கட்டிட கிராண்டுகளுக்காக ஒதுக்கி வைக்கப்பட்டிருந்த தொகையையே இந்த வருஷத்தில் குறைத்திருக்கிறது. இதைப்போன்ற வருஷத்தில் கவர்ன்மெண்டு உதவி பெற்று நடந்து வரும் பாடசாலைகளுக்குக் கட்டிடம் கட்டுவதற்காகக் கொடுபடும் கிராண்டுகளைக் குறைப்பதினால் ஒன்றும் முழுகிப்போய் விடாது. நான் சொன்ன சமாதானத்திலிருந்து இனி கவர்ன் மெண்டாரால்

அதிகமாக ஒன்றும் செய்ய முடியாதென்பதை கனம் மெம்பர் கண்டு கொள்ளு வாரென்றே நினைக்கிறேன். எந்தக்கட்டிடத்திற்காக வேனும் அவசியமாகப்பணம் கொடுக்க வேண்டிய அவசியம் பின்னுடி யேற்பட்டால் இலாகாத்தலைவர் அதற்கு சரிக்கட்டிக் கொடுக்கலாம். இப்போதிருக்கிற நிலைமையில் வரவு செலவு திட்டத்தில் செலவினத்தை மாற்ற முடியாது.

## கனம் பி. என். சர்மா

மேன்மைதங்கிய பிரபுவே,

கனம் ராஜ கோபாலாச்சாரியார் வெகு கணக்காகப்பேசுகிறுர். நாங்கள் கட்சியாடும்போது கணக்காகப் பேசுவதுண்டு. எங்களைப் போலவே அவரும் கணக்காக பதில் சொல்லியிருக்கிறுர். 25,000 ரூபாயில் கைவைக்க முடியாதென்றும் ஆகவே தீர்மானம் அடிப்பட்டுப் போய் விடுகிறதென்றும் அவர் சொல்லுகிறுர். ஆனுல் கவர்ன் மெண்டார் இன்னும் கொஞ்சம் ராஜதந்திரமும் தாராள புத்தியுங் கொண்டு தொழிற்கல்விக்காக இந்தப் பணத்திற்கு வழி பண்ண முடியாதா வென்று பார்க்க வேண்டும். இன்று காலையில் இந்த விஷயம் முழுவதையும் பற்றி விவாதம் நடந்திருக்கிறது. ஆகவே நான்விவாதத்தை வளர்த்தப் போவதில்லை. வடஜில்லாக்களில் ஏற்படுத்த வேண்டிய தொழிற் பாடசாலைக்குப் பணம் ஒதுக்கி வைக்கப்பட வில்லையென்றே நான் தெரிவித்துக் கொள்ளுகிறேன். ஏற்கனவேயே இரண்டு வருஷங்கள் கடந்து விட்டன. கனம் ராஜகோபாலாச்சாரியார் தமது யோசனைகள் அநேகமாக முடிந்து விட்டன வென்று சொல்லியிருக்கிறுர்.

## மேன்மைதங்கிய அக்கிராசனுதிபதி

பணம் கொடுக்க முடியாததுதான் உள்ள உண்மை. அதனுலேதான்பல விஷயங்களுக்காகப் பணம் கொடுக்க முடியவில்லையென்று நாங்கள் சொல்ல வேண்டியிருக்கிறது. இப்பொழுது இருக்கிற நிலைமையில் அது சரியான பதிலென்பது கனம் மெம்பர்களுக்குத் தெரிந்திருக்குமென்றே நினைக்கிறேன். இந்தக் காரியங்களை யெல்லாம் செய்வதற்கு எங்களிடம் பணமில்லை. பணமிருக்க வேண்டுமென்கிற ஆசைதான். எங்களிடம் பணமிருந்தால் கொடுக்கத் தயார் தான். நீங்கள் கேட்பதற் கெல்லாம் சரியென்று பதில்சொல்வது எவ்வளவோ திருப்திகரமான விஷயம். ஆனுல் எங்களிடம் பணமில்லை. தீர்மானத்தின் மேல் தீர்மானமாய் கொண்டு வரலாம். ஆனுல் கனம் மெம்பர்கள் சொல்லுகிற கிரமமான காரியங்களைக்கூட செய்ய முடியாத நிலைமையில் நாங்களிருக்கிறேும். சரி யென்று சட்டென்று சொல்ல கவர்ன்மெண்டாருக்கு ரொம்ப பிரியந்தான். ஆனுல் துரதிர்ஷ்டவசாது இந்தக் காரியங்களை யெல்லாம் செய்வதற்கு இப்பொழுது பணமில்லை. சாத்தியப்படும்பொழுது இந்த விஷயங்களை யெல்லாம் நாங்கள் கவனிப்போமென்று கனம் மெம்பர்கள் நம்பியிருக்கலாம். நம்மைச் சூழ்ந்திருக்கும் மேகங்கள் கலைந்து போனுல், இந்தத் தீர்மானங்களின்படி யெல்லாம் நாங்கள் தாராளமாகச் செய்யலாம்.

**கனம் மிஸ்டர் அகமது தம்பி மரக்காயர்**

பிரபுவே, கவர்ன்மெண்டார் கூறிய உறுதி மொழியின்பேரில் நான் தீர்மானத்தை வற்புறுத்தவில்லை.

மேன்மைதங்கிய அக்கிராசனாதிபதியின் அனுமதியின் பேரில் தீர்மானம் வாபீஸ் வாங்கிக் கொள்ளப்பட்டது



## கடுவையாற்றுக்குப் பாலம் கட்ட பொருளுதவி

மேன்மைதங்கிய பிரபுவே,

என்பேராலிருக்கும் தீர்மானம் பின்வருமாறு:—

1916-17-ம் வருஷத்திய வரவு செலவு திட்டத்தில் 45 பி. ஸிவில் வேலைகள் என்கிற தலைப்பின் கீழ் நாகப்பட்டணத்திலுள்ள கடுவையாறு பரிசல் துறையில் அந்த ஆற்றுக்குப் பாலங்கட்டுவதற்காகவேண்டிய பணத்தை ஒதுக்கி வைத்து, பாலத்தை உடனே கட்டும்படி உத்திரவு பிறப்பிவிக்க வேண்டுமென்றும், அத்தலைப்பின் கீழ் வேறு இனங்களுக்காக ஒதுக்கி வைக்கப்பட்டிருக்கும் பணத்தை தாமாஷாப்படி குறைத்து இந்தத் தொகையை ஈடு செய்துகொள்ள வேண்டுமென்றும் ஆலோசனை சபையுடன் கூடிய கவர்னருக்கு இந்த சபை சிபார்சு செய்கிறது."

இந்தத் தீர்மானத்தை சபையின் அங்கீகாரத்திற்குக் கொண்டு வருகையில், இந்தப் பாலத்தைப் பற்றிய பூர்வசரித்திரத்தைச் சுருக்கமாகச் சொல்ல வேண்டியது என் கடமையாகவிருக்கிறது. 1888-ம் வருஷத்திலேயே அப்பொழுதிருந்த முனிசிபல் சேர்மனான மிஸ்டர் பி. ரத்தின சபாபதி பிள்ளை இந்தப் பாலத்தைக் கட்டவேண்டிய அவசியத்தை வற்புறுத்தி கவர்ன்மெண்டாருக்கு 6-9-88ல் 551 நம்பர் கடித மொன்று எழுதினார். அதனுடன் கூட நாகப்பட்டணம் வரிகொடுப்போர்கள் 2500 பேர் கையெழுத்து செய்து அனுப்பி யிருந்த மகஜர் நாமாவையும் சேர்த்து அனுப்பினார். ஆற்றுக்குப் பாலங்கட்டி விட்டால் அந்தப் பக்கத்தில் பட்டணத்தை விஸ்தரிப்பதற்கும் சாத்தியப்படாலா மென்பதை அவர் குறிப்பிட்டுச் சொல்லி யிருந்தார். கவர்ன்மெண்டார் அதன் மேல் ஸ்தல ஸ்தாபனங்களைக் கலந்து கொண்டு 1890-ம் வருஷம் செப்டம்பர் மாதம் 16-ம்தேதி 1364-எம் நம்பருள்ள உத்திரவை வெளியிட்டார்கள். அதில் பாலங்கட்டுவதற்கு வேண்டிய பணத்தை மாகாண நிதியிலிருந்து கொடுப்பதாக கவர்ன்மெண்டார் சொல்லியிருந்ததோடு, பரிசல் துறையிலிருந்து இப்பால் கிடைக்கும் வருமானத்தையும் முனிசிபல் கவுன்சிலுக்குக் கொடுத்துவிட சம்மதித்தார்கள். அதன் பிறகு எவ்வித நடவடிக்கையும் எடுத்துக்கொள்ளப்

படாததும், நீண்டகாலமாக பரிசல் துறைக்குத்தகைப் பணத்தைப் பங்கு போட்டுக் கொண்டிருந்த முனிசிபல் கவுன்சிலும் தாலூகா போர்டும் கவர்ன் மெண்டார் யோசனை சொல்லியிருந்த பிரகாரம் அந்த வருமானத்தைத் தனி யாக ஒதுக்கிச் சேர்த்து வைக்காமல், அந்தத் தனிவருமானத்தை தங்களு டைய பொதுப் பணத்துடன் சேர்த்து விழுங்கிக் கொண்டதும் வருந்தத் தக்கனவே; இருந்தாலும் 1911-ம் வருஷத்தில் முனிசிபல் சேர்மனால் இந்த விஷயம் மறுபடியும் கிளப்பப்பட்டது. தாலுகா போர்டு பிரசிடெண் டும் இந்தப் பாலம் அவசியமான தென்பதை யாரும் ஆட்சேபிக்க முடியா தென்றும், முனிசிபல் கவுன்சில் மேல் நடவடிக்கை எடுத்துக் கொள்ள வேண்டுமென்றும் எழுதினார். இது விஷயமாக முனிசிபாலிட்டியார் ஏற்று மதி இறக்குமதிக் கட்டணம் விதிக்கும் கமிட்டியின் அபிப்பிராயத்தைக் கேட்டு விட்டார்கள். அந்த கமிட்டியின் மெம்பர்கள் கூடி இவ்விஷயத்தை பற்றி விவாதித்து ஒரு தீர்மானத்தை நிறைவேற்றி முனிசிபல் கவுன்சிலு க்கு அனுப்பினார்கள். அந்தத் தீர்மானத்தின் சுருக்கம் என்னவென்றால்:—

"இப்பொழுது கட்ட உத்தேசிக்கப்பட்டிருக்கும் பாலமானது நாகப் பட்டணம் மகாஜனங்களுக்கு விசேஷ சவுகரியமா யிருக்குமென்றும், பாலங் கட்டுகிற தென்கிற ஏற்பாட்டின் பேரிலேயே 20 வருஷகாலமாக பரிசல் குத்தகைத் தொகைகள் கொடுக்கப்பட்டு வந்திருப்பதால் இந்த வேலையை உடனே, போதிய பணம் கையில் இருப்பதை உத்தேசித்து, ஆரம்பித்து விடவேண்டுமென்றும், இந்த ஆற்றைக் கடந்து செல்ல ஜனங்களுக்கு வசதி கள் செய்து கொடுத்து விட்டால் பட்டணமானது தென்புறத்தில் விசாலப் படுமென்றும், இப்பொழுது பட்டணத்திலிருக்கிற நெரிசல் நிவர்த்தியாகு மென்றும் ஏற்றுமதி இறக்குமதிக் கட்டணம் விதிக்கும் கமிட்டியார் அபிப் பிராயப் படுகிறார்கள்.

துறைமுக இலாகா, கடற்சுங்க இலாகா இவைகளின் நன்மையை உத்தேசித்துப் பார்த்தாலும் பாலங் கட்டுவது மெத்தவும் சவுகரியம்தான். ஏனெனில், இப்பொழுது துறைமுகமும் முகத்துவாரமும் கேடான நிலை மையிலிருப்பதால், பரிசல் துறைக்கு அருகாமையில் துறைமுகத்து வார த்தை ஏற்படுத்தவேண்டிய அவசியம் உண்டாகலாம். அப்பொழுது பிர யாணிகளையும் சாமான்களையும் காலதாமத மன்னியில் கப்பலேற்றுவதற்கு இந்த இடத்தில் பாலமிருக்க வேண்டியது அவசியமாக இருக்கும்."

இதற்குள்ளாக 1913-ம் வருஷத்தில் வேளாங்கண்ணி ரோமன் கத்தோலிக்கத் திருவிழாவுக்குச் சென்ற பிரயாணிகள் இந்த இடத் தில் படகு கவிழ்ந்து இறந்து போனார்கள். 1913-ம் வருஷம் நவம்பர் மாதம் 11-ந்தேதி நடந்த சட்டசபை மீட்டிங்கில் 69-வது கேள்வி மூலமாக இந்த விஷயத்தை கவர்ன்மெண்டாருடைய அறிவிப்புக்கு நான் கொண்டு வந்திருக்கிறேன். அதன் பேரில் அந்தப் பாலத்தைக் கட்டுவதற்காக

கவர்ன்மெண்டார் பாதிப்பணத்தை கிராண்டாகக் கொடுத்தார்கள். அந்தக் காலத்தில் பாலங்கட்டுவதற்கு 120,000 ரூபாய் திட்டம் போடப்பட்டிருந்த தால் தஞ்சாவூர் ஜில்லா போர்டார் தாங்கள் 30,000 ரூபாய் கொடுக்கத் தீர் மானித்து முனிசிபல் கவுன்சிலை 30,000 ரூபாய்க்கு வழி பண்ணும்படி கேட்டுக்கொண்டார்கள். கவர்ன்மெண்டாரும் தாங்கள் பாதிச் செலவைக் கொடுப்பதாகச் சொல்லியிருந்ததை 1914-ம் வருஷம் நவம்பர் மாதம் 5-ம் தேதியுள்ள 2000-ம் நம்பர் கவர்ன்மெண்டு உத்திரவினுல் ஊர்ஜிதப் படுத்தினர்கள். முனிசிபல் கவுன்சிலும் தான் கொடுக்க வேண்டியிருக்கும் 30,000 ரூபாயைக் கடனாகக்கொடுத்து தவவேண்டுமென்று கவர்ன்மெண் டாருக்கு விண்ணப்பம் செய்து கொண்டது. கால் நடையாகப் போகிற வர்களிடமும் சுங்கம் வசூலிப்பதென்றும், அந்த சுங்கத் தீர்வையை ஜில்லா போர்டு வசூல் செய்து முனிசிபாலிட்டியிடம் கொடுத்து விடுவதென்றும் ஜில்லா போர்டும் முனிசிபல் கவுன்சிலும் ஏற்பாடு செய்து கொண்டன. பிறகு மராமத்து இலாகாதார் பாலங்கட்டுவதற்கு திட்டம் தயாரித்தார்கள், மொத்தம் 145,000 ரூபாய் அவர்களுடைய திட்டப்படி கூடுதலாயிற்று. மராமத்திலாகாதாரரைக் கொண்டு பாலத்தைக் கட்டி வைக்க சம்மதமா வென்று கூட கவர்ன்மெண்டார் ஜில்லா போர்டைக் கேட்டார்கள். அதற்கு ஜில்லா போர்டும் ஒத்துக்கொண்டது.

1915-ம் மார்ச்சு மாதம் 15-ம் தேதியுள்ள 435-ம் நம்பர் உத்திரவில் டிஸ்திரிக்ட் போர்டார் கால் நடையாகச் செல்லுபவர்களிடமிருந்து சுங்கத் தீர்வை வசூலிக்க வேண்டுமென்று செய்த பிரேரணையை கவர்ன்மெண்டார் அங்கீகரித்து, பாலங்கட்டி முடியும் சமயத்தில் அது சம்பந்தமாக நகல் அறிக்கையைத் தயாரித்து அனுப்பும்படி சொல்லி யிருந்தார்கள்.

இவ்வளவு தூரம் நடந்த பிறகு, கடுவையாற்றுக்குப் பாலங்கட்டுவது அவ்வளவு அவசியமான வேலையில்லை யென்றும், அந்த வேலையைப் பற்றி யோசிப்பதை தற்காலத்திற்கு நிறுத்தி வைத்துக் கொள்ளப்படுமென்றும் கவர்ன்மெண்டார் 1915-ம் வருஷம் செப்டம்பர் மாதம் 9-ம் தேதி 1262-ம் நம்பர் உத்திரவை வெளியிட்டது எனக்கே ஆச்சர்யமாக விருந்தது.

இந்தப் பாலம் வேண்டிய தவசியமென்பதை கவர்ன்மெண்டார் ஏற்கனவேயே ஒப்புக்கொண்டு விட்டதால் அது அவசியமென்று நான் மீண்டும் வற்புறுத்த வேண்டியதில்லை. ஆனல் இது அவ்வளவு அவசரமான வேலை யல்லவென்று கவர்ன்மெண்டாருக்குத் தோன்றியிருப்பது பரிசல் துறையைத் தாண்டிச் செல்லும் ஆயிரக்கணக்கான யாத்திரிகர்கள், பிர யாணிகள் இவர்களுடைய துரதிர்ஷ்டம் தான். அடிக்கடி அந்த இடத்தில் அபாயங்கள் நேரிடுகின்றன. சில சமயங்களில் அவைகள் வெளிக்கு வராமலே போய் விடுகின்றன. சமீபத்தில்கூட அந்த இடத்தில் ஒரு உயிர்ச்சேதம் ஏற்பட்டது. அந்த விஷயத்தைக்கூட 11—12—1915-ல்

கடித மூலமாக கவர்ன்மெண்டாருக்குத் தெரிவித்திருக்கிறேன். பட்டண த்திற்கு வெளியே யிருக்கும் கிராமாந்தரங்களிலுள்ள ஜனங்கள் படுந் தொந்திரவுகளையும் அவர்களுக்கு நேரிடும் அபாயங்களையும் உத்தேசிக்கையிலும், முனிசிபாலிட்டியும் தாலூகா போர்டும் வருஷந்தோறும் கிராம வாசிகளிடமிருந்தும் பட்டணவாசிகளிடமிருந்தும் ஏராளமாக வருமானம் சம்பாதித்துவருவதை உத்தேசிக்கையிலும், அந்த வருமானங்களை பாலங் கட்டுவதற்காகத் தனியாக ஒதுக்கிவைக்காமல் மொத்தப் பணத்துடன் சேர்த்து அவைகள் விழுங்கியிருப்பதை உத்தேசிக்கையிலும், ஸ்தல ஸ்தாபனங்களுக்குப் பணத்தைக் கொடுத்து அவர்களுடைய வருமானத்தை இட்டு நிரப்பியிருக்கும் ஏழை ஜனங்களுக்கு கிரமமாகக் கிடைக்கவேண்டிய போக்குவரத்து சவுகரியத்தைமறுப்பது கொஞ்சம்கூட தர்மமாகாது.

இப்போது ஏற்பட்டிருக்கும் நெருக்கடியான நிலைமை காரணமாக கவர்ன்மெண்டார் தங்களுடைய செலவினங்களைக் குறைக்கவேண்டியிருப்பது எனக்குத் தெரியாமலில்லை. ஆனால் கவர்ன்மெண்டாருக்கு மனசிருந்தால் அவசியமில்லாத செலவினங்களைக் குறைத்துக் கொண்டு இதற்குப் பணம் கொடுக்கலாம். ஜீவகாருண்யம் காரணமாகவே நான் இந்த விஷயத்தில் வேண்டிக் கொள்ளுகிறேன். சில சமயங்களில் என்னுடைய வகுப்பினருக்காக நான் நிரம்ப பலவந்தப்படுத்துகிறேனென்று கவர்ன்மெண்டார் நினைப்பது போல் இதையும் நினைக்கமுடியாது. கிறிஸ்தவ யாத்திரீகர்கள், ஏழை கிராம வாசிகள் இவர்களுடைய நன்மையையே இந்த தீர்மானம் உத்தேசித்தது. அந்த கிராம வாசிகளில் 100-க்கு ஒருவர்கூட எங்கள் இனத்தார் இருக்கமாட்டார்கள்.

1916-17-ம் வருஷத்திய திட்டத்தில் 45 பி. வியில் வேலைகள் என்கிற தலைப்பின் கீழ் கவர்ன்மெண்டார் இதற்கு வேண்டிய பணத்தை ஒதுக்கிவைப்பார்களென்கிற நம்பிக்கையின் பேரிலேயே நான் இத்தீர்மானத்தைப் பிரேரணை செய்திருக்கிறேன்.

## கனம் ஸர் பி. எஸ். சிவஸ்வாமி அய்யர்.

மேன்மைதங்கிய பிரபுவே,

இந்த விஷயம் இப்பொழுது எந்த ஸ்திதியிலிருக்கிற தென்பதை சபையோருக்குத் தெரிவித்துக் கொள்ள விரும்புகிறேன். கடுவையாற்றுக்கு இந்த இடத்தில் பாலங் கட்டவேண்டிய அவசியம் கவர்ன்மெண்டாருக்குத் தெரிந்திருக்கிறது. அந்த அவசியம் தெரிந்ததினால் தான் செலவில் ஒரு பாதி

50,000 ரூபாயை கவர்ன்மெண்டார் கொடுக்க ஒப்புக் கொண்டிருக்கிறார்கள். ஆதியில் இந்தப் பாலத்திற்கு 120,000 ரூ. செலவாகுமென்று மதிப்பிடப்பட்டது. பிறகு 1.45 லட்சம் செலவாகுமென்று தெரியவந்தது. பிறகு சீப் எஞ்சினீர் அந்த திட்டத்தைப் பரிசோதனை செய்தபோது 1-93 லட்சம் ரூபாயாக உயர்ந்துவிட்டது. யுத்தத்தின் பலனாக எஃகு, இரும்பு இவைகளின் விலை ஏராளமாக உயர்ந்திருப்பது கனம் மெம்பருக்குத் தெரியும். இந்தப் பாலம் கர்டர் பாலமானதினால் செலவு ஏராளமாகப் பிடிக்கும். ஆகவே, இந்த வேலையை உடனே தொட்டுக்கொண்டு, தளவாடங்களின் விலை அதிகமாகயிருப்பதையும் கவனிக்காமல் வேலையைச் செய்து முடிக்கும்படி இது அவ்வளவு அவசரமான வேலையா வென்பதே நாம் கவனிக்க வேண்டிய விஷயம். சீப் எஞ்சினீர் இது விஷயமாக கலெக்டருக்கு எழுதிக் கேட்டதில் இந்தப் பண நெருக்கடி காலத்தில் முடைப்பட்டுக் கொண்டு அவசரமாக இந்த வேலையைச் செய்ய வேண்டியதில்லை யென்று அவர் தெரிவித்திருக்கிறார். நான் சமீபத்தில் நாகப்பட்டணத்திற்குப் போயிருந்த பொழுதும் இந்தப் பரிசல் துறையைப் போய்ப் பார்த்தேன். இங்கே பாலங்கட்டி விட்டால் பட்டணம் அந்தப் புறத்தில் விஸ்தாரப்படு மென்றும் டிவிஷனல் ஆபீசர் எனக்குத் தெரிவித்துக் கொண்டார். கூடிய சீக்கிரத்தில் பாலத்தைக் கட்டுவதற்கு அது ஒரு நல்ல காரணந்தான். ஆனால் இப்பொழுது எஃகு, இரும்பு முதலிய தளவாடங்களின் விலை அதிகமாயிருப்பதினால், அதிகச் செலவு ஏற்படும்படி இந்த வேலையை இப்பொழுது அவசரப்பட்டுக் கொண்டு ஆரம்பிப்பது சரியல்ல. யுத்தமும் முடிந்து, பணமும் கிடைத்தவுடன் இந்தப் பாலத்தைக் கட்டுவதற்காகப் பணத்தைக் கொடுக்கத் தயாராக இருக்கிறோம். இந்த சமாதானத்தை உத்தேசித்து கனம் மெம்பர் தமது தீர்மானத்தை வாபீஸ் வாங்கிக் கொள்ளுவாரென்று நம்புகிறேன்.

## கனம் மிஸ்டர் அ. க. கு. அகமது தம்பி மரக்காயர்

மேன்மை தங்கிய பிரபுவே,

இந்த இலாகா மெம்பர் கொடுத்துள்ள வாக்குறுதியை மதித்து, இப்பொழுது நான் தீர்மானத்தை வற்புறுத்தவில்லை.

# 1917

[மார்ச்சு மாதம் 13-ம்தேதி நடந்த கூட்டம்]

## நாகூரில் ஒரு முகம்மதிய நடுத்தரப் பாடசாலை.

நான் இந்த மீட்டிங்கில் கொண்டுவரப் போவதாக அறிவித்திருக்கும் தீர்மானத்தைப் பிரேரணை செய்யுமுன், அதில் ஒரு அற்பத்திருத்தம் செய்ய விரும்புகிறேன். 22 ஜி. என்பதற்கு பதிலாக 22 இ என்றுபோட்டு விட்டேன்.

மேன்மை தங்கிய அக்கிராசனாதிபதி:— கனம் மெம்பருக்கு வந்தனம். அவர் கோருகிற பிரகாரம் தீர்மானம் திருத்தப்படும்.

### கனம் அகமது தம்பி மரக்காயர்

மேன்மை தங்கிய பிரபுவே,

என் பேராலிருக்கும் தீர்மானம் பின்வருமாறு;—

"நாகூரில் முகம்மதியப் பையன்களுக்கு ஒரு நடுத்தரப் பாடசாலையை ஏற்படுத்துவதற்காக 22 இ கல்வி—"கவர்ன்மெண்டு பாடசாலைகள்—பொது—மாணவர்களுக்கு இதர நடுத்தரப்பாடசாலைகள்" என்கிற தலைப்பின் கீழ் ரூ. 22,000 ஒதுக்கி வைக்கும்படிக்கும், 24-பி. சாஸ்திர இலாகாக்கள் சில்லரை இலாக்கள் என்கிற தலைப்பின்கீழ் ஒதுக்கி வைத்திருக்கும் தொகையிலிருந்து அதைக் குறைத்து ஈடு செய்து கொள்ளும்படிக்கும் ஆலோசனை சபையுடன் கூடிய கவர்னருக்கு இந்த சபை சிபார்சு செய்கிறது."

தேச மகாஜனங்களின் கல்வி அறிவை அபிவிருத்தி செய்யவும், அதிலும் முக்கியமாக முஸ்லீம் வகுப்பினர், இதர பிற்போக்கடைந்த வகுப்பினர் இவர்களுக்குள் கல்வி அறிவைப் பெருக்கவும் கவர்ன்மெண்டார் விசேஷகவலை காட்டி வருவதால், இந்தத் தீர்மானத்தை சபையார் அங்கீகரிப்பதற்கு நான் அதிக வார்த்தைகள் சொல்ல வேண்டிய அவசியமில்லை. கொஞ்சகாலமாகத்தான் முஸ்லீம்கள் கல்வி விஷயத்தில் விழித்துக் கொண்டிருக்கிறார்கள். கவர்ன்மெண்டார் கல்வி கற்பதற்காக எவ்வளவோ வசதிகள் செய்து கொடுத்தும் இதுவரையில் அவைகளினால் பயன் பெறுமல் ஒதுங்கி இருந்துவிட்ட கீழ சமுத்திரக்கரை யோரமாகவுள்ள முஸ்லீம்கள் கூட கல்வி அறிவில்லாததினால் தங்களுடைய வியாபாரத்திற்கு இடைஞ்சல் ஏற்படுவதைக் கண்டு கொண்டுவிட்டார்கள். நான் சமீபத்தில் ஸ்டெரி

யிட்ஸ் செட்டில்மென்டுகள், மலாய் நாடுகள் இவைகளுக்குச் சென்றிருந்த பொழுது என்னுடைய வகுப்பினர் தங்களுக்கு கல்வி இல்லாத குறையை என்னிடம் தெரிவித்துக் கொண்டார்கள். இந்தக் குறையை போக்குவதற்காக முஸ்லீம்கள் பெருத்த நாகூரில் முகம்மதிய நடுத்தரப் பாடசாலையொன்று ஏற்படுத்த உத்தேசித்திருக்கிறது. இதுவரையில் 10,000 ரூபாய்வரையில் நன்கொடைகளும் வாக்களிக்கப்பட்டிருக்கின்றன. கட்டிடம் கட்டுவதற்காக விசாலமான இடமும் இனாமாகக் கொடுக்கப்பட்டிருக்கிறது.

இந்த நிகழ்ச்சியை ஆரம்பம் செய்த நாகூர் முஸ்லீம் சங்கத்தின் பிரசிடெண்டு ஹோதாவில் கவர்ன்மெண்டார் மற்ற பள்ளிக்கூடங்களுக்குப் பொருளுதவி செய்வது போலவே இதற்கும் செய்ய வேண்டுமென்றுகேட்க உத்தேசித்திருக்கிறேன். நான் விண்ணப்பம் செய்து கொண்டதும் பணங் கொடுத்துதவ சவுகரியமாக யிருக்கும்படி வரவு செலவு திட்டத்தில் இதற்காகப் பணம் ஒதுக்கி வைக்கும்படி கேட்டுக் கொள்ளுகிறேன்.

இது விஷயமாக கல்வி இலாகா அதிகாரிகளுடனும் நான் கடிதப் போக்கு வரத்து செய்து வந்திருக்கிறேன். அவர்களும் இந்த முயற்சியில் அனுதாப முள்ளவர்களாகவே இருக்கிறார்கள். ஆகவே சபையோர் இத் தீர்மானத்தை ஆட்சேபிக்கமாட்டார்களென்றும், கவர்ன்மெண்டார் இதற்காக ரூ 20,000 ஒதுக்கிவைப்பார்களென்றும் நம்புகிறேன்.

## கனம் மிஸ்டர் ஜே. எச். ஸ்டோன்.

மேன்மைதங்கிய பிரபுவே,

கனம் மெம்பர் 22-இ என்கிற தலைப்பையும் 22 ஜி என்று மாற்றி, "கிராண்டுகள்" என்கிற தலைப்பின் கீழ் நாகூர் பள்ளிக்கூடத்திற்காக அவர் குறிப்பிடும் தொகையை ஒதுக்கிவைக்கும்படி கேட்கிறார். முறைப்படி பார்த்தால் நாம் இந்த ஆலோசனையை அங்கீகரிக்க முடியாதென்றுதோன்றுகிறது. பாடசாலைகளுக்கு கிராண்டு கொடுப்பதற்காக வரவு செலவு திட்டத்தில் மொத்தமாகப் பணத்தை ஒதுக்கிவைக்கிறது வழக்கமே தவிர, எந்தப்பள்ளிக்கூடத்திற்காக வென்றும் குறிப்பிட்டு பணத்தை ஒதுக்கி வைப்பதில்லை. நாகூரில் ஒரு பள்ளிக் கூடத்தை ஏற்படுத்தி, அதற்குப் பொருளுதவி செய்யும்படி விண்ணப்பம் செய்து கொண்டால், சாதாரண விதிகளின்படி கொடுக்கக்கூடிய தொகையைக் கொடுப்பதில் எவ்வித சிரமுமேற்படாது. எவ்விதம் இதர பள்ளிக்கூடங்களுக்காக தனித்தனியே பணம் ஒதுக்கிவைக்கப்படுவதில்லையோ, அதைப்போலவே இதற்காகவும் ஒதுக்கிவைக்க வேண்டிய அவசியமில்லை. இந்தத் தீர்மானத்திற்கு அது தான் பதில். நாகூரில் ஒரு பள்ளிக்கூடத்தை ஏற்படுத்துவதற்கு கவர்ன் மெண்டார் போதிய ஆதரவளிக்கமாட்டார்களென்று நினைப்பதற்கு எவ்வித

காரணங்களுமில்லை. முஸ்லீம்கள் கல்வி அபிவிருத்தியில் கவர்ன்மெண்டா ருக்கு விசேஷ சிரத்தை யிருப்பது தெரிந்த விஷயம்.

### மேன்மைதங்கிய அக்கிராஸனாதிபதி.

கனம் கல்வி இலாகா டைரக்டர் சொல்லியதென்ன வெனில்.—இப் போது கொண்டு வரப்பட்டிருக்கிற பிரகாரம் தீர்மானம் அவசியமில்லை. பள் ளிக்கூட அதிகாரிகள் சரியான முறைப்படி உதவிக்காக கவர்ன்மெண்டா ருக்கு விண்ணப்பம் செய்து கொண்டால், அவர்களுடைய விண்ணப்பம் கிர மப்படி கவனிக்கப்படும். ஆகவே கனம் மெம்பர் தமது தீர்மானத்தை வற் புறுத்தமாட்டாரென்றே நினைக்கிறேன்.

மேன்மைதங்கிய அக்கிராசனாதிபதியின் அனுமதியின் பேரில் தீர் மானம் வாபீஸ் வாங்கிக் கொள்ளப்பட்டது.



[ஏப்பிரல் மாதம் 4-ந்தேதி நடந்த கூட்டம்.]

### மண்டபத்தில் கோரண்டைன் நிர்ப்பந்தங்கள்.



அடியிற்கண்ட தீர்மானத்தை நான் பிரேரணை செய்கிறேன்:—

"ஸிலோனுக்குச் செல்லும் பிரயாணிகளுக்கு மண்டபத்தில் விதிக்கப் படும் கோரண்டைன் நிர்ப்பந்தங்களை அகற்றிவிடும்படி இந்த கவர்ன்மேண்டார் ஸிலோன் கவர்ன்மேண்டாரோடு அவசியமான நடவடிக்கைகளை எடுத்துக் கொள்ள வேண்டுமென்று ஆலோசனை சபையுடன் கூடிய கவர்னருக்கு இந்த சபை சிபார்சு செய்கிறது."

ஸிலோன் கவர்ன்மெண்டாரால் இந்தியப் பிரயாணிகளுக்கு ஏற்ப டும் அசவுகரியங்களையும் கஷ்டங்களையும் நானும், என்னுடைய சகாக்கள் பலரும் கேள்விகள் மூலமாக இந்த சபையில் பிரஸ்தாபத்திற்குக் கொண்டு வந்திருக்கிறோம். 1915-ம் வருஷம் நவம்பர் மாதம் 27-ம் தேதி என்னு டைய சகாவான கனம் மிஸ்டர் எம். ராமச்சந்திராராவ் இந்த விஷயத் தைப்பற்றி ஒரு தீர்மானங் கொண்டு வந்து, உள்ள விஷயங்களை வெகு தெளிவாக எடுத்துச் சொன்னார். அந்தத் தீர்மானத்தை நான் ஆமோதித் துப் பேசியபோது, நமது இந்தியப் பிரயாணிகள் படும் அசவுகரியங்களையும் அவஸ்தைகளையும் பரிகரிப்பதற்காக தொத்து வியாதிகள் இல்லாத இடங் களிலிருந்து தேகாரோக்கிய சர்ட்டிபிகேட்டுகளுடன் வருகிறவர்களை எவ்வித நிர்ப்பந்தங்களுமில்லாமல் தாராளமாகச் செல்ல அனுமதித்துவிடும்படி

நமது கவர்ன்மெண்டார் விலோன் கவர்ன் மெண்டாருக்குத் தெரிவித்துக்கொள்ள வேண்டுமென்று யோசனை சொன்னேன். இதேவிஷயமாக 1916 ம் வருஷத்தில் நான் ஒரு கேள்வி அனுப்பியபோது விலோன் கவர்ன் மெண்டாருடன் கலந்து கொண்டு அடியிற் கண்ட மாறுதல்கள் செய்யப்பட்டிருப்பதாக கவர்ன் மெண்டார் அறிவித்தார்கள்.

(1) அடுத்த வருஷத்துவக்கத்தில் சாசுவதமான காம்பு கட்டிடம் கட்டி முடியும் வரையில்தான், ஆள் அடையாளத்திற்காக பிரயாணிகளுக்கு முத்திரை குத்தப்படும். அதற்குப் பிறகு வேறு ஏற்பாடுகள் செய்யப்படும்.

(2) கோரண்டைனுக்கு பதிலாக எல்லா வகுப்புப் பிரயாணிகளிடமிருந்தும் தேகாரோக்கியம், தொத்து வியாதியில்லாமை இவைகளைப்பற்றிய சர்ட்டிபிகேட்டுகள் விலோன் அதிகாரிகளால் அங்கீகரிக்கப்படும். தனிப்பட்ட நபர்களிடமிருந்து 5ரூபாயும் ஒரு குடும்பத்திற்கு ரூ 8ம் வாங்கிக் கொண்டு இந்த சர்ட்டிபிகேட்டுகளைக் கொடுக்கும்படி ஜில்லா சர்ஜன்களுக்கு அதிகாரம் கொடுக்கப்பட்டிருக்கிறது.

(3) காம்பில் ஏற்கனவே அம்மை குத்திக்கொண்டிருப்பவர்களை மறுபடியும் அம்மை குத்திக்கொள்ளும்படி நிர்பந்தம் செய்யப்போவதில்லை. ஏற்கனவே அம்மை குத்தப்பட்டவர்களின் ஜாப்தாவொன்று வைக்கப்பட்டிருக்கிறது. மற்ற கேஸ்களில் ஏற்கனவே அம்மை குத்தியாகிவிட்டதென்று காட்டப்படும் ருஜுக்கள் பரிசீலனை செய்யப்படும். அவைகள் திருப்திகரமாக இருந்தால் மறுபடியும் அம்மை குத்திக்கொள்ள வேண்டியதில்லை.

(4) முத்திரைக் கட்டணம் ரூபாய் ஒன்று இப்பொழுது வசூலிக்கப்படுவதில்லை. டிபாசிட்டுகளும் கிலிப்தமாகக் கேட்கப்பட மாட்டாது.

(5) அடியிற் கண்ட உத்தியோகஸ்தர்களை காம்பைப் பார்வையிடும் உத்தியோகஸ்தர்களாக நியமனம் செய்ய விலோன் கவர்ன் மெண்டார் சம்மதித்திருக்கிறார்கள்:—

சர்ஜன் ஜெனரல்.
போலீஸ் இன்ஸ்பெக்டர் ஜெனரல்.
ராமநாத புரம் டிஸ்திரிக்ட் மாஜிஸ்திரேட்.
சுகாதாரக் கமிஷனர்
திருச்சினாப்பள்ளி போலீஸ் டிப்டி இன்ஸ்பெக்டர் ஜெனரல்.
ராமநாத புரம் போலீஸ் சூப்பரின்டெண்டு.
ராமநாதபுரம் டிஸ்திரிக்ட் சர்ஜன்.
ராமநாதபுரம் சப்டிவிஷனல் மாஜிஸ்திரேட்.

சென்னை கவர்ன்மெண்டாரால் ஸ்பெஷலாக அனுப்பப்படுகிறவர்கள்.

இந்த விளம்பரத்திற்குப் பிறகு ஸிலோனுக்குச் செல்லும் இந்தியப் பிரயாணிகள் டிஸ்திரிக்ட் சர்ஜன்களிடமிருந்து சர்ட்டிபிகேட்டுகள் பெற்றுக் கொண்டிருந்தார்கள். அந்த சர்ட்டிபிகேட்டுகளில் ஒன்று என்னிடமிருக்கிறது. அதில் கண்டிருப்பதாவது:—“இன்னார் இன்ன இடத்திலிருந்து இன்னூர் ஸிலோனுக்குச் செல்லுகிறார். இந்த ஜில்லா முழுவதிலும் தொத்து வியாதிகள் இல்லை.” இதைப்போன்ற நூற்றுக்கணக்கான சர்ட்டிபிகேட்டுகள் மண்டபம் காம்பு சூப்பரின்டெண்டினால் அங்கீகரிக்கப்படுவதில்லையென்றும், இதுவரையிலிருந்ததுபோல் கோரண்டைன் நிர்பந்தங்களனைத்தையும் அநுபவிக்க வேண்டியிருக்கிறதென்றும் கேள்விப்படுகிறேன். என்னுடைய ஓட்டர்கள் சிலர் எனக்கு இந்த விஷயத்தைத் தெரிவித்துக் கொண்டார்கள். அதன் மேல் நான் மண்டபம் காம்பு சூப்பரின்டெண்டுக்கு எழுதினேன். அவர் கொளும்பு பிளேக்கமிட்டி சேர்மனுக்கு எழுதிக்கொள்ளும்படி காட்டி விட்டார். அதன் பேரில் பிளேக்கமிட்டி சேர்மனுக்கு நான் எழுதினேன். அவர் இந்த கவர்ன் மெண்டாரிடம் தெரிவித்துக் கொள்ளும்படி பதில் அனுப்பி விட்டார். ஆகவே ஸிலோன் அதிகாரிகள் கையில் நமது இந்தியப்பிரயாணிகள் படும் அசவுகரியங்களையும் அவஸ்தைகளையும் எடுத்துச் சொல்ல இந்த சபைக்கு வந்திருக்கிறேன். நான் என்னுடைய தீர்மானத்தை அனுப்பிய பிறகு கவர்ன்மெண்டார் 1917ம் வருஷம் பிப்பிரவரி மாதம் 19ம் தேதியுள்ள 150ம் நம்பர் கவர்ன் மெண்டு உத்திரவை என் பார்வைக்கு அனுப்பினார்கள். ஜில்லா சர்ஜன்களால் கொடுபட வேண்டிய சர்ட்டிபிகேட்டுகளைப் பற்றிய குறிப்புகளைப் பார்வையிட்டதில் அவ்வித சர்ட்டிபிகேட்டைக் கொடுக்க ஒரு ஜில்லா சர்ஜனால் சாத்தியப்படாதென்றே தோன்றுகிறது. அதில் கண்டிருக்கும் வாசகத்தின்படி சர்டிபிகேட் கொடுக்க வேண்டியதின் பலனாக பிரயாணிகளெவரும் சரீராரோக்ய சர்ட்டிபிகேட்டுகளை பெற முடியாமற் போய் விடும். ஸிலோன் கவர்ன் மெண்டார் நமது பிரயாணிகளின்மீது இத்தகைய கஷ்டங்களை ஏற்படுத்தி வருவதிலிருந்து இந்தியப் பிரயாணிகளுக்கு ஒரு வித சவுகரியமும் கூடாதென்பது அவர்களுடைய கருத்தென்று தோன்றுகிறது. இந்த நிலைமையில் இந்த கவர்ன்மெண்டார் தக்க நடவடிக்கையை எடுத்துக் கொள்ளாவிடில் இந்தியப் பிரயாணிகள் பெருங் கஷ்டங்களை அநுபவிக்க வேண்டிவரும். என்னுடைய தீர்மானத்தைக்கூட முறைத்தவறு எதுவுமில்லாவிடில் அடியிற் கண்டவாறு திருத்திக் கொள்ள விரும்புகிறேன்.

“1916-ம் வருஷம் நவம்பர் மாதம் 22-ம் தேதி வெளியாகியிருக்கும் நம்பர் 349 ஹோம் (மிஸ்லேனியஸ்) கவர்ன்மெண்டு உத்திரவில் சொல்லப்பட்டிருக்கிற பிரகாரம் ஸிலோன் கவர்ன்மெண்டார்

நடந்து கொள்ளும்படி வேண்டிக்கொள்ள இந்த கவர்ன்மெண்டார் தக்க ஏற்பாடுகளைச் செய்யவேண்டும்''

இந்த கவர்ன்மெண்டு உத்திரவின் பிரதியொன்று என்னிடமிருக்கிறது. 150-ம் நம்பர் கவர்ன்மெண்டு உத்திரவைப் போல இது அவ்வளவு கஷ்டமானதாக இல்லை. ஆகவே 1916-ம் வருஷம் நவம்பர் மாதம் 21-ம் தேதி கூடிய சட்டசபையில் நான் கேட்டிருந்த கேள்விக்கு கவர்ன்மெண்டார் அளித்த பதிலில் கண்டிருந்த ஆதி ஏற்பாட்டின்படியே ஸிலோன் கவர்ன்மெண்டார் நடந்துகொள்ளும்படி செய்வதற்காக இந்த கவர்ன்மெண்டார் அவர்களுடன் தக்க ஏற்பாடுகளைச் செய்து கொள்ளவேண்டும்.

## மேன்மை தங்கிய அக்கிராசனாதிபதி.

கனம் மெம்பர் என்ன விரும்புகிறாரென்று எனக்குத் தெரியவில்லை. அவருடைய கருத்தை விளக்கிச் சொல்லும்படி கேட்டுக் கொள்ளுகிறேன். அவர் என்ன கருத்தின் பேரில் திருத்தப்பிரேரணை கொண்டு வர உத்தேசித்திருக்கிறாரென்றும் எனக்குத் தெரியவில்லை. எனக்கு விளங்காதற்குக் காரணங்களைச் சொல்லி விடுகிறேன். விஷய அட்டவணையிலிருக்கும் தீர்மானத்தில் கோரண்டைன் நிர்ப்பந்தங்களை ஸிலோன் கவர்ன்மெண்டார் நிவர்த்தித்து விடும்படி செய்ய ஆலோசனை சபையுடன் கூடிய கவர்னர் தக்க ஏற்பாடுகளைச் செய்ய வேண்டுமென்று சொல்லியிருக்கிறது. அது நன்றாக விளங்குகிறது. இப்பொழுது ஸிலோன் கவர்ன்மெண்டாரை கோரண்டைன் நிர்ப்பந்தங்களை நிவர்த்திக்கும்படி செய்ய வேண்டுமென்பதை விட்டு விட்டு, 1916-ம் வருஷம் நவம்பர் மாதம் 22-ம் தேதி பிறப்பிக்கப்பட்ட 349-ம் நம்பர் கவர்ன்மெண்டு உத்திரவின்பிரகாரம் நடந்து கொள்ளும்படி ஸிலோன் கவர்ன்மெண்டாரைக் கேட்டுக் கொள்ளவேண்டு மென்று திருத்தப்பிரேரணை கொண்டுவர விரும்புகிறார். இந்த கவர்ன்மெண்டாருடைய உத்திரவில் என்ன சொல்லப் பட்டிருக்கிறதென்றால்:—கோரண்டைன் விதிகளின்படி பிரயாணிகள் சரீரா ரோக்கியத்துடனும், தொத்து வியாதிகளால் பீடிக்கப் படாமலுமிருப்பதாக சர்டிபிகேட்டுகள் ஆஜர்ப்படுத்த வேண்டும். அவ்வித சர்ட்டிபிகேட்டுகளைக் கொடுக்க எல்லா ஜில்லா சர்ஜன்களுக்கும் அதிகாரம் கொடுக்கப்பட்டிருக்கிறது. சில கனவான்களை மண்டபம் காம்பைப் பார்வையிடுவதற்காக நியமிக்கவும் ஸிலோன் கவர்ன்மெண்டார் சம்மதித்திருக்கிறார்கள். இவ்வித நிலைமையில் கனம் மெம்பர் தீர்மானத்தை வற்புறுத்த இஷ்டப்படாவிடின் இதை வாபீஸ் வாங்கிக்கொண்டு அடுத்த மீட்டிங்கில் வேறு திருத்திய தீர்மான மொன்றைக் கொண்டு வருவதே உசிதமென்று தோன்றுகிறது. இரண்டொரு வாரங்கள் தள்ளிப் போவதினால் ஒன்றும் பாதகமேற்பட்டு விடாது. இத்தீர்மானத்தை இன்னும் மாற்றிக்கொள்ள கனம் மெம்பர் விரும்புவாரோ வென்று கூட நான் சந்தேகிக்கிறேன். தீர்மானத்தைக் கொண்டுவர அவருக்குள்ள பாத்தியத்தில் தலையிட நான்

இஷ்டப்படவில்லை. அவர் இப்பொழுது இந்த தீர்மானத்தை வாபீஸ் வாங்கிக் கொண்டு விட்டால், அடுத்த கூட்டத்தில் இதைப்பற்றி விவாதித்துக் கொள்ளலாமென்று நினைக்கிறேன். அடுத்த கூட்டத்தில் எம்மாதிரியாக தீர்மானங் கொண்டு வருகிறதென்று அவர் ஆற அமர யோசித்துக் கொள்ளலாம். இது தான் நல்ல வழி யென்று எனக்குத் தோன்றுகிறது. அவ்விதம் செய்ய கனம் மெம்பர் இஷ்டப்படாத பட்சத்தில் தீர்மானத்தை சபையின் முன்பாக விட்டு விடுகிறேன்.

## கனம் மிஸ்டர் அகமது தம்பி மரக்காயர்.

என்னுடைய ஆதி தீர்மானத்தில் கோரண்டைன் நிர்ப்பந்தங்களை அடியுடன் எடுத்துவிட வேண்டுமென்று சொல்லி யிருந்தேன்; இப்பால் நான் அதைப்பற்றி யோசனை செய்து பார்த்ததில் நிர்ப்பந்தங்களை அடியுடனொழித்து விடுவது அசாத்தியமாக யிருக்கலாமென்று தோன்றிற்று. கோரண்டைன் நிர்ப்பந்தங்களை அடியுடன் அகற்றி விடவேண்டு மென்று ஸிலோன் கவர்ன்மெண்டாரை வற்புறுத்துவதாக கவர்ன்மெண்டார் உறுதி கூறும் பக்ஷத்தில், ஆதி தீர்மானத்தையே வைத்துக் கொள்ளுவதில் எனக்கு ஆட்சேபணையில்லை. 22-11-1916-ம் தேதியுள்ள 349-ம் நம்பர் கவர்ன்மெண்டு உத்திரவைப் படித்துப் பார்த்த பிறகு, சமீபத்தில் பிறப்பிவிக்கப்பட்டிருக்கும் கடினமான நிபந்தனைகளடங்கிய கவர்ன்மெண்டு உத்திரவைக் காட்டிலும் அந்த உத்திரவை அனுசரித்தே ஸிலோன் கவர்ன்மெண்டாரை நடந்து கொள்ளும்படி செய்வது சுலபமென்று தோன்றுகிறது. ஆகவே அந்த கவர்ன்மெண்டு உத்திரவின் பிரகாரம் நடந்து கொள்ளும்படி ஸிலோன் கவர்ன்மெண்டாரைக் கேட்டுக் கொள்ள வேண்டும்.

கனம் மிஸ்டர் கில்மன்:—எந்த விஷயங்களில்?

கனம் மிஸ்டர் மரக்காயர்:—இந்த சர்ட்டிபிகேட்டுகள் விஷயத்தில்.

## கனம் திவான்பகதூர் எம். ராமச்சந்திர ராவ்.

நான் இத்தீர்மானத்தை ஆமோதிக்கிறேன்.

ஏற்கனவே இதுவிஷயமாக நான் கொண்டு வந்த தீர்மானத்தின் மேல் தெரிவித்துக்கொள்ளப்பட்ட விஷயங்களின் பலனாக 5 ரூபாய் கட்டணம் வாங்கிக் கொண்டு சர்ட்டிபிகேட்டுகள் கொடுக்கும்படி ஜில்லா சர்ஜன்களுக்கு அநுமதி கொடுக்கப்பட்டது. அவ்விதம் நடந்ததாகத்தான் எனக்கு ஞாபகம்.

மேன்மை தங்கிய அக்கிராசனாதிபதி:—அதாவது 349-ம் நம்பர் கவர்ன்மெண்டு உத்திரவு.

## கனம் திவான்பகதூர் எம். ராமச்சந்திரராவ்

இந்த சபையில் நான் கேட்டிருந்த ஒரு கேள்விக்கு பதிலாக இது வெளிப்பட்ட பிறகு, ஏழை ஜனங்கள் ஸிலோனுக்குப் போகு முன் மதுரைக்கு வந்து சர்ட்டிபிகேட்டுகள் பெற்றுப் போவதிலுள்ள கஷ்டங்களை ஸர் அலெக்ஸாண்டர் கார்டியூவுக்குத் தெரிவித்துக் கொண்டிருக்கிறேன். மதுரை ஜில்லாவிலிருந்து ஸிலோனுக்குப் போகிறவர்களனைவரும் மதுரைக்கு வந்து ஜில்லா சர்ஜன்களிடம் சர்ட்டிபிகேட்டுகள் வாங்கிக் கொண்டு போக வேண்டி யிருக்கிறது. இது தீர்ந்து போன காரியமென்றும், மறுபடியும் ஸிலோன் கவர்ன்மெண்டாரை இந்த விஷயத்தைப் புனராலோசனை செய்யும்படி வற்புறுத்துவது சாத்திய மில்லாத காரிய மென்றும், இந்த ஏற்பாடுகள்கூட ரொம்ப கஷ்டப்பட்டே அந்த கவர்ன்மெண்டாருடன் செய்து கொள்ளப்பட்ட தென்றும் ஸர் அலெக்ஸாண்டர்கார்டியூ பதிலெழுதி விட்டார். இப்பொழுது இந்த தீர்மானத்தைக் கொண்டு வந்திருக்கும் கனம் மெம்பர் மற்றொரு கவர்ன்மெண்டு உத்திரவை எனக்குக் காட்டினார். முந்தின உத்திரவில் சர்ட்டிபிகேட்டுகள் கொடுப்பதற்கு ஜில்லா சர்ஜன்களுக்குக் கொடுக்கப்பட்டிருந்த அதிகாரம் பல வழிகளில் இந்த உத்திரவில் மாற்றப்பட்டிருக்கிறது. சர்ட்டிபிகேட்டு கேட்கும் பெயர்வழிகளை நேரில் தங்களுக்குத் தெரிந்தாலொழிய ஜில்லா சர்ஜன்கள் சர்ட்டிபிகேட்டு கொடுக்க முடியாதபடி இந்த உத்திரவானது கட்டுப் படுத்துவதாக யிருக்கிறது. இந்த உத்திரவை மேலெழுந்த வாரியாக நான் பார்வை யிட்டதில், இந்த சவுகரியங்கள் இருப்பதும் இல்லாமலிருப்பதும் ஒன்றுதானென்று தோன்றுகிறது. எனது நண்பர் கனம் மரக்காயருடைய ஆட்சேபணைகளெல்லாம் இந்தப் புதிய நிர்ப்பந்தங்களைப் பற்றித்தான். அவருடைய நோக்கமென்னவெனில் முந்தின உத்திரவில் கண்டிருந்தபடியே ஜில்லா சர்ஜன்களை சர்ட்டிபிகேட்டுகள் கொடுக்கும்படி ஏற்பாடு செய்திருந்தால் போதுமான தென்பது தான். இந்த அபிப்பிராயங்களைச் சொல்லி இத்தீர்மானத்தை ஆமோதிக்கிறேன்.

சுமார் 300 பேர்வழிகள் போல் தலா ரூ 5-வீதம் கட்டி சர்ட்டிபிகேட்டுகள் வாங்கிக்கொண்டு மண்டபம் போய் சேர்ந்தார்களென்றும், ஸிலோன் வைத்திய உத்தியோகஸ்தர் கொஞ்சம்கூட மட்டு மரியாதையில்லாமல் அந்த சர்ட்டிபிகேட்டுகளை நிராகரித்து விட்டு, காம்புக்காவது போகவேண்டும், அல்லது தம்மிடம் வேறு சர்ட்டிபிகேட்டு பெற்றுக் கொள்ள வேண்டும் என்றும் சொன்னதாகவும், கனம் மெம்பர் எனக்கு அறிவித்தார். அவைகளெல்லாம் பெருந் தொல்லைகள். நான் முந்தி தீர்மானம் கொண்டு வந்தபோது இவைகளை யெல்லாம் எடுத்துச் சொன்னேன். இந்த விஷயத்தில் உண்மையாக நமக்குக் குறையிருக்கிறது. ஜில்லா சர்ஜன்களை சர்ட்டிபிகேட்டுகள் கொடுக்கும்படி சொல்லி யிருக்கையில், ஸிலோன் அதிகாரிகள் அந்த சர்ட்டிபிகேட்டுகளை அங்கீகரிக்காமலிருக்கக்

கொஞ்சங் கூட நியாயமில்லை. பொறுப்பு வாய்ந்த நமது வைத்திய உத்தியோகஸ்தர்களுக்கு அனாவசியமான நிர்ப்பந்தங்களை ஏன் ஏற்படுத்த வேண்டும்? சர்ட்டிபிகேட்டு வாங்குவதற்காக மதுரைக்குப் போக வேண்டிய கஷ்டமில்லாமற் செய்துவிட தாலுகா ஸ்தலங்களிலுள்ள சப் அஸிஸ்டெண்ட் சர்ஜன்களுக்கும் சர்ட்டிபிகேட்டு கொடுக்க அதிகாரம் கொடுக்கலா மென்று நான் ஸர் அலெக்ஸாண்டர் கார்டியூவுக்கு யோசனை சொன்னேன். இந்த விஷயத்தில் ஜனங்களுடைய சவுகரியத்தைக் காப்பாற்ற வேண்டியதைத் தவிர வேறெவ்வித நோக்கத்தையும் கவர்ன்மெண்டார் கொண்டிருக்க நியாயமில்லை. அவசியமானால், இவ்விஷயத்தைப் பற்றி கவர்ன்மெண்டார் ஸிலோன் கவர்ன்மெண்டாருக்கு மறுபடியும் தெரிவித்துக் கொள்ளுவார்களென்று நினைக்கிறேன்.

## கனம் மிஸ்டர் கில்மன்

கனம் மெம்பர் சொல்லிய பிரகாரம், கோரண்டைனுக்கு பதிலாக சரீராரோக்கிய சர்ட்டிபிகேட்டுகளை ஏற்றுக் கொள்ளுவதாக ஒப்புக்கொண்டு ஜில்லா சர்ஜன்கள் அந்த சர்ட்டிபிகேட்டுகளைக் கொடுக்கலா மென்று ஸிலோன் கவர்ன்மெண்டார் சொல்லியிருந்தது வாஸ்தவமே. துரதிர்ஷ்டவசாது, அவர்கள் செய்து கொடுத்த சவுகரியம் ஒழுங்கீனமாக உபயோகிக்கப்பட்டு விட்டது. நமது ஜில்லா சர்ஜன்களில் ஒருவர் கொஞ்சங்கூட முன்பின் யோசியாமல், தாம் சர்ட்டிபிகேட்டுகள் கொடுக்கக் கூடாத கேஸ்களிலும் சர்ட்டிபிகேட்டுகள் கொடுத்து விட்டார். அதற்காக சர்ஜன் ஜெனரல் அவரைக் கண்டிக்க வேண்டிய தாயிற்று. தமக்கு நேரில் ஒரு நாளும் தெரியாமலும், குடியிருப்பு இடம் முதலியன எங்கே யென்பது தெரியாமலும் உள்ளபெயர்வழிகளுக்கு ஜில்லா சர்ஜன் ஒழுங்கீனமாக சர்ட்டிபிகேட்டுகளைக் கொடுத்து விட்டதின் பலனாக, ஸிலோன் அதிகாரிகள் அவர் கொடுத்த சர்ட்டிபிகேட்டுகளை ஒப்புக்கொள்ள மறுத்து விட்டார்கள். அவர்கள்மறுத்ததும் நியாயமே. அதன்மேல்ஸிலோன் கவர்ன்மெண்டார் காயமாக தொழில்களைச் செய்து கொண்டு ஒழுங்காக நடந்து வருகிறவர்களென்று தங்களுக்குநேரில் தெரிந்த பெயர்வழிகளுக்கே ஜில்லா சர்ஜன்கள் சர்ட்டிபிகேட்டுகள் கொடுக்கலாமென்று எங்களுக்கு எழுதினார்கள். அந்த மாதிரியான சர்ட்டிபிகேட்டுகளைக் கொடுப்பது சாத்தியமில்லாத காரியமென்று கனம் அகமது தம்பி மரக்காயர் சொல்லுகிறார். ஏற்கனவே நான் சொன்ன பிரகாரம் இதிலே இரண்டு கஷ்டங்கள் தான். சர்ட்டிபிகேட்டு கேட்கிற பெயர்வழிகள் யாரென்றும், அவருடைய வாசஸ்தலம் எவ்விதத் தொத்து வியாதியாலும் பீடிக்கப்படவில்லை யென்றும் தெரிவித்தாலன்றி ஜில்லா சர்ஜன்கள் இந்த சர்ட்டிபிகேட்டுகளைக் கொடுக்கக்கூடாது. ஆகவே, கோரண்டைனுக்கு பதிலாக ஜில்லா சர்ஜன்கள் கொடுக்கவேண்டிய சர்ட்டிபிகேட்டுகளின் தன்மையை முற்றும்புக ஸிலோன் கவர்ன்மெண்டாரைக் கேட்கச் சொல்ல நான் சிபாரிசவில்லை.

## கனம் மிஸ்டர் கே. ராமய்யங்கார்

கவர்ன்மெண்டாரிடமிருந்து சவுகரியங்களை எதிர்பார்த்திருக்கும் ஜனங்களுக்கு, அவர்கள் கொண்டிருக்கும் மனோபாவம் கஷ்டமும் தொல்லையும்தான் உண்டாக்கு மென்று நான் நினைக்கிறேன். தொத்துவியாதியால் பீடிக்கப்பட்ட பிரதேசத்திலிருந்து யாராவது வந்திருப்பதாகத் தெரிந்தால் அவருக்கு ஜில்லா சர்ஜன் சர்ட்டிபிகேட்டு கொடுக்க வேண்டுமென்று நான் சொல்லவில்லை. பிரயாணியின் சரீராரோக்கியத்தைப்பற்றியே சர்ட்டிபிகேட்டு தேவை. அவருக்கு எந்தஊர், அவருடைய பூர்வோத்தரங்களென்னவென்கிற விவரங்கள் தெரியாவிடில் ஜில்லா சர்ஜன்கள் அந்த சர்ட்டிபிகேட்டுகள் கொடுக்க முடியாது. கவர்ன்மெண்டார் சொல்லப் போகிறகட்சி அதுவாயிருந்தால், கூலி காம்புக்குள் போகும் ஒவ்வொருவரையும் சிலோன் கவர்ன்மெண்டு அதிகாரிகள் தங்கவைத்துவிட முடியாதாவென்று தெரிய வேண்டும். தங்கள் முன்பாக ஆஜராகும் பெயர்வழியை ஜில்லா சர்ஜன்கள் பரிசோதனை செய்து சர்ட்டிபிகேட்டுக் கொடுக்க கூடாதென்றால், இந்தக் கடிதப்போக்கு வரத்தினால் என்ன பயனென்று எனக்குத் தெரியவில்லை. கனம் கில்மனுடைய பிரசங்கத்தை நான் கவனித்தவரையில் அவர் ஜில்லா சர்ஜன்மீது பழியைப் போடுகிறதாகத் தெரிகிறது.

கனம் மிஸ்டர் கில்மன்:—நானும் அவர்மீது தோஷஞ்சொல்லவில்லை. கவர்ன்மெண்டாரும் அவர்மீது தோஷம் சொல்லவில்லை.

கனம் கே. ராமய்யங்கார்:—சிலோன் கவர்ன்மெண்டார் செய்தது சரியென்று நான் நினைத்தேன்.

கனம் மிஸ்டர் கில்மன்:—சர்ஜன் ஜெனரல் ஜில்லா சர்ஜன் மீது தோஷம் சொன்னாரென்று நான் சொன்னேன்.

கனம் மிஸ்டர் கே. ராமய்யங்கார்:—பூராதகவல்களையும் தெரிவிக்காத வரையில் என்னுடைய அபிப்பிராயங்களை சபையின் முன்பாக தெரிவித்துக் கொள்ள முடியாது.

கனம் மிஸ்டர் கில்மன்:—சர்ஜன் ஜெனரல் செய்த காரியத்தை நான் ஒப்புக் கொள்ளுகிறேன். இதர ஜில்லா பெயர்வழிகளுக்குக்கூட ஜில்லா சர்ஜன் சர்ட்டிபிகேட்டுகள் கொடுத்தது பிசகென்று சர்ஜன் ஜெனரல் அபிப்பிராயப்பட்டது சரியென்று கவர்ன்மெண்டாரும் ஒப்புக்கொள்ளுகிறார்கள்.

* * *

## மேன்மை தங்கிய அக்கிராசனாதிபதி

திருத்தப் பிரேரணையைக் கொண்டுவந்து புகவிட்டதில் சிக்கல் அதிகமாகிவிட்டது. நான் இருக்கிற விஷயங்களை எடுத்துச் சொல்லுகிறேன்.

ஸிலோன் கவர்ன்மெண்டார் தங்களுடைய ராஜாங்கத்திற்குள் பிளேக் முதலிய தொத்து வியாதிகள் வந்து விடாமல் பந்தோபஸ்து செய்து கொள்ள விரும்புகிறார்கள்; ஸிலோனுக்குள் தொத்து வியாதிகள் வந்து சேர்ந்து விடாமலிருப்பதற்காக எங்களுடன் கலந்து கொண்டு சில விதிகளை ஏற்படுத்தியிருக்கிறார்கள். ஸிலோனுக்குள் தொத்து வியாதிகள் வராமல் தடுக்க அவர்களுக்கு சுதந்தரமுண்டென்பதை யாரும் மறுக்க முடியாது. ஸிலோனுக்குள் ஜனங்கள் வராமல் அவர்கள் தடுப்பதையும் நாம் ஆட்சேபிக்க முடியாது. இரண்டு கவர்ன்மெண்டாரும் கலந்து யோசித்து, ஸிலோனுக்குப் போகிறவர்கள் சர்ட்டிபிகேட்டு பெற வேண்டுமென்றாவது ஏற்பாடுகள் செய்தோம். துரதிர்ஷ்டவசாது நமது உத்தியோகஸ்தர்களிலே ஒருவர் தமக்கு நேரில் தகவல் தெரியாத கேஸ்களில் கூட சர்ட்டிபிகேட்டுகள் கொடுத்து விட்டதால், சர்ட்டிபிகேட்டுகள் விஷயமாக செய்து கொள்ளப்பட்டிருந்த ஏற்பாடு தற்காலத்திற்கு பல ஹீனப்பட்டிருக்கிறது. ஸிலோன் கவர்ன் மெண்டார் ஆதியில் அந்த உத்தியோகஸ்தர்களிடம் நம்பிக்கை வைத்திருந்ததைப் போல் இனி நம்பிக்கை வைக்கத் தயாராக இல்லை. அதன் மேல் வைத்திய உத்தியோகஸ்தர்கள் தங்களுக்கு நேரில் தெரிந்த பெயர்வழிகளுக்குத்தான் தற்கால ஏற்பாடாக சர்ட்டிபிகேட்டு கொடுத்துவர வேண்டுமென்று தங்களுடைய சொந்த நன்மையை உத்தேசித்து வற்புறுத்தினார்கள். சர்ட்டிபிகேட் பெற முடியாதவர்கள் கோரண்டைன் காம்புக்குப் போய் பார்வையிலிருந்து வர வேண்டுமென்றும் சொன்னார்கள். தெரியாத பெயர்வழிக்கு சர்ட்டிபிகேட் கொடுத்து விட்ட பிசகு நம்மீது இருக்கும் இந்த சமயத்தில் ஸிலோன் கவர்ன் மெண்டாரிடம் வாதாடுவது சரியல்ல. தற்காலத்திற்கு அவர்கள் சொல்லும் நிபந்தனைகளை ஒப்புக் கொண்டு அவைகளின்படி நடந்து பின்னால் சாத்தியமானால் கனம் மெம்பர் யோசனை சொல்லுகிற பிரகாரம் இந்த நிர்ப்பந்தங்களை நிவர்த்திக்க முயற்சி செய்வது தான் சரியான வழி என்று எனக்குத் தோன்றுகிறது. இப்பொழுது நமது கட்சி ரெம்ப பலஹீனமாக இருக்கிறது. இங்கு நடந்திருக்கும் விவாதத்திலிருந்து அதுதான் உள்ள நிலைமையென்று எனக்குத் தெரிகிறது. நமது ஜனங்களுக்குப் பூரா சுதந்திரங்களையும் பெற வேண்டுமென்பதில் மற்றவர்களைப் போலவே எனக்கும் விசேஷ அக்கரையிருக்கிறது. இருந்தாலும் ஸிலோன் கவர்ன்மெண்டாருக்கு ஸிலோனில் உள்ள ஆதிக்கத்துக்கு நாம் கட்டுப்படத்தான் வேண்டும். எதிர்பாராத சில சந்தர்ப்பங்கள் நடந்து விட்டதின் காரணமாக நேர்ந்திருக்கும் நிலைமையை உணர்ந்து இப்பொழுதிருக்கிற படியே விட்டு விட்டு இந்த முறை திருப்திகரமாக அமுல் நடக்கும்படி ஒத்துழைப்பதுதான் சரியானவழி. பின்னாடி சர்ட்டிபிகேட்டு விஷயத்திலாவது வேறு துறைகளிலாவது இந்த நிர்ப்பந்தங்களைத் தளர்த்தி நமது ஜனங்கள் தாராளமாக ஸிலோனுக்குப் போகும்படி செய்ய முடியுமானால் அவ்விதமே செய்வோம். ஆனால் இப்பொழுது வாதம் புண்ண நமது கட்சி பலமாக இல்லை யென்று நினைக்கிறேன். இப்பொ

மூன் இந்த வாதத்தை நிறுத்திக் கொண்டு சவுகரியமான காலம் வரும் பொழுது பார்த்துக் கொள்வோம்.

## கனம் ராமனாதபுரம் ராஜா

சிலோன் கவர்ன்மெண்டாருடைய வேண்டுகோளுக்கு அட்டி செய்யக்கூடாதென்கிற கவர்ன்மெண்டாரின் எண்ணம் ஒருபுற மிருக்க, சிலோனில் பிளேக் கொண்டு போகப்படாமல் தடுக்க இந்த கோரண்டைன் நிர்ப்பந்தங்கள் அவசியமா அல்லது அவசியமில்லையா வென்பதை கவர்ன்மெண்டார் எங்களுக்கு அறிவிப்பார்களா? அநுபவத்தில் பார்த்தால் இந்தியாவிலிருந்து சிலோனுக்குக் கொண்டு போகப்படும் கேஸ்களை விட அங்கிருந்து இந்தியாவுக்கு வரும் கேஸ்களே அதிகமா யிருக்கின்றன. சிலோன் கவர்ன்மெண்டாருடைய இஷ்டப்படி நடக்க சித்தமாகுமுன் இந்த நிர்ப்பந்தங்கள் அவசியமாவென்பதை கனம் வில்ஸன் அறிவிக்கும்படி கேட்டுக் கொள்ளுகிறேன்.

## கனம் அகமது தம்பி மரக்காயர்

சர்ட்டிபிகேட்கள் கொடுக்க வேண்டியதைப்பற்றி கனம் வில்ஸன் சொல்லியுள்ள விஷயங்கள் சம்பந்தமாக சிலோன் கவர்ன்மெண்டார் ஜில்லா சர்ஜன்களுக்குக் கொடுத்திருக்கும் குறிப்புகளின் விவரங்களை கனம் மெம்பர்கள் அறிவார்களா வென்று எனக்குத் தெரியவில்லை. அந்தக் குறிப்புகளை நான் படிக்கிறேன்:—ஜில்லா சர்ஜன்களால் கொடுக்க வேண்டிய சர்ட்டிபிகேட்டுகளைப்பற்றிய குறிப்புகள்:—அசல் சர்ட்டிபிகேட் எவ்வித மிருக்க வேண்டுமென்பதைப் பற்றி பாரத்தில் தெளிவாகச் சொல்லப்பட்டிருக்கிற விஷயங்கள் நீங்க, மிகவும் முக்கியமான அம்சங்கள் என்ன வென்றால்:—

(1) சிலோனில் தங்கி யிருக்கப் போகும் விலாஸம்—ஊர், தெரு- சொல்லப்படவேண்டும்.

இந்த விவரங்கள் உண்மை தானா வென்று ஜில்லா சர்ஜன் மனுதாரைக் கேள்வி கேட்டுத் திருப்தி செய்து கொள்ள வேண்டும். அதே மாதிரியாக சிலோனில் மனுதாரரைப்பற்றி யாரை விசாரித்துக்கொள்ளலாமென்று விசாரித்து எழுத வேண்டும். மனுதார் சொல்லும் விவரங்கள்உண்மை யென்பதற்குத் திருப்திகரமான ருஜு கொடுக்கப்பட்டால் தான் அவர் சொல்லும் விவரங்களை ஒப்புக்கொள்ளலாம்.

(2) குறிப்பிட்ட ஸ்தலத்திற்குத் தான் மனுதாரர் சொல்லுகிறாரா வென்று ஜில்லா சர்ஜன் விசாரித்துத் திருப்தி செய்து கொள்ள வேண்டும். சேர்ந்து அல்லது வேறு வித பிடிப்பு இல்லாத கூலிக்காரன் குறிப்பிடும் ஸ்தலத்திற்கே செல்லுவானென்று நிச்சயமாகச்சொல்லுவதற்கில்லை. ஆகவே புறப்படும் போது குறிப்பிடும் இடத்துக்கே செல்ல வேண்டு மென்றில்லா

மல் எங்கு வேண்டுமானாலும் தங்கி காலத்தைத் தள்ளக்கூடிய வகுப்பினரு க்கு ஜில்லா சர்ஜன்கள் சர்ட்டிபிகேட்டுகள் கொடுக்கக்கூடாது.

3. "தொத்து வியாதினால் பீடிக்கப்பட்ட" தென்றால் காலரா, பிளேக், அல்லது வைசூரியினால் பீடிக்கப்பட்டதென்றர்த்தம். இதற்காக இந்த வியாதிகளால் பீடிக்கப்பட்ட இடமென்று பஹிரங்கப்படுத்தப்பட் டிருக்க வேண்டுமென்பதில்லை. குறிப்பிட்ட இடத்தில் இந்த வியாதிகண்ட கேஸ்களிருப்பதாகத் தெரிந்தால் போதுமானது.

(4) "மனுதார் எவ்வித வியாதியினாலும் பீடிக்கப்படாத இடத் தில் 7 நாளாக வசித்து வந்தார்" என்று சர்ட்டிபிகேட்டில் கண்டிருப் பதினால் ஜில்லா சர்ஜன்கள் தங்களுடைய ஆபீஸுக்கு அருகாமையில் காம்பு ஏற்படுத்தி அதில் அவர்களை தங்களுடைய மேன்பார்வையின் கீழ் வைத்திருக்க வேண்டுமென்பது அவசியமில்லை. மனுதார்களுடைய வாசஸ் தலம் ஜில்லா சர்ஜன்களுக்கு நேரில் தெரிந்திருக்கவேண்டுமென்பதும், முந் தின வாரத்தில் அவர்கள் அங்கேயே தாமதித்து வந்தார்களென்று அவர் களுக்குத் தெரிந்திருக்க வேண்டுமென்பதும், அந்த இடம் சுகாதாரமும் ஆரோக்கியமும் பொருந்திய பிரதேசத்திலுள்ள சுகாதாரமும் ஆரோக்கிய முமான யிடமென்று அவர்களுக்குத் தெரிந்திருக்க வேண்டுமென்பதும் தான் அதன் கருத்து.

இந்த நிர்ப்பந்தங்களை எல்லாம் கவனிக்கையில் எந்த ஜில்லாசர்ஜனும் சர்ட்டிபிகேட்டு கொடுப்பது சிரமமென்பது புலப்படும். யாத்திரை செல்ல உத்தேசித்திருக்கும் பிரயாணி பாரத்தில் குறிப்பிட்ட இடத்திற்குத் தான் நேராகச் செல்லுகிறானென்று ஜில்லா சர்ஜன் எவ்விதம் சொல்ல முடியும்? பிரயாணம் போகும்போது அவருடைய புத்தி மாறலாம்; மதுரை வழியாகச் செல்லும்பொழுது அங்கு கொஞ்சம் தொழில் செய்து கொண்டு மூன்று மாத காலம் தாமதித்து விடலாம். சிலோனுக்குச் செல்லும் பிரயாணிகள் செய்யும் காரியங்களுக்கெல்லாம் ஜில்லா சர்ஜன்களா ஜவாப்தாரிகள்? ஜில்லா சர்ஜனைப்போன்ற அந்தஸ்திலுள்ள ஒரு அதிகாரி குறிப்பிட்ட ஒருபிரயாணி முந்தின ஒருவாரமும் இன்ன இடத்தில்தான் தாமதித்திருந்தானென்று சொல்வதும் அசாத்தியம். சிலோன் கவர்ன்மெண்டார் சொல்லியுள்ள இவ் வளவு கடினமான நிர்ப்பந்தங்களை கவனிக்கையில், அவைகளின்படி நடக்க சாத்தியப்படாதென்று எனக்குத் தோன்றுகிறது.

கனம் மிஸ்டர் வி. எஸ். கிருஷ்ணராவ் சொல்லிய யோசனை சம்பந்த மாக முந்தின மீட்டிங்கிலேயே, சிவில் சர்ஜன்களுக்கும் சர்ட்டிபிகேட்டுகொடு க்கும் அதிகாரத்தைக் கொடுக்கக்கூடாதாவென்று நான் ஒரு கேள்வி கேட் டிருக்கிறேன். பிரயாணிகளுக்கும் ஜில்லா சர்ஜன்களுக்கும் எவ்வித மனஸ்

தாபமாவது இடராவது ஏற்படாமலிருக்க வேண்டுமென்பதே அதன் கருத்து.

ஏனெனில் ஜில்லா சர்ஜனே ஜில்லா தலைநகரில் இருப்பவர்; குக்கிராம வாசிகள் அவரிடம் போய் அவர் போடும் சிக்கலான கேள்விகளுக்கு பதில் சொல்லுவது சிரமமாக யிருக்கும். அந்தக் கேள்விக்கு கவர்ன்மெண்டார் ஆலோசிப்பதாக பதில் சொன்னார்கள். இப்பால் ஜில்லா சர்ஜன்களுக்குக் கொடுபட்டிருப்பதுபோன்ற அதிகாரத்தை சிவில் சர்ஜன்களுக்குக் கொடுக்க முடியாதென்று எனக்கு கவர்ன்மெண்டார் அறிவித்தார்கள். கனம் மிஸ்டர் வ. எஸ். கிருஷ்ணராவ் சொல்லியதுபோல் சிவில் சர்ஜன்களுக்கும், அஸிஸ்டெண்டு சர்ஜன்களுக்கும் அதிகாரம் கொடுப்பது அதிகாரிகளுக்கு அனுகூலமாக யிருக்கும்.

கனம் ராமனாதபுரம் ராஜா சொல்லியதுபோல் ஸிலோனிலிருந்து நமது மாகாணத்திற்குள் பல பிளேக் கேஸ்கள் கொண்டுவரப்பட்டிருப்பது எனக்குத் தெரியும். ஸிலோன் கவர்ன்மெண்டார், டாக்டர் நாயர் சொல்லியதுபோல் தங்களுடைய ராஜாங்கத்தை சுவர்க்கமென்றே நினைத்துக் கொண்டிருக்கிறார்கள். சென்னை மாகாணத்தையும் சென்னை கவர்ன்மெண்டாரையும் பற்றி அவர்கள் என்ன நினைத்துக் கொண்டிருக்கிறார்களென்று எனக்குத் தெரியவில்லை. ஸிலோனிலிருந்து இந்தியாவுக்கு வரும் பிரயாணிகளுக்கும் இந்த கவர்ன்மெண்டார் ஏன் இவ்வித நிர்ப்பந்தங்களை ஏற்படுத்தி இந்த மாகாண வாசிகளைக் காப்பாற்றக்கூடாது? ஸிலோன் பிரஜைகளுக்கு சுயேச்சையைக் கொடுத்து அவர்களை நாம் பெருந்தன்மையாக நடத்தி வருகையில், ஏன் ஸிலோன் கவர்ன்மெண்டார் மட்டில் குறுகிய புத்திகொண்டு இந்தியப் பிரயாணிகள் ஸிலோனுக்குப் போக முடியாமல் பலவித நிர்ப்பந்தங்களை ஏற்படுத்த வேண்டும்?

ஆனால் அந்த கவர்ன்மெண்டார் ஐரோப்பியர்கள் விஷயத்திலும் கூலிகள் யோக்கியதைக்குக்கூட சமதையானவர்களென்று சொல்லமுடியாத நிலைமையிலிருந்து வரும் அவர்களுடைய சமையலாட்கள் (Botlers) விஷயத்திலும் சவுகரியமான விதிகளை ஏற்படுத்தியிருக்கும் அநீதியை நான் விஸ்தாரமாகத் தெரிவித்துக்கொள்ள விரும்புகிறேன். இவர்கள் யாதொரு நிர்பந்தமில்லாமல் ஸிலோனுக்கு தாராளமாகப் போகலாம். ஆனால் என்னைப் போன்ற அந்தஸ்திலுள்ள இந்தியப்பிரயாணிகள் கோரண்டைன் கஷ்டங்களுக்கு ஆளாக வேண்டியிருக்கிறது. இவ்விஷயத்தில் ஐரோப்பியர்களுக்கும், இந்தியர்களுக்கும் எவ்வித வேற்றுமையும் இருக்கக்கூடாதென்று இந்தியர்கள்கூக்குரலிட்டு வருவது கவர்ன்மெண்டாருக்குத் தெரிந்த விஷயம். அந்த வேற்றுமையை அறவே ஒழித்து, இந்தியர்களையும் ஐரோப்பியர்களைப் போலவே சரிசமத்துவமாக நடத்தத் தாங்கள் ஏற்பாடு செய்ய வேண்டும். இது சம்பந்தமாக நான் மற்றொரு விஷயமும் தெரிவித்துக்கொள்ள விரும்பு

கிறேன். 1916-ம் வருஷம் நவம்பர் மாதத்தில் கூடிய சட்ட சபையில் நான் கேட்ட கேள்விக்கு கவர்ன்மெண்டார் கோரண்டைன் காம்பைப் பார்வை யிடுவதற்காக எந்த உத்தியோகஸ்தரையும் நியமிக்க விலோன் கவர்ன்மெண்டார் சம்மதித்திருப்பதாக பதில் சொல்லியிருக்கிறார்கள்.

அதன் பிரகாரம் மண்டபம் கோரண்டைன் காம்பைப் பார்வையிட்டு இத்தகைய புகார்களையெல்லாம் கேட்டறிந்து அவைகளை நிவர்த்திப்பதற்காக இரண்டொரு உத்தியோகஸ்தர்களல்லாத கனவான்களை விசிட்டர்களாக நியமிக்க வேண்டும். இத்தியாதி காரணங்களினால் நான் கேட்டுக்கொண்டிருக்கும் பிரகாரம் விலோன் கவர்ன்மெண்டார் 1917-ம் வருஷம் பிப்ரவரி மாதம் 16-ம் தேயுள்ள 150-ம் நம்பர் கவர்ன்மெண்டு உத்திரவில் கண்ட ஷரத்துகளை வற்புறுத்தாமல், 1916-ம் வருஷம் நவம்பர் மாதம் 22-ம்தேதியுள்ள 349-ம் நம்பர் கவர்ன்மெண்டு உத்திரவின்படி நடக்க வேண்டுமென்று தீர்மானத்தைத் திருத்தி அங்கீகரிக்கும்படி கேட்டுக் கொள்ளுகிறேன்.

## கனம் கில்மன்

இந்த விவாதம் போன போக்கைக்கண்டு நான் மிகவும் வருத்தப்படுகிறேன். விலோன் கவர்ன் மெண்டாருக்கும் இந்த கவர்ன் மெண்டாருக்கும் இந்த விஷயத்திலிருந்து வரும் சிக்கல்களைத் தீர்த்துக் கொள்ளவும் இந்த விவாதம் எவ்விதத்திலும் பயன் தருவதாக இல்லை. இந்தியாவிலிருந்து தங்களுடைய தீவுக்குள் பிணிகளைக் கொண்டு வந்து விடாமல் தடுக்க தாங்கள் கூறிய பிரகாரம் விலோன் கவர்ன் மெண்டாருக்கு சர்வ சுதந்திரமுமுண்டு. இங்கிலாந்தைப் போலவே வெளி நாடுகளிலிருந்து எவ்வித பிணிகளும் தங்களுடைய தீவுக்குள் வரமுடியாமல் தடுத்துக் கொள்ளக் கூடிய சவுகரியமான நிலைமையில் அவர்களிருக்கிறார்கள். அவ்விதமே செய்வதென்றும் அவர்கள் கங்கணங் கட்டிக் கொண்டிருக்கிறார்கள். நமது மாகாணத்தில் பெரும் பாகம் பிளேக்கினாலும் பெரும்பாகம் காலராவினாலும், பெரும்பாகம் அம்மை நோயினாலும், பீடிக்கப்பட்டிருக்கின்றன வென்றும், விலோனுக்கு வரும் மூன்றாவது வகுப்புப் பிரயாணிகள் தாங்கள் வியாதியினால் பீடிக்கப்பட்ட பிரதேசங்களிலிருந்து வருகிறார்களா வென்று உண்மையைச் சொல்லமாட்டார்களென்றும், விலோன் கவர்ன்மெண்டார் நினைத்தால் இன்னமும் கடுமையான நிபந்தனைகளையும் அவர்கள் விதிப்பது நியாயமேயாகும். ஆகவே தான் பிரயாணி வியாதியினால் பீடிக்கப்பட்டவரல்லவென்றும், வியாதியினால் பீடிக்கும்படியான நிலைமையிலிருந்திருக்க வில்லை யென்றும் ஒரு உத்தியோகஸ்தர் சர்ட்டிபிகேட்டு கொடுக்கவேண்டு மென்று அவர்கள் கேட்கிறார்கள். அந்த உத்தியோகஸ்தர் நேரில் தெரிந்தால் தான் சர்ட்டிபிகேட்டு கொடுக்கலா மென்றும் அவர்கள் சொல்லவில்லை. இப்பொழுது டிஸ்திரிகட் சர்ஜனை எடுத்துக் கொள்ளுவோம். அவருக்கு சர்ட்டிபிகேட்கொடுக்க அதிகாரமிருக்கிறது. அவர் ஒரு பிரயாணிக்கு சாட்டிபிகேட்டு கொடுப்பதற்காக அந்தப்பிர

பானியை அவரை நேரில் தெரிந்து கொண்டிருக்க வேண்டுமென்பதில்லை. அவர் கீழே அநேக அஸிஸ்டெண்டு சர்ஜன்களும் சப் அஸிஸ்டெண்டு சர்ஜன்களுமிருக்கிறார்கள். தவிரவும் அவருக்குத் தெரிந்த மனிதர்களும் அநேகரிருப்பார்கள். அப்படிப்பட்டநம்பிக்கையான பெயர் வழிகள் பார்த்துச் சிபார்சு செய்தால் அவர் அவர்கள் பேச்சைக் கேட்டுக் கொண்டு சர்ட்டிபிகேட்டு கொடுக்கலாம்.

தாங்கள் சொல்லிய பிரகாரம் நம்முடைய வைத்திய உத்தியோகஸ்தர்கள் கொடுத்திருக்கும் சர்ட்டிபிகேட்டுகள் மீது அவர்கள் குறை கூறிக் கொண்டிருக்கும்பொழுது அவர்கள் ஏற்படுத்தியுள்ள நிர்பந்தங்களை அகற்றி விடும்படி கேட்பதற்கு இது தகுதியான காலமல்ல. இந்த நிலைமையில் ஸிலோன் கவர்ன் மெண்டாரை இந்த நிர்டந்தங்களை அகற்றி விட வேண்டுமென்று கேட்டால் கனம் மிஸ்டர் அகமது தம்பி மரக்காயர் சொன்ன இடத்திற்குப் போகும்படி சொல்லுவார்கள் (சிரிப்பு). அந்த மாதிரி அவர்கள் சொல்வதற்கு நான் ஏற்கனவே கூறியுள்ள பிரகாரம் நியாயமிருக்கிறது. ஆகவே நாம் இப்பொழுது ஒன்றும் செய்யாமல் பேசாமலிருக்க வேண்டும். வைத்திய இலாகா உயர்தர உத்தியோகஸ்தர்கள் கொடுக்கும் சர்ட்டிபிகேட்டுகளைப் பற்றியே சந்தேகம் ஏற்பட்டிருக்கையில் கனம் எ. எஸ். கிருஷ்ணராவ் சொன்ன யோசனைப் பிரகாரம் அஸிஸ்டெண்டு சர்ஜன்கள், சப் அஸிஸ்டெண்டு சர்ஜன்கள் ஆகிய இவர்களுக்கும் சர்ட்டிபிகேட்டு கொடுக்கும் அதிகாரத்தைத் தரவேண்டுமென்று கேட்பது சுத்த அசட்டுத்தனமாகு மென்றே நான் நினைக்கிறேன். இத்தியாதி காரணங்களினால் திருத்தப்பட்ட தீர்மானத்தை கவர்ன் மெண்டார் அங்கிகரிக்க கூடவில்லை.

## மேன்மைதங்கிய கவர்னர்

திருத்தப்பிரேரணையை ஓட்டுக்கு விடுவதைத் தவிர வேறு வழியில்லை. கனம் மெம்பர் இஷ்டப்படுகிற பக்ஷத்தில் எனக்கு அதை ஓட்டுக்குவிட ஆட்சேபணையில்லை.

கனம் ரிச்மாண்டு:—இந்தப்பிரேரணையை 6 மாத காலத்திற்குத் தள்ளி வைக்க வேண்டுமென்று நான் பிரேரணை செய்வது ஒழுங்காக இருக்குமா?

மேன்மைதங்கிய கவர்னர்:—ஒழுங்காகாது.

திருத்தப்பட்ட தீர்மானம் ஓட்டுக்கு விடப்பட்டு தோற்றுப் போய் விட்டது.

[1917-ம் வருஷம் நவம்பர் மாதம் 22ம் தேதி நடந்த கூட்டம்.]

—∞∘∞—

## கோஷா ஸ்திரீகளுக்கு தேசப்பாதுகாப்பு சட்ட விதிகளிலிருந்து விலக்கு.

மேன்மைதங்கிய பிரபுவே,

*நான் அடியிற் கண்ட தீர்மானத்தைப் பிரேரணை செய்கிறேன்:—*

"XXIX ஸ்டிரேய்ஸ் செட்டில்மெண்டுகள், மலாய் நாடுகள் இவைகளுக்குத் தங்களுடைய புருஷர்களுடனாவது, அல்லது புருஷத்துணையுடனாவது செல்லும் ஸ்திரீகளையும், முக்கியமாக கோஷாஸ்திரீகளையும் 1917-ம் வருஷத்திய தேசப்பாதுகாப்பு சட்ட விதிகளிலிருந்து விலக்குச்செய்ய வேண்டுமென்று இந்த சபையானது ஆலோசனை சபையுடன் கூடிய கவர்னருக்கு சிபார்சு செய்கிறது."

*இந்தத் தீர்மானத்தினால் நிவர்த்திக்கப்பட உத்தேசிக்கப்பட்டிருக்கும் குறையானது யதார்த்தத்திலுள்ளது. ஸ்டிரெயிட்ஸ் செட்டில்மெண்டுகள், மலாய் நாடுகள் இவைகளுக்குச் செல்லும் பிரயாணிகளுக்கு டிக்கெட்டுகள் கொடுக்கும் கம்பெனி யொன்றில் நான் நெருங்கிய சம்பந்தமுள்ளவனாதலால் எத்தனை புருஷர்கள் தங்களுடைய சமசாரங்களையும் ஸ்திரீபந்துக்களையும் அழைத்துக் கொண்டு போக விரும்புகிறார்களென்பதும், பாஸ் போர்ட்டு விதிகளையும் அவைகளைப் பெறவேண்டிய வழிகளையு முணர்ந்து அவர்கள் ஸ்திரீகளை விட்டுத் தனியாகப்போய் சிலர் கெட்ட வழிகளில் பிரவர்த்திக்க நேரிடுகிறதென்பதும் எனக்கு அநுபவத்தில் தெரிந்த விஷயம்.*

*இந்த தேசங்களுக்குச் செல்லும் பிரயாணிகளில் முக்கால்வாசிப்பேர் என்னுடையசமூகத்தைச்சேர்ந்தவர்கள். அங்கே அவர்கள் பலமாகத் தொழிலைச் செய்துகொண்டு அநேகமாக அங்கேஸ்திரமாக வாசம் செய்து வருகிறார்கள். அங்கேயே வீடுவாசல்களை அவர்கள் வைத்துக் கொண்டு, மூன்று நான்கு வருஷங்களுக் கொருமுறை இரண்டொருமாதகாலம் இந்தியாவுக்கு வந்து விட்டுப் போகிறார்கள். இவர்கள் குடித்தனமாக இருந்து சுகவாழ்வு வாழ விரும்புகிறார்கள்.*

*அவர்கள் தங்களுடைய ஸ்திரீகளுக்கும் குழந்தைகளுக்கும் பாஸ் போர்ட்டுவாங்க இஷ்டப்படுகிறதில்லையென்பதற்குக்காரணத்தைச் சொல்லுகிறேன். பாஸ் போர்ட்டு வாங்க கீழ்கண்ட முறை ஏற்படுத்தப்பட்டிருக்கிறது. முதலில் டிக்ளரேஷன் பாரம் ஒன்று வாங்கி அதைப்பூர்த்தி செய்ய வேண்டும். அதில் மனுதாருடைய முழு விவரம், அதாவது அவர் அல்லது அவளுடைய*

உயரம், நெத்தி, கண்கள், மூக்கு, வாய் இவைகளின் விவரம், மயிரின் நிறம், சரீர நிறம், முகலட்சணம் முதலிய அடையாளங்களைக் குறிப்பிட வேண்டும். இந்தப் பாரத்துடன் கூட கண்ணுடிபோடாமல் மனுதாருடைய புகைப்படங்கள் இரண்டை அனுப்பவேண்டும். இந்தபாரம், படங்கள் இவைளுடன் அவர்கள் மாஜிஸ்திரேட், நியாயாதிபதி, சூப்பரின் டெண்டு அந்தஸ்துக்குக் குறையாத போலீஸ் உத்தியோகஸ்தர் அல்லது வேறு ராஜீய உத்தியோகஸ்தர் முன்பாக ஆஜராக வேண்டும். அவர் டிக்ளரேஷனில்கண்ட விவரங்கள், அங்க அடையாளங்கள் முதலியன சரியாகவிருக்கின்றனவா வென்று பார்த்து, டிஸ்திரிக்ட் மாஜிஸ்திரேட்டுக்கோ அல்லது மாகாண கவர்ன் மெண்டாருக்கோ அங்கங்குள்ள விதிகளின்படி பாஸ் போர்ட்டு கொடுக்கலாமென்று சிபார்சு செய்யவேண்டும். புகைப்படத்தில் கண்ட பெயர்வழிதான் மனுதாரென்றும் அவர் சர்ட்டிபை செய்ய வேண்டும். அந்த சடங்குகள் எல்லாம் செய்து முடிந்தால்தான் பாஸ் போர்ட்டு கிடைக்கும்.

மேலே கண்டவாறு அந்த நாடுகளுக்குச்சென்று தொழில் செய்கிறவர்களில் பெரும்பாலோர் எனது வகுப்பாரென்று நான் எற்கனவே சொல்லியிருக்கிறேன். அவர்களுடைய சம்சாரங்கள் அல்லது ஸ்திரீபந்துக்களில் 100க்கு 99 பேர்கள் கோஷாக்களாக இருக்கிறார்கள். பொதுவாகவே இந்திய ஸ்திரீகள் மிகுந்த அடக்கமுள்ளவர்கள். புகைப்படமெடுப்பதற் காவது அல்லது அன்னிய புருஷர்கள் முன்பாகவாவது அபூர்வமாகத் தான் அவர்கள் வருவார்கள். ஆனால் கோஷா ஸ்திரீகளோ தங்களுடைய கணவர்கள் அல்லது நெருங்கிய பந்துக்கள் தவிர மற்ற புருஷர்கள் முன்பாக வருவதே கிடையாதென்பதை நான் சொல்ல வேண்டியதில்லை. ஆகவே புகைப்படமெடுக்கிறவர்கள் முன்பாக அவர்களை வந்து உட்காரும்படி சொல்வது முற்றிலும் சாத்தியமில்லாத காரியம். மேலும் எங்களுடைய மார்க்க தர்மப்படி ஆண் பிள்ளைகள்கூட புகைப்படம் எடுத்துக் கொள்ளக்கூடாது. ஸ்திரீகளுக்கோ கேட்கவேண்டியதில்லை. எவ்விதமாகவோ புகைப்படம் எடுத்துவிடுவதாக வைத்துக் கொண்டாலும், ஆள் அடையாளத்திற்காக ஸ்தலத் ததிகாரிகள் முன்பாக அவர்களை வரும்படி சொல்வது கொஞ்சங்கூட சாத்தியமில்லாத காரியம். எனக்கு நேரில் தெரிந்தவரையில் டிக்ளரேஷனும் புகைப் படமும் சரியாக இருக்கிறதென்று அந்த உத்தியோகஸ்தர் சர்ட்டிபை செய்யவேண்டும். அவர் தப்பிவிட்டால் குற்றத்திற்காளாவார். அவர் எழுதிக்கொடுக்கவேண்டிய சர்ட்டிபிகேட்டு நகல் என்னிடமிருக்கிறது. அதைப்படிக்கிறேன்:—

"கீழே கையொப்பமிட்ட........................ஆகிய நான் எனக்குத் தெரிந்த வரையிலும், என்னுடைய நம்பிக்கையின் பேரிலும் மேலே கண்ட.........உடைய டிக்ளரேஷன் உண்மையான தென்றும், எனக்கு நேரில் தெரிந்த விஷயங்களிலிருந்து அவள் பாஸ் போர்ட்டு பெறத் தகுதியான பெயர்வழி யென்றும், டிக்ளேர் செய்கிறேன்".

அந்த டிக்ஸ்ரேஷன் பாரத்தில் அடியிற்கண்ட முக்கிய எச்சரிக்கை சிகப்புமசியில் தடி எழுத்தில் கொடுக்கப்பட்டிருக்கிறது.

"பாஸ் போர்ட்டு கொடுக்கலா மென்று சிபார்சு செய்கிறவர்கள் அவர்கள் டிக்ளரேஷன் செய்யும் விஷயங்கள் உண்மையல்ல வென்று ஏற்பட்டால், பிரியாது தொடரப்படுவதற்கு ஆளாவார்கள்"

மனுதார்கள் நேரில் அவர்கள் முன்பாக வர இஷ்டப்படாமலிருக்கும் பொழுது, மனுதாரரை நேரில் பார்த்ததாக அவர்கள் எவ்விதம் சர்ட்டிபி கேட்டு கொடுக்கமுடியும்? ஆகவே தான் கோஷா ஸ்திரீகள் தங்களுடைய புருஷர்களுடனாவது, புருஷ பந்துக்களுடனாவது அந்த நாடுகளுக்குச் செல்லமுடியாமல் தனியாக இங்கேயிருந்து கஷ்டப்படுகிறார்கள். ஆனால் சிலர் பாஸ் போர்ட்டு வாங்கிக்கொண்டு போகிறார்களேயென்று சொல்லலாம். அவர்கள் அங்கு நெருங்கிய சம்பந்தத்தை ஏற்படுத்திக் கொண்டு விட்டதால் வேறு விதியில்லாமல் அவசரத்திற்குப் பாவமில்லை யென்று செய்கிறார்களே தவிர வேறில்லை.

என்னுடைய சமுகத்தார் இந்த விஷயத்தை சட்டசபையில் கொண்டுவந்து ஸ்திரீகளுக்கு பாஸ் போர்ட்டு நிர்ப்பந்தத்தை நிவர்த்தித் துத்தர வேண்டுமென்று என்னை அடிக்கடி வற்புறுத்தி வருகிறார்கள். அவர்களுடைய வேண்டுகோளின் பேரிலும், எனக்கும் இந்தக்கஷ்டம் நேரில் தெரிந்திருப்பதினாலும் அவர்களுடைய மத சம்பந்தமான உணர்ச்சியை பாதிக்காமலிருப் பதற்காகவே நான் இந்தத்தீர்மானத்தை இந்த சபையின் முன்பாகக் கொண்டு வந்திருக்கிறேன்.

1917-ம் வருஷத்திய தேசப் பாதுகாப்பு சட்ட பாஸ் போர்ட்டு விதிகளின் 4-வது பிரிவில் கீழ்கண்டவாறு சொல்லப்பட்டிருக்கிறது:—

"ஆலோசனை சபையுடன் கூடிய கவர்னர் ஜெனராலாவது, அல்லது மாகாண கவர்ன்மெண்டாராவது, எழுத்து மூலமான உத்திரவின் மூலமாக யாதாமொரு நபரை யேனுமாவது அல்லது ஒரு வகுப்பினரை யேனுமாவது, தேசப் பாதுகாப்பு சட்டப் பிரயாணச்சீட்டு நிர்ப்பந்தங்களிலிருந்து முழுமையுமாவது, அல்லது சில நிபந்தனைகளுக் குட்பட்டாவது, விலக்கு செய்யலாம். அதேவிதமாக, அதேவித நிபந்தனைகளுக்குட்பட்டு, தகுதியான அதிகாரிகளும் யாதேனு மொருவரை அந்த விதிகளிலிருந்து விலக்கு செய்யலாம்"

இந்த விதியை ஆதாரமாகக் கொண்டு தான் ஸ்திரீகளையும், முக்கியமாக கோஷா ஸ்திரீகளையும், இந்த விதிகளிலிருந்து விலக்கு செய்ய வேண்டுமென்று கவர்ன்மெண்டாரை நான் கேட்டுக் கொள்ளுகிறேன். சில கேஸ்

களில் இந்த விலக்கு செய்யப்பட்டிருப்பதையும் நான் சபையாருக்கு அறிவிப்பு செய்கிறேன். சமீபத்தில் சிங்கப்பூர் அன்னிய நாட்டு மந்திரியின் வேண்டுகோளின் பேரில் சிங்கப்பூர் துறை முகத்தில் வேலை செய்வதற்காக நாகப்பட்டணத்தி லிருந்து போகும் 300 கூலிகளை விலக்கு செய்யும்படி கவர்ன்மெண்டார் தஞ்சை ஜில்லா கலெக்டருக்கு அறிவித்திருக்கிறார்கள். 40 கூலிகள் கலெக்டர் முன்பாக ஆஜராகாமலே வாங்கி யிருந்த சர்ட்டிபிகேட்டுகளை நான் நேரில் பார்த்திருக்கிறேன். இவ்வித மிருக்க ஸ்திரீகளை விலக்கு செய்வதில் எவ்விதக் கஷ்டமுமேற்பட நியாயமில்லை.

இந்தக் குறையானது அவர்களுடைய மனப்பான்மையினால் ஏற்படுவதென்பது வாஸ்தவமே. ஆனால் இந்த மாதிரியான விஷயங்களில் தான் அவர்களுடைய மனங்கோணாமல் நாம் ஜாக்கிரதையாக நடந்து கொள்ள வேண்டும்.

நான் மிகவும் நியாயமான வேண்டுகோள் தான் செய்துகொண்டிருக்கிறேன். அதிலும் பாஸ்போர்ட்டு வாங்கிக் கொண்டு போகும் புருஷர்களுடன் செல்லும் ஸ்திரீகளை மட்டில் தான் விலக்கு செய்ய வேண்டுமென்று நான் கேட்கிறேன். ஆகவே, இதனால் இந்தியாவின் க்ஷேமத்திற்கு எவ்வித இடையூறும் நேர்ந்து விடாது. லிலோனுக்குப் போகும் பிரயாணிகளுக்கு இருந்து வந்த இத்தேவித நிர்ப்பந்தங்கள் நல்ல வேளையாக ஒழிந்து போய்விட்டன. இந்தத் தீர்மானத்தை கவர்ன்மெண்டார் அங்கீகரித்தால் புருஷர்களுடனாவது புருஷத்துணையுடனாவது செல்ல முடியாமல் கஷ்டப்பட்டுக் கொண்டிருக்கும் ஸ்திரிகள், அதிலும் முக்கியமாக கோஷா ஸ்திரீகளினுடைய கஷ்டம் தீரும். ஆகவே இந்த சபையார் என்னுடைய தீர்மானத்தை முழுமனதுடன் ஆதரிப்பார்களென்றே நம்புகிறேன்.

**கனம் மிஸ்டர் யாகுப் ஹாசன்.**

தீர்மானத்தை ஆமோதித்துப் பேசினார்.

**கனம் டேவிட்ஸன்.**

மேன்மை தங்கிய பிரபுவே,

முதலெடுப்பில் கனம் மெம்பருடைய வேண்டுகோள் வெகு சுலபமானதாகத் தோன்றுகிறது. மாகாண கவர்ன்மெண்டார் எந்த வகுப்பினரையேனும் சிலநிபந்தனைகளின் பேரிலோ, எவ்வித நிபந்தனைகளுமில்லாமலோ, எழுத்து மூலமான உத்திரவின் மூலமாக, விலக்கு செய்யலாமென்கிற தேசப் பாதுகாப்பு சட்டவிதிகளின் 4-வது பிரிவை கனம் மெம்பர் படித்திருக்கிறார். ஆகவே முதலெடுப்பில் மாகாண கவர்ன்மெண்டார் தங்களுக்கு இஷ்டப்பட்டால் செய்யலாமென்று தோன்றக்கூடும். ஆனால் உண்மை நிலை அதன்று மற்ற தேசங்களுடைய சவுகரியங்களையும் அனு

சரித்து இந்தியா முழுவதற்கும் இந்த விதிகள் ஆதியில் செய்யப்பட்ட பொழுது, இந்தியா கவர்ன்மெண்டார் எந்த வகுப்பினரை இந்த விதியிலிருந்து விலக்கு செய்யலாமென்று மாகாண கவர்ன்மெண்டுகளை அபிப்பிராயம் கேட்டுவிட்டிருந்தார்கள். 9-வது பிரிவின்படி அந்தப் பிரகாரம் உண்மைத் தொழிலாளர்கள் விலக்குசெய்யப்பட்டார்கள்.

ஸ்திரீகளையாவது அல்லது கோஷா ஸ்திரீகளையாவது இந்த நிர்ப்பந்தங்களிலிருந்து விலக்கு செய்து விடும்படி சிபார்சு செய்யக்கூடாதா வென்று இந்தப் பிரேரணையைக் கொண்டுவந்த கனம் மெம்பர் கேட்கிறார். இந்தக் காலம் அபூர்வமான காலமாயிருக்கிறது. சாதாரண நிலைமையில் நாம் இப்பொழுது இருந்து வரவில்லை. உலக யுத்தம் நடந்து கொண்டு வருகிறது. இந்த யுத்தத்தில் சம்பந்தப்பட்டிருக்கும் தேசங்களிலிருந்து விரும்பத் தகாத பெயர் வழிகள் வெளிப்படாமலிருப்பதற்கும், அந்த தேசங்களுக்குள் வெளியிலிருந்து அவ்விதப் பெயர் வழிகள் வராமலிருப்பதற்கும் சரியான தடையாக இந்த முறை ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது. உலகம் முழுவதும் பாஸ் போர்ட்டு விதிகளில் புகைப்படமெடுத்துக் கொடுப்பதையும் ஒரு முக்கிய அம்சமாகச் சேர்த்திருக்கிறது. அவ்விதம் அடையாளம் கண்டு பிடிக்கக்கூடிய உபாயத்தை எந்த வகுப்பினரின் விஷயத்திலேனும் அபூர்வமாகத் தான் விலக்குசெய்யலாம். சில மாதங்களுக்கு முன் இதே விஷயம் மற்றொரு மாகாணத்தில் பிரஸ்தாபத்திற்குவந்து அதன் மேல் உயர்தர அதிகாரிகளுக்கு எழுதிக் கேட்கப்பட்டது. கோஷா ஸ்திரீகள் புகைப்படம் எடுத்துக் கொடுப்பதற்கு பதிலாக அவர்களுடைய விரல் குறியை எடுத்துக் கொண்டால் போதுமானதென்று அந்தச் சந்தர்ப்பத்தில் செய்யப்பட்டிருந்த சிபார்சு நிராகரிக்கப்பட்டுப் போய்விட்டது. யுத்தம் காரணமாக பிரயாணச்சீட்டு முறையை ஏற்பாடு செய்ய வேண்டியதாயிற்றென்றும், மற்ற கவர்ன்மெண்டுகளைப் போல் இந்தியா கவர்ன்மெண்டாரும் விரும்பத் தகாத பெயர் வழிகளின் போக்கு வரத்தைத் தடுப்பதற்காக எல்லாவித முன் ஜாக்கிரதைகளையும் எடுத்துக் கொள்ள வேண்டியது அவசியமென்றும், ஜனங்கள் பிரயாணம் செய்ய வேண்டிய அவசியமிருந்தால் நிராவிதியாக பாஸ்போர்ட்டு முறையைத் தவிர வேறு வழியில்லையென்றும் முடிவு செய்யப்பட்டது. இந்த விஷயத்தில் முகம்மதிய சமூகத்தினருக்கு இருந்து வரும் அசவுகரியங்கள் இதர வகுப்பினருக்குமுண்டு. என்னுடைய வகுப்பு ஸ்திரீகள் சுதேசத்திற்குச் செல்வதற்குப் பிரயாணச் சீட்டுகள் வேண்டுமென்று செய்து கொண்ட விண்ணப்பங்கள் கட்டுக் கட்டாய் என்னிடம் வந்து குவிந்தன. பிரயாணச் சீட்டுகள் கொடுக்காவிடில் விசேஷ அசவுகரியங்கள் ஏற்படுமென்றும் எனக்குத் தெரிவித்துக் கொள்ளப்பட்டது. அப்படியிருந்தும் மிகவும் அவசியமாக விருந்த இந்த விதிகளுக்கு நான் கட்டுப்பட்டே நடக்க வேண்டியிருந்தது. டஜன் கணக்கான ஆங்கில ஸ்திரீகளுக்கு பிரயாணச் சீட்டுக் கொடுக்க மறு

க்க நேர்ந்தது. ஸ்டிரெயிட்ஸ் செட்டில் மெண்டுகள், மலாய் நாடுகள் இவைகளுக்குச் செல்ல விரும்பும் முகம்மதிய கோஷா ஸ்திரீகளுக்கும் இதேவித அசவுகரியந்தானிருந்து வருகிறது. ஆனால் விதிகளில் கண்ட நிபந்தனைகளைப் பூர்த்தி செய்து வைத்தால் முஸ்லீம் ஸ்திரீகளுக்கு அந்த இடங்களுக்குச் செல்லுவதற்காவது சவுகரியமிருக்கிறது. இந்த விதிகளின்படி நடப்பதில் விசேஷ கஷ்டங்களிருப்பது எனக்குத் தெரிகிறது. ஆனாலும் கனம் மெம்பர் தம்முடைய வகுப்பினரில் சிலர் இந்த கஷ்டங்களை யெல்லாம் அநுபவித்துக் கொண்டு பிரயாணச் சீட்டுகள் பெற்றுச் செல்வதாகச் சொல்லி யிருக்கிறார். ஆகவே அவர் சொல்லுவதிலிருந்தே இந்தக் கஷ்டங்கள் தாங்க முடியாதவைகளல்ல வென்றேற்படுகிறது. இந்தத் தீர்மானத்தை அநுசரித்து இந்த கவர்ன்மெண்டார் சிபார்சு செய்தாலும் இந்தியா கவர்ன்மெண்டார் இதே அபிப்பிராயங்கொள்ளத் தான் வேண்டியிருக்கும்.

இதில் கவனிக்க வேண்டிய மற்றொரு அம்சமுமிருக்கிறது. இதே யோசனையை இந்தியா கவர்ன்மெண்டார் ஒப்புக்கொள்ளுவதாக இருந்தால் கூட ஸ்டிரெயிட்ஸ், மலாய் நாடுகளின் கவர்ன்மெண்டார் பலமாக ஆட்சேபிப்பார்கள். தேசப் பாது காப்பு சட்ட விதிகளிலிருந்து சில தனிப்பட்ட நபர்களை விலக்கு செய்த விஷயமாக சமீபத்தில் தான், மேமாதத்தில் தான், அன்னிய நாட்டு மந்திரியிடமிருந்து ஆட்சேபனைக் கடிதம் வந்தது. தம்முடைய கவர்ன்மெண்டாருடைய உத்திரவின் பேரில் சத்தியாகத்தான் இங்குள்ள கவர்ன்மெண்டாரின் வேண்டுகோளுக்கிணங்கி போலீஸ் உத்தியோகஸ்தர்கள் கிரமமான பிரயாணச்சீட்டு இல்லாமல் வர அநுமதிக்கப் பட்டார்களென்றும் அவர் சொல்லி யிருந்தார். இது கூட சத்தியான ஏற்பாடென்பதை அவர் வற்புறுத்திச் சொல்லி யிருந்தார். இந்தக் கடிதம் கிடைத்ததின்பேரில் தான் விலக்கு செய்யும்படி கேட்கக்கூடும் தனிப்பட்ட நபர்களுக்கு முன்னெச்சரிக்கை செய்ய வேண்டு மென்று நான் ஒரு எச்சரிக்கை வெளியிட்டேன். கனம் அகமது தம்பி மரக்காயரும் அதைப் பார்த்திருக்கலாம். ஜூலை மாதம் 26-ந் தேதி தான் எல்லா ஜில்லா மாஜிஸ்திரேட்டுகளுக்கும் அந்தக் கடிதம் அநுப்பப்பட்டது. பாஸ் போர்ட்டு இல்லாமற்போனால் அந்த நாடுகளில் இறங்க அநுமதி கிடைக்காமற் போகலாமென்கிற விஷயம் இப்பொழுது எல்லாருக்கும் தெரிந்திருக்கலாம்.

ஆகவே இந்தியா கவர்ன்மெண்டாரைக் கேட்காமல் கனம் மெம்பர் கோருகிற பிரகாரம் பொதுவான விலக்கு செய்து விட முடியாது. இந்தியா கவர்ன்மெண்டாரும் அந்த சிபார்சை ஒப்புக்கொள்ள சாத்தியப்படாது. அவர்கள் அதை ஒப்புக்கொள்ள முடியாது. அவர்கள் அங்கீகரித்தாலும் ஸ்டிரெயிட்ஸ், மலாய் நாடுகளின் கவர்ன்மெண்டார் முணு முணுப்பார்கள். ஆகவே பலவகுப்பினருக்கும் விசேஷ அசவுகரியங்களை விளைவித்திருக்கும் இந்தமகா யுத்தத்தின் பலனாக என்னுடைய சொந்தவகுப்பினரோ

அனுபவித்து வரும் கஷ்டங்களை இன்னும் கொஞ்ச காலத்திற்கு முஸ்லீம் சமூகத்தினரும் அனுபவித்துக்கொண்டு தான் வர வேண்டியிருக்கும்.

### கனம் ரங்காச்சாரியார்.

தங்களுடைய அனுமதியின்பேரில் ஒரு திருத்தப்பிரேரணைகொண்டு வர விரும்புகிறேன். படங்களை அஜர்படுத்த வேண்டுமென்றிருக்கிற விதியை திருத்தவேண்டு மென்பதே எனது திருத்தப்பிரேரணையாகும். கவர்ன்மெண்டார் இதை ஒப்புக்கொள்ளுவார்களாவென்று எனக்குத் தெரியவில்லை. படங்களை எடுப்பதற்சாக ஸ்திரீகளைப் புருஷர்கள் முன் வரும்படி கட்டாயப் படுத்துவது சரியல்ல.

### கனம் டேவிட்ஸன்.

புகைப்படம் எடுக்க வேண்டிய விஷயத்தைப்பற்றித் தான் குறிப்பிட்ட மாகாணத்தில் பிரஸ்தாபம் நடந்தது.

இதற்குப்பிறகு மேன்மை தங்கிய கவர்னரும் கனம் கில்மனும் சீப் சிக்ரிட்டரியும் சிறிது நேரம் கலந்து யோசித்தார்கள்.

### கனம் டேவிட்ஸன்.

புகைப்படமெடுத்துக் கொடுக்க வேண்டுமென்றிருக்கிற நிர்ப்பந்தத்தை நீக்கிவிடும்படி இந்த கவர்ன்மெண்டார் இந்திய கவர்ன்மெண்டாருக்கு சிபார்சு செய்வார்கள். ஆனால் அவ்விதச் சிபார்சு அங்கீகரிக்கப்படுமாவென்கிற நம்பிக்கை இல்லை. இந்த ஏற்பாடானது கனம் அகமது தம்பி மரக்காயருக்கும் அவருடைய தீர்மானத்தை ஆதரித்துப் பேசிய மற்ற மெம்பர்களுக்கும் திருப்திதரு மென்று நம்புகிறேன்.

### மேன்மைதங்கிய கவர்னர்.

இந்த ஏற்பாடு கனம் பெப்பருக்குத் திருப்தியாயிருக்குமென்று நம்புகிறேன். இந்த விஷயத்தில் சிக்கலான கஷ்டங்கள் இருக்கின்றன. கனம் டேவிட்ஸன் கூறியதுபோல் நிச்சயமாக நாம் ஜெயமடையலா மென்று சொல்வதற்கில்லை. கனம் பெப்பருடைய தீர்மானத்தை அனுசரித்து இந்தியா கவர்ன்மெண்டாருக்கு இரண்டு அம்சங்களைப்பற்றியும் சிபார்சு செய்வோம்.

இந்த உறுதி வாக்கின் பேரில் தாம் தீர்மானத்தை வற்புறுத்தவில்லையென்று கனம் அகமது தம்பு மரக்காயர் சொன்னார்.

மேன்மை தங்கிய பிரஸிடெண்டின் அனுமதியின் பேரில் தீர்மானம் வாபீஸ் வாங்கிக் கொள்ளப்பட்டது.

# 1918

[மார்ச்சு மாதம் 13-ம் தேதி நடந்த கூட்டம்]

## நாகப்பட்டணம் முனிசிபாலிட்டி வடிகால் திட்டம்.

*மேன்மை தங்கிய பிரபுவே,*

*என்பேராலிருக்கும் தீர்மானமாவது:—*

“நாகப்பட்டணம் முனிசிபாலிட்டி திறந்த சாக்கடை திட்டத்திற்காக 1918—19-ம் வருஷத்திய வரவு செலவு திட்டத்தில் “24-பி. சுகாதாரம்” என்கிற தலைப்பின் கீழ் குறைந்தது 50,000 ரூபாயாவது ஒதுக்கிவைக்க வேண்டுமென்றும், அதை ஈடு செய்வதற்காக கோதாவரி ஜில்லா போர்டுக்கு ஸ்பெஷல் வேலைகளைச் செய்வதற்காக “45 ஸிவில் வேலைகள்” என்கிற தலைப்பின் கீழ் ஒதுக்கி வைக்கப்பட்டிருக்கும் தொகையைக் குறைத்துக் கொள்ள வேண்டுமென்றும் இந்த சபை ஆலோசனை சபையுடன் கூடிய கவர்னருக்கு சிபார்சு செய்கிறது.”

*இந்தத் தீர்மானத்தைப் பிரேரணை செய்வதில் நான் சில வார்த்தைகள் சொல்லிக்கொள்ள விரும்புகிறேன்.*

*முந்தின வருஷங்களில் நாகப்பட்டணம் வடிகால் திட்டத்தைப் பற்றி இந்த சபையில் பிரஸ்தாபம் செய்திருப்பது தங்களுக்கு தெரிந்த விஷயம். இந்த வேலை சம்பந்தமான பிளான்களும் திட்டங்களும் கவர்ன்மெண்டாரால் ஒப்புக்கொள்ளப்பட்டு விட்டதும் தங்களுக்குத் தெரிந்த விஷயம். அவர்கள் மூடின சாக்கடைகளை ஏற்படுத்துவது லாபகரமாயிருக்குமென்று அபிப்பிராயப்பட்டார்கள். அதற்காக 7,80,000 ரூபாய்க்குதிட்டமும் தயாரிக்கப்பட்டது. ஆனால் யுத்தம் காரணமாகவும் அதன்பலனாக அன்னியநாடுகளிலிந்து தளவாடங்களைத் தருவிக்க சவுகரியம் குறைந்து விட்டதன் காரணமாகவும் இந்த ஏற்பாட்டை அனுஷ்டானத்திற்குக் கொண்டுவரக் கூடவில்லை. சாக்கடைத் தண்ணீரை வண்டிகளில் கொண்டு போய் விடுவதென்கிற யோசனை சாத்தியமில்லாத காரியமானதினால், சாக்கடைத் தொட்டிகளை ஏற்படுத்துவது பிரயோசனப்பட்டு விடாது. ஒவ்வொரு சாக்கடைத் தொட்டியிலும் சாக்கடைத் தண்ணீர் தேங்கி கொசு உற்பத்திக்கு அது இடமாகி விடுகிறது. அந்த கொசுக்கள் ஜனங்களுக்கு மலேரியா முதலிய தொத்து வியாதிகளை உண்டு பண்ணி விடுகின்றன. தண்ணீர்க்குழாய்களை ஏற்படுத்தி விட்டதால் குழாய்களின் மூலமாக வரும் ஜலத்திற்குப் போக்கு விட வேண்டியிருக்கிறது. சுகாதார உத்தியோகஸ்தர்கள் சிபார்சு*

செய்த பிரகாரம் பூமியில் குழி தோண்டி சாக்கடைத் தண்ணீரை உறிஞ்ச விட்டு விடுகிற தென்பதும் பிரயோசனப்பட வில்லை. குழிகளில் தண்ணீர் தரைமட்டத்திற்குக் கிட்டத்தட்ட இருந்து கொண்டே வருகிறது.

நாகப்பட்டணம் காலரா அம்மை முதலிய தொத்து வியாதிகளுக்கு பெயர் போன இடம். வருஷா வருஷம் மரண விகிதங்களும் அதிகரித்துக் கொண்டே வருகின்றன.

நான் ஏற்கனவே கூறிய பிரகாரம் நாகப்பட்டணத்தில் வடிகால் வசதிகள் ஏற்படுத்த வேண்டிய அவசியத்தை கவர்ன் மெண்டாரே உணர்ந் திருக்கிறார்கள். ஆனால் திருப்திகரமான செல்வநிலை ஏற்படும் வரையில் அவர் கள் இந்த வேலையை நிறுத்தி வைத்துக் கொள்ள வேண்டியிருக்கிறது.

இந்த யுத்தம் முடிந்ததும் செல்வநிலை எதா ஸ்திதிக்கு வந்துவிடுமா வென்பது சந்தேகம். யுத்தம் தீர்ந்து பலவருஷங்கள் வரையில் பணவிஷ யத்தில் சிக்கனமாக இருந்து வர நேருமென்றே எதிர்ப்பார்க்கப்படுகிறது. அன்னிய நாடுகளிலிருந்து தளவாடங்களைத் தருவிப்பதிலுள்ள கஷ்டங்களை யும் அனுபவிக்கத்தான் வேண்டியிருக்கும்.

அப்படியிருந்தாலும் கவர்ன்மெண்டுக்குப் பணக் கஷ்டம் தீர்ந்து விரிவான திட்டத்திற்கு 8லட்சம் ரூபாய் வரையில் ஒதுக்கி வைக்கக்கூடிய சக்தி வரும் வரையில் காலரா அம்மை முதலிய தொத்து வியாதிகள் பரவி உயிர்களைக் கொண்டு போகும்படி விடுவது விபரீதமான காரியமாகும்.

சுகாதார கோட்பாடுகளின்படி திறந்த சாக்கடைத் திட்டத்தை விட மூடின சாக்கடை திட்டம் சவுகரியமானதுதான். ஆனால் சாக்கடைகளே இல்லாமலிருப்பதற்கு திறந்த சாக்கடைகளாவது தேவலை. இந்த சந்தர்ப்பத் தில் சுகாதார போர்டாரின் அபிப்பிராயத்தைக் குறிப்பிடுதல் பொருந்து மென்றே நினைக்கிறேன்.

"குறைந்த செலவு பிடிக்கக்கூடிய திட்டம் தேவலையா அல்லதுஒன்று மில்லாமலிருக்கிறது தேவலையா வென்பதை யோசிக்குமிடத்து திறந்த சாக் கடைத்திட்டம் எதுவாயிருந்தாலும் அதை ஏற்படுத்தாதபடி அதில் சுகாதார சவுகரியங்கள் இல்லாமற்போய்விடவில்லை."

திறந்த சாக்கடைகளைக் கட்டி முடிப்பதற்கு ஆதியில் திட்டம் போட் டிருந்தபடி $3\frac{1}{2}$ லட்சம் ரூபாயாகிறது. பலபேர்களுடைய உயிர்களை பாதிக் கக்கூடியதாயிருக்கிற இந்த முக்கியமான விஷயத்திற்குப் பணத்தைக் கொடுப்பது கவர்ன் மெண்டுக்குக் கஷ்டமல்ல.

மேலும் பூமிக்குள் சாக்கடைகளைக் கட்டினாலும் மழைத் தண்ணீரை அடித்துக் கொண்டு போக திறந்த சாக்கடையுமிருக்க வேண்டியது தானே

ன்று சுகாதார நிபுணர்கள் சொல்லுகிறார்கள். ஆகவே முதலில் திறந்த சாக்கடைகளைக்கட்டி விட்டு விட்டால் பண நிலைமை சவுகரியமாகி தளவாடங்களையும் தாராளமாக வரவழைக்க சவுகரிய மேற்படும் பொழுது பூமிக்குள் சாக்கடைகளையும் கட்டி விட்டுவிடலாம். திறந்த சாக்கடைகளைக் கட்டுவதற்கு அன்னிய நாட்டு சாமான்கள் தேவையில்லை.

ஒரே தடவையில் $3\frac{1}{2}$லட்சம் ரூபாயையும் கொடுக்கும்படி நான்கேட்கவில்லை யென்பதையும் இந்த சபையார் கவனிக்க வேண்டும். நெரிசலும் சுகாதாரக் கேடும் அதிகமாகவுள்ள இடங்களிலாவது முதலில் வேலையைத் தொட்டுக்கொள்ளுவதற்காக 50,000 ரூபாய் தான் இந்த வருஷத்தில் ஒதுக்கி வைக்கும்படி கேட்கிறேன்.

இந்த 50,000 ரூபாயை வைத்திய வசதிகள், கல்வியை, சுகாதாரம் போன்ற முக்கியமான இனங்களுக்கு ஒதுக்கி வைத்திருக்கும் பணத்திலிருந்து எடுக்க வேண்டு மென்றும் நான் சொல்ல வில்லை. கோதாவரி ஜில்லா போர்ட்டுக்குமற்ற போர்ட்டுகளைப்போல சாதாரணகிராண்டுகிடைப்பதுடன் ரஸ்தாக்கள் போக்குவரத்துசாதனங்கள் இவைகளுக்காக அனுமத்தாக99,000 ரூபாய் கொடுக்கப்பட்டிருக்கிறது. ரஸ்தாக்களைப் போடுதல் முதலிய வேலைகளை பண நிலைமை சவுகரியமாகும் வரையில் நிறுத்தி வைப்பதினால் ஒன்றும் முழுகிப் போய்விடாதென்று நான் அபிப்பிராயப்படுவது போலவே மற்ற மெம்பர்களும் அபிப்பிராயப் படக்கூடு மாதலால், அந்த இனத்தி லிருந்து இந்த முக்கியமான வேலைக்கு 50,000 ரூபாய் எடுத்துக் கொடுக்கும்படி கேட்கிறேன். நாகப்பட்டணத்திற்கு வடிகால் ஏற்படுத்தாத வரையில் அநேக உயிர்களுக்கு சேதமுண்டாகும். அந்த வேலையை உடனே தொட்டுக் கொண்டு சீக்கிரம் செய்து முடிக்காத வரையில் காலரா, அம்மை முதலிய தொத்து வியாதிகளுக்கு இடங்கொடுப்பதாகும். இந்தியாதி காரணங்களை உத்தேசித்து என்னுடைய தீர்மானத்தை அங்கீகரிக்கும்படி கேட்டுக் கொள்ளுகிறே னென்று சொன்னார்.

## கனம் எம். ராமச்சந்திர ராவ்

தமக்கு கனம் அகமது தம்பி மரக்காயர் தீர்மானம் கொண்டு வந்திருக்கிற விஷயத்தில் அனுதாப மிருக்கிறதாயினும், விசாகப்பட்டணம் கோதாவரி முதலிய ஏஜன்ஸி பிரதேசங்களை அபிவிருத்தி செய்வதற்காக பலவருஷங்களாக கவர்ன்மெண்டார் கொடுத்து வரும் பணத்தில் கை வைக்கக்கூடா தென்றும், கவர்ன்மெண்டார் தீர்மானத்தை ஒப்புக்கொள்ளுவதாயிருந்தால் வேறு வழியில் பணந் தேடிக் கொடுக்கலா மென்றும் சொன்னார்.

## கனம் திவான்பகதூர் பி. ராஜகோபாலாச்சாரியார்.

மேன்மை தங்கிய பிரபுவே,

நாகப்பட்டணம் முனிசிபாலிட்டிக்கும் கோதாவரி ஜில்லா போர்ட்டுக்குமுள்ள பாத்தியா பாத்தியதைகளைப் பற்றி விஸ்தாரமாக நான் பேச உத்தேசமில்லை. இரண்டு இடத்துப் பிரதிநிதிகளும் இங்கிருக்கிறார்கள். கொஞ்சகாலமாக நாகப்பட்டணத்தில் திறந்த சாக்கடை ஏற்படுத்தும் விஷயத்தைப்பற்றிய திட்டமானது கவர்ன்மெண்டாரின் ஆலோசனையிலிருந்து வருகிறது. 1914-ம் வருஷத்தில்வெளியாகி யிருக்கும் ஒரு பழைய கவர்ன்மெண்டு உத்திரவிலும் இந்த விஷயம் பிரஸ்தாபிக்கப்பட்டிருக்கிறது. நமது நிபுணரான சர்ஜன் ஜெனரல் நாகப்பட்டணத்திற்குச் சென்று நேரில் பார்வையிட்டு இப்பொழுதிருக்கிற நிலைமை அதிருப்திகரமானதாக இருந்தாலும், அவ்வித நிலைமையிலேயே இன்னும் கொஞ்சகாலம் விட்டு வைத்திருப்பது தேவலையே தவிர திறந்த சாக்கடைகளை ஏற்படுத்துவதற்கு கவர்ன்மெண்டார் உடன்பட்டு விடக்கூடாதென்று சொல்லி யிருக்கிறார். அவர் சொல்லியிருக்கிறதென்ன வென்பதை கனம் மெம்பரும் இந்த சபையாரும் அறிய ஆவலுள்ளவர்களாகவே யிருப்பார்களென்று நம்புகிறேன். "மழை தண்ணீருக்குத் தான் திறந்த சாக்கடை பிரயோஜனப்படும். அழுக்குத் தண்ணீரை அடித்துக்கொண்டு போவதற்காக திறந்த சாக்கடைகளை உபயோகிப்பதில் அசங்கியந் தானேற்படுகிறது. தானாகவே அந்த சாக்கடைகள் அழுக்குகளை அடித்துக் கொண்டுபோய் விடுவதில்லை. அது நிறைய தண்ணீர் பேகாமற் போனால் இரண்டு பக்கங்களிலும் துர்நாத்தமுள்ள மஷ்டுக்கள் தங்கிவிடுகின்றன. அவைகளை அடிக்கடி தோட்டிகள் பார்த்து சுத்தம் செய்ய வேண்டியிருக்கிறது. இதன் பலனாக சாக்கடைக் கட்டிடம் இடிந்துபோய் குண்டும் குழியுமாகி விடுகிறது. சாக்கடையில் அடைத்துக் கொண்டிருக்கும் மஷ்டுக்களைத் தோட்டிகள் பக்கத்தில் எடுத்துப் போட்டு விடுவதில் அவைகளில் ஈக்கள் உற்பத்தியாகி விடுகின்றன. சுகாதாரக் கேடான திறந்த சாக்கடைகளிருக்குமிடத்தில் இதை நேரில் யாரும் பார்க்கலாம். காலரா, டைப்பாயிட் முதலிய தொத்து வியாதிகளை ஈக்களும் பரவச் செய்து விடுகின்றன. ஆகவே நமது நகரங்களிலும் அதிலும் முக்கியமாகத் துறைமுகப்பட்டணங்களிலும் இம்மாதிரியாக இந்தப் பூச்சிகள் உண்டாவதற்கு இடங்கொடுக்கும்எந்த திட்டத்தையும் நான்பலமாக ஆக்ஷேபிக்கிறேன். இந்த மஷ்டுக்களில் ஈக்கள் உற்பத்தியாவதுடன், துர்க்கந்தமும் உண்டாகிறது."

"திறந்த சாக்கடைகளை ஏற்படுத்துவதற்கு சொல்லப்பட்டிருக்கும் ஆட்சேபனைகளை கவனித்து இந்த முக்கியமான துறைமுகப் பட்டணத்தில் பூமிக்குள் சாக்கடை ஏற்படுத்துவது தான் உசிதமாக இருக்குமென்று கவர்ன்மெண்டார் அபிப்பிராயப்படுகிறார்கள்."

இதுதான் கவர்ன்மெண்டார் எற்கனவே செய்திருக்கும் தீர்மானம். இருந்தாலும் திறந்த சாக்கடை ஏற்படுத்துவதில் செலவு கம்மிப்படுகிறதென்று நினைத்து மறுபடியும் பழைய திட்டத்தையே ஒப்புக் கொள்ள வேண்டுமென்று முனிசிபல் கவுன்சில் சிபார்சு செய்திருக்கிறது வாஸ்தவமே. அந்த விஷயமும் பரிசீலனை செய்யப்படும். இது சம்பந்தமான தஸ்தா வேஜுகளை இப்போதிருக்கிற சர்ஜன் ஜெனரலுக்கு அனுப்பி அவைகளைப் பார்வையிட்டு நாகப்பட்டணத்திற்கும் போய் முனிசிபல் கவுன்சில் சொல்லும் யோசனை .பிரயோஜனப்படுமா வென்பதையும் பரிசீலனை செய்யும்படி கேட்டுக் கொள்ளுகிறேன். இந்த மாதிரியான தொழில் மர்மத்தைப் பொறுத்த விஷயத்தில் நிபுணர்களின் அபிப்பிராயத்தைக் கேட்காமல் திறந்த சாக்கடைகளையே ஏற்படுத்தி விடும்படி: தீர்மானம் செய்து விடாமலிருக்கும்படி சபையோரை நான் வேண்டிக் கொள்ளுகிறேன். திறந்த சாக்கடைகளை ஏற்படுத்துவதில், செலவு குறையு மென்பது வாஸ்தவந்தான். 3 லட்சம் ரூபாய் தானுகுமென்று கனம் மெம்பர் சொல்லுகிறார். எப்படிக் கணக்குப் போட்டாரென்று எனக்குத் தெரியவில்லை. திறந்த சாக்கடைகளை ஏற்படுத்துவதற்கும் பிளான்களாவது திட்டங்களாவது தயார் செய்யப்படவில்லை, ஆனால் செலவு கம்மிப்படலா மென்பதை மட்டில் நான் ஒப்புக்கொள்ளுகிறேன். இப்பொழுது 3 அல்லது 4 லட்சம் ரூபாயைச் செலவு செய்துவிட்டு, கொஞ்சகாலத்திற்குப் பிறகு அந்த ஏற்பாடு பிரயோஜனப் படாவிட்டால் மறுபடியும் இரட்டிப்பாகப் பணத்தைச் செலவிட வேண்டி வரும். இன்னும் கொஞ்சகாலத்திற்கு இதே நிலைமையில் தள்ளிக்கொண்டு போய் ஒரே அடியாக பூமிக்குள் சாக்கடைகளைக் கட்டிவிட்டு விடுவது சவுகரியமல்லவாவென்பது நாகை வாசிகளே அதிகமாகயோசிக்க வேண்டிய விஷயம்.

திறந்த சாக்கடைகளை ஏற்படுத்துவதை நிபுணர் கண்டனம் செய்திருக்கிறார். மறுபடியும் புனராலோசனை செய்யும்படி நாம் கேட்டிருக்கிறோம். அப்படிக்கிருக்கையில் கனம் மெம்பர் சொல்லுகிற யோசனையைக் கேட்பதாக இருந்தால் திறந்த சாக்கடைகளைக் கட்டி முடிப்பதென்று நாம் முதலில் ஒப்புக்கொள்ள வேண்டும்; இரண்டாவதாக இரட்டிப்பு செலவு ஏற்படும்படி ஒருவித அபிப்பிராயமும் இப்பொழுது கொடுப்பது சரியல்ல. எது சரியான வழியென்று நாம் சர்ஜன் ஜெனரலைக் கேட்டுவிடுவதை எதிர்பார்த்து நாகப்பட்டணம் முனிசிபாலிட்டி பொறுத்துத் தானிருக்க வேண்டும். ஆகவே இந்த நிலைமையில் நான் கனம் மரக்காயர் கொண்டு வந்திருக்கும் தீர்மானத்தை ஒப்புக் கொள்ளமுடியாது.

### கனம் மிஸ்டர் அகமது தம்பி மரக்காயர்.

திறந்த சாக்கடை திட்டம் அபாயகரமான தென்பது போன்ற விஷயங்கள் சொல்லப்பட்டிருக்கும் குறிப்பை கனம் மெம்பர் படித்தார்.

1917-ம் வருஷம் டிசம்பர் மாதத்தில் சுகாதார இலாகாவுக்கும் நாகப்பட்டணம் முனிசிபாலிட்டிக்கும் நடந்த கடிதப் போக்குவரத்துகளின் விவரங்கள் என் கையிலிருக்கின்றன. சாக்கடைகள் ஏற்படுத்துவதற்கு வெகு காலம் காத்திருப்பதைவிட திறந்த சாக்கடைகளை ஏற்படுத்துவது நலம். இந்தக் கடிதங்களைத் தானா கனம் மெம்பர் குறிப்பிட்டார்? திறந்த சாக்கடைகளை ஏற்படுத்தலாமென்று தான் அவர்கள் சிபார்சு செய்திருக்கிறார்கள். இனி காலத்தைக் கழித்துக் கொண்டு போவதினால் அபாயந்தான் விளையும். தொத்து வியாதிகள் வியாபித்திருக்கிற காலத்தில் சாக்கடைத் தண்ணீர் உபத்திரவத்துடன், குழாய்த் தண்ணீரும் மூலைக்கு மூலை தேங்கி, வியாதியை பரவச் செய்கிறது. கூடிய சீக்கிரத்தில் பரிகாரம் ஏதேனும் செய்யாவிட்டால் நாகை வாசிகள் கஷ்டத்திற்கும் துயரத்திற்கும் ஆளாக வேண்டி வரும். ஆகவே கவர்ன்மெண்டார் புனராலோசனை செய்து, திறந்த சாக்கடைகளைக் கட்ட ஆரம்பம் செய்வதற்கு ஏற்பாடு செய்யும்படி கேட்டுக் கொள்ளுகிறேன். இந்தத் தீர்மானத்தை அடியோடு நிராகரித்து விடுவதை விட சுகாதார அதிகாரிகளைக் கேட்டு விட்டு அது வரையில் பொறுத்திருக்க எனக்கு சம்மதம் என்று சொன்னார்.

## மேன்மை தங்கிய கவர்னர்

மறுபடியும் நிபுணரின் அபிப்பிராயத்தைக் கேட்டு விடப்போவதாக கனம் ராஜகோபாலாச்சாரியார் கூறினாரென்று கனம் மெம்பர் நினைத்துக் கொண்டது சரிதான். இந்த நிலைமையில் தீர்மானம் தோற்றுப் போவதை விட கனம் மெம்பர் அதை வாபீஸ் வாங்கிக் கொள்ளுவாரென்றே நினைக்கிறேன்.

கவர்னருடைய அனுமதியின் பேரில் தீர்மானம் வாபீஸ் வாங்கிக் கொள்ளப்பட்டது.

## நாகப்பட்டணம் ஜலசப்ளை விஸ்தரிப்பு.

மேன்மைதங்கிய பிரபுவே,

என்பேராலிருக்கும் அடுத்த தீர்மானமும் முக்கியமானதே. அதன் சாரம் என்னவென்றால்:—

"நாகப்பட்டணம் முனிசிபாலிட்டியில் ஜலசப்ளை விஸ்தரிப்புக்காக "24 பி—சுகாதாரம்" என்கிற தலைப்பின் கீழ் 10,000 ரூபாய் ஒதுக்கிவைக்க வேண்டுமென்றும், விசாகப்பட்டணம் அல்லது கோரப்பட்டு ஜில்லா போர்டுக்கு ஏஜன்ஸி பிரதேசத்திற்காக "45 ஸிவில் வேலைகள்" என்கிற தலைப்பின் கீழ் ஒதுக்கி வைக்கப்பட்டிருக்கும் தொகையிலிருந்து இதை ஈடு செய்ய வேண்டுமென்றும் இந்த சபை ஆலோசனை சபையுடன் கூடிய கவர்னருக்கு சிபார்சு செய்கிறது."

இத்தீர்மானத்தைப் பிரேரணை செய்வதில் சில வார்த்தைகள் சொல்லிக்கொள்ள விரும்புகிறேன்.

நாகப்பட்டணம் முனிசிபாலிட்டியில் குழாய்த் தண்ணீர் சப்ளை மிகவும் குறைவாக யிருக்கிறது. சில தெருக்களில் கொஞ்சம் குழாய்கள் தான் வைக்கப்பட்டிருக்கின்றன. அநேக தெருக்களில் குழாய்களே கிடையாது. முக்கியமாக முகம்மதியத் தெருக்களில் குழாய்களே வைக்கப்படவில்லை. தூரமான இடங்களிலிருந்து முகம்மதிய ஸ்திரீகள் ஜலங்கொண்டு வருவது மிகுந்த கஷ்டமாயிருக்கிறது. தண்ணீர்க் குழாய்கள் வைப்பதற்கு முந்தி தலைச்சுமையாகக் கூலிக்குத் தண்ணீர் கொண்டுவந்து கொடுத்துக் கொண்டிருந்தார்கள். குழாய்கள் வைத்ததும், கூலிகள் நின்று விட்டார்கள். ஆகவே எந்த வழியிலும் முகம்மதிய ஸ்திரீகளுக்குத் தண்ணீர் கிடைப்பது கஷ்டமாயிருக்கிறது. இது உள்ளூரைப் பொறுத்த விஷயமானதினால் அடிக்கடி முனிசிபல் கவுன்சிலில் நான் பிரஸ்தாபம் செய்து பார்த்தேன். அதிகப்படியாக குழாய்களை வைப்பதற்குச் செலவிட முனிசிபாலிட்டியில் பணங்கிடையாது. வரும்படிக்கு மேல் அவர்கள் வருஷம் 1-க்கு 10000 ரூபாய் நஷ்டப்பட்டுக் கொண்டு வருவதால், புதிதாகக் குழாய்களை வைக்க முனிசிபாலிட்டிக்குப் பணம் அகப்படாது.

ஜலசப்ளைக்காக இதர முனிசிபாலிட்டிகளுக்கும் ஜில்லாபோர்டுகளுக்கும் வரவு செலவு திட்டத்தில் ஏராளமாக பணம் ஒதுக்கி வைத்திருக்கையில் நாகப்பட்டணம் முனிசிபாலிட்டி கேள்விமுறையில்லாமலிருக்கிறது. ஆகவே இன்னும் சில இடங்களில் குழாய்கள் வைப்பதற்காக 10,000 ரூபாய் கொடுத்து அதை 45 வீதில் வேலைகள் என்பதிலிருந்து ஈடு செய்வதில் கவர்ன்மெண்டுக்கு அதிக சிரமமேற்படாதென்று நினைக்கிறேன்.

கனம் ஏ. சூரிய நாராயணராவ் விசாகப்பட்டணம், கொரப்பட்டு போர்டுகளுக்காக ஒதுக்கி வைத்திருக்கப்பட்டிருக்கும் பணத்தில் கைவைக்கும்படி கனம் மரக்காயர் வற்புறுத்தமாட்டாரென்று தாம் நம்புவதாகக் கூறினர்.

## கனம் திவான்பகதூர் பி. ராஜகோபாலாச்சாரியார்

மேன்மை தங்கிய பிரபுவே,

நாகப்பட்டணம் முனிசிபாலிட்டி ஜலசப்ளை விஷயமாக கொஞ்சகாலமாய் கவர்ன்மெண்டார் என்ன செய்து வந்திருக்கிறார்களென்பதை இந்த சபையார் அறிய ஆவலுள்ளவர்களாயிருப்பார்களென்றே நான்நினைக்கிறேன். 1908-ம் வருஷம் முதல் 1914-ம் வருஷம் வரையில் மொத்தம் 4 லட்சத்து 68 ஆயிரம் ரூபாய் கொடுத்திருப்பதாக என்னிடம் புள்ளிவிவரங்களிருக்கின்றன. இதிலிருந்து கவர்ன்மெண்டார் கருமித்தனமாகயிராமல் தாராள

புத்தியுடனேயே உதவி வந்திருப்பதை சபையார் கண்டு கொள்ளலாம். பிரஸ்தாப விஷயம் சம்பந்தமாக நாகப்பட்டணம் முனிசிபல் கவுன்சிலிடமிருந்து ஒரு விண்ணப்பம் கிடைத்திருக்கிறது. முக்கிய ரஸ்தாவில் 3 அங்குலம் குழாய் வைத்து ஒரு தெருவுக்குத் தண்ணீர் கொண்டு போவதற்காகவும் மற்றொரு தெருவுக்கு அருகில் ஒரு குழாயை வைப்பதற்காகவும் கிராண்டு கொடுக்கவேண்டுமென்று அவர்கள் அதில் கேட்டிருக்கிறார்கள். இவைகளெல்லாம் கனம் மரக்காயர் கேட்டதுதான். முனிசிபாலிட்டியார் ரூ-8700 தான் கேட்டிருக்கிறார்கள். அதைக் கொடுக்க கவர்ன்மெண்டார் தயாராக இருக்கிறார்கள். தீர்மானத்தில் கண்டிருக்கும் 10000 ரூபாயை முனிசிபாலிட்டியார் கேட்டிருக்கிறபிரகாரம் 8,700 ரூபாயாகக் குறைத்துக்கொண்டு, கொரப்பட்டு, விசாகப்பட்டணம் போர்டுகளைப் பற்றிய விஷயங்களையே விட்டுவிடும்படி கனம் மெம்பரைக் கேட்டுக்கொள்ளுகிறேன்.

கனம் ராஜகோபாலாச்சாரியாருடைய திருத்தப்பிரேரணையை கனம் அகமது தம்பி மரக்காயர் ஒப்புக் கொள்ளவே, திருத்திய தீர்மானம் சபையால் அங்கீகரிக்கப்பட்டது.



[ஏப்பிரல் மாதம் 5-ந்தேதி நடந்த கூட்டம்.]



## ஸிலோன் கோரண்டைன் நிர்ப்பந்தங்கள்.

மேன்மை தங்கிய பிரபுவே,

நான் கொண்டுவரப்போகும் தீர்மானமாவது:—

"ஸிலோனுக்குச் செல்லும் இந்தியப்பிரயாணிகளுக்கு இருந்துவரும் கோரண்டைன் நிர்ப்பந்தங்கள் விஷயமாக, 1917-ம் வருஷம் பிப்ரவரி மாதம் 16-ம் தேதியுள்ள 150-ம் நம்பர் கவர்ன்மெண்டு உத்திரவை வாபீஸ் வாங்கிக்கொண்டு 1916-ம் வருஷம் நவம்பர் மாதம் 22-ம் தேதியுள்ள ஹோம் (மிஸலேனியஸ்) 349-ம் நம்பர் உத்திரவின் பிரகாரம் நடந்து வரும்படி ஸிலோன் கவர்ன்மெண்டுடன் ஏற்பாடு செய்வதற்காக முயற்சி எடுத்துக் கொள்ள வேண்டுமென்று இந்த சபை சிபார்சு செய்கிறது."

சென்ற வருஷத்தில் இதேமாதிரியான தீர்மானத்தை நான் கொண்டுவந்ததும், ஸிலோனுக்குச் செல்லும் பிரயாணிகளுக்கு சர்ட்டிபிகேட்டு கொடுப்பதில் ஜில்லா சர்ஜன்களுக்கு இருந்துவரும் நிர்பந்தங்களை எடுத்துவிடும்படி கேட்க இது தகுதியான காலமல்ல வென்று கவர்ன்மெண்டார் சொல்லி, தீர்மானத்தை நிராகரித்து விட்டதும் சபை மெம்பர்களுக்கு

ஞாபகமிருக்கும். ஜில்லா சர்ஜன்கள் சர்ட்டிபிகேட்டுகள் கொடுக்கும்படி விலோன் கவர்ன்மெண்டுடன் ஏற்பாடு செய்து கொண்டு 1916-ம் வருஷம் நவம்பர் மாதம் 22-ம் தேதி மேலே சொன்ன 349-ம் நம்பர் கவர்ன்மெண்டு உத்திரவை பிறப்பிவித்தபிறகு ஒரு ஜில்லா சர்ஜன் தமக்குக் கிடைத்த அதிகாரத்தைத் தப்பான வழியில் உபயோகித்து விட்டாரென்றும், அதனால் விலோன் கவர்ன்மெண்டுக்கு இந்த கவர்ன்மெண்டின் கீழ்வேலைபார்த்து வரும் ஜில்லா சர்ஜன்களிடம் நம்பிக்கை போய், 1917-ம் வருஷம் பிப்பிரவரி மாதம் 16-ம் தேதியுள்ள 150-ம் நம்பர் கவர்ன்மெண்டு உத்திரவில் கண்ட நிர்ப்பந்தங்களை ஏற்படுத்தி விட்டார்களென்றும் அந்தக் காலத்தில் கவர்ன்மெண்டார் சமாதானம் கூறினார்கள். அப்பொழுதே ஒருவர் தவறி நடந்ததற்காக பொது ஜனங்களைப் பொறுத்த ஒரு விஷயத்தில் அசௌகரியத்தை விளைவித்து விடக்கூடாதென்று கனம் மெம்பர்கள் தெரிவித்துக் கொண்டும் கவர்ன்மெண்டார் தீர்மானத்தை ஒப்புக்கொள்ளவில்லை.

இந்த சந்தர்ப்பத்தில் போன வருஷம் விவாதம் நடந்தபோது மேன்மைதங்கிய கவர்னர் பேசியதிலிருந்து சில வார்த்தைகளை எடுத்துக்கூற வேண்டிய தவசியமாக இருக்கிறது:—

"நமது பிரஜைகளுக்குப் பூராசு தந்தரம் தேடித்தர வேண்டுமென்பதில் மற்றவர்களைப்போலவே எனக்கும் கவலையிருக்கிறது. இருந்தாலும் விலோன் சம்பந்தப்பட்ட வரையில் அந்த கவர்ன்மெண்டாருக்குப் பூரண சுதந்தர முண்டென்பதையும் நாம் ஒப்புக்கொள்ள வேண்டியிருக்கிறது. எதிர் பாராத சில சம்வங்களினால் ஏற்பட்டிருக்கும் அபூர்வமான நிலைமையில் சமயத்துக்குத் தக்கவாறு எவ்விதம் நடந்து கொள்வது உசிதமாகத் தோன்றுகிறதோ அவ்விதமே விலோன் கவர்ன்மெண்டாருடன் ஒற்றுமையாகவும் ஐக்கிய மாகவும் நடந்து வந்து, பிறகு எப்பொழுதாவது சர்ட்டிபிகேட்டு விஷயமாகவுள்ள நிர்ப்பந்தங்களை நிவர்த்திக்க வேணும், வேறுதுறையிலேனும் சவுகரியமான சந்தர்ப்பம் நேரிட்டால், அதைக் கைக்கொண்டு நமது பிரஜைகள் தாராளமாக விலோனுக்குச் சென்று வரச் செய்வோம்."

நான் தீர்மானங்கொண்டு வந்து இப்பொழுது ஒருவருஷத்திற்குஅதிகமாகி விட்டது. ஆயினும் விலோனுக்குச் செல்லும் நமது பிரயாணிகளுக்கு இருந்துவரும் கஷ்டங்களையும் அசவுகரியங்களையும் நிவர்த்திக்க கவர்ன்மெண்டார் எவ்வித முயற்சியும் எடுத்துக்கொண்டபாடில்லை. ஆதியில் இருந்து வந்த நிர்ப்பந்தங்களை ஒருவாறு அனுகூலப்படுத்திய 349-ம் கவர்ன்மெண்டு உத்திரவு இப்பால் பிறந்த உத்திரவினால் பயனற்றுப்போய்விட்டது.

பிந்தின உத்திரவினால் முந்தின உத்திரவிலிருந்து வந்த சவுகரியங்கள் எவ்விதம் குறைந்து விட்டதென்பதை முன்னரே சபைக்கு எடுத்துக்

காட்டியாகிவிட்டது. ஜில்லா சர்ஜன்கள் சர்ட்டிபிகேட்டு கொடுக்கு முன் அவர்கள் கவனிக்க வேண்டியுள்ள விஷயங்கள் வெகுவாகவும், சிக்கலாகவு மிருப்பதால், அவர்கள் சர்ட்டிபிகேட்டுகள் கொடுக்கவே சாத்தியமில்லாம லிருக்கிறது. முதலில் அவர்களுக்கு சர்ட்டிபிகேட்டு கேட்கிற பெயர் வழி களை நேரில் தெரிந்திருக்க வேண்டும். அவர்கள் குடியிருப்பு இடமும் தெரிந்திருக்க வேண்டும். அவர்களுடைய பல சித்த விர்த்திகளும், அவர் கள் குறிப்பிட்ட இடங்களுக்கு வழியில் தங்காமல் நேராகச் சென்று அவர் கள் கொடுக்கிற விலாஸத்திலேயே தங்கி யிருப்பார்களா வென்றும் தெரிந் திருக்க வேண்டும். ஆனால் சென்ற வருஷத்தில் கனம் கில்மன் பேசிய போது ஜில்லா சர்ஜன்களுக்கு விண்ணப்பதாரர்களை நேரில் தெரிந்திருக்க வேண்டிய அவசியமில்லை யென்றும், அஸிஸ்டெண்டு சர்ஜன்கள், சப் அஸிஸ் டெண்டு சர்ஜன்கள் போன்ற அவர்களுடைய கீழ் உத்தியோகஸ்தர்களு டைய சிபார்சுகளின் பேரில் சர்ட்டிபிகேட்டுகள் கொடுத்துவிடலாமென் றும் சொன்னார். இது ஜில்லா சர்ஜன்களைத் திண்டாட விடுவதேயாகும். "ஸிலோனில் கண்டு பிடிக்கக்கூடிய விலாஸத்தைக் கொடுக்கும் ஸ்திரமான தொழில் செய்து வருகிற தங்களுக்கு நேரில் தெரிந்த பெயர் வழிகளுக்குத் தான் ஜில்லா சர்ஜன்கள் சர்ட்டிபிகேட்டுகள் கொடுக்கலாமென்றும், அவர்க ளுடைய நிலைமையைக் குறித்து ஜில்லா சர்ஜன்கள் சர்ட்டிபிகேட்டு கொடுக் கத் தயாராக இருக்க வேண்டு"மென்றும், வியக்தமாக கவர்ன்மெண்டு உத் திரவில் கண்டிருக்கையில் அவர்கள் தைரியமாக சர்ட்டிபிகேட்டு கொடுப் பார்களாவென்று எனக்குத் தெரியவில்லை.

தேக ஆரோக்கிய சர்ட்டிபிகேட்டு வேண்டுமென்று கேட்கிற ஒவ் வொருவரையும் ஜில்லா சர்ஜனுக்குத் தெரிந்திருக்க நியாயமில்லை. அவரு டைய கீழ்த்தர உத்தியோகஸ்தரின் வார்த்தையை நம்பிக் கொண்டு சர்ட்டி பிகேட்டு கொடுக்கவும் அவருக்கு தைரிய மேற்படாது. ஏதாவது தவறு நேர்ந்துவிட்டால் சர்ஜன் ஜெனரல், இந்த கவர்ன்மெண்டார், ஸிலோன் கவர்ன்மெண்டார் இவர்களுடைய கண்டனத்திற்கு அவர் ஆளாக வேண்டி வரும்.

ஸ்தலத் தனுபோக முள்ள அஸிஸ்டெண்டு சர்ஜன்களுக்கும் சப் அஸிஸ்டெண்டு சர்ஜன்களுக்கும் இந்த அதிகாரத்தைக் கொடுத்து விடலாமென்று மற்றொரு யோசனை சொல்லப்பட்டது. ஜில்லா சர் ஜன்களுடைய சர்ட்டிபிகேட்டுகளிலேயே ஸிலோன் கவர்ன்மெண்டாருக்கு நம்பிக்கை யில்லாமலிருக்கையில் அவருடைய கீழ் உத்தியோகஸ்தர்களுக்கு இந்த அதிகாரத்தைக் கொடுக்க அவர்கள் சம்மதிக்கமாட்டார்களென்று கவர்ன்மெண்டார் சொல்லி விட்டார்கள். கடைசியில் ஏழைப் பிரயாணிகள் சொல்லமுடியாத கஷ்டங்களுக்காளாகி வருகிறார்கள். இப்பொழுதாவது கவர்ன்மெண்டார் அவர்களுக்குப் பரிகாரம் செய்து தராத வரையில் வேறு

யாரிடம் தான் போய் அவர்கள் தங்களுடைய குறைகளைச் சொல்லிக் கொள்ளுகிறது?

ஆதியில் ஒரு சவுகரியம் செய்து கொடுத்துவிட்டு மறுபடியும் ஏன் ஸிலோன் கவர்ன்மெண்டார் அதை மாற்றி நமது கவர்ன்மெண்டின் பொறுப்பு வாய்ந்த வைத்திய உத்தியோகஸ்தர்கள் மீது நிர்ப்பந்தங்களை ஏற்படுத்தவேண்டும்? ஒரு உத்தியோகஸ்தர் தப்பாக நடந்ததற்காக இவ்வளவு கடுமையான நிபந்தனைகளை ஸிலோன் கவர்ன்மெண்டார் ஏற்படுத்துவது தர்மமாகுமா?

பிரபுவே, இந்த விஷயத்தில் ஜனங்களுடைய மனது புண்பட்டுப் போயிருக்கிறது. இந்த கவர்ன்மெண்டு பிரஜைகளைப் பொறுத்த விஷயத்தில் ஏன் ஸிலோன் கவர்ன்மெண்டுக்கு விட்டுக் கொடுக்க வேண்டுமென்று அவர்கள் ஆச்சரியப்படுகிறார்கள்.

ஸிலோன் கவர்ன்மெண்டார் தீர்மானத்தில் கடை ஷரத்துகளுக்குக் கட்டுப்பட்டு வராவிடில், நமது கவர்ன்மெண்டின் கௌரவத்தைக் காப்பாற்றுவதற்கு ஸிலோனிலிருந்து நமது மாகாணத்திற்கு வரும் பிரயாணிகளுக்கும் இவ்வித நிர்ப்பந்தங்களை ஏற்படுத்துவதைத் தவிர வேறு வழியில்லை. நமது மாகாணப் பிரஜைகளையும் பிளேக், கால்ரா முதலிய தொத்துநோய்களிலிருந்து காப்பாற்றுவதற்கு நமக்கு சுதந்தரமுண்டு. கனம் ராமனாதபுரம் ராஜா ஏற்கனவே சொல்லியது போல் இங்கிருந்து ஸிலோனுக்கு போன பிரயாணிகளை விட அங்கிருந்து இங்கு வந்த பிரயாணிகளே பிளேக் முதலிய நோய்களைக் கொண்டு வந்திருப்பதை உத்தேசித்து, இந்த மாதிரியான நிர்ப்பந்தங்களை ஏற்படுத்த வேண்டியது நியாயமாகத்தானிருக்கிறது. போன வருஷத்தில் இதே தீர்மானத்தைப் பற்றிப் பூராவாக விவாதம் நடந்திருப்பதால் கவர்ன்மெண்டார் நமது பிரஜைகளுடைய கஷ்டங்களை நிவர்த்திக்க வேண்டியது கடமை யென்பதை வற்புறுத்துவதைத் தவிர வேறொன்றும் சொல்லிக் கொள்ள வேண்டியதில்லை.

1916-ம் வருஷம் செப்டம்பர் மாதத்தில் தாங்கள் செட்டி நாட்டிற்குச் சென்றிருந்த பொழுது நாட்டுக் கோட்டை நகரத்தார்கள் தங்களுக்குப் படித்துக் கொடுத்த உபசாரப் பத்திரத்திற்கு பதிலளிக்கும் போது தாங்கள் சொல்லி யிருப்பதாவது;—

"ஸிலோன் கோரண்டைன் நிர்ப்பந்தங்கள் உங்களுடைய வகுப்பினருக்கே மிகுந்த கஷ்டத்தை விளைவித்து வருவதாக உங்களுடைய உபசாரப் பத்திரத்தில் சொல்லி யிருக்கிறீர்கள். இந்த விஷயத்தை நாங்களும் கவலையுடன் யோசித்து வருகிறோம். மறுபடியும் இதைப்பற்றி ஸிலோன் கவர்ன்மெண்டாருடன் கடிதப் போக்கு நடந்து வருவதால், விவரமாக அதைப்பற்றி நான் பேசு

வேனென்று எதிர்பார்க்க மாட்டார்கள். ஸிலோன் கவர்ன்மெண்டின் ஆதீனத்திலிருந்துவரும்பிரஜைகளின் ஸுதகாரோக்கியத்தைக் காப்பாற்றுவதற்கு எவ்வித இடையூறு மன்னியில் அந்தத் தீவுக்குத் தொழிலின் மேல் போக வேண்டி யிருக்கிறவர்களுக்கு எவ்விதத் தொந்திரவும் நேரிடாதபடி கூடிய சீக்கிரத்தில் ஸிலோன் கவர்ன்மெண்டாருடன் சவுகரியமான ஏற்பாடு செய்துகொள்ளப் பட்டு விடுமென்று நம்புகிறேன்.''

சென்ற டிசம்பர் மாதத்தில் கூடிய சென்னை மாகாண சங்கத்தின் முதலாவது கான்பரென்ஸில் நிறைவேறியிருக்கும் தீர்மானத்தையும் தங்களுடைய அறிவிப்புக்குக் கொண்டுவர விரும்புகிறேன்.—

"ஸிலோனுக்குச் செல்லும் பிரயாணிகள், தொழிலாளர்கள் இவர்களுக்கு அந்த கவர்ன்மெண்டார் மண்டபத்திலும் தூத்துக்குடியிலும் ஏற்படுத்தி யிருக்கும் அருவருக்கத் தக்க கோரன்டைன் நிர்ப்பந்தங்களை நிவர்த்தித்து விடவேண்டு மென்று பல வருஷங்களாகக் கேட்டு வந்தும், செவிடன் காதில் சங்கூதியது போலாகி விட்டதால், கூடிய சீக்கிரத்தில் அந்த நிர்ப்பந்தங்களை ஸிலோன் கவர்ன்மெண்டாரைக் கொண்டு நிவர்த்தித்து விடுவதற்குத் தகுந்த ஏற்பாடுகளைச் செய்யவேண்டு மென்று இந்தியா கவர்ன்மெண்டாரை இந்தக் கான்பரென்ஸ் மிகுந்த மரியாதையுடன் கேட்டுக் கொள்ளுகிறது. கிரமமான காலவரையறைக்குள் ஸிலோன் கவர்ன்மெண்டார் தகுந்த ஏற்பாடுகளைச் செய்யாவிடில், ஸிலோன் தோட்டங்களுக்காக இந்தியாவில் ஆள் சேர்க்க முடியாமல் தகுந்த தடையை ஏற்படுத்தி விடவேண்டு மென்று இந்தக் கான்பரென்ஸ் கேட்டுக் கொள்ளுகிறது''

மற்றொரு அபூர்வமான சங்கதியை நான் சபையோருக்குத் தெரிவித்துக் கொள்ள விரும்புகிறேன். இந்தியாவிலிருந்து ஸிலோனுக்குச் செல்லும் அநேக பிரயாணிகள் மண்டபம் காம்பில் எவ்வித கோரண்டைன் நிர்ப்பந்தகளு மன்னியில் போக விடப்படுவது எனக்கு நேரில் தெரியும். ஸிலோனிலுள்ள பிளேக் கமிட்டித் தலைவருடைய அனுமதிச் சீட்டின் பேரில் அவர்கள் தாராளமாகப் போக விடப்பட்டுவிடுகிறார்கள் அவர் விதிகளை கவனிக்காமல் ஸ்தலத்திலுள்ளவர்களின் சிபார்சின் பேரிலேயே அனுமதிச் சீட்டுகளைக் கொடுத்து விடுகிறார். மண்டபம் கோரண்டைன் காம்பில் எவ்வித நிர்ப்பந்தங்களுக்கு மாளாக்காமல் "இன்னாரை" தாராளமாக வரவிட்டு விடவேண்டு மென்று அவர்கள் அனுமதிச் சீட்டுகளில் கண்டிருக்கிறது. எவ்விதத் தத்துவத்தையும் கவனித்து அந்த சர்ட்டிபிகேட்டுகள் கொடுபடுவதில்லை யென்பது தங்களுடைய கவர்ன்மெண்டுக்

குத் தெரிந்திருக்கும். குறிப்பிட்ட நபர் எவ்விதத் தொத்து வியாதியினாலும் பீடிக்கபட்டாம லிருக்கிறாரா, தொத்து வியாதி வியாபித்திருக்கும் பிரதேசத்திலிருந்து அவர் வரவில்லையா வென்பதைக் கூட விசாரிக்காமல் அந்த அனுமதிச் சீட்டுகளைக் கொடுத்து விடுகிறார்கள். இவ்விதமான அனுமதிச் சீட்டுகளை ஸிலோன் கவர்ன்மெண்டார் கொடுத்துக்கொண்டு இங்கு மாத்திரம் நிர்ப்பந்தங்களை வைத்திருப்பது நியாயமா வென்றே நான் கேட்கிறேன்.

ஒரு ஜில்லா சர்ஜன் தப்பாக சர்ட்டிபிகேட்டு கொடுத்து விட்டா ரென்று ஸிலோன் கவர்ன்மெண்டாரும் இந்த கவர்ன்மெண்டாரும் சீறி விழுந்திருக்கையில். அவர்களுடைய சொந்த உத்தியோகஸ்தர்களே கிரமமில்லாத அனுமதிச் சீட்டுகளைக் கொடுப்பதை அவர்கள் தடுக்காமலிருப்பது ஆச்சரியமாக இருக்கிறது.

இத்தியாதி காரணங்களினாலும், பொது ஜனங்களுக்கு இந்த விஷயத்தில் மிகுந்த வருத்த மேற்பட்டிருப்பதினாலும், கவர்ன்மெண்டார் கொஞ்சமும் தவக்க மன்னியில் என்னுடைய தீர்மானத்தை அங்கீகரிப்பார்களென்றே நம்புகிறேன்.

### கனம் அண்ணாமலை செட்டியார்

தீர்மானத்தை ஆமோதித்தார்.

### கனம் மிஸ்டர் கில்மன்

மேன்மை தங்கிய பிரபுவே,

கனம் அண்ணாமலை செட்டியார் நினைத்திருப்பது போல் மண்டபம் கோரண்டைன் காம்பில் இருக்கும் ஊழல்களை நிவர்த்திக்க வேண்டுமென்பது மட்டில் சபையின் முன்பாகக் கொண்டுவரப்பட்டிருக்கும் தீர்மானத்தின் கருத்தல்ல. 1917-ம் வருஷம் நவம்பர் மாதத்தில் பிறப்பிவிக்கபட்ட 341-ம் உத்திரவை விரிவுபடுத்தி பிப்பிரவரி மாதத்தில் செய்யப்பட்டிருக்கும் 150-ம் நம்பர் கவர்ன்மெண்டு உத்திரவை ரத்து செய்துவிட வேண்டுமென்பதே இத் தீர்மானத்தின் தாத்பரியம். பொதுவாக நிர்ப்பந்தங்களை அகற்றிவிடும் விஷயத்தைப் பற்றி கிறிஸ்மஸ் விடுமுறையின் போது நான் ஸிலோன் கவர்ன்மெண்டு அதிகாரிகளைக் கண்டு பேசினேன். இந்த நிர்ப்பந்தங்கள் இருந்து வருவதினால் தங்களுடைய தேசத்திற்குள் தொத்து வியாதிகள் கொண்டுவரப் படுவதில்லை யென்று அவர்கள் நம்புவதினால் இந்த நிர்ப்பந்தங்சள் இருந்துவர வேண்டு மென்றே அவர்கள் அபிப்பிராயப்படுகிறார்கள். ஸிலோனிலிருந்து இந்தியாவுக்குள் பிளேக் கொண்டு வரப்பட்டிருப்பதாக எனக்குத் தெரியவில்லை, கனம் ராமநாதபுரம் ராஜாவுக்குத் தகவல் தெரிந்திருந்து அவர் எனக்கு அறிவித்தால் நான் அதைப்

பற்றி யோசிக்கிறேன். ஆதியில் செய்யப்பட்ட உத்திரவில் விலோனுக்குச் சொல்லும் பிரயாணிகள் கோரண்டைன் நிர்பந்த மில்லாமல் போகவேண்டு மானல் அடியிற்கண்ட விஷயங்களைப்பற்றிய தகவல்கள் அடங்கிய ஜில்லா சர்ஜனுடைய சர்ட்டிபிகேட்டை ஆஜர்ப்படுத்த வேண்டுமென்று கண்டிருந் தது. முதலாவதாக விலோனில் அவருடைய வாசஸ்தலம் சொல்லப்பட வேண்டும். அந்த தேசத்தைத் தொத்து வியாதிகளிலிருந்து காப்பாற்று வதற்கு இந்தத் தகவல் அவசியமென்பதை இந்த சபையாரே ஒப்புக் கொள்ளுவார்கள். இரண்டாவதாக அவர் சர்ட்டிபிகேட்டு பெறுவதற்கு ஒருவாரம் முன் முதல் தொத்து வியாதியினல் வியாபிக்கபடாத பிரதேசத் தில் வசித்திருக்க வேண்டும். மூன்ருவதாக அவர் வியாதியினல் பீடிக்க படாமலிருக்க வேண்டும். இரண்டாவது பிறந்த கவர்ன்மெண்டு உத்திர வில் இந்த விஷயங்களைப்பற்றி சரியான தகவல்களைக் கொடுக்கும் பொறு ப்பு ஜில்லா சர்ஜன்மீது சுமற்தப்பட்டது. நான் கனம் அகமது தம்பி மரக் காயருடன் பேசிக்கொண்டிருந்ததில் இந்த நிர்ப்பந்தங்களினல் சர்ட்டிபி கேட்டுகள் கொடுபடுவது குறைந்து விட்டதென்றும், பிரயாணி இங்கு வசித்துவரு மிடத்தையும் விலோனில் அவர் வசிக்கப் போகும் இடத்தை யும் ஜில்லா சர்ஜன் தெரிந்து கொண்டு சொல்லுவது அவருடைய சக்திக்கு மீறிய காரிய மென்றும் தெரிவித்துக் கொண்டார். இந்த அம்சத்தில் நான் கனம் மெம்பருக்குப் பரிகாரம் செய்து விடலாம். ஸ்தலத்ததிகாரிக ளான தாசில்தார்கள், டிப்டி தாசில்தார்கள் இவர்கள் பிரயாணியின் தொழில் வாசஸ்தலம் முதலியவைகளைப் பற்றி சர்ட்டிபிகேட்டு கொடுத்து விடலாம். அவர்கள் அவ்வித சர்ட்டிபிகேட்டுகளைக் கொடுத்து விட்டால், ஜில்லா சர் ஜன்கள் அவைகளை எற்றுக்கொண்டு விடலாம். ஆகவே தொழில், குடியிரு ப்பு இந்த இரண்டு விஷயங்களிலும் டிப்டி தாசில்தார்களின் அந்தஸ்துக்கு க்குறையாத ஸ்தலத்ததிகாரிகளின் சர்ட்டிபிகேட்டுகளை எற்றுக்கொண்டு விடலாமென்று ஜில்லா சர்ஜன்களுக்கு உத்திரவு அனுப்பி விடுகிறேன். பிறகு சம்பந்தப்பட்ட பிரயாணி எவ்வித வியாதியினுலும் பீடிக்கப்பட்டிருக் வில்லை யென்கிற ஒரு அம்சத்தைப்பற்றித் தான் ஜில்லா சர்ஜன் சர்ட்டிபி கேட்டு கொடுக்க வேண்டியிருக்கும். அவ்விதம் செய்து விட்டால் கனம் மெம்பர் சபையின் முன்பாகக் கூறிய அவ்வளவு குறைகளுக்கு இடமிராது. விலோன் பிளேக் கமிட்டித்தலைவர் கொடுக்கும் அனுமதி சீட்டின் பேரில் பிரயாணிகள் தாராளமாகப் போக விடப்பட்டு விடுகிருர்களென்று கனம் அகமது தம்பி மரக்காயர் சொல்லியிருக்கிருர். அந்த அனுமதிச் சீட்டுக்காக விண்ணப்பம் செய்து கொள்ளுகிறவர் சம்பந்தப்பட்ட பிரயாணி எந்த இடத் திற்கு தான் வருகிருரென்று உறுதி சொல்ல வேண்டும். அந்தப்பிரயாணி அங்கு போய்ச்சேர்ந்தால் 15 நாட்கள் வரையில் வைத்திய உத்தியோகஸ் தர்களின் பார்வையிலிருந்து வர வேண்டும். இந்த இரண்டு நிர்பந்தங்களுமி ருப்பதால் அனுமதி சீட்டுகள் பிரயோஜன மில்லை யென்று கனம் அகமது

தம்பி மரக்காயர் சொல்லும் ஆட்சேபனைகள் ஆதாரமற்றதாகி விடுகின்றன. இத்தியாதி காரணங்களை உத்தேசித்து கனம் மெம்பர் தம்முடைய தீர்மானத்தை வாபீஸ் வாங்கிக் கொண்டு விடுவாரென்று நம்புகிறேன்.

கனம் ரங்காச்சாரியார் ஒரு கமிட்டியை நியமிக்க வேண்டு மென்று திருத்தப்பிரேரணை கொண்டு வந்தார்.

## கனம் அகமது தம்பி மரக்காயர்

மேன்மைதங்கிய பிரபுவே,

இது மிகவும் முக்கிய விஷயமானதினாலும் கூடிய சீக்கிரத்தில் இந்த கஷ்டங்களை நிவர்த்தித்து விட வேண்டு மென்பதை கவர்ன் மெண்டாரே பல தடவைகளில் ஒப்புக்கொண்டிருப்பதினாலும் என்னுடைய தீர்மானம் சுலபமாக அங்கீகரிக்கப்பட்டு விடுமென்றே நான் நினைத்தேன். தாசில்தார்களையும் டிப்டி தாசில்தார்களையும் அடையாள சர்ட்டிபிகேட்டுகள் கொடுக்கும்படி செய்து விடலாமென்று கனம் கில்மன் சொல்லியது நல்ல யோசனையாகத் தானிருக்கிறது. ஆனால் நான் சொல்லியதை கனம் மெம்பர் சரியாக கவனிக்க வில்லை. ஸ்டிரேயிட்ஸ் செட்டில் மெண்டுகளுக்குப் போவதற்கு பாஸ் போர்ட்டுகள் வாங்க சப்மாஜிஸ்திரேட்டுகள் முதலிய உத்தியோகஸ்தர்களிடம் போவதில் உள்ள சிரமங்கள் எனக்கு அறிவிக்கப் பட்டிருக்கின்றன. அதுவுங் கஷ்டமான வேலைதான். அதற்காக பணத்தையும் காலத்தையும் அவர்கள் செலவிட வேண்டியிருக்கிறது. அவர்களுக்கு இப்பொழுது இருந்துவரும் பல ஜோலிகளுடன் இதையும் சேர்ப்பது அவர்களுக்குத்தான் சவுகரியமா? பிரயாணிகளுக்குத்தான் சவுகரியமா? சர்ட்டிபிகேட்டு கொடுப்பதற்கு அநேக சிக்கலான விஷயங்களைப்பற்றி யோசிக்க வேண்டியிருக்கிறது. சர்ட்டிபிகேட்டின் வாசகம் தெளிவாக இல்லை யென்று கனம் ரங்காச்சாரியார் சொல்லியிருக்கிறார். "இன்னார் இன்ன இடத்தில் வசித்து வந்தாரென்றும் அந்த இடம் தொத்து வியாதியினால் பீடிக்கப்பட வில்லை யென்றும் நான் சர்ட்டிபை செய்கிறேன்." என்று அதில் கண்டிருக்கிறது. ஜில்லாசர்ஜனுக்குள்ளந்த இடம்தொத்துவியாதியில்லாமலிருக்கிறதென்று தெரியுமென்று கனம் சர்ஜன் ஜெனரல் சொல்லியிருக்கிறார். சர்ட்டிபிகேட்டில் வியாதியினால் பீடிக்கப்பட வில்லை யென்று தான் சொல்லப்பட்டிருக்கிறது. கனம் ரங்காச்சாரியார் சொன்ன பிரகாரம் தொத்து வியாதியினால் பீடிக்கப்பட வில்லை யென்றிருந்தாலன்றி வீணான சிக்கல்களுக்கு இடமுண்டாகும். வியாதியில்லாத மனுஷ்யனே கிடையாது. இவைகளெல்லாம் தீர ஆலோசிக்க வேண்டிய காரியங்கள். அதற்காகத்தான் ஒரு கமிட்டியாரின் பரிசீலனைக்கு அனுப்பி அவர்கள் விசாரணை செய்து என்ன செய்யலாமென்று சொல்லவிட்டு விடவேண்டு மென்று கனம் ரங்காச்சாரியார் திருத்தப்பிரேரணை கொண்டு வந்தார். அது நல்ல யோஜனை. கனம் மிஸ்டர் கில்ம

னிடமும் நேற்று இந்த யோசனையைத்தான் நான் சொன்னேன். அதை ஒப்புக் கொண்டு விட்டால் என்று சொல்லி வருகையில்

கனம் கில்மன்:—என்னது?

கனம் அகமது தம்பி மரக்காயர்---விலோன் கவர்ன்மெண்டாருக்கும் நமது கவர்ன்மெண்டாருக்கும் பிடித்தமான ஒரு கமிட்டியின் யோஜனைக்கு இந்த விஷயத்தை அனுப்பி விடலாம். இந்த விதிகள் நல்லவைகளா அல்லவா வென்பதைப் பிறகு நாம் முடிவு செய்ய சவுகரியமாயிருக்கும். ஆகவே உத்யோகஸ்தர்களும் உத்தியோகஸ்தர்களல்லாதவர்களு மடங்கிய ஒரு கமிட்டியின் பரிசீலனைக்கு இந்த விஷயத்தை அனுப்பி கமிட்டி செய்யும் சிபார்சுகளை விலோன் கவர்ன் மெண்டாருக்கு அனுப்பி விடலாம். இந்தக் கஷ்டத்தைக் குறைப்பதற்கு அது தான் தகுந்த உபாயம்.

கனம் ராமநாதபுரம் ராஜா விலோனிலிருந்து இங்கு பிளேக் நோய் கொண்டுவரப்படுகிறதென்று சொன்னதற்குத் தகவல் கொடுக்கும்படி கனம் கில்மன் கேட்டார். சில வருஷங்களுக்கு முன் தஞ்சாவூரில் ஒரு பிளேக் கேஸ் ஏற்பட்டது. விலோனிலிருந்து வந்த ஒரு முகம்மதியர் இறந்து போக அவரை எரித்து விட்டார்கள். இந்த விஷயத்தை நான் கவர்ன் மெண்டாருடைய அறிவிப்புக்குக் கொண்டு வந்ததின் பேரில் வியாதியினால் மரிக்கும் முகம்மதியர்களை எரிக்கக்கூடாதென்று கவர்ன்மெண்டார் உத்திரவு செய்திருக்கிறார்கள். தனுஷ்கோடியில் மற்றொரு கேஸ் ஏற்பட்டிருக்கிறது. பம்பாய் சேட் ஒருவர் 1919ம் வருஷத்தில் தனுஷ்கோடியில் வந்திறங்கிய வுடன் ஜுரத்தினால் பீடிக்கப்பட்டு இறந்து விட்டார். அதிகாரிகள் அவர் பிளேக்கினால் இறந்து விட்டாரென்று சொன்னார்கள். தாசில்தாரும் ஜில்லா சர்ஜனும் அந்தப்பிரேதத்தை எரித்து விடும்படி உத்திரவு செய்தார்கள். எனக்குத் தந்தி கிடைத்தது. நான் உடனே கவர்ன் மெண்டாருக்குத் தெரிவித்து கலெக்டருக்கும் முகம்மதியப்பிரேதங்களை எரிக்கக்கூடாதென்று கவர்ன்மெண்டு உத்திரவு இருக்கிறதென்று தந்தி கொடுத்தேன். இந்த இரண்டு முக்கியமான கேஸ்களும் கவர்ன் மெண்டுக்குத் தெரிந்த விஷயம். ஆகவே விலோனிலிருந்து பிளேக் இங்கு கொண்டுவரப்பட்டதாக தமக்குத் தெரியவில்லை யென்று கனம் கில்மன் சொல்லியது சரியல்ல. கொளும்பிலிருந்து இன்னும் அநேக கேஸ்களும் இங்கு வந்து சேர்ந்திருக்கின்றன.

விலோன் பிளேக் கமிட்டித் தலைவர் கொடுக்கும் அனுமதிச்சீட்டின் பேரில் போகிறவர்கள் அங்கே 15-நாட்கள் வரையில் வைத்திய உத்தியோகஸ்தரின் பார்வையிலிருந்து வருவதாக கனம் மெம்பர் சொல்லியிருக்கிறார். நமது ஜில்லா சர்ஜனிடம் சர்ட்டிபிகேட்டு வாங்கிக் கொண்டு போகிறவர்களும் அங்கே ஒரு வாரம் வைத்திய உத்தியோகஸ்தரின் பார்வையி

ருந்து வரவேண்டியிருக்கிறது. ஆகவே வியோன் பிளேக் கமிட்டித் தலைவரி டம் அனுமதிச் சீட்டு வாங்கிக் கொண்டு போவதில் அவ்வளவு கஷ்டமில்லை. இந்த விஷயங்களை யெல்லாம் கமிட்டியில் விவாதித்து ஒருவிதமாக முடிவு செய்யலாம். நமது பிரஜைகள் படுங் கஷ்டங்களை நிவர்த்திக்க வேண்டு மென்கிற கவலை இந்த கவர்ன்மெண்டாருக்கு இருக்கும் பக்ஷத்தில் இவை களை யெல்லாம் நன்கு பரிசீலனை செய்து முடிவு செய்வதற்கு கமிட்டியை ஏற்படுத்துவது உசிதமானதினால் கனம் ரங்காச்சாரியார் கொண்டுவந்த திருத்தப்பி ரேரணையை அங்கீகரிக்கும்படி கவர்ன்மெண்டாரைக் கேட்டுக் கொள்ளுகிறேன். கஷ்டங்களை நிவர்த்திப்பதற்கு இதுதான் வழி. ஆகவே திருத்தப் பிரேரணையை அங்கீகரிக்கும்படி கேட்டுக் கொள்ளுகிறேன்.

## கனம் கில்மன்.

தங்களால் ஒழுங்கற்ற தென்று நிராகரிக்கப்பட்டுப் போன ஒரு திரு த்தப் பிரேரணையைப்பற்றி கனம் மெம்பர் தமது முடிவுரையில் பேசியிருக் கிறார். கோரண்டைன் விதிகளினால் ஏற்படுங் கஷ்டங்களை நிவர்த்திப் பதைப்பற்றி யோஜனை சொல்லுவதற்காக ஒரு கமிட்டியை ஏற்படுத்த வேண்டு மென்கிற பிரேரணையே சபையின் முன்பாக இல்லை. வைத்திய உத்தியோகஸ்தரைத் தவிர வேறுபெயர்வழிகளைக் கொண்டு சர்ட்டிபிகேட்டு கொடுக்கச்செய்யும் விஷயமும் சபையின் முன்பாக இல்லை. 1916ம் வரு ஷம் நவம்பர் மாதத்திய உத்திரவின் படிக்கும் ஜில்லா சர்ஜன் தான் சர்டி பிகேட்டுக் கொடுக்கலாம். வைத்திய சம்பந்தமான அம்சங்களைத்தவிர வேறு விஷயங்களில் அவருக்குப் பொறுப்பில்லாதபடி இப்போழுது அவ ருக்கு ஏற்படிருக்கும் வேலைகளைக் குறைக்கமுடியுமா வென்பதே கவனி க்க வேண்டிய விஷயம். நான் கனம் மெம்பருக்கு ஒரு யோஜனை சொல்லி, அதை அவர் ஒப்புக்கொள்ளுவதாயிருந்தால் கவர்ன்மெண்டார் அதன்படி நடந்து கொள்ளுவார்களென்று அறிவித்தேன். அதை அவர் ஒப்புக் கொள் ளாத வரையில் நான் அதை வாபீஸ் வாங்கிக்கொண்டு விடுகிறேன். அவர் தீர்மானத்தை வற்புறுத்து வதாயிருந்தால் கவர்ன்மெண்டார் எவ்வித மனோபாவத்தைக் கைக் கொள்ளுவார்களென்று நான் சொல்ல முடியாது. கனம் மெம்பர் தீர்மானத்தை வற்புறுத்தப் போகிறாரா வென்று மேன்மை தங்கிய கவர்னர் கேட்டார்.

ஒன்றுமில்லாமற் போவதை விட கனம் கில்மன் சொன்ன யோஜ னையையாவது ஒப்புக் கொள்ளுவதாக கனம் அகமது தம்பி மரக்கயார் சொன்னார்.

## மேன்மை தங்கிய கவர்னர்.

இந்த விதிகளை அனுஷ்டானத்தில் சுலபமாகச் செய்ய வேண்டு மென்கிற கவலை கவர்ன் மெண்டுக்கு மிருக்கிறது. பரஸ்பரம் சிநேகபாவத்து

டன் கலப்பமாக இந்த விதிகளை அனுஷ்டிக்கச் செய்ய வேண்டுமென்பதுதான் கவர்ன்மெண்டின் கருத்து. தீர்மானம் வாபீஸ் வாங்கிக் கொள்ளப்பட்டது.



[ஆகஸ்டு மாதம் 15-ம் தேதி நடந்த கூட்டம்.]



## ஸிலோனிலிருந்து தொத்துவியாதிகள் வராமல் தடுக்க ஏற்பாடு.

மேன்மைதங்கிய பிரபுவே, என்பேராலிருக்கும் தீர்மானத்தின்சாரம்சம் என்ன வென்றால்:—

"VII. ஸிலோனிலிருந்து பிளேக், அம்மை முதலிய தொத்து வியாதிகள் வராமல் தடுக்க தகுந்த நடவடிக்கை எடுத்துக் கொள்ள வேண்டுமென்று இந்த சபை சிபார்சு செய்கிறது."

இது சம்பந்தமாக சில வார்த்தைகள் சொல்லிக் கொள்ள விரும்புகிறேன். ஸிலோனுக்குச் செல்லும் இந்தியப் பிரயாணிகள் மீதுள்ள நிர்ப்பந்தங்களினால் மண்டபம் கோரண்டைன் காம்பில் அவர்கள் படும் அசவுகரியங்களையும் கஷ்டங்களையும் பற்றி விஸ்தாரமாக இந்த சபையில் நாம் அநேக தடவைகளில் விவாதித்திருக்கிறோம். நாம் எவ்வளவோ தடவைகளில் ஸிலோன் கவர்ன்மெண்டாரை வேண்டிக் கொண்டும் அவர்கள் நமது பிரயாணிகள் மீதுள்ள நிர்ப்பந்தங்களை நிவர்த்திக்கவு மில்லை; தளர்த்தவு மில்லை. சென்ற ஏப்ரில் மாதத்தில் நான் இந்த விஷயமாகத் தீர்மானங் கொண்டு வந்த போது கனம் கில்மன் பேசிய விவரம் கனம் மெம்பர்களுக்கு ஞாபகமிருக்கலாம். ஸிலோனிலிருந்து இந்தியாவுக்குள் பிளேக் நோயைக்கொண்டு வந்து விட்டதாகத் தமக்குத் தெரிய வில்லை யென்றும், கனம் ராமனாதபுரம் ராஜா விடம் தகவலிருந்து அவர் கொடுத்தால் அதைப்பற்றி யோசிப்பதாகவும் அவர் சொன்னார்.

அந்த சந்தர்ப்பத்தில் ஸிலோனிலிருந்து தஞ்சாவூருக்கும் தனுஷ்கோடிக்கும் வந்து சேர்ந்த இரண்டு பிளேக் கேஸ்களின் விவரங்களை நான் எடுத்துச் சொன்னேன். சென்ற 3-மாத காலத்திற்குள் கொளும்பிலேயே 22-பிளேக் கேஸ்களும் 29-வைசூரிக் கேஸ்களும் ஏற்பட்டிருக்கின்றன வென்றும், நாவல் பட்ரியா என்கிற ஒரு இடத்தில் மட்டும் 114 பிளேக்கேஸ்கள் ஏற்பட்டிருப்பதாகவும் உத்தியோகமுறையில் எனக்குத் தகவல் கிடைத்திருக்கிறது. இதிலிருந்து ஸிலோன் சுவர்க்கமல்லவென்றும், அந்த இடமும் தொத்து வியாதிக்கு ஆளாகிவிட்டதென்றும் ஏற்படுகிறது. இவ்வித நிலைமையில் இந்தியப் பிரயாணிகளுக்கு மண்டபம் காம்பில் ஸிலோன் கவர்ன்மெண்டார் நிர்ப்பந்தங்களை ஏற்படுத்தவேண்

டிய அவசியமே கிடையாதென்பதை இந்த சபையார் ஒப்புக்கொள்ளுவார்களென்றே நம்புகிறேன். அவர்களுடைய இடம் தீண்டப்படாமலிருந்தால், நம்மீது நிர்ப்பந்தங்கள் ஏற்படுத்துவது நியாயந்தான். இரண்டு இடமும் தொத்து வியாதிகளால் பீடிக்கப்பட்டிருக்கும் பொழுது ஸிலோனுக்குச் செல்லும் இந்தியப் பிரயாணிகள்மீது மாத்திரம் ஏன் நிர்ப்பந்தம் ஏற்படுத்த வேண்டும்? தாசில்தார்களையும் டிப்டி தாசில்தார்களையும் சர்ட்டிபிகேட்டு கொடுக்கும்படி செய்வதாக கவர்ன்மெண்டார் ஏற்கனவே சொல்லியிருந்தும் இதுவரையில் ஒன்றும் செய்யப்படவில்லை.

ஸிலோன் கவர்ன்மெண்டார் இந்தியாவிலிருந்து தங்களுடைய நாட்டிற்குள் தொத்து வியாதிகள் வராமல் தடுக்க விசேஷ கவலை எடுத்துக் கொண்டிருப்பது போல் நாமும் அங்கிருந்து இங்கே தொத்து வியாதிகள் வந்து சேர்ந்து விடாமல் தடுப்பது நியாயமானதினால், தலை மன்னாரில் ஒரு கோரண்டைன் காம்பை ஏற்படுத்தி, அங்கிருந்து இந்தியாவுக்கு வரும் பிரயாணிகள் புறப்படுமுன் நமது பிரயாணிகளைப் போலவே பார்வையிலிருந்து வரும்படி ஸிலோன் கவர்ன்மெண்டாருடன் ஏற்பாடு செய்துவிட வேண்டும் என்று எனக்குத் தோன்றுகிறது. இத்தியாதி காரணங்களைக் கொண்டு இத்தீர்மானத்தைப் பிரேரணை செய்து, கவர்ன்மெண்டார் நமது பிரஜைகளை காப்பாற்றுவதற்காக இந்த யோஜனையை கவனிப்பார்களென்று நம்புகிறேன்.

## கனம் நரஸிம்மய்யர்.

மேன்மைதங்கிய பிரபுவே,

நான் இத்தீர்மானத்தை ஆமோதிக்கக் கிளம்புகிறேன். பிரதமத்தில் சென்னை மாகாணத்தில் கஷ்டப்படும் தமது சகோதரப் பிரஜைகளுக்காக கனம் மெம்பர் தைரியமாகப் போராடுவதற்கு அவருக்கு என்னுடைய மனப்பூர்த்தியான வந்தனத்தைச் செலுத்துகிறேன். நேற்று அவரை தம்முடைய மார்க்க தர்மத்தைக் காப்பாற்றுவதற்காகப் போராடுகிறவரென்று யாரோ சொன்னார்கள். ஜனங்களுடைய தன் மதிப்பையும் உரிமைகளையும் காப்பாற்றுவதற்கும், அவர்களுடைய கஷ்டங்களைப் போக்குவதற்கும் அவர் போராடுவதை இப்போது காண்கிறேன். இரண்டு முக்கியமான காரணங்களை உத்தேசித்து கனம் மெம்பர் இந்த விஷயத்தில் பரிகாரம் தேடுகிறார். ஸிலோனிலிருந்தும் இதர இடங்களிலிருந்தும் பிளேக் முதலிய தொத்து நோய்கள் வந்து சேராமல் தடுத்து நம்மைக் காப்பாற்றிக் கொள்ள வேண்டுமென்பதை முதல் காரணமாகச் சொல்லியிருக்கிறார். நாம் கோரண்டைன் நிர்பந்தங்களை ஏற்படுத்துவதன் மூலமாக ஸிலோன் கவர்ன் மெண்டுக்கு புத்தி கற்பிக்கலாமென்றும் சொல்லியிருக்கிறார். இந்தியர்களிடம் தன் மதிப்பு இல்லாமல் அடியோடு போய்விடவில்லை. அது இன்னும் கொஞ்சமிருந்து கொண்டு தானிருக்கிறது. ஸிலோன் கவர்ன் மெண்டார் நமது பிர

யாணிகளை அவமானத்திற்கும் தொந்திரவுக்கும் ஆளாக்கும்பொழுது நாமும் பதிலுக்குபதில் செய்யலாம். கனம் அகமது தம்பி மரக்காயர் ஆண்மைத்த னமாக பதிலுக்குபதில் செய்து காட்டவேண்டு மென்று சொல்லுகிறார். அவ்வளவு துணிவாக அவர் நிற்பதற்கு நான் சந்தோஷப்படுகிறேன்.

## கனம் திவான் பகதூர் பி. ராஜ கோபாலாச்சாரியார்

மேன்மைதங்கிய பிரபுவே,

ஸிலோனிலிருந்து பிளேக், வைசூரி முதலிய தொத்து நோய்கள் இந்தியாவிற்குள் வராமல் தடுக்க அவசியமான ஏற்பாடுகளைச் செய்யவேண்டு மென்று தீர்மானத்தில் கண்டிருக்கிறது: ஸிலோனிலிருந்து பிளேக் வைசூரி முதலிய தொத்து வியாதிகள் எவ்வளவு தூரம் இந்தியாவில் வந்து சேரு கின்றன வென்றும், இப்பொழுதிருந்து வரும் ஏற்பாடுகளினால் அவைகளைத் தடுக்க எவ்விதம் சாத்தியப்படவில்லை யென்றும், இந்த ஏற்பாடுகளை எவ்வி தம் மாற்றினால் சவுகரியமாக இருக்கு மென்றும் இந்த தீர்மானத்தைக் கொண்டு வந்த கனம் மெம்பரும் அதை ஆமோதித்தவரும் சொல்லுவார் களென்றே எதிர்பார்த்தேன். இந்த தேசத்திலிருந்து ஸிலோனுக்குள் தொத்து வியாதிகள் போய் சேராமல் தடுக்க அந்த கவர்ன் மெண்டார் என்ன ஏற்பாடுகளைச் செய்திருக்கிறார்களென்பதையே கனம் அகமது தம்பி மரக் காயர் விஸ்தாரமாகச் சொல்லிக் கொண்டு போனார். அந்த கவர்ன்மெண்டின் கட்சியை வாதிப்பதற்காக நான் இங்கில்லை. ஸிலோனுக்குச் செல்லும் நமது பிரயாணிகளின் மீது அந்த கவர்ன் மெண்டார் அனாவசியமான நிர்ப்பந்தங் களை ஏற்படுத்தியிருப்பதாக வைத்துக் கொண்டாலும் நாமும் அங்கிருந்து வரும் பிரயாணிகள் மீது அதே விதமான நிர்ப்பந்தங்களை ஏற்படுத்துவதற்கு அது ஒரு நியாயமாகுமா?

கனம் நரஸிம்மய்யர்,—நியாயந்தான்.

கனம் பி. ராஜகோபாலாச்சாரியார்:—நீங்கள் அவ்விதம் தான் சொல்வீர்களென்று எனக்குத் தெரியும். ஸிலோன் பிரஜைகள் இங்கு வருவ தாக இருந்தால் நீங்கள் சொல்லுகிற ஏற்பாடு சரிதான். ஸிலோனுக்குச் செல்லும் பிரயாணிகளிலும் அங்கிருந்து திரும்பி வருகிறவர் களிலும் 100க்கு 90பேர்கள் இந்தியர்கள். ஸிலோன் பெயர்வழிகளில் இங்கு வந்து போவது சொற்பத் தொகையினர் தான். தென்னிந்தியாவிலிருந்து ஸிலோனுக்குச் செல்லுகிறவர்களுக்கு இருந்து வரும் கஷ்டங்களைத் தான் கனம் அகமது தம்பி மரக்காயர் எடுத்துச் சொல்லி யிருக்கிறார். திரும்பி வரும்போது அவர்களுக்கு எவ்வித அசௌகரியமுமில்லை. சுலபமாக அவர் கள் வந்து சேர்ந்து விடுகிறார்கள். அவர்கள் திரும்பி வரும்போது அவர் களை நாம் எவ்வித நிர்ப்பந்தங்களுக்கு முட்படுத்துவதில்லை. இப்பொழு திருக்கிற கஷ்டங்களை நிவர்த்திப்பதற்காக "இந்தியாவிலிருந்து ஸிலோனுக்

குப் பிழைக்கச் செல்லும் நமது ஜனங்களின் மீது போகும்போதுள்ள அவ கேடான நிர்ப்பந்தங்கள் போதாதென்று திரும்பி வரும்போதும் நிர்ப்பந்தங்களை அவர்கள் மீது ஏற்படுத்துங்கள்'' என்று கனம் அகமது தம்பி மரக்காயர் சொல்லுகிறார். தென்னிந்தியாவின் க்ஷேமத்தைப் பற்றி காப்பதற்காக இந்த ஏற்பாட்டைச் செய்யும்படி கனம் மெம்பர் சொல்லவில்லை. பதிலுக்கு பதில் செய்யும்படிக்கே சொல்லுகிறார். இது சரியான காரியமென்று ஒப்புக் கொள்ள நான் தயாராகவில்லை. ஆனால் சிலோனிலிருந்து இங்கு பெருவாரியாக வியாதிகள் வந்து சேர்ந்து விடுகின்றனவென்றும், இப்பொழுதிருந்து வரும் நிர்ப்பந்தங்கள் போதவில்லை யென்றும் எனக்கு நிரூபித்துக் காட்டினால், அவசியத்திற்குத் தகுந்தபடி விதி முறைகளைக் கடுமையாகச் செய்ய நான் சித்தமாக இருக்கிறேன். அதற்கு எவ்வித காரணமும் சொல்லவில்லை. சிலோனிலிருந்து பிரயாணிகள் இரண்டு வழியாக நமது மாகாணத்திற்கு வந்து சேருகிறார்கள். கடல் வழியாக தூத்துக்குடிக்காவது அல்லது தலைமன்னார் வழியாகவாவது அவர்கள் வந்து சேருகிறார்கள். கடல் மார்க்கமாக வருகிறவர்கள் சாதாரணமாக கப்பல்பிரயாணிகளுக்குள்ள நிர்ப்பந்தங்களுக்குட்பட்டே வர வேண்டும். கப்பலில் தொத்து வியாதிகள் கண்டிருந்தால், அந்தக் கப்பலை ஒதுக்கிவைக்க வேண்டுமென்று விதியில் சொல்லப்பட்டிருக்கிறது. தலை மன்னார் வழியாக வருகிறவர்களை சிலோன் கவர்ன்மெண்டாரும் பரிசோதனை செய்கிறார்கள்; நமது வைத்திய உத்தியோகஸ்தர்களும் தனுஷ்கோடியில் அவர்களைப் பார்வையிடுகிறார்கள். தொத்து வியாதிகண்ட பெயர் வழிகள் தாமதிக்க வைக்கப்படுகிறார்கள். இந்த விதிகள் திருப்திகரமாக யில்லையென்றும், தென்னிந்தியாவுக்குள் வியாதிகள் வந்து சேர்ந்து விடுகின்றன வென்றும், அபிப்பிராய மிருக்கும் பட்சத்தில், அவைகளைப் பரிசீலனை செய்து கடுமையாகச் செய்யும்படி கனம் சர்ஜன் ஜெனரலைக் கேட்டுக்கொள்ளுகிறேன். பதிலுக்கு பதிலாக கடுமையான நிபந்தனைகளை நாமும் ஏற்படுத்த நான் சம்மதிக்க முடியாது. அவ்விதம் செய்வதானது நமது ஜனங்களுக்குத்தான் அதிகக் கஷ்டத்தை உண்டு பண்ணும். மண்டபம் கோரண்டைன் காம்பில் என்னுடைய இந்திய நண்பரொருவரிடம் நான் பேசிக்கொண்டிருந்தபோது இந்த விஷயம் என்னிடம் பிரஸ்தாபிக்கப்பட்டது. அங்கு அநேக முகம்மதியர்கள் தங்கிக் கிடந்தார்கள்; அவர்கள் தங்களைப்பட்சமாக நடத்துவதாகவும், சிலோன் கவர்ன்மெண்டார் இன்னும் நான்கு தினங்கள் தங்களை தாமதிக்கச் செய்யப்போவதாகவும் சொன்னார்கள். நமது பக்கத்திலும் இம்மாதிரியான நிர்ப்பந்தங்களை ஏற்படுத்தலாமா வென்று நான் கேட்டேன். "கூடவே கூடாது. போகையில் ஒருவாரமும் திரும்பி வருகையில் ஒருவாரமும் நீங்கள் எங்களை தாமதிக்க வைக்க மாட்டீர்களென்று நம்புகிறோம்'' என்று அவர்கள் பதில் சொன்னார்கள். இவர்கள் தான் சிலோனுக்குப் போய்த் திரும்புகிறவர்கள். இந்த விஷயத்தில் பதிலுக்கு பதில் செய்வது உசிதமென்று நான் சொல்லமாட்டேன். பதிலுக்கு பதில் செய்வது சரியல்ல வென்பதற்காக நான்

இவ்விதம் சொல்லுகிறேனென்று நினைத்துவிட வேண்டாம்; நமது எல்லையில் ஏற்படுத்தியிருக்கும் நிபந்தனைகள் தொத்து வியாதிகளைத் தடுக்கப் போதியனவா அல்லவா வென்பதை நான் பரிசோதித்துப் பார்க்க ஆட்சேபணையில்லை. அவைகள் திருப்திகரமாக இல்லாவிட்டால் தென்னிந்தியாவின் க்ஷேமத்தை உத்தேசித்து அவைகளைத் திருப்திகரமானதாகச் செய்வோம், கனம் மெம்பர் நான் சொல்லுவதை ஒப்புக்கொள்ளுவாரென்றேநம்புகிறேன். அவர் விரும்பினுல் பொது ஜன க்ஷேமத்தை மதித்து நான் பரிசீலனை செய்கிறேன்.

* * *

## கனம் மிஸ்டர் அகமது தம்பி மரக்காயர்.

மேன்மைதங்கிய பிரபுவே,

கனம் மெம்பர் சொல்லிய விவரங்களை நான் வெகு சிரத்தையுடன் கவனித்தேன். இத்தீர்மானத்தின் பலன் என்னவாகுமென்று எனக்குத் தெரியாமலில்லை. இந்த சபை இத்தீர்மானத்தை அங்கீகாரம் செய்தால் இந்தியர்களுக்கு இரட்டிப்புக் கஷ்டம் ஏற்படும். இங்கிருந்து போகிறவர்களுக்கு விலோன் கவர்ன்மெண்டார் சிட்சை விதிக்கிறார்கள். திரும்பி வருகையிலும் அவர்களுக்கு சிட்சை ஏற்படும். என்னுடைய ஜனங்களுக்கே இரட்டிப்பு சிட்சை வாங்கி வைக்க வேண்டுமென்பது என்னுடைய எண்ணமல்ல. ஒரு முக்கியமான தத்துவத்தை அனுசரித்தே நான் இத்தீர்மானத்தைக் கொண்டு வந்தேன். அது சுகாதாரத்தைப் பொறுத்த முக்கிய தத்துவம். இந்தியாவிலிருந்து விலோனுக்குப்போய்த் திரும்பி வருகிறவர்கள் சொற்பப் பேர்கள் தான். ஆனல் விலோனிலிருந்து இங்கு வியாதி வந்து சேர்ந்துவிட்டால், அது நாடெங்கும் பரவி பெருத்த அனர்த்தத்தை விளைவிக்கும். விலோன் அதிகாரிகள் மண்டபம் கோரண்டைன் காம்பில் நமது ஜனங்கள் மீது பெரும் நிர்ப்பந்தங்களை ஏற்படுத்தித் தொந்திரவு செய்கிறார்களே என்கிற குறையும் எனக்கு இருக்கிறது. இந்தக் கஷ்டங்களை நீக்க வேண்டுமென்று நாம் எவ்வளவோ கூக்குரல் போட்டும் பலனில்லை. சென்ற ஏப்பிரல் மாதத்தில் நான் சொன்ன பிரகாரம் கனம் கில்மன் சில போசனைகள் சொல்லியிருந்தார். இப்பொழுது நான்கு மாத காலமாகியும் ஒன்றும் செய்யப்படவில்லை. நாமும் பதிலுக்கு பதில் தனுஷ்கோடியில் ஒரு காம்பை ஏற்படுத்தி அங்கிருந்து வருகிற பிரயாணிகள் யாராயினும் அவர்களையும் ஏன் கோரண்டைனில் வைத்திருக்கக்கூடாது? அந்த எண்ணத்துடன் தான் நான் இத்தீர்மானத்தைக் கொண்டு வந்தேன். சென்ற ஏப்பிரல் மாதத்தில் தான் நிர்ப்பந்தங்களைக் குறைக்க வேண்டுமென்று நான் தீர்மானங்கொண்டு வந்திருப்பதால் இப்பொழுது அதே தீர்மானத்தைக் கொண்டு வருவது ஒழுங்காகாது. ஆனல் கனம் மெம்பர் இந்த விஷயத்

தைப் பரிசீலனை செய்து தம்மாலியன்றதைச் செய்வதாகச் சொல்வதால் எப்பொழுதும் போல் அது வீண் வார்த்தையாகப் போய்விடாதென்றும் அவரே இந்தக் கஷ்டங்களைக் கண்டு கொள்ளுவாரென்றும் நம்புகிறேன்.

கனம் பி. ராஜகோபாலாச்சாரியார்:—விலோனுக்குப் போகும் ஜனங்களுக்கிருக்கும் கஷ்டங்களைப்பற்றி விசாரிப்பதாக நான் சொல்லவில்லை. இப்பொழுது இருக்கும் விதிகள் வியாதிகள் வந்து சேராமற் றடுக்கப் போதியனவா வென்று பார்த்து, அவசியமிருந்தால் அவைகளை பலப் படுத்துகிறோம்.

கனம் மெம்பர் கொடுத்த வாக்குறுதியின் மேல் தாம் தீர்மானத்தை வற்புறுத்தவில்லை யென்று கனம் அகமது தம்பி மரக்காயர் தெரிவித்துக் கொண்டார். அக்கிராசனாதிபதியுடைய அனுமதியின் பேரில் தீர்மானம் வாபீஸ் வாங்கிக்கொள்ளப்பட்டது.

---

## (அக்டோபர் மாதம் 23-ம் தேதி நடந்த கூட்டம்)

---

## நாடக மேடைகளும் ஸினிமோட்டோகிராப் காட்சிச் சாலைகளும்.

மேன்மைதங்கிய பிரபுவே,

என்பேரால் அடுத்தாற் போலுள்ள கீழ்க்கண்ட தீர்மானத்தை நான் பிரேரணை செய்கிறேன்:—

"XXXVI இப்பொழுது நாடக சாலைகளையும் ஸினிமோட்டோ கிராப் காட்சிச்சாலைகளையும் நிர்வகிக்கும் பொறுப்பை மாகாண இலாகாக்கள் என்கிற முதலாவது ஜாப்தாவிலிருந்து மாற்றப்பட்ட இலாகாக்களைப்பற்றிய இரண்டாவது ஜாப்தாவிற்கு மாற்றி விடும்படி இந்த சபையிலுள்ள உத்தியோகஸ்தர்களல்லாத மெம்பர்கள் சிபார்சு செய்கிறார்கள்"

பொது ஜனங்கள் போகக்கூடிய இடங்களை பற்றிய 1888ம் வருஷத்திய II-வது ஆக்டின்படி லைசென்ஸ் பெற்று நடந்து வரும் நாடகசாலைகளையும், காட்சிச் சாலைகளையும் கண் காணிக்கும் பொறுப்பு ஸ்தல ஸ்தாபனங்களிடமே இருந்து வரவேண்டுமென்று நான் கொஞ்ச காலமாக அபிப்பிராயப்படுகிறேன். காலரா, அம்மை, பிளேக், இன்புளுயன்ஸா முதலிய தொத்து வியாதிகள் வியாபித்திருக்கும் இடங்களில் நாடகம் முதலிய காட்சிகளை நடத்தி வரவிடுவது டவுனிலுள்ள ஜனங்களின் க்ஷேமத்திற்குக்

கெடுதலுண்டுபண்ணும். அவ்விதம் நாடகங்களையாவது காட்சிகளையாவது நடத்துவது டவுனுக்கு அபாயத்தை விளைவிக்கக்கூடியதென்று முனிசிபல் கவுன்சில்கள் அபிப்பிராயப்பட்டால் அவைகளாவது அதன் நிர்வாகிகளாவது அவைகள் நடைபெருமல் தடுக்க 1884-ம் வருஷத்திய ஜில்லா முனிசிபாலிட்டிகள் சட்டத்தில் இடமிருக்கிறதாக எனக்குத் தெரியவில்லை. கொஞ்சகாலமாக இன்புளுயன்ஸா என்னும் வியாதி இந்தியா முழுவதும் வெளிதேசங்களிலும் வியாபித்திருக்கிறது. அநேக இடங்களில் உயிர்ச்சேதங்கள் வெகு அதிகமாக ஏற்பட்டிருக்கின்றன. நெரிசலான இடங்களில் கூட்டங்களை நடத்துவதும், காட்சிச் சாலைகளை நடத்துவதும் இந்த வியாதி பரவுவதற்கு இடந் தருவதால் அவைகளை நிறுத்தி விடவேண்டுமென்றுதேர்ந்த வைத்திய நிபுணர்கள் யோசனை சொல்லி யிருக்கிறார்கள்.

மேலே சொன்ன சட்டத்தின் 5-வது பிரிவின்படி முனிசிபல் எல்லைக்குள் ஒரு இடத்தை அந்தக் காரியத்திற்காக உபயோகப்படுத்த சேர்மனிடம் லைசென்ஸ் பெறவேண்டும். முனிசிபல் எல்லைக்குள் பொது ஜனங்கள் போய்க் கூடக்கூடிய இடங்களில் முனிசிபல் சபைகளுக்கு ஆதிக்கமிருக்கவேண்டு மென்றே இந்த விதி ஏற்படுத்தப்பட்டிருக்கிறது. நகரின் க்ஷேமத்தை உத்தேசித்து அந்த இடங்களில் காட்சிகளை நடத்துவது கூடாதென்று தோன்றினல் அவைகளைத் தடுக்க சட்டபூர்வமாக முனிசிபல் சபைகளுக்கு அதிகாரமில்லாமற் போனுல் பிரயோஜனமில்லை. நாளடைவில் முனிசிபாலிட்டிகளாக மாறக் கூடிய அநேக யூனியன்களுமிருப்பதால், லோகல் போர்டுகளுக்கும் இந்த அதிகாரமிருக்க வேண்டும். யூனியன்களிலும் ஜனநெரிசலுள்ள இடங்களில் முனிசிபாலிட்டிகளைப் போலவே சுகாதார வேலைகளையும் கவனித்து வரவேண்டி யிருக்கிறது. இவைகளெல்லாம் முனிசிபாலிட்டிகள், லோகல் போர்டுகள் இவைகளைப் பொறுத்த விஷயம். ஒழுங்கான நாடகங்களையோ, காட்சிகளையோ மட்டில்தான் நடத்தலாமென்றிருந்தாலும் அருசிகரமானவும், ஜாதித்துவேஷத்தை வளர்க்கக் கூடியனவுமான காட்சிகளும் நாடகங்களும் நடைபெறக் கூடுமாதலால், அதனுல் பொதுஜன சாவதானத்திற்கு எவ்விதக் குறைவும் நேரிடாமல் பார்த்துக் கொள்வதற்கு ஸ்தல ஸ்தாபனங்களும் அதில் கவலையுள்ளவைகளாதலால் அவைகள் சரியானபடி கண் காணிப்பு செய்யக் கூடும். ஆகவே இப்பொழுது திருத்தப்படப் போகும் ஜில்லா முனிசிபாலிட்டிகள் சட்டத்திலும் லோகல் போர்டுகள் சட்டத்திலும் முறையே முனிசிபாலிட்டிகளுக்கும் லோகல் போர்டுகளுக்கும் இந்த அதிகாரத்தைக் கொடுத்துவிடவேண்டும். பிறகு இவைகளும் ஸ்தல சுயஆட்சியின் கீழ்வந்து விடும். இந்தக் காரணங்களைக் கொண்டு இத்தீர்மானத்தை அங்கீகரிக்கும்படி கேட்டுக் கொள்ளுகிறேன்.

* * *

தீர்மானம் கடைசியாக வாபீஸ் வாங்கிக் கொள்ளப்பட்டது.

## மதஸ்தாபனங்களை மந்திரிகளிடம் மாற்ற வேண்டும்.

மதஸ்தாபனங்களை மேன்பார்வை பார்க்கும் பொறுப்பையும் மந்திரிகளிடம் மாற்றி விடவேண்டுமென்று கனம் அக்மது தம்பி மரக்காயர் கொண்டுவரவிருந்த தீர்மானத்தை மேன்மை தங்கிய கவர்னரின் அனுமதியின் பேரில் வாபீஸ் வாங்கிக் கொண்டார்.

---

(நவம்பர் மாதம் 20ம்தேதி நடந்த கூட்டம்)

---

## கப்பலோட்டும் சாஸ்திர போதனா பாடசாலைகள்.

மேன்மை தங்கிய பிரபுவே,

என்பேராலிருக்கும் தீர்மானமாவது:—

"கப்பலோட்டும் சாஸ்திரத்தைக் கற்றுக் கொடுக்க முக்கியமான இடங்களில் பாடசாலைகளை ஏற்படுத்த வேண்டியது அவசியமென்று இந்த சபை சிபார்சு செய்கிறது"

இது ஒரு முக்கியமான விஷயம். யுத்தத்திற்குப் பிறகு இதன் அவசியம் அதிகமாகிவிட்டது. நான் பல துறைமுகங்களிலிருந்தும் தருவித்திருக்கும் புள்ளிவிவரங்களிலிருந்து பாய்க் கப்பல்கள் அதிகமாகக் கட்டப்பட்டு வருவது தங்களுக்குத் தெரியவரும். மலபார் பக்கத்தில் 100 பாய்க் கப்பல்களும், கோதாவரி ஜில்லாவில் இப்பொழுது கட்டப்பட்டு வருகிற 11 கப்பல்களைத் தவிர 21 கப்பல்களும், தூத்துக்குடியில் 20 கப்பல்களும், நாகப்பட்டணத்தில் ஒன்றும், ரங்கூனில் 12ம் யுத்தகாலத்தில் கட்டப்பட்டிருக்கின்றன. கப்பல்கள் அதிகப்பட்டு விட்டதினாலும், 1859-ம் வருஷத்திய வியாபாரக் கப்பல்களைப் பற்றிய சட்டத்தை கவர்ன்மெண்டார் மாற்ற சம்மதிக்காததாலும் பயிற்சி பெற்ற இந்திய மேட்டிகளுக்கும் தலைவர்களுக்கும் வெகு கிராக்கி ஏற்பட்டுப் போய்விட்டது. இதற்கு சாட்சியமாக பர்மா கவர்ன்மெண்டாருக்கு ரங்கூன் வியாபார சபையார் அனுப்பியிருக்கும் கடிதத்தைப் படிக்கிறேன்.

"1889-ம் வருஷத்திய வர்த்தகக் கப்பல்களைப் பற்றிய சட்டத்தின் 73-வது பிரிவை மாற்ற கவர்ன்மெண்டார் மறுத்து விட்டதின் பலனாக 300 டன்னுக்கு அதிகமாகவுள்ள பாய்க் கப்பல்களுக்கு மேட்டிகளையும் மாஸ்டர்களையும் தேடிப் பிடிப்பது வெகு சிரமமாயிருப்பதை நாங்கள் தங்களுடைய அறிவிப்புக்குக் கொண்டு வருகிறோம். கவர்ன்மெண்டு பரிக்ஷைகள் ஆங்கில பாஷையிலேயே நடைபெறுவதால் இந்தியக் கடல்களில் வெகுகால

மாகக் கப்பலோட்டி, இந்தியாவிலும் பர்மாவிலும் கட்டப்படக் கூடிய பாய்க் கப்பல்களை ஓட்டக்கூடிய திறமையுள்ள சுதேசி மாலுமிகள் சர்ட்டிபிகேட்டுகள் பெற முடியாமற் போய்விட்டதையும் தங்களுக்குத் தெரிவித்துக்கொள்ளுகிறோம். இந்த மாலுமிகளை எந்த முக்கியமான துறை முகங்களிலுமுள்ள துறைமுக அதிகாரி முன்பாக ஆஜராகி வாய்மொழியாக தேசபாஷையில் பரிட்சை கொடுக்கவும், அவர்கள் துறைமுக ஓரமாகச் செல்லும் பாய் கட்டிக் கப்பல்களை ஓட்டத் திறமையுள்ளவர்களாக விருக்கும் பட்சத்தில் அவர்களுக்குத் துறைமுக உத்தியோகஸ்தர்கள் சத்தியாக யோக்கியதா பத்திரம் கொடுக்கவும் ஏற்பாடு செய்ய வேண்டுமென்று கேட்டுக் கொள்ளுகிறோம்.”

மேலும், கப்பலோட்டிகள்விஷயத்தைப்பற்றி சீக்கிரம் கவர்ன்மெண்டார் ஆலோசனை செய்ய வேண்டுமென்றும் அந்த சபையார் கேட்டுக் கொண்டிருக்கிறார்கள். இந்தக் கடிதத்தின் பிரதி யொன்றை அந்த சபையார் சென்னை ஆங்கில வியாபார சபைக்கு அனுப்பி யிருந்தார்கள். அவர்களும் செப்டம்பர்மாதம் 24-ம்தேதி நடந்த மீட்டிங்கில் ரங்கூன் சபையாரின் யோசனைகளை ஆதரிப்பதென்று தீர்மானித்து அந்தகடிதத்தை தங்களுடைய அபிப்பிராயத்துடன் சென்னை கவர்ன்மெண்டாருக்கு அனுப்பி யிருக்கிறார்கள்.

கப்பலோட்டும் சாஸ்திர போதனா பாடசாலைகளை ஏற்படுத்தித் தர வேண்டு மென்று எண்ணிறந்த விஞ்ஞாபனங்கள் எனக்கு எட்டியதின் பேரில் சென்ற ஆகஸ்டு மாதம் 12ம் தேதி நடந்த கப்பல் கட்டும் கமிட்டியின் மீட்டிங்கில் நான் ஒரு தீர்மானங் கொண்டு வந்தேன். அந்தக்கமிட்டியாரும் என்னுடைய யோசனைப் பிரகாரம் செய்யும்படி கவர்ன் மெண்டாருக்கு சிபார்சு செய்வதென்று ஏகோபித்துத் தீர்மானித்திருக்கிறார்கள். நாகப்பட்டணத்தில் பரிக்ஷார்த்தகமாக ஒரு பாடசாலையை ஏற்படுத்துவதாக இருந்தால் வாடகையில்லாமல் அதற்கு இடங்கொடுப்பதாகவும் நான் கமிட்டியாரிடம் தெரிவித்துக் கொண்டேன். அதை நான் இங்கு மீண்டும் ஊர்ஜிதப்படுத்து கிறேன். இந்தத் தொழிலைச் செய்து வருகிறவர்கள் பாடசாலையை ஏற்படுத்த வேண்டு மென்று வெகு துறையாக விருப்பதால் நாகப்பட்டணத்தில் ஒரு பாடசாலையை ஏற்படுத்தும்பக்ஷத்தில் அது மிகவும் திருப்திகரமாக நடைபெறு மென்பதில் சந்தேக மில்லை.

அதிகச்சம்பளம் வேண்டுமென்று ஏககாலத்தில்எல்லா ஆங்கிலக் கப்பலோட்டிகளும் கப்பித்தான்களும் கரையிலிறங்கி விட்ட காலத்தில் நாகப்பட்டணத்தில்முகம்மதிய கப்பலோட்டிகள் தான் பிரிட்டிஷ்இந்தியா ஸ்டீம்நாவிகேஷன்கம்பெனிக்கு பெரும் உதவிசெய்து அந்த நெருக்கடியில் காப்பாற்றினார்கள். நாகப்பட்டணம் அவ்வளவு முக்கியமான இடம். அவர்கள் வெகுதிறமையாக கப்பல்களை ஓட்டி ரங்கூன் போய் சேர்ந்து அங்கு ஆளில்லாமல்

கிடந்த கப்பல்களையும் கிளப்பினார்கள். இது நடந்து 20 வருஷ காலமா கிறது. கனம் ஸர் பிரான்ஸிஸ் ஸ்பிரிங்குக்கும் கனம் ஸர் கார்டன் பிரேசருக் கும் இந்த சம்பவம் ஞாபகமிருக்கலாம். மேலும் பெல்ஜியத்தில் செய்வது போல்செம்படவர்களுக்கும் படகோட்டிகளுக்கும் இத்தொழிலைக் கற்பித்துக் கொடுக்கலாம்.

1915ம் வருஷத்தில் பம்பாயில் நடந்த தொழில் மகாநாட்டில் மீன் இலாகா உதவி டைரக்டர் மிஸ்டர் வி. கோவிந்தன் இது சம்பந்தமாக ஒரு வியாசம் படித்தார். அதன் முக்கிய சாராம்சம் என்ன வென்றால்:

"இந்த தேசத்திலுள்ள தலைவர்கள் இது வரையில் இந்த விஷயத் தில் கவனம் செலுத்தாமலே இருந்து விட்டார்கள். விவசாயம் தொழில் இவைகளைப்போல கப்பலோட்டிகளின் தொழிலைப்பற்றி படித்தவர்கள் சாதா ரணமாகக்கூட விவாதிப்பதில்லை. நமது தேசத்திலுள்ள வியாபாரிகள் கடல் மூலமாக ஏராளமாக ஏற்றுமதி இறக்குமதி வியாபாரம் செய்து வந்தும் அவர்கள் கூட இந்த விஷயத்தில் கவனம் செலுத்தாமலிருப்பது ஆச்சரிய மாயிருக்கிறது. நமது இந்தியக் கப்பலோட்டிகளுடைய பிள்ளைகளைப்பயிற்சி செய்வதற்காக மிஸ்டர் முகம்மது ஈசுப் இஸ்மாயில் சென்றவருஷம் முதல் பம்பாய் துறைமுகத்தில் ஒரு சிறிய கப்பலை வைத்திருப்பதைத் தவிர அவர் களுடைய பரம்பரையான தொழிலைப்பற்றி நவீன சாஸ்த்ரோக்தமான அறி வை அவர்களுக்கு போதிக்க திடமான முயற்சி செய்யப்பட வில்லை. இவ் வித நிலைமையில் மிஸ்டர் யூசப் இஸ்மயிலாவது முன்வந்து வேலைசெய்வது பாராட்டத்தகுந்தது. பம்பாய் கவர்ன்மெண்டாரும் அதற்குத் தகுந்த உத வியும் ஆதரவு மளித்து வருவது குறிப்பிடத்தகுந்தது. உலகத்திலுள்ள பல தேசங்களுடன் இந்தியா செய்து வரும் ஏராளமான வியாபாரத்தைப்பற்றிய புள்ளி விவரங்களை நான் இந்த சந்தர்ப்பத்தில் எடுத்துக் கூறவேண்டிய அவ சிய மில்லை. 1908ம் வருஷம் முதல் 1913ம்வருஷம் வரையில் 5 வருஷகால த்தில் இந்தியத் துறைமுகங்களுக்கு வந்து போயிருக்கும்கப்பல்களின் சங் கியையும் அவைகளின் டன்எடையையும் கீழே கண்ட புள்ளிவிவரங்களிலிரு ந்து அறியலாம்.

| | கப்பல்களின் சங்கியை | மொத்த டன். |
|---|---|---|
| 1908—09 | 8,001 | 12,910,823 |
| 1909—10 | 8,042 | 14,597,091 |
| 1910—11 | 8,435 | 14,984,528 |
| 1911—12 | 8,868 | 16,616,435 |
| 1912—13 | 8,737 | 17,451,985 |

அந்தக் கப்பல்கள் எந்தெந்த தேசங்களைச் சேர்ந்தனவென்பதை கீழே கண்ட புள்ளி விவரங்களிலிருந்து காணலாம்:—

| | 1908--09 | 1909--10 | 1910--11 | 1911--12 | 1912--13 |
|---|---|---|---|---|---|
| பிரிட்டிஷ் | 4,238 | 4,722 | 4,751 | 5,117 | 5,116 |
| ஜெர்மன் | 437 | 455 | 419 | 412 | 503 |
| ஆஸ்திரியா—ஹங்கேரி | 156 | 220 | 205 | 213 | 245 |
| ஜப்பான் | 79 | 63 | 77 | 121 | 197 |
| நார்வே | 106 | 95 | 104 | 134 | 131 |
| இத்தாலி | 76 | 81 | 84 | 83 | 90 |
| பிரான்ஸ் | 55 | 56 | 56 | 58 | 47 |

இந்தியக் கப்பல் கம்பெனிகளுக்குச் சொந்தமான கப்பல்களையும் மேலே கண்டவைகளுடன் சேர்த்திருக்கிறது; அவைகள் அநேகமாகக் கடலோரமாகச் செல்லக் கூடிய கப்பல்கள்தான்; மேலும் அன்னிய நாடுகளுக்குச் சொந்தமான கப்பல்களின் எண்ணிக்கையையும் அவைகளின் டன் எடையையும் கவனிக்கையில் இந்தியக் கப்பல்களின் சங்கியை மிகக்குறைவென்பதைச் சொல்லவும் வேண்டுமோ? அன்னிய நாட்டுக்கப்பல்களின் சங்கியையும் அதிகப்பட்டுக்கொண்டே வருகிறது. ஆகவே இனியாவது இந்தியாவும் தலைக்கிளம்பி கப்பல் வியாபாரத்தில் தனக்குள்ள பாகத்தை கைக்கொள்ள வேண்டிய காலம் வந்து விட்டது. அப்போதைக் கப்போது சுதேசிக் கப்பல் கம்பெனிகளையும் ஸ்தாபிக்க முயற்சிகள் செய்யபட்டிருக்கின்றன. ஆனால் அவைகளில் பெருத்த நஷ்ட முண்டாகி மறுபடியும் அத்தொழிலில் நமது ஜனங்கள் தலையிட நம்பிக்கையில்லாமல் போய் விட்டது. எனவே, அத்துறையில்மேலே முயற்சிகளைச் செய்யுமுன் அந்த கம்பெனிகள் படுத்துப்போன தற்குக்காரண மென்ன வென்பதைக்கண்டறிய வேண்டும். இப்பொழுதிருந்து வரும் கப்பல் கம்பெனிகளுடன் போட்டி போட முடியாமலே அந்தக் கம்பெனிகள் முழுகிப்போய் விட்டதாகச் சொல்லப் படுகிறது. அதுவும் உண்மைதான். ஆனால் அது மாத்திரம் ஏகதேச காரணமன்று; அதிலிருந்து நமது ஜனங்களும் தப்பான தீர்மானத்தைச் செய்து கொண்டு விடுகிறார்கள். நவீனத் தொழிலபிவிருத்தியில் போட்டி யென்பது ஒருசகஜமான அம்சம். எனவே புதிதாகத் தொழிலில் இறங்குபவர் போட்டியையும் எதிர்பார்ப்பதோடு பிறருடனும் போட்டி போடுகிறார். ஏராளமானமூல தனத்தையும் நவீன சாஸ்திர அறிவையும் படைத்த அன்னிய நாட்டுப் பெயர் வழிகளுடன் நமது தேசத்திலுள்ள நெசவு தொழிலாளர்களும், கம்மாளர்களும் இதர தொழிலாளர்களும் போட்டி போடவில்லையா? அவர்கள் தங்களு

டைய போட்டிப் பெயர் வழிகளின் சரக்குகளைப் பார்க்கிறார்களே தவிர அந்தப் பெயர் வழிகளை நேரில் அவர்களுக்குத் தெரியாது. ஆனால் கப்பல் கம்பெனிக்குப் போட்டிக்குப்போட்டி கதவடியிலேயே இருக்கிறது. அதனால் மன அதைர்ய முண்டாகி விடுகிறது. ஆனால் நிர்வாகத்தைத் திறமையாக நடத்திவர அவசியமான அறிவில்லாததும், நவீன முறையில் பயிற்சி பெற்ற இந்தியர்கள் பலர் கப்பலோட்டுவதற்குக் கிடைக்காமலிருப்பதும் தான் இந்தக்கம்பெனிகள் விருத்தியடையாமல் க்ஷீணித்துப் போனதற்கு உண்மையான காரணம். இந்தக் கம்பெனிகளைத் ஸ்தாபித்தவர்கள் இந்தியாவின் மூலதனத்தை மட்டில் தான் எதிர்பார்த்தார்கள்; ஆனால் இந்தத் தொழிலை நடத்துவதற்கு ஞான முள்ள இந்தியர்களும், கப்பல்களை ஓட்டு வதற்கு போதிய இந்தியர்களும் இல்லாவிடில் எவ்விதம் இத்தொழில் தலைக்காட்ட முடியும். ஜப்பானில் நடந்தேறி வந்திருக்கும் முறையை நமக்கு வழிகாட்டியாக எடுத்துக் கொள்ளலாம். ஒரு நூற்றாண்டுக்கு முன் ஜப்பானியர்களுக்கு கப்பலோட்டும் திறமை இருந்ததில்லை. அவர்கள் சீனக்கப்பல்களைக் கொண்டே தங்களுடைய பண்டங்களை தொலைவிடங்களுக்கு அனுப்பி வந்தார்கள். ஆனால் இந்தியா பிராசீன காலமுதல் "கீழ்க்கடல்களின் ராணி" என்கிற பெயர் பெற்றிருந்திருக்கிறது; இன்னமும் கப்பலோட்டிகளின் சந்ததிகள் அந்தத் தொழிலைச் செய்து கொண்டுதான் வருகிறார்கள். அவர்களுக்குப் போதிய சாஸ்திர அறிவு மட்டில் தான் இல்லாமலிருக்கிறது. பெலுஜிஸ்தானம் முதல் சிட்டகாங் வரையில் சமுத்திரக்கரை யோரமாக பல கப்பலோட்டும் வகுப்பினரிருந்து வருகிறார்கள். அவர்கள் பாய் கப்பல்கள் மூலமாக கடலோரப் போக்குவரத்துகளைச் செய்து வருக்கிறார்கள்; சிலர் ஸான்ஸிபாருக்கும் சிங்கப்பூருக்கும் கூட தங்களுடைய பழக்கத்தைக் கொண்டு ஜாக்கிரதையாகப் போய் வந்து விடுகிறார்கள். அவர்களுக்கு நவீன சாஸ்திர ஆராய்ச்சிகளையும், இயந்திரங்களை உபயோகிக்கும் மார்க்கங்களையும் கற்றுக் கொடுத்து விட்டால், மற்ற தேசத்தினருக்கு இவர்கள் சோடை போய்விடமாட்டார்கள். இந்தத் தொழிலைச் செய்வதற்குத் தகுதியான பெயர் வழிகள் நமது நாட்டிலிருக்கிறார்கள். அவர்களை சரியானவழிகளில் பயிற்சி செய்து வைக்க வேண்டியதுதான். ஜப்பான் ஆரம்பத்தில் தன்னுடைய தேசத்தினருக்கு நவீன சாஸ்திர முறையைப் பயிற்சி செய்து வைத்தது. அதற்காக சிலரைப் பொறுக்கி அவர்களைக் கொஞ்சம் பயிற்சி செய்வித்து, அவர்களுக்கு நல்ல அனுபோகம் ஏற்படுவதற்காக அன்னிய நாட்டுக்கப்பல்களில் சேவகம் செய்ய அனுப்பினார்கள். ஜப்பானிலும் இதர தேசங்களிலும் மாலுமிகளையும் கப்பலோட்டிகளையும் தயார் செய்வதற்காக போதனைபாடசாலைகளிருந்து வருகின்றன. பெல்ஜியத்தைப்பாருங்கள். ஒவ்வொரு முக்கியமான துறை முகத்திலும் செம்படவர்களையும் கப்பலோட்டிகளையும் பயிற்சி செய்து வைப்பதற்காக பாடசாலைகளிருந்து வருகின்றன. ஆண்ட்வர்ப்பிலும் ஆஸ்டெண்டிலும் கவர்ன் மெண்டு செலவில் உயர்தர சாஸ்திரக்கல்விபோதிக்கும் பாடசாலைகள் நடந்து வருகின்றன. 10-வய

தானவுடன் செம்படவப்பிள்ளைகளை இந்தப்பள்ளிக் கூடங்களில் சேர்த்துக் கொள்ளுகிறார்கள். அதற்குள்ளாக அவர்கள் ஆரம்பக்கல்வி பெற்று விடுகிறார்கள். ஆறுவருஷகாலம் அவர்கள் இந்தப்பாடசாலைகளில் பயிற்சி பெற்ற பிறகு அனுபவத்தில் பழகுவதற்காக அவர்களை மீன்பிடிக்கும் கப்பல்களில் அனுப்புகிறார்கள். பரிக்ஷார்த்தகாலம் தாண்டிப் போனவுடன் கவர்ன்மெண்டாரால்நியமிக்கபட்டிருக்கும்ஒருசபையார் அவர்களைப்பரிட்சை செய்து யோக்கிய தாபத்திரம் கொடுக்கிறார்கள். கொஞ்சகாலம் அவர்கள் மீன் பிடிக்கும் கப்பல்களில் வேலைப்பார்த்துப் பழகிய பிறகு உயர்தர அறிவைப்பெற விரும்புகிறவர்கள் உயர்தரக் கலாசாலையில் சேர்ந்து கப்பலோட்டிகளாகவும் எஞ்சினீர்களாகவும் ஆகிவிடுகிறார்கள்.

இந்தத் தொழிலில் பயிற்சி அடைவதற்கு சாதாரணக் கல்வி அறிவும் அவர்களுக்கு இருக்கவேண்டியதவசியம். அதே மாதிரி தான் இந்தியாவிலும் செய்யவேண்டும். தொழில் மர்மத்தை அவர்களுக்குக் கற்றுக்கொடுக்க ஆரம்பிக்குமுன் ஆங்கிலத்திலும் இதர விஷயங்களையும் அவர்களுக்கு போதிக்கவேண்டும். அவ்விதப் பாடசாலைகளை கிரமமாக இந்தியாவில் ஏற்படுத்தி விடலாம். எவ்வளவு சீக்கிரமாக பொது ஜன க்ஷேமத்தில் அக்கரையுள்ளவர்கள் முன் வந்து இதைச் செய்கிறார்களோ அவ்வளவு நன்மையுண்டாகும்.''

நமது கவர்ன்மெண்டாரும் இவ்விதப் பள்ளிக்கூடங்களை ஏற்படுத்தலாமா வென்பதைப்பற்றி எல்லா துறைமுக உத்தியோகஸ்தர்களுடைய அபிப்பிராயங்களையும் தெரிந்து அறிவிக்கும்படி மாகாண துறைமுக உத்தியோகஸ்தரை செப்டம்பர் மாதம் 17-ம் தேதியுள்ள நம்பர் 410—2, உத்திரவு மூலமாகக் கேட்டு விட்டிருப்பதாகத் தெரிகிறது. எல்லா துறைமுக உத்தியோகஸ்தர்களும் நான் சொல்லிய யோசனையை ஆதரித்திருப்பார்களென்றே நான் நம்புகிறேன். சென்னை மாகாணத்தில் பதிவு செய்யப்பட்டிருக்கும் இந்தியக் கப்பல்களின் தொகையை காட்டும் புள்ளி விவரங்கள் என்னிடத்திலிருக்கின்றன. யாழ்ப்பாணத்திலும் 111 கப்பல்கள் பதிவாகி யிருக்கின்றன. அவைகள் யாழ்ப்பாணத்தில் பதிவாகியிருந்தபோதிலும் சென்னை மாகாணக் கரையோரமாக நடமாடி வருகின்றன. பாய்க்கட்டி கப்பல்கள் ஏராளமாக இருந்து வருவதை உத்தேசித்தும், தங்களுடைய கப்பல்களை ஓட்டத் திறமையான பெயர் வழிகள் இல்லாமல் சொந்தக்காரர்கள் திண்டாடுவதை உத்தேசித்தும், எல்லா முக்கியமான இடங்களிலும் கப்பலோட்டும் சாஸ்திர போதன பாடசாலைகளை ஏற்படுத்தி பயிற்சி பெற்ற மேட்டிகளைத் தயார் பண்ணிவிட வேண்டியது கவர்ன்மெண்டின் கடமையாகும். ஒரு துறை முகத்திலிருந்து மற்றொரு துறை முகத்

திற்குச் சரியானபடி கப்பலை ஓட்டிக்கொண்டு போக சக்தியுள்ள பெயர் வழிகளில்லாமல் அநேக கப்பல்கள் கடலில் முழுகிப் போயிருக்கும் சங்கதி எனக்குத் தெரியும். இப்பொழுதே அனுபோக ஞானமுள்ளவர்கள் பலர் வேலையிலிருந்து வருகிறார்கள். அவர்களுக்குக் கப்பலோட்டும் சாஸ்திரத்தின் முக்கிய அம்சங்களை வெகு சுலபமாக போதித்து விடலாம். நான் சொல்லும் யோசனை சிரம சாத்தியமான காரியமுமன்று; அதனால் கவர்ன்மெண்டுக்கும் அதிகச் செலவு பிடித்துவிடாது. நாகப்பட்டணத்திலாவது பரிசூார்த்தமாக ஒரு பாடசாலையை ஏற்படுத்தி இந்த முடையை அடக்கலாமென்பதை தாங்கள் ஒப்புக்கொள்ளுவீர்களென்றே நினைக்கிறேன். ஆகவே கவர்ன்மெண்டார் மிகவும் முக்கியமான என்னுடைய தீர்மானத்திற்குத்தக்க ஆதரவளிப்பார்களென்றே நம்புகிறேன். அவ்விதம் செய்வதானது ஏராளமாக இத்தொழிலில் பணத்தைப் போட்டிருக்கும் பல வியாபாரிகளுக்குப் பேருபகாரமாயிருப்பதுடன், இத்தொழில் வலுவுறுவதற்கும் இடத்தை உண்டுபண்ணும் என்று சொன்னார்.

## கனம் பி. ராஜகோபாலாச்சாரியார்.

மேன்மைதங்கிய பிரபுவே,

கனம் அகமது தம்பி மரக்காயருடைய தீர்மானத்தில் கவர்ன்மெண்டாருக்குப் பரிபூரணமான அனுதாபமிருக்கிறது. கப்பல் கட்டும் கமிட்டியின் முன்பாக சென்ற ஆகஸ்டு மாதத்தில் கனம் மெம்பர் இந்த விஷயத்தைப் பிரஸ்தாபத்திற்குக் கொண்டு வந்தார். நாகப்பட்டணத்தில் தாம் ஒரு பள்ளிக்கூடத்தை ஏற்படுத்தப் போவதாகவும், அதின் பாதிச் செலவைத் தாமே கொடுப்பதாகவும் அவர் சொல்லி யிருந்தார். பரம்பரையாக கப்பலோட்டும் தொழில் செய்து வருகிறவர்களுக்குமிடத்தில் இத்தொழிலைக் கற்றுக் கொடுப்பதற்குப் பாடசாலைகளை ஏற்படுத்த கல்வி இலாகா அதிகாரிகள் வேண்டிய வசதிகளைச் செய்து தரவேண்டுமென்று கமிட்டியார் சிபார்சு செய்தார்கள். நாகப்பட்டணம் சம்பந்தப் பட்டவரையில் கனம் மரக்காயருடைய வேண்டுகோளை அனுகூலமாக கவனிக்கவேண்டுமென்றும் கமிட்டியார் சொல்லி யிருந்தார்கள். அந்த சிபார்சு கிடைத்தவுடன் அத்தீர்மானத்தையே மாகாணத் துறைமுக உத்தியோகஸ்தருக்கு அனுப்பி, இதர துறைமுக உத்தியோகஸ்தர்களுடைய அபிப்பிராயங்களையும் கேட்டுத் தெரிந்து கொண்டு தமது அபிப்பிராயத்தைத் தெரிவிக்கும்படிக்கும், கற்பித்துக் கொடுக்க வேண்டிய பாடம், கற்பிக்க வேண்டிய பாஷை, உபாத்தியாயர்கள் விஷயம், பிள்ளைகள் தேடித் தருதல், பரிக்ஷை முறை, தேறியவர்களுக்கு உத்தியோகத்துக்கு வழி இந்த அம்சங்களையும் யோசித்துச் சொல்லும்படிக்கும் எழுதியிருக்கிறோம். செய்

டம்பர் மாதம் 17-ந்தேதி தான் இந்தக் கடிதம் போயிருக்கிறது. அவருடைய பதில் கிடைத்தவுடன் இந்த விஷயம் முழுவதையும் கவர்ன்மெண்டார் யோசித்து முடிவு செய்வார்கள். இந்த சந்தர்ப்பத்தில் கனம் அகமது தம்பி மரக்காயரும் கனம் யாகுப் ஹஸேனும் செய்த அருமையான பிரசங்கங்களில் பொதிந்து கிடக்கும் விஷயங்களேயும் நாங்கள் அப்பொழுது கவனித்துக் கொள்ளுகிறோம். ஆகவே இப்பொழுது அவசரப்பட்டுக் கொண்டு கனம் மெம்பர் இத்தீர்மானத்தை வற்புறுத்தாமல், கொஞ்சம் அவகாசம் கொடுப்பாரென்றே நம்புகிறேன்.

கனம் மெம்பர் வேண்டிக் கொண்டதற்கிணங்க கனம் அகமது தம்பி மரக்காயர் தமது தீர்மானத்தை வாபீஸ் வாங்கிக்கொண்டார்.

---

## 1919

### [மார்ச்சு மாதம் 11-ம் தேதி நடந்த கூட்டம்.]

---

### திருத்திரைப்பூண்டி—வேதாரணியம் இருப்புப் பாதை.

மேன்மைதங்கிய பிரபுவே,

என்பேராலிருக்கும் தீர்மானமாவது:—

திருத்திரைப் பூண்டி—வேதாரணியம் இருப்புப் பாதையை கூடிய சீக்கிரத்தில திறந்து வைக்க ஏற்பாடு செய்ய வேண்டுமென்று இந்த சபை ஆலோசனை சபையுடன் கூடிய கவர்னருக்கு சிபார்சு செய்கிறது.”

இது வெகுகாலமாக பாக்கியிலிருக்கிற விஷயம். 13-லட்சம் ரூபாய் செலவில் இந்த இருப்புப்பாதை போடப்பட்ட தென்பது கனம் மெம்பர்களுக்குத் தெரிந்திருக்கலாம். இவ்வளவு பணத்தை மண்ணில் போட்டுவிட்டு, சாமான்களேயும் கெட்டுப் போகவிட்டு, வட்டியும் நஷ்டமாகவைப்பதில் என்னலாபம்? இந்த இருப்புப்பாதையினல் லாபம் வர வழியில்லாமல் அதை சும்மா போட்டு வைப்பதால் அதைக் காப்பாற்றுவதற்கு வருஷம் 1-க்கு 9000 ரூபாய் செலவிட வேண்டியிருக்கிறது. சுமார் 3வருஷத்திற்கு முன்பாக இந்த இருப்புப்பாதை போடப்பட்டது. இதைத் திறந்து வைக்கப் போகும் ஸமயத்தில் வண்டிகளே விடுவதற்கு தென்னிந்தியா ரயில்வே கம்பெனியாரிடம் போதிய தளவாடங்கள் இல்லாததாலும், அவைகள் வேறு முக்கியமான வேலேகளுக்குத் தேவையாக விருந்தாலும், இந்த

இருப்பாதையை இப்பொழுது திறந்து வைக்க முடியாதென்கிற செய்தி ஜில்லா போர்டுக்கு எட்டியது.

1911-ம் வருஷம் ஏப்பிரல் மாதம் 5-ம்தேதி வரவு செலவு திட்டத்தைப் பற்றிப் பேசுகையில் நான் இந்த சபையின் முன்பாக இந்த விஷயத்தைப் பிரஸ்தாபத்திற்குக் கொண்டுவந்து, தென்னிந்தியா ரயில்வே கம்பெனியார் தங்களிட மிருக்கும் வண்டிகளைக் கொண்டு வண்டித் தொடரை இந்த லயனில் விடமுடியாமலிருந்தால், மாயவரம் அரந்தாங்கியின் மத்தியில் ஓடும் வண்டித்தொடர்களில் ஒன்றைக் குறைத்து, திருத்துறைப்பூண்டிவேதாரணியத்திற்கு இடையே விடலாமென்று யோசனை சொன்னேன். ரயில்வே கம்பெனியார் அவ்விதம் செய்யமுடியாதென்று சொல்லி விட்டார்கள்.

தென்னிந்தியா ரயில்வே கம்பெனியார் போதிய வண்டிகளைக் கொடுக்க சவுகரியமில்லாத நிலைமையிலிருந்ததை உத்தேசித்து தஞ்சாவூர் ஜில்லா போர்டார் 1918-ம் வருஷம் மார்ச்சு மாதம் 7-ம்தேதி நடந்த கூட்டத்தில் சையில் வண்டிகளைத் தயாராக வைத்திருந்த சென்னை மாகாண ரயில்வே கம்பெனியாரிடம் இந்த இருப்புப்பாதையை ஒப்புவிக்கலா மென்று தீர்மானம் செய்தார்கள். என்ன காரணங் கொண்டோ அந்த ஏற்பாடு ரத்தாகிப் போய்விட்டது எனக்கு ஆச்சரியமாக இருக்கிறது. கடைசியாக யுத்தம் முடிந்த பிறகு 1919-ம் வருஷம் பிப்பிரவரிமாதம் முதல் தேதி தஞ்சாவூர் ஜில்லா போர்டில் இந்த லைனை சீக்கிரம் திறந்து வைக்கும்படி கவர்ன்மெண்டாரைக் கேட்டுக் கொள்ள வேண்டுமென்று நான் ஒரு தீர்மானம் கொண்டு வந்தேன். இத்தீர்மானத்தை சபையார் ஏகோபித்து அங்கீகரித்தார்கள். போக்கு வரத்து சாதனமில்லாமல் ஜனங்கள் எவ்வளவு கஷ்டங்களுக்கும் அசௌகரியங்களுக்கும் ஆளாகிறார்களென்பதை நான் விரித்துக்கூற வேண்டிய அவசிய மில்லை. யுத்த நெருக்கடி இப்பொழுது தீர்ந்து போய் விட்டதினால் இனியாவது ஜனங்களுக்கு போக்குவரத்து வசதியைச் செய்து தர வேண்டியது கவர்ன்மெண்டின் கடமையாக இருக்கிறது. இந்த இருப்புப்பாதையைத் திறந்து வைப்பதால் பிரயாணிகளுக்கு சவுகரிய மேற்படுவதுடன் வேதாரணியம் உப்பளத்தில் கவர்ன்மெண்டாரால் உற்பத்தி செய்யப்படும் உப்பையும் ஏற்றி அனுப்ப சவுகரியமாயிருக்கும். வேதாரணியம் ஒரு முக்கிய வியாபார ஸ்தலம். மேலும் ஹிந்துக்களுக்கு அது ஒரு புண்ய க்ஷேத்திரம். ரயில் வசதியில்லாததினால் பிரயாணிகள் மிகவும் கஷ்டப்படுகிறார்கள்.

இத்தியாதி காரணங்களைக் கொண்டு கவர்ன்மெண்டார் கூடிய சீக்கிரத்தில் இந்த லயனைத் திறந்து வைக்கும்படி ரயில்வே கம்பெனியாரை வற்புறுத்துவார்களென்றே நம்புகிறேன். சொந்த ஜில்லா போர்டைச்

சேர்ந்தது. நீண்டகாலமாக பணம் மண்ணில் மடித்துப் போகும் நிலைமையில் கிடக்கிறது. ஜில்லா போர்டார் போட்டிருக்கும் ஏராளமான முலதனத்திற்கு இன்னமும் நஷ்ட மேற்படாமல் காப்பாற்ற வேண்டியது கவர்ன் மெண்டின் கடமையாக விருக்கிறது. ஆகவே என்னுடைய தீர்மானத்தை அங்கீகரிக்கும்படி கேட்டுக் கொள்ளுகிறேன்.

கனம் சிதம்பர நாதமுதலியார் தீர்மானத்தை ஆமோதித்தார்.

## கனம் டேவிட்ஸன்

மேன்மை தங்கிய பிரபுவே,

விஷய அட்டவணையில் 8-வது கேள்விக்கு கவர்ன்மெண்டார்கொடுத்திருக்கும் பதிலை கனம் மெம்பர் கவனிக்க வில்லை யென்று தோன்றுகிறது. கனம் அண்ணுமலை செட்டியார் கேட்டிருந்த அந்தக் கேள்விக்கு கூடிய சீக்கிரத்தில் இருப்புப்பாதையைத் திறந்து வைக்கும்படி கவர்ன்மெண்டார் ரயில்வே கம்பெனி ஏஜண்டுக்கு எழுதப் போவதாகவும், ஆனுல் எப்பொழுது இருப்புப்பாதை திறந்து வைக்கப்படு மென்று நிச்சயமாகச் சொல்ல முடியாதென்றும் பதில் சொல்லப்பட்டிருக்கிறது. யுத்த நெருக்கடி தீர்ந்து போய் விட்டதினுல் மேலே காரியங்களைச் செய்யலாமென்று கனம் அகமது தம்பி மரக்காயர் சொல்லுகிறுர். அதற்கு பதில் ரயில்வே கம்பெனி ஏஜண்டின் கடிதத்தில் கண்டிருக்கிறது. கனம் கார்டியூ அதை மற்றெரு சந்தர்ப்பத்தில் எடுத்துக் காட்டியிருக்கிறுர். இருந்தாலும் நான் அதைத் திரும்பப்படிக்கிறேன். ஏஜண்டு சொல்லி யிருப்பதாவது:—
"யுத்தம் தீர்ந்து போய்விட்டதினுல் எதாஸ்திதி ஏற்பட்டு விட்டதென்கிற தப்பு எண்ணம் பலருக்கு இருப்பதாகத்தெரிகிறது. ஆனுல் நிலைமை அதற்கு நேர் விரோதமா யிருக்கிறது. எங்களுடைய தளவாடங்களையும் வண்டிகளையும் பழுதுபார்க்க புதிதாக ஒருசாமானும் வந்து சேரவில்லை. ரயில்வே போர்டாருடைய உத்திரவின்பேரில் பலமாதங்களுக்கு முன்பாகவே எங்களுக்கு வேண்டிய சாமான்களுக்கு நாங்கள் இண்டென்ட் அனுப்பியும் எப்பொழுது அவைகள் வந்துசேருமென்றுகூட பதில் கிடைக்கவில்லை. ஆகவே யுத்தகாலத்திலிருந்த நிலைமையிலேயே நாங்கள் இருந்து வருவதுடன் எஞ்சின்களும் வண்டிகளும் அதிகமாக ஓடிப் பழுதாகி வருகின்றன."

ஆகவே தான் உடனே ஒன்றும் செய்ய முடியவில்லை. ரயில்வே போர்டிலிருந்து தளவாடங்கள் எப்பொழுது வந்து சேருமென்று தகவல் தெரிந்ததும் உடனே இந்த இருப்புப் பாதையைத் திறந்து வைக்க அனுமதிக்கும்படி எழுதுவதாக ஏஜண்டு என்னிடம் கூறியிருக்கிறுர். ஜில்லா போர்டில் நிறைவேறியிருக்கும் கனம் மெம்பருடைய தீர்மானத்

தைப்பற்றியும் இத்தீர்மானத்தைப் பற்றியும் ரயில்வே கம்பெனி ஏஜண்டுக்கு எழுதப்போகிறோம். ஆனால் கூடியசீக்கிரத்தில் இந்த வயனைத் திறந்து வைக்க ஏற்பாடு செய்ய வேண்டுமென்று தீர்மானத்தில் சொல்லப்பட்டிருப்பதால் நான் இதை ஒப்புக்கொள்ள முடியாது. என்ன செய்யலாமென்று தெரியாமலிருக்கிறது. சாத்தியமானதைச் செய்யும்படி வற்புறுத்துகிறோம்.

மேன்மை தங்கிய கவர்னர்:—கனம் மெம்பர் தீர்மானத்தை வற்புறுத்துகிறாரா?

கனம் மரக்காயர்:—இல்லை.

தீர்மானம் வாபீஸ் வாங்கிக் கொள்ளப்பட்டது.

[நவம்பர் மாதம் 29-ம் தேதி நடந்த கூட்டம்.]

## பாஸ் போர்ட்டு நிர்ப்பந்தங்கள்.

"ஸ்டிரேயிட்ஸ் செட்டில்மேண்டுகள், மலாய் நாடுகள் இவைகளுக்கு செல்லும் இந்தியப் பிரயாணிகளுக்கு 1917-ம் வருஷத்திய தேசப் பாதுகாப்பு சட்ட பாஸ்போர்ட்டு விதிகளின்படி இப்போழுது இருந்து வரும் நிர்ப்பந்தங்களை நீக்கிவிடும்படி இந்தியா கவர்ன்மேண்டாருக்கு சிபார்சு செய்யும்படி இந்த சபை ஆலோசனை சபையுடன் கூடிய கவர்னருக்குசிபார்சு செய்கிறது"

மேன்மைதங்கிய பிரபுவே,

உலக யுத்தம் தீர்ந்து, சமாதான மேற்பட்ட பிறகு தான் பலருடைய வேண்டுகோளுக்கிணங்கி நான் இத்தீர்மானத்தைக் கொண்டு வந்திருக்கிறேன். நாகப்பட்டணத்தில் பிரிட்டிஷ் இந்தியா ஸ்டீம் நாவிகேஷன் கம்பெனிக்குச் சொந்தமான கப்பல்களின் பாஸஞ்சர் ஏஜண்டாக நான் இருந்துவருவதால், பாஸ் போர்டைப் பெறுவதிலும், அதில் கண்ட விதிகளின்படி நடப்பதிலும் பிரயாணிகளுக்கு ஏற்படும் அசௌகரியங்களும் கஷ்டங்களும் எனக்குத் தெரிந்திருக்கின்றன. யுத்தகாலத்தில் சத்துரு தேசப் பிரஜைகள் நமது நாட்டிற்குள் வராமலும், நமது நாட்டிலிருந்து வெளியேறாமலும் தடுப்பதற்காகவே இந்த நிர்ப்பந்தங்கள் ஏற்படுத்தப்பட்டன வென்பது எனக்குத் தெரியாமலில்லை. சத்துரு தேசப் பிரஜைகள் விஷயத்தில் இந்த நிர்ப்பந்தங்கள் இருந்து வரவேண்டியதும் அவசியம் தான். ஆனால் மாட்சிமைதங்கிய சக்கரவர்த்தியின் இந்தியப் பிரஜைகளை சுலபமாக அடை

யாளம் கண்டுபிடித்து விடக்கூடுமாதலால் அவர்கள் விஷயத்தில் எவ்வித நிர்ப்பந்தங்களையும் ஏற்படுத்தி வைக்க வேண்டிய அவசியமேயில்லை.

பாஸ்போர்ட்டு பெறுவதில் பிரயாணிகள் படுங்கஷ்டங்களையும் அசௌகரியங்களையும் எடுத்துக்கூற அனுமதிக்க வேண்டும். முதலில், பக்கத்திலுள்ள சப்டிரஷரியில் ஒரு ரூபாய் செலுத்தி செலான்பெற்று, மனுவுடன்கூட அதை ஜில்லா கலெக்டருக்கு அனுப்பி விண்ணப்ப பாரம் பெற வேண்டும். இந்த மனுவை அனுப்பிய பிறகு டிப்டி தாசில்தார் முன்பாக ஆஜராகி விண்ணப்ப பாரத்தைப் பெற்றுக்கொள்ளும்படி அவருக்குக் கலெக்டரிடமிருந்து உத்திரவு கிடைக்கிறது. மனுதார் உண்மையாகப் போக வேண்டியவர்தானென்றும், அவர் வாஸ்தவத்தில் பிரிட்டிஷ் பிரஜைதானென்றும் டிப்டி தாசில்தாருக்குத் திருப்தி ஏற்பட்டாலொழிய பாரம் சுலபமாகக் கிடைக்கிறதில்லை. அவர் திருப்தியடைந்து விட்டால் பாரம் கிடைக்கிறது. அது கிடைத்த பிறகு அதைப் பிரயாணி பூர்த்தி செய்ய வேண்டும். அங்க அடையாளம், நிறம் இவைகளைக் குறிப்பிடுவதில் பிசகு செய்து விட்டால் அனர்த்தம் தான். இந்த மனுவை அனுப்பும்போது சிபார்சு செய்யும் உத்தியோகஸ்தர் முன்பாக அவர் ஆஜராகவேண்டும். அந்த உத்தியோகஸ்தருக்கு எல்லாம் சரியாக இருக்கிறதென்று திருப்தி ஏற்பட்டால் தான் அவர் பாஸ்போர்ட்டு கொடுக்கலாமென்று சிபார்சு செய்வார். இல்லாவிடில் அவர்களுக்கு ஆபத்துத்தானென்று அந்த பாரத்திலேயே தடித்த எழுத்தில் சிகப்பு மசியில் அச்சிடப்பட்டிருக்கிறது. அவர் கீழ்க்கண்டவாறு சிபார்சு செய்ய வேண்டியிருப்பதால் அதற்குப் பயந்து கொண்டு சிபார்சு செய்யும் உபத்திரவத்திற்கே ஆளாக இஷ்டப்படுவதில்லை.

"கீழே கையொப்பமிட்ட..................ஆகிய நான்.................. உடைய டிக்ளரேஷனில் கண்ட விஷயங்கள் எனக்கு நேரில் தெரிந்தவரையிலும் நம்பிக்கையின் பேரிலும் உண்மையானவைகளென்றும் எனக்கு நேரில் தெரிந்த அனுபவத்தின் பேரில் அவர் பாஸ்போர்ட்டு பெறத் தகுதியான பெயர் வழி யென்றும் டிக்ளேர் செய்கிறேன்."

ஆகவே தமக்கு ஆபத்து வந்து விடுமென்று பயந்து கொண்டு தாராளமாக அவர் சிபார்சு செய்யத்துணிய மாட்டார். பாஸ்போர்ட்டு கிடைத்த பிறகு பிரயாணி கப்பல் கம்பெனி ஏஜண்டுகளிடம் ஆஜராகி கப்பல் டிக்கெட்டு வாங்கிக் கொள்ள வேண்டும். பிறகு அவர் துறைமுகத்திற்குப் போய் சேர்ந்தால் போலீஸ் டிப்டிசூப்பரின்டெண்டு, இன்ஸ்பெக்டர், ஹெட்கான்ஸ்டேபிள், பல கான்ஸ்டேபிள்கள் இவர்கள் எல்லாருமாகக் கூடிக்கொண்டு அவருடைய பாஸ்போர்ட்டைப் பரிசோதனை செய்து பதிவு செய்து கொள்ளுகிறார்கள், அவர்கள் போடுகிற கேள்விகளுக்குக் கணக்கில்லை. அவற்றிற்

குப் பிரயாணி சரியான பதில் சொல்லாவிட்டால் பிரயாணம் தடைப்பட்டு போய் விடுகிறது. பிரயாணிகளுக்கு அக்கரைக்குப் போக வேண்டிய அவசியம் எனக்குத் தெரியும். கடைகள் தீக்கரையாகி விட்டன வென்றாவது கடன்காரர்கள் மஞ்சக்கடிதாசி வாங்கும் நிலைமைக்கு வந்து விட்டார்களென்றாவது, ஏஜண்டே கொடுமையான வியாதிக்கு ஆளாகியிருக்கிறுனென்றாவது சொல்லி முதலாளியாவது வேறு யாராவது உடனே வரவேண்டுமென்று அநேக பிரயாணிகளுக்கு வந்திருக்கும் தந்திகளை நான் நேரில் பார்த்திருக்கிறேன். இவ்வளவு அவசர நிலையில் மேலே கண்ட நிபந்தனைகளுக்கெல்லாம் அவர்கள் ஆளாகிப் போக வேண்டு மென்றால் அவசரத்திற்கு எவ்விதம் போய்ச் சேரமுடியும்?

இவைகளைத்தவிர பாஸ்போர்ட்டு கெடு பாஸ்போர்ட்டில் ஷரு எழுதி வாங்குதல் பாஸ்போர்ட்டைப் பாதுகாத்தல் போன்ற பல நிர்ப்பந்தங்களிருக்கின்றன. இந்த நிர்ப்பந்தங்கள் சில வியாபாரிகளுக்குத் தெரியாமலுமிருக்கலாம். தெரிந்தும் அவர்கள் மறந்திருக்கலாம். அதனாலும் பிரயாணம் தடைப்பட்டு விடும். பிரபுவே, 1917ம் நவம்பர் மாதம் 22ம் தேதி நடந்த கூட்டத்தில் ஸ்திரீகளையும் முக்கியமாக கோஷா ஸ்திரீகளையும் பாஸ்போர்ட்டு நிர்ப்பந்தங்களிலிருந்து விலக்கு செய்யவேண்டு மென்று நான் தீர்மானங்கொண்டு வந்ததின் பேரில் இந்த கவர்ன் மெண்டார் இந்தியா கவர்ன் மெண்டாருக்கு சிபார்சு செய்து 1918ம்வருஷம் நவம்பர் மாதம் 1027ம் நம்பர் அறிக்கையை வெளியிட்ட விவரம் கனம் மெம்பர்களுக்குத் தெரிந்திருக்கலாம், கடைசியாக இந்த அறிக்கையினால் அதிகப்பிரயோஜனமுமில்லை. கோஷா ஸ்திரீகள் புகைப்படம் எடுத்து அனுப்பவேண்டியதில்லை யென்றும் பாஸ்போர்ட்டு கொடுக்கும் அதிகாரிகள்முன்பாக ஆஜராக வேண்டியதில்லை யென்றும் பாஸ்போர்ட்டு கொடுக்கும் அதிகாரிகள் முன்பாக ஆஜராகவேண்டியதில்லையென்றும் மாத்திரம் சொல்லப்பட்டிருக்கிறதே தவிர சகல விதிகளிலிருந்து அவர்களை விலக்கு செய்ய வில்லை. அந்த அறிக்கையில் கண்டிருப்பதாவது என்று கனம் மெம்பர் அதை வாசிக்கப்போகையில் மேன்மைதங்கிய கவர்னர் குறுக்கிட்டு எல்லா மெம்பர்களுக்கும் அந்தஅறிக்கையின் விவரம் தெரியுமாதலால் அதை மீண்டும் படிக்க வேண்டியதில்லை யென்றும் முந்தின கூட்டத்தில் ஒரு தீர்மானத்தைப்பற்றி நடந்த விவாதத்தை யெல்லாம் சொல்லிக் கொண்டிருக்க வேண்டியதில்லை யென்றும் சொன்னார்.

கனம் மரக்காயர்:—இந்த அறிக்கை சபையின் முன்பாக ஆஜர்ப்படுத்தப்பட வில்லை. அநேக மெம்பர்கள் புதிதாக இருப்பதால் அதை வாசிக்கலா மென்று ஆரம்பித்தேன்.

மேன்மைத்தங்கிய கவர்னர்:—அவர்களுக்குப் பிரதி கிடைக்கும்.

கனம் மரக்காயர்:— எனக்குக் கிடைத்திருக்கும் ஒரு சிறிய தந்தியைப்படிக்கலாமா?

மேன்மைதங்கிய கவர்னர்:—எனக்கொன்றும் ஆட்சேபணையில்லை. ஆனல் அதனல் பிரயோஜன மேற்படு மென்று நான் நினைக்க வில்லை.

கனம் மரக்காயர்:—இந்த அறிக்கை எனக்குக் கிடைத்ததும் நான் கவர்ன் மெண்டுக்கு அனுப்பிய தந்திக்குக்கீழே கண்ட பதில் கிடைத்திருக்கிறது.

"நம்பர் 1085. 15ம் தேதி தாங்கள் 1027ம் நம்பர் கவர்ன் மெண்டு உத்திரவு விஷயமாக அனுப்பிய தந்தி கிடைத்தது; பாஸ்போர்ட்டு மனுக்களுடன் கோஷாஸ்திரீகள் புகைப்படங்களை அனுப்ப வேண்டியதில்லை யென்றும் பாஸ்போர்ட்டு கொடுக்கும் அதிகாரிகள் முன்பாக ஆஜராக வேண்டியதில்லை யென்றும் கண்டிருக்கிறது. பூராவிதிகளையும் விலக்க உத்தேசிக்கப் பட வில்லை."

கோஷாஸ்திரீகள் தங்களுடைய பாஸ்போர்ட்டுகளுடன் புகைப்படங்களைச் சேர்க்க வேண்டியதில்லை யென்றும் பாஸ்போர்ட்டு கொடுக்கும் உத்தியோகஸ்தர்கள் முன்பாக ஆஜராக வேண்டா மென்றும் தான் விலக்கு செய்யப்பட்டிருக்கிறார்கள். ஆனல் பாஸ் போர்ட்டில் அவர்கள் விரல் குறிவைக்கப் போக வேண்டியிருக்கிறது.

இது விஷயமாக பிரயாணிகளுக்கு இருந்து வரும் அசௌகரியங்களையும் கஷ்டங்களையும் நிவர்த்திக்க வேண்டுமென்றும், இந்த நிர்ப்பந்தங்களை எடுத்து விட்டால் இப்பொழுது ஏராளமான செலவில் போலீஸ் உத்தியோகஸ்தர்களை வைத்திருப்பது லாபமாகுமென்றும் ஆகஸ்டு மாதம் 19ம் தேதி கவர்ன்மெண்டுக்குக் கடிதம் நான் எழுதியிருந்ததில் இந்தியா கவர்ன் மெண்டாரே பாஸ் போர்ட்டு விஷயம் முழுவதையும் பரிசிலனை செய்வதாகவும், முடிவான உத்திரவு எப்பொழுது ஏற்படுமென்று கேட்டு விடுவதாகவும் எனக்கு பதில் கிடைத்தது. பாஸ்போர்ட்டு நிர்ப்பந்தங்களை ஒழித்துவிட்டால் பிரயாணிகளுக்கும் சவுகரியம்; கவர்ன்மெண்டுக்கும் பணம் மிஞ்சும்.

இந்திய தேசப் பாதுகாப்பு சட்ட பாஸ் போர்ட்டு விதிகளின் 4-வது பிரிவில் கண்டிருப்பதாவது:—ஆலோசனை சபையுடன் கூடிய கவர்னர் ஜெனரலாவது, மாகாண கவர்ன்மெண்டாராவது, எழுத்து மூலமான உத்திரவு மூலமாக, பூராவாகவாவது அல்லது உத்திரவில் கண்ட நிபந்தனைகளுக்குட்பட்டாவது, எந்த நபரை யேனுமாவது அல்லது எந்த வகுப்பினரை யேனுமாவது, இந்த சட்டத்தின் எந்த விதிகளிலிருந்தேனும் விலக்கு செய்யலாம். கிரமமாக அதிகாரமுள்ள வேறெந்த அதிகாரியும் அதே நிபந்தனைகளுக்குட்பட்டு விலக்கு செய்யலாம்."

மேலே கண்ட பிரிவின்படி ஸ்டிரெயிட்ஸ் செட்டில் மெண்டுகள், மலாய் நாடுகள் இவைகளுக்குச் செல்லும் இந்தியப் பிரயாணிகளை விலக்கு செய்து விடும்படி இந்தியா கவர்ன்மெண்டாருக்கு சிபார்சு செய்யவேண்டு மாய்க் கேட்டுக் கொள்ளுகிறேன். அந்தப் பிரயாணிகளுக்கு பாஸ் போர்ட்டு பெறுவதிலிருந்து வரும் கஷ்டங்களையும் அசௌகரியங்களையும் நான் எடுத்துக் கூறிவிட்டேன். இந்த சபை மெம்பர்கள் அவர்களிடத்தில் அனு தாபங் கொண்டு அவர்களுடைய கஷ்டத்தை நிவர்த்திக்க உதவியாயிருப்பார் களென்றே நம்புகிறேன். இத்தியாதி காரணங்களை உத்தேசித்து மேன்மை தங்கிய தங்களுடைய கவர்ன்மெண்டார் இத்தீர்மானத்தை ஏற்றுக்கொண்டு நமது பிரஜைகளின் மீதுள்ள நிர்ப்பந்தங்களை நிவர்த்திப்பார்களென்று நம்பு கிறேன்.

கனம் நரஸிம்மய்யர் தீர்மானத்தை ஆமோதித்தார்.

## கனம் நாப்

மேன்மைதங்கிய பிரபுவே,

பாஸ் போர்ட் விதிகளில் இந்தியப் பிரயாணிகளுக்கு ஏற்படும் அசௌ கரியங்களை கனம் மெம்பர் வெகு உருக்கமாக எடுத்துச் சொன்னார். சென்ற 10-மாத காலமாக பாஸ் போர்ட்டுகள் கொடுப்பதிலும் மாற்றுவதிலுமே நான் விசேஷ காலத்தைச் செலவிட்டு வந்திருக்கிறபடியால், கஷ்டப்படுகிற வர்களிடம் எனக்கு நேரில் அனுதாபமுண்டு. நான் சமீபத்தில் இங்கிலாந் திலிருந்து திரும்பி வந்தபொழுது என்னுடைய பாஸ் போர்ட்டை 5 இடங் களில் சோதித்துப் பார்த்தார்கள். அப்படிக்கிருந்தும் பம்பாய்க்கு வந்த தும் தெரியாத்தனமாய் நான் கரையிலிறங்கிவிட்டதால், பாஸ் போர்ட்டு சோதனையாக வில்லையென்று ஒரு போலீஸ் உத்தியோகஸ்தர் என்னை மட்டு மரியாதை கூட இல்லாமல் கப்பலில் கொண்டு போய் சேர்த்து விட்டார். இந்தக் கஷ்டம் எல்லாருக்கும் தான் இருந்துவருகிறது. எனக்கு நேரில் இந்தத் தீர்மானத்தில் அநுதாபமிருந்த போதிலும் கவர்ன்மெண்டின் சார் பாக நான் இதை ஒப்புக் கொள்ளக்கூடவில்லை. இந்தியா கவர்ன்மெண்டார் இது சம்பந்தமான முழு விவரங்களையும் பரிசீலனை செய்து வருவதாக கனம் மெம்பருக்கு அறிவித்திருக்கிறது. முடிவான உத்திரவு இன்னமும் ஏற்பட வில்லை யென்று சமீபத்தில் தகவல் எட்டியிருக்கிறது. இவ்வித நிலைமை யில் மறுபடியும் இந்தியா கவர்ன்மெண்டுக்கு சிபார்சு செய்வதினால் எவ் விதப் பிரயோஜனமு மேற்படுமென்று நான் நினைக்கவில்லை.

கனம் நரஸிம்மய்யர்:—சமீபத்திலா கடிதம் கிடைத்திருக்கிறது?

கனம் மிஸ்டர் நாப்:—ஆம்; சமீபத்தில் தான் தகவல் கிடைத்தது. ஆகவே கனம் மெம்பரும் பிரயாணிகளும் இன்னுங் கொஞ்ச காலத்திற்கு தங்களுடைய கட்டையைப் பாட்டில் போட்டு வைக்க வேண்டியது தான்.

இன்னொரு விஷயத்தையும் கனம் மெம்பருக்கு நான் தெரிவித்துக் கொள்ள விரும்புகிறேன். இப்பொழுது உள்ள நிலைமை எனக்குத் தெரிந்த வரையில் என்னவென்றால்:—நம்முடைய உத்திரவுகள் மூலமாக பாஸ் போர்ட்டு அவசியம் கற்பிக்கப்பட்டுப் போய்விடவில்லை; ஒருவரும் பாஸ் போர்ட்டு இல்லாமல் வந்திறங்கக் கூடாதென்று ஸ்டிரெயிட்ஸ், மலாய் நாடுகள் இவைகளின் கவர்ன்மெண்டார் உத்திரவு செய்திருக்கிறார்கள். ஆகவே இந்த நிர்ப்பந்தங்களை அந்த கவர்ன்மெண்டுகள் தான் நிவர்த்திக்கலாம். இந்தியாவை விட்டு அந்த இடங்களுக்குப் போகிறவர்கள் பாஸ் போர்ட்டுகள் இல்லாவிடில் அங்கிறங்க விடப்படமாட்டார்களென்றிருக்கும் பொழுது, இங்கிருந்து புறப்படும் பொழுது பாஸ் போர்ட்டு வேண்டியதில்லை யென்று சொல்வதில் அர்த்தமில்லை. பாஸ் போர்ட்டு வாங்காமல் பிரயாணி போய், மறுபடியும் திரும்ப அடிக்கப்படாமல் நமது விதி அவரைக் காப்பாற்றுகிறது.

* * * *

## கனம் கான்பகதூர் அகமது தம்பி மரக்காயர்.

கனம் நாப் பேசிய விஷயங்களுக்கும் அவர் ஐரோப்பியரையும் இந்தியரையும் ஒத்திட்டுப் பேசியதற்கும் நான் மிகவும் வருத்தப்படுகிறேன். இந்தியாவை விட்டு வெளியே போகையிலும் சரி, இந்தியாவுக்கு வருகையிலும் சரி, ஐரோப்பியப் பிரயாணிகளும் பாஸ்போர்ட்டு வாங்கவேண்டியிருக்கிறதென்பது எனக்குத் தெரியும். அவர்கள் ஐரோப்பாவிலுள்ள நகரங்களுடன் நெருங்கிய சம்பந்தமுள்ளவர்களாதலால் அவர்கள் விஷயத்திலுள்ள நிர்ப்பந்தங்கள் எனக்குத் தெரியும். வெள்ளைக் காரர்களுக்குள் சத்துரு தேசத்தாரென்றும் வேறு தேசத்தாரென்றும் அடையாளம் கண்டுபிடிப்பது கஷ்டமானதினால் இன்னும் கொஞ்சகாலத்திற்குஅவர்களுக்கு நிர்ப்பந்தங்கள் இருந்து வர வேண்டியது தான். ஆனால் சத்துருப் பிரஜைகளிலிருந்து இந்தியப் பிரயாணிகளை சுலபமாக அடையாளம் கண்டுபிடித்து விடக் கூடுமாதலால் தான் நான் இத்தீர்மானத்தைக்கொண்டு வந்திருக்கிறேன். இந்தியப் பிரயாணிகளை மட்டில் நான் தீர்மானத்தில் குறிப்பாகச் சொல்லியிருக்கிறேனே தவிர ஐரோப்பியப் பிரயாணிகளையும் சேர்த்து விடவில்லை. அப்படிக்கிருக்கையில் இவ்விருவரையும் கனம் நாப் ஒத்திட்டுப் பேசியது எனக்கு ஆச்சரியமாக இருக்கிறது. ஸ்டிரெயிட்ஸ் கவர்ன்மெண்டாருடைய உத்திரவின் பேரிலேயே இந்த நிர்ப்பந்தங்கள் இருந்து வருவதாக கனம் நாப் சொல்லியிருக்கிறார். நான் இது வரையில் கேள்விப்படாத சமாசாரமாக இது எனக்கு இருப்பதுடன், ஆச்சரியமாகவும் இருக்கிறது. இது வரையில் அவ்வித உத்திரவு இருப்பதாக நான் கேள்விப்பட்டதே கிடையாது. அவ்வித உத்திரவு இருந்தால் கப்பல் ஏஜண்டாகிய எனக்குத் தெரிந்திருக்க வேண்டும். அவர்கள் நிர்ப்பந்தங்களை நம்மீது விதிக்க இஷ்டப்படுவார்களென்று நான் நினைக்கவில்லை. 1917-ம் வருஷத்தில் நான்

தீர்மானங்கொண்டு வந்தபோது இந்தியா கவர்ன்மெண்டாருக்கு சிபார்சு செய்வதாக இந்த கவர்ன்மெண்டார் சொன்னார்களே தவிர ஸ்டிரெயிட்ஸ் கவர்ன்மெண்டுக்கு சிபார்சு செய்வதாகச் சொல்லவே யில்லை. அதன்படி இந்தியா கவர்ன்மெண்டுக்கும் கடிதம் எழுதப்பட்டது. இப்பொழுது கனம் நாப் நாம் ஸ்டிரெயிட்ஸ் கவர்ன்மெண்டாரையும் கேட்க வேண்டுமென்று சொல்வது எனக்கு ஆச்சரியமாக இருக்கிறது.

ஸ்டிரெயிட்ஸ் கவர்ன்மெண்டார் இந்த நிர்ப்பந்தங்களை ஏற்படுத்தி யிருந்தால், இங்கிருந்து போகும் ஆயிரக்கணக்கான ஒப்பந்தக் கூலிகள் விஷயத்திலும் அவர்கள் இந்த முறையை வற்புறுத்துவார்கள். அவர்களுக்கு பாஸ்போர்ட்டு கேட்பதுமில்லை. அவர்கள் கொஞ்சமும் சிரமமில்லாமல் தாராளமாகப் போய் இறங்கி விடுகிறார்கள். அநேக வியாபாரிகளும், சாதாரண ஜனங்களும் மற்றவர்களும் பாஸ்போர்ட்டு பெற முடியாமல் கஷ்டப்படுவது எனக்குத் தெரியும். ஆகவே அவர்கள் ஆள் ஏற்றும் டிப்போக்களுக்குப் போய்ச் சேர்ந்து, கூலிகளாகத் தங்களைப் பதிவு செய்து கொண்டு, அக்கரைபோய்ச் சேர்ந்தவுடன் வியாபாரத்தை ஆரம்பிக்கிறார்கள். கூலிகளுக்கு இந்த சவுகரியங்களைச் செய்து கொடுத்திருக்கையில் பணங்கொடுத்துப்போகும் கௌரவமுள்ள பிரயாணிகளுக்கு இந்த சவுகரியங்களைச் செய்து கொடுக்க மறுத்து, அவர்கள் கூலிகளாகப் பதிவு செய்து கொண்டு போகும்படி சொல்வது நியாயமன்று. சரியான வசதிகளைச் செய்து கொடுத்தால், அவர்கள் நேராக பிரிட்டிஷ் இந்தியா ஸ்டீம் நாவிகேஷன் கம்பெனி ஆபீசுக்குப் போய் கூலி டிக்கேட்டுக்கு இரட்டிப்பு மடங்கு கொடுத்து டிக்கெட்டு வாங்கிக் கொண்டு ராஜாங்கமாகப் போவார்கள். கம்பெனிக்கும் நல்லலாபம் வரும். ஸ்டிரெயிட்ஸ் செட்டில் மெண்டு கவர்ன்மெண்டார் இந்த நிர்ப்பந்தங்களை ஏற்படுத்தி யிருந்தால் கூலிகள் விஷயத்திலும் அவர்கள் வற்புறுத்துவார்கள். இந்த சுலபமான விஷயத்தைக்கூட கவர்ன்மெண்டார் அங்கீகரிக்காததற்கு நான் வருத்தப்படுகிறேன். அநேக நாட்டுக்கோட்டை செட்டிமார்களும் வியாபாரிகளும் வற்புறுத்தியதின் பேரிலேயே நான் இத் தீர்மானத்தைக் கொண்டு வந்திருக்கிறேன். யுத்தம் தீர்ந்துங்கூட பலர் இந்த நிர்ப்பந்தங்களினால் கஷ்டப்பட்டுக்கொண்டிருக்கையில் கவர்ன்மெண்டார் தீர்மானத்தை ஒப்புக்கொள்ளாதது ஏமாற்றத்தை உண்டுபண்ணுகிறது. ஆகவே தீர்மானத்தை ஓட்டுக்கு விடும்படி கேட்டுக் கொள்ளுகிறேன்.

## மேன்மைதங்கிய கவர்னர்.

கனம் மெம்பர் இந்த விஷயத்தைப்பற்றி வெகு கடுமையாகப் பேசியிருப்பதற்கு நான் மிகவும் வருத்தப்படுகிறேன். கனம் நாப் சொல்லியதை அவர் சரியாகக் கேட்டிருக்க மாட்டாரென்றே நான் நினைக்கிறேன். ஐரோப்பியர்களுக்கும் இந்தியர்களுக்கும் கனம் நாப் ஒத்திட்டு ஜாதி வித்தியாசத்தைக் கற்பித்ததுபோல் கனம் மெம்பர் அபிப்பிராயப்பட்டு விட்டதாக

க்கிறேன். ஐரோப்பாவுக்குப் போகும் ஐரோப்பியர்கள் மீதும் சில நிர்ப்பந்தங்கள் ஏற்படுத்தப்பட்டிருக்கின்றன. ஐரோப்பாவுக்குச் செல்லும் ஐரோப்பியர்களுக்கும் இந்தியர்களுக்கும் எவ்வித வித்தியாசமும் பாராட்டப் படுவதில்லை. கனம் மெம்பர் இங்கிலாந்துக்குப் போவதாயிருந்தால் கனம் நாம் அனுபவித்த கஷ்டங்களைப்படத்தான் வேண்டியிருக்கும். பாஸ் போர்ட்டு விதிகளில் ஐரோப்பியருக்கும் இந்தியருக்கும் எவ்வித வித்தியாசமும் கிடையாது. இது விஷயமாக இந்தியா கவர்ன்மெண்டாருக்கு விஞ்ஞாபனம் செய்து கொண்டிருக்கிறோம். அவர்கள் முடிவாக இன்னும் உத்திரவு செய்யவில்லை. ஆகவே இந்த விஷயம் இந்தியா கவர்ன்மெண்டாரிடமே இன்னமும் பாக்கியிலிருக்கிறது. ஆகவே இந்த சபையில் ஆத்திரப்பட்டுக்கொண்டு பேசாமல், டில்லிக்காவது ஸிம்லாவுக்காவது போய் தமக்குள்ள விசேஷச் செல்வாக்கை கனம் மெம்பர் உபயோகிப்பாரானால் நிலைமை சவுகரியப்படும். இந்தியா கவர்ன்மெண்டாரிடமிருந்து இன்னமும் பதில் கிடைக்காமலிருப்பதினால் நாம் ஒன்றும் செய்வதற்கில்லை. ஆகவே தான் தீர்மானத்தை அங்கீகரிக்க முடியாத நிலைமையில் நாங்கள் இருக்கிறோம்.

தீர்மானம் ஓட்டுக்கு விடப்பட்டுத் தோற்றுப் போயிற்று.

---

## [நவம்பர் மாதம் 21 ம் தேதி நடந்த கூட்டம்.]

---

### ஹிந்து - முஸ்லீம் மத்தியஸ்தக் கமிட்டி

மேன்மைதங்கிய பிரபுவே.

என்பேராலிருக்கும் கீழ்க்கண்ட தீர்மானத்தை நான் பிரேரணை செய்கிறேன்,—

"பள்ளிவாசல்கள் முன்பாக ஊர்வலங்களை விட்டுக் கொண்டு போகையில் தம்பட்டம் சோட்டுவேதினாலும் வாத்தியம் முழங்குவதினாலும் முகம்மதியர்களுக்கும் ஹிந்துக்களுக்கும் அடிக்கடி ஏற்படும் கலவரங்களைத் தடுப்பதற்கு சமரஸ ஏற்பாடுகளைச் செய்வதற்காக எவ்வித நடவடிக்கைகளை எடுத்துக் கொள்ளுவதென்பதைப்பற்றி ஆலோசிப்பதற்காக ஹிந்துக்களும் முஸ்லீம்களுமாகிய உத்தியோகஸ்தர்களும் உத்தியோகஸ்தர்களல்லாதவர்களுமடங்கிய கமிட்டி யொன்றை நியமிக்க வேண்டுமென்று இந்த சபை ஆலோசனை சபையுடன் கூடிய கவர்னருக்கு சிபார்சு செய்கிறது"

இது இந்தியாவிலுள்ள ஹிந்து முஸ்லீம் வகுப்பினரின் சகோதரத்துவத்தையும் ஐக்கிய பாவத்தையும் பாதிப்பதாக இருக்கும் ஒரு முக்கிய

விஷயம். இந்தக் கலாவங்களினால் இரு வகுப்பினருக்குள்ளும் மாற்சரியம் ஏற்படுவதுடன், அநேக உயிர்ச் சேதங்களும் ஏற்பட்டு விடுகின்றன. 1915ம் வருஷம் முதல் நாளது தேதி வரையில் அநேக தடவைகளில் இந்த விஷயத்தை நான் சபையின் முன்பாகப் பிரஸ்தாபத்திற்குக் கொண்டு வந்திருக்கிறேன்.

29—3—15-ல் தலைச்சேரியில் நடந்த சம்பவம்
23–11—15-ல் உத்தமபாளையத்தில் நடந்த சம்பவம்.
21--11—16-ல் பத்வேலில் நடந்த சம்பவம்.
21--11—16-ல் தூத்துக்குடியில் நடந்த சம்பவம்.
2—4—17-ல் கதிரியில் நடந்த சம்பவம்.
20--11—17-ல் தூத்துக்குடியில் மறுபடியும் நடந்த சம்பவம்.
3—4—18-ல் காளி நாட்டில் நடந்த சம்பவம்.
19--11—19-ல் நெல்லூரில் நடந்த சம்பவம்.

ஊர்வலங்களின்போது பள்ளிவாசல்கள் முன்பாக தம்பட்டம் கொட்டி வாத்தியம் வாசித்ததனாலேயே இந்தக் கலவரங்கள் நிகழ்ந்திருக்கின்றன. பள்ளிவாசல்கள் முன்பாக தம்பட்டம் கொட்டக்கூடாதென்றும், வாத்தியம் வாசிக்கக் கூடாதென்றும் உத்திரவு செய்துவிடும்படி ஒவ்வொரு சந்தர்ப்பத்திலும் நான் கேட்டுக் கொண்டிருக்கிறேன். என்னுடைய வேண்டுகோள்களெல்லாம் செவிடன் காதில் சங்கூதியது போலாகி விட்டன. பள்ளிவாசல்கள் முன்பாக நீண்டகாலம் முதலே தம்பட்டம் கொட்டுவதுமில்லை; வாத்தியம் வாசிப்பதுமில்லை. எந்த பிரிட்டிஷ் பிரஜையின் மத சம்பந்தமான காரியங்களிலும் கவர்ன்மெண்டார் தலையிட மாட்டார்களென்று விக்டோரியா மகாராணியின் மகாசாஸனத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. திருவல்லிக்கேணியில் ஹிந்துக்களுக்கும் முஸ்லீம்களுக்கும் ஏற்பட்டுவரும் கலவரங்களை தீர்த்து வைத்து சமரஸமான ஏற்பாட்டைச் செய்து விடுவதற்காக காலஞ்சென்ற கனம் அவிஸாடின், ராவ்பகதூர் மிஸ்டர் டி. ரங்காச்சாரியார், ஷம்ஸுல் உலாமா மௌலானா மௌல்வி ஹாஜி உபிதுல்லாசாகிப் இவர்களை கவர்ன்மெண்டார் ஒரு கமிட்டியாக நியமித்ததின் பேரில், அவர்கள் சமரஸமாக ஏற்பாடு செய்ய, அதன் பேரில் 1918-ம் வருஷம் ஏப்பிரல் மாதம் 1-ம் தேதி முடிவாக 786-ம் நம்பர் கவர்ன்மெண்டு உத்திரவு பிறப்பிவிக்கப்பட்டிருக்கிறது. இந்த சபையார் இரு வகுப்பினரையும் சமரஸப்படுத்தி வைத்து பள்ளிவாசல்களுக்கு 100 அடிக்குள் ஹிந்துக்களும் ஹிந்து ஆலயங்களுக்கு இருபுறத்திலும் 100 அடிக்குள் முஸ்லீம்களும் வழக்கம்போல் வாத்தியங்களை வாசிக்கக்கூடாதென்று எழுத்து மூலமான உடன்படிக்கையை ஏற்படுத்தி விட்டது மிகவும் பாராட்டத் தக்கது.

நெல்லூரில் நடந்த கலவரங்களைப்பற்றி விசாரணை செய்யும்படி ரிவினியூ போர்டு பிரதம மெம்பர் மிஸ்டர் எம். இ. கூச்மானை நியமித்

திருப்பதாக நவம்பர் மாதம் முதல் தேதி கவர்ன்மெண்டார் அறிக்கை வெளியிட்டிருப்பது எனக்குத் தெரியும். இந்த கனவான் பட்சபாத மில்லாமல் விசாரித்து கவர்ன்மெண்டுக்கு ரிபோர்ட்டு செய்வரென்கிற நம்பிக்கையும் எனக்குண்டு. ஆனல் இம்மாதிரியான கலவரங்கள் அடிக்கடி பல இடங்களில் இவ்விரு வகுப்பினருக்கும் ஏற்பட்டு, அவர்களுக்குள் மாற்சரிய மேற்படுவதுடன், அநேக உயிர்களும் சேதப்படுவதால், இனி இவ்வித கலவரங்கள் ஒருக்காலும் நேரிடாமல் இருவகுப்பினருக்கும் சாசுவதமாக சமரஸத்தைச் செய்து வைத்து விடுவதற்காக ஹிந்துக்களும் முஸ்லீம்களுமாகிய உத்தியோகஸ்தர்களும் உத்தியோகஸ்தர்களல்லாதவர்களு மடங்கிய கமிட்டியை நியமனம் செய்ய வேண்டு மென்றே நான் கேட்கிறேன். அவ்விதம் செய்துவிட்டால் இருவகுப்பினருடைய ஐக்கியமும் சிநேக பாவமும் பெருகும். இரண்டு வகுப்பினருக்கும் ஒற்றுமையை உண்டு பண்ணவேண்டு மென்பதே என்முக்கிய கருத்தாதலால் நான் சுயகாரியப் புலியாயிருக்கிறேனென்று என்னுடைய ஹிந்து சகோதரர்கள் கருதாமல் இத்தீர்மானத்தை முழுமனதுடன் ஆதரிப்பார்களென்றே நம்புகிறேன்.

கனம் நரஸிம்மய்யர் "கமிட்டி அல்லது கமிட்டிகளை" ஏற்படுத்த வேண்டு மென்று தீர்மானத்தை மாற்ற ஒரு திருத்தப் பிரேரணை கொண்டு வந்து தீர்மானத்தை ஆமோதித்தார். கனம் மரக்காயரும் திருத்தப் பிரேரணையை ஒப்புக்கொண்டார்.

மேன்மை தங்கிய கவர்னர்:— இந்த ஏற்பாட்டை கவர்ன்மெண்டார் ஒப்புக் கொள்ள முடியுமென்று சொல்வதற்கில்லை. ஒரு கமிட்டிக்கு பதிலாக பல கமிட்டிகள் வேண்டு மென்று தீர்மானத்தை ஆமோதித்த கனம் மெம்பர் கேட்கிறார்.

கனம் நரஸிம்மய்யர்:— தம்பட்டங் கொட்டுவதைப் பற்றித்தான் தீர்மானத்தில் பிரஸ்தாபித்திருக்கிறது. அதனல் நாதசுரம் வாசிப்பதில் ஆட்சேபணை யில்லையென்று அர்த்தமாகுமா? தீர்மானத்தின் கருத்தென்ன வென்பது எல்லோருக்கும் தெரிந்த விஷயம். இவ்விரு வகுப்பினருக்கும் போராட்டங்கள் ஏற்படுவது அவர்களுக்கும் பெருமையல்ல; கவர்ன்மெண்டுக்கும் அது பெருமையாகாது. இதுவரையில் அபூர்வமாகத்தான் ஏதாவது முயற்சிகள் செய்யப்பட்டிருக்கின்றன. சமீப காலம் வரையில் சேலம் ஜில்லாவில் சேர்ந்திருந்த திருப்பத்தூர் ஹிந்து முஸ்லீம் தலைவர்கள் ஒன்று கூடி ஹிந்துக்கள் பள்ளிவாசல்கள் முன்பாக வாத்தியம் வாசிப்பதில்லை யென்றும், ஹிந்து ஆலயங்களின் முன்பாக முகம்மதியர்கள் வாத்தியம் வாசிப்பதில்லை யென்றும் தங்களுக்குள்ளேயே ஏற்பாடு செய்து கொண்டு விட்டார்கள். ரிவினியூ போர்டு மெம்பரொருவர் சமுகத்திருந்த நிகழ்ச்சியின் தலைவராக இருந்த வரையில் எல்லாம் சரிவர நடந்து வந்த

தென்று கனம் மிஸ்டர் டாட்ஹண்டர் சொன்னார். ஒரு கமிட்டி அல்லது கமிட்டிகளை நியமித்தாலும் சவுகரியமாகத் தானிருந்து கொண்டுவரும். கவர்ன்மெண்டார் அவ்விதக் கமிட்டிகளை நியமித்தால் அவைகள் உபயோக மான வேலைகளைச் செய்துவரக்கூடும். கவர்ன்மெண்டார் உத்திரவு செய்து விட்டால் கலெக்டர்களே இத்தகையக் கமிட்டிகளை அமைத்து விடமுடியும். ஆகவே கவர்ன்மெண்டார் இத்தீர்மானத்தை அங்கீகரிப்பார்க ளென்றே நம்புகிறேன்.

மேன்மைதங்கிய கவர்னர்:—கனம் நரஸிம்மய்யருடைய திருத்தப் பிரேரணை என்னவென்று இன்னமும் எனக்குத் தெரியவில்லை. தீர்மா னத்தை அப்படியே வைத்துக் கொள்ளும்படி கேட்டுக் கொள்ளுகிறேன்.

கனம் நரஸிம்மய்யர்:—ஹிந்துக்கள் பள்ளிவாசல்கள் முன்பாக வாத் தியம் வாசிக்காமலிருப்பதும், முஸ்லீம்கள் ஹிந்து ஆலயங்கள் முன்பாக வாத்தியம் வாசிக்காமலிருப்பதும் நல்ல தென்று நான் ஏற்கனவே சொல்லி யிருக்கிறேன். இந்த லட்சியம் தீர்மானத்தில் காணப்பட வில்லை. பொதுப் படையான சமரஸ சபைகளே வேண்டும். விஷய விவரங்களைப்பற்றிச் சொல் லிக் கொண்டிருக்க வேண்டிய அவசிய மில்லை.

## கனம் நாப்.

இந்த மாகாணத்தில் ஹிந்துக்களுக்கும் முஸ்லீம்களுக்கும் ஏற்பட் டும் ஏற்பட்டுக்கொண்டும் வருகிற விசனகரமான சம்பவங்களை நிறுத்தி விட கனம் மரக்காயரும், நரஸிம்மய்யரும் கொண்டிருக்கும் லட்சியத்தில் கவர்ன் மெண்டாருக்கு அனுதாபமிருக்கிறது. இந்த மாகாணத்திலுள்ள மகாஜனங் கள் நிதான புத்தியுள்ளவர்களாயிருந்தும், அவர்கள் நல்ல புத்திசாலிகளாக ருந்தும், பொதுஜன அபிப்பிராயம் இது விஷயத்தில் பலமாக இருந்தும் இத் துரதிர்ஷ்ட வசமான சம்பவங்கள் நடவாமல் நின்று போகாமலிருப்பது நாக ரீகத்திற்கே அவகேடானதாகு மென்று நான் சொல்லுவதற்காக எவரும் என்மீது ஆயாசப்படமாட்டார்களென்றே நினைக்கிறேன்.

இத்தகைய சம்பவங்களை எவ்விதம் நிறுத்தி விடுவதென்கிற விஷயம் பல வருஷங்களாக ஆலோசனையிலிருந்து வருகிறது. இந்த விஷயமாக அநேக தஸ்தா வேஜுகளையும் சேர்த்திருக்கிறோம். 50 வருஷ காலமாக புத்தி சாலிகள் இந்த விஷயத்தில் கவலை காட்டி வந்திருக் கிறார்களென்று சொல்வதும் மிகையாகாது. இந்த விவாதங்களிலிருந்து இரண்டு காரியங்க ளைச் செய்வது தான் சாத்தியமென்று புலப்பட்டிருக்கிறது. ஒன்று இது சம்பந்தமாக சட்டம் செய்து விடவேண்டும்; அல்லது மத்யஸ்த சபை களை ஏற்படுத்த வேண்டும். சட்டம் செய்து விடுவது பிரயோஜன மில்லாத காரியமென்று நான் அபிப்பிராயப்படுகிறேன். பல கலவரங்களையும்

நாம் விசாரணை செய்ததில் ஏதேனும் ஒரு கட்சியார் சட்டபூர்வமாக தங்களுடைய காரியங்களுக்கு பாத்தியம் கொண்டாடி வந்திருக்கிறார்கள். அநேக கேஸ்களில் தங்களுக்கு சாதகமாக கோர்ட்டுகளில் ஏற்பட்டிருக்கும் தீர்ப்புகளையும் ஆதாரமாகக் காட்டியிருக்கிறார்கள். இருந்தாலும் இன்னொரு கட்சியார் அந்த பாத்தியதையை அலட்சியம் செய்தே வந்திருக்கிறார்கள். இவ்வித நிலைமையில் சட்டம் செய்வதினால் எவ்வித நன்மையுமுண்டாகி விடாது. சட்டபூர்வமாக எவ்வித முறையை ஏற்படுத்தினாலும் அதையும் அவர்கள் மீறி நடக்கத் தயாராக இருப்பார்கள்.

கனம் நரஸிம்மய்யர் சமரஸ சபைகளை ஏற்படுத்த வேண்டுமென்றே திருத்தப்பிரேரணை கொண்டுவந்திருக்கிறார். சமரஸ சபைகளை ஏற்படுத்த வேண்டுமென்று கனம் ஸர் பஸூல்பாய் கரிம்பாயின் பிரேரணையின் பேரில் 1914ம் வருஷத்தில் இந்தியா சட்டசபையில் பலமாக விவாதம்நடந்தது. இந்தியா கவர்ன்மெண்டார் தீர்மானத்தை ஒப்புக்கொள்ளாமல் விவரமாக விசாரணை செய்வதாகக்கூறினார்கள். இந்தியா முழுவதிலுமுள்ள உத்தியோகஸ்தர்கள், உத்தியோகஸ்தர்களல்லாதவர்கள் இவர்களுடைய அபிப்பிராயங்களை அவர்கள் கேட்டுவிட்டார்கள். அவர்களில் பெரும்பாலோர் நிரந்தரமாக சமரஸ சபைகளை ஏற்படுத்துவதை ஒப்புக்கொள்ளவில்லை. அவைகளினால் ஒன்றும் பிரயோஜனமுண்டாகி விடாதென்றும் தீமைகளே விளையுமென்றும் அநேகமாக எல்லோரும் அபிப்பிராயப் பட்டார்கள். 50 வருஷ காலமாக முயற்சி செய்தும் பிரயோஜனப்படாமல் போயிருப்பதிலிருந்து வேறெவ்வித மார்க்கமுமில்லையோவென்று யாரும் சந்தேகப்படுவதும் இயல்புதான்; இருந்தாலும் இந்த சங்கடங்களைத் தடுக்க நியாயமான வழிகளில் முயற்சி செய்துபார்ப்பதிலும் கவர்ன் மெண்டாருக்கு ஆட்சேபணை யில்லை. ஆகவே ஒரு மாறுதலுக்குட்பட்டு கவர்ன் மெண்டார் இத்தீர்மானத்தை அங்கீகரிக்க சித்தமாயிருக்கிறார்கள். கவர்ன் மெண்டார் மதசம்பந்தமான விஷயங்களில் தலையிடுவதில்லையென்கிற கொள்கையையே வெகு காலமாகக் கொண்டிருந்திருக்கிறார்கள். ஆகவே உத்தேசத்திலிருக்கும் கமிட்டியில் உத்தியோகஸ்தர்களை நியமனம் செய்வது உசிதமாயிராது. ஹிந்து முஸ்லீம் தலைவர்கள்கூடி சமரஸமான ஏற்பாட்டைச் செய்து கொண்டால் இருவகுப்பினரும் அதை மதித்து நடந்து கொள்ளுவார்களென்று கனம் பாலாஜிராவ் நாயுடு சொன்னார். ஆகவே "உத்தியோகஸ்தர்கள்" என்கிற வார்த்தையைத் தீர்மானத்திலிருந்து எடுத்துவிட கனம் அகமது தம்பி மரக்காயர் சம்மதித்தால் கவர்ன் மெண்டார் தீர்மானத்தை ஒப்புக் கொள்ளத் தயாராக இருக்கிறார்கள். எந்தக் கமிட்டியை நியமனம் செய்தாலும் கவர்ன் மெண்டார் அந்த கமிட்டிக்குத் தங்களாலியன்ற உதவியைச் செய்து வருவார்களென்று நிச்சயமாக நம்பியிருக்கலாம். கனம மெம்பர் இந்தத்திருத்தப்பிரேரணையை ஒப்புக் கொண்டால் அவர் முஸ்லீம் மெம்

பர்களின் பெயரைக்குறிப்பிடுவாரென்றும் கனம் நரசிம்மய்யர் ஹிந்து மெம்பர்களின் பெயரைக் குறிப்பிடுவாரென்றும் நம்புகிறேன்.

### கனம் அகமது தம்பி மரக்காயர்

கனம் நாப் என்னுடைய தீர்மானத்தை அங்கீகரித்ததை நான் பாராட்டுகிறேன். உத்தியோகஸ்தர்கள் என்கிற பதத்தைத் தீர்மானத்திலிருந்து எடுத்துவிட எனக்கு ஆட்சேபணையில்லை. உத்தியோகஸ்தர்களல்லாத மெம்பர்கள் அடங்கிய கமிட்டியே போதுமானது.

கனம் ராவ் பகதூர் என் சுப்பராவ்:—உத்தியோகஸ்தர்களல்லாத மெம்பர்களடங்கிய கமிட்டியை நியமிப்பதில் எனக்கு சர்வ சம்மதமாயினும் நிர்வாக சபை மெம்பரொருவரையாவது அதன் பிரசிடெண்டாக நியமித்தால் நலமாயிருக்கும்.

மேன்மைதங்கிய கவர்னர்:—நிர்வாக சபை மெம்பர்கள் பல ஜோலிக்காரர்கள். இவ்விருவகுப்பினருக்குள்ளேயே இருதிறத்தாருக்கும் திருப்திகரமான சேர்மன் அகப்படுவாரென்று நம்புகிறேன். இந்தக் கமிட்டியின் ரிபோர்ட்டும் திருப்திகரமாக இருக்குமென்றே நம்புகிறேன்.

திருத்திய தீர்மானம் அங்கீகரிக்கப்பட்டது.

(இதை அனுசரித்து இப்பால் ஒரு கமிட்டியும் நியமனமாகி யிருக்கிறது.,)

---

## 1920

## பிப்பிரவரி மாதம் 5-ம் தேதி நடந்த கூட்டம்.

---

### நாகப்பட்டணம் பஞ்சமப் பாடசாலை.

நாகப்பட்டணம் முனிசிபாலிட்டியிலிருந்து வரும் பஞ்சமப் பாடசாலைக்குக் கட்டிடம் கட்டுவதற்காக "22 கல்வி" என்கிற தலைப்பின் கீழ் 12,000 ரூபாய் ஒதுக்கிவைக்க வேண்டுமென்றும், தாழ்ந்த வகுப்பினரின் பள்ளிக்கூடங்களை ஏற்படுத்துவதற்காக ஒதுக்கிவைத்திருக்கும் $1\frac{1}{2}$ லட்சம் ரூபாயிலிருந்து இந்தத் தொகையைக் குறைத்துக்கொள்ள வேண்டுமென்றும் இந்த சபை ஆலோசனை சபையுடன் கூடிய கவர்னருக்கு சிபார்சு செய்கிறது."

இந்தத் தீர்மானத்தைப் பற்றி நான் அதிகமாகச் சொல்ல வேண்டிய அவசியமில்லை. பஞ்சம வகுப்பினரை முன்னேற்றம் செய்ய வேண்டுமென்கிற கவலை இந்த கவர்ன்மெண்டுக்கு அதிகமாக இருக்கிறது. நாகப்பட்டணம் முனிசிபாலிட்டியார் பஞ்சமர்களுக்காக 1917-ம் வருஷத்தில் ஏற்படுத்திய பாடசாலை கூரைக் கட்டிடத்தில் இருந்து வருகிறது. இப்பொழுது 70 பிள்ளைகள் இந்தப்பள்ளிக்கூடத்தில் படித்து வருகிறார்கள். முதன் முதலாக இந்த முனிசிபாலிட்டியில் இந்தப் பள்ளிக்கூடத்தை ஏற்படுத்தியும் ஏராளமாகப் பிள்ளைகள் அதில் வந்து சேர்ந்து படிப்பதிலிருந்து சரியான கட்டிடத்தை அமைத்துக் கொடுத்து விட்டால் இன்னும் அதிகமாகப் பிள்ளைகள் வந்து சேருவார்களென்பதில் சந்தேகமில்லை. ஆகவே தாழ்ந்த வகுப்பினருக்குப் பாடசாலைகளை ஏற்படுத்துவதற்காக ஒதுக்கி வைத்திருக்கும் $1\frac{1}{2}$ லட்சம் ரூபாயிலிருந்து 12,000 ரூபாய் இந்தப்பள்ளிக்கூடத்திற்காக கவர்ன்மெண்டார் தருவார்களென்றே நம்புகிறேன்.

கனம் எம். ஸி. ராஜா தீர்மானத்தை ஆமோதித்தார்.

* * * *

## கனம் நாப்.

கனம் நரஸிம்மய்யர் சொல்லியதே கவர்ன்மெண்டின் அபிப்பிராயம். தாழ்ந்த வகுப்பினரின் முன்னேற்றத்தை கவனிப்பதற்காக ஏற்படுத்தப்பட்டிருக்கும் மிஸ்டர் பாடிஸன் விசாரணை செய்து சிபார்சு செய்வதற்கு முன் மொத்தத் தொகையிலிருந்து எந்த பாகத்தையும் குறிப்பிட்ட இடத்திற்காக இந்த சபை கொடுக்கும்படி தீர்மானிப்பது நியாயமல்ல. பஞ்சமப்பாடசாலைகளுக்காக அவர் வசம் 50,000 ரூபாய் ஒப்பிவிக்கப்படும். நாகப்பட்டணம் பாடசாலைக்குக் கொடுக்க வேண்டிய அவசியம் இருந்தால், முனிசிபல் கவுன்சில் விஞ்ஞாபனம் செய்து கொள்ளும்பட்சத்தில் அவர் அனுகூலமாக கவனிப்பார் என்பதில் சந்தேகமில்லை. ஆனால் மற்ற இடங்களை விட இது அவ்வளவு அவசியமில்லாததாக இருந்தால் நாம் ஒதுக்கிக் கொடுத்து விடுவது சரியாயிராது. பஞ்சமப் பாடசாலைகளுக்கு நம்மாலியன்றதைச் செய்து வர வேண்டுமென்பதில் எனக்கு மனப் பூர்த்தியான அபிமான மிருந்தபோதிலும், எல்லா இடங்களினுடைய பாத்தியதா பாத்தியதைகளையும் கவனியாமல் அவசரப்பட்டுக் கொண்டு ஒரு இடத்திற்காக நாம் ஒதுக்கிக் கொடுத்து விடுவது சரியாகாது.

கனம் அகமது தம்பிமரக்காயர்:—முனிசிபாலிட்டி மிஸ்டர் பாடிஸனுக்கு விண்ணப்பம் செய்து கொள்ள வேண்டுமோ?

கனம் நாப்:—ஆம்.

இந்த நிபந்தனையின் பேரில் கனம் அகமது தம்பி மரக்காயர் தீர்மானத்தை வாபீஸ் வாங்கிக் கொண்டார்.

---

## நாகப்பட்டணம் முகம்மதியப் பாடசாலை.

அடியிற்கண்ட தீர்மானத்தை நான் பிரேரணை செய்கிறேன்.

நாகப்பட்டணம் காடம்பாடியிலிருந்து வரும் முகம்மதிய ஆரம்பப் பாடசாலைக்குக் கட்டிடம் கட்டுவதற்காக "22 கல்வி" என்கிற தலைப்பின் கீழ் 12,000 ரூபாய் ஒதுக்கி வைக்கும்படிக்கும், ஆரம்பப் பாடசாலைகளுக்குக் கட்டிடங்கள் கட்டுவதற்காக ஒதுக்கி வைத்திருக்கும் 4 லட்சம் ரூபாயிலிருந்து இதை ஈடு செய்து கொள்ளும்படிக்கும் இந்த சபை ஆலோசனை சபையுடன் கூடிய கவர்னருக்கு சிபார்சு செய்கிறது."

இதுவும் முந்தின தீர்மானத்தைப் போன்றது தான். இது எனக்கு மிகவும் சிரத்தையுள்ள என்னுடைய சொந்த வகுப்பினரைப் பொறுத்த விஷயம். என்னுடைய சமூகத்தினர் முற்போக்கடையாமலிருப்பது உங்களுக்குத் தெரிந்த விஷயம். கவர்ன்மெண்டார் முன் வந்து உதவி செய்யாத வரையில் அவர்கள் கல்வி அறிவில் அபிவிருத்தி யடைவது மிக்க கஷ்டம். நாகப்பட்டணம் முனிசிபாலிட்டி ஒரு பாடசாலையை நடத்தி வருகிறது. இப்பொழுது முனிசிபல் ஆபீஸ் தாழ்வாரத்தில் இந்தப் பள்ளிக்கூடம் நடந்து வருகிறது. வேறு இடம் கிடைக்காததினாலேயே அங்கு பாடசாலை இப்பொழுது நடந்துவருகிறது. காடம்பாடியில் இடம் கிடைப்பது நிரம்ப துர்லபம். ஆகவே கவர்ன்மெண்டார் 4 லட்சம் ரூபாயிலிருந்து என்னுடைய வகுப்பினரின் கல்வி முன்னேற்றத்திற்காக 12,000 ரூபாய் கொடுக்க வேண்டும்.

## கனம் லிட்டில் ஹேயில்ஸ்.

இது விஷயமாகச் சொல்ல வேண்டிய தொன்றுமில்லை. ஆரம்பப் பாடசாலைக் கட்டிடங்களுக்காக 4 லட்சம் ரூபாய் ஒதுக்கி வைத்திருக்கிறது. மற்ற இடங்களின் தேவையை கவனிக்காமலும் இதன் அவசியத்தை கவனிக்காமலும் குறிப்பிட்ட தொகையைக் கொடுக்க வேண்டு மென்று கனம் மெம்பர் சொல்லுகிறார். எல்லா ஸ்தலஸ்தாபனங்களிட மிருந்தும் விண்ணப்பங்கள் கிடைத்த பிறகு அவைகளைப் பற்றி கிரமமாக ஆலோசித்து தகுந்தபடி இருக்கிற பணம் விதாசாரம் செய்து கொடுக்கப்படும். அதற்குமேல் நான் இப்பொழுது ஒன்றும் சொல்வதற்கில்லை.

தீர்மானம் வாபீஸ் வாங்கிக் கொள்ளப்பட்டது.

---

## நன்னிலத்தில் ஒரு நடுத்தரப் பாடசாலை

"நாகப்பட்டணம் தாலூகா போர்ட்டுக்குட்பட்ட நன்னிலத்தில் ஒரு செகண்டரி பாடசாலையை ஏற்படுத்த "22 கல்வி" என்கிற தலையின் கீழ் 5000 ரூபாய் ஒதுக்கி வைக்கவேண்டு மென்றும், செகண்டரி பாடசாலைகளுக்காக ஒதுக்கி வைத்திருக்கும் கிராண்டுத் தொகையில் அதைக் கழித்துக் கொள்ள வேண்டுமென்றும் இந்த சபை சிபார்சு செய்கிறது.

இத்தீர்மானத்தைப் பிரேரணை செய்வதில் இரண்டொரு வார்த்தைகளைத் தவிர அதிகமாக ஒன்றும் சொல்லத் தேவையில்லை. நான் தாலுகா போர்டு வேலையாக சமீபத்தில் நன்னிலத்திற்குப் போயிருந்த பொழுது, அவ்விடத்தில் தாலூக்கா போர்டு விசாரணையின் கீழ் ஒரு ஆரம்பப் பாடசாலை கூட கிடையாதென்றும், ஒரு செகண்டரி பாடசாலையை ஏற்படுத்த வேண்டுமென்றும் அந்த ஊர் வாசிகள் என்னிடம் தெரிவித்துக் கொண்டார்கள். தனிப்பட்ட நபரின் விசாரணையில் ஒரு பள்ளிக்கூடம் இருந்து வருகிறது. ஆனால் அதில் வேண்டிய சாதனங்களில்லை. சுமார் 500 பிள்ளைகளுக்கதிகமாக வெளியிடங்களுக்குப் படிக்கப் போக வேண்டி யிருக்கிற தென்றும், இதனால் விசேஷ கஷ்டமும் அசௌகரியமும் உண்டாகின்றன வென்றும் அவர்கள் என்னிடம் தெரிவித்துக் கொண்டார்கள். நன்னிலம் ஒரு முக்கியமான பட்டணம். நிலத்தீர்வை பட்டில் 1328-ம் பசலியில் ரூ 10, 63,625 வசூலாகி யிருக்கிறது. கலால் வருமானம் ரூ 2,56,035-ம் வருமான வரி ரூ 25,888-ம் அந்த தாலூக்காவில் வசூலாகி யிருக்கிறது. பொதுஜன வரியைக் கொண்டு கட்டியிருக்கிற கார்னேஷன் சத்திரத்திற்கும் அவர்கள் என்னை அழைத்துக் கொண்டு போய் காண்பிவித்தார்கள். அந்தக் கட்டிடம் பள்ளிக்கூடத்தை ஏற்படுத்துவதற்குத் தகுதியான இடமாக இருக்கிறது. ஆகவே கட்டிடம் கட்டுவதற்காகச் செலவு செய்ய வேண்டிய அவசியமே கிடையாது. உபாத்தியாயர்களுக்கு சம்பளம் கொடுப்பதற்கும், வேண்டிய தளவாடங்களை வாங்குவதற்கும் தான் 5000 ரூபாய் தேவை. செகண்டரி பாடசாலைகளுக்கு கிராண்டு கொடுப்பதற்காக ஒதுக்கி வைத்திருக்கும் தொகையில் இதைக் கழித்துக் கொள்ளலாம். நான் இதன் அவசியத்தை எடுத்துக்காட்டி யிருப்பதால் கவர்ன்மெண்டார் என்னுடைய தீர்மானத்தை ஒப்புக் கொள்ளுவார்களென்று நம்புகிறேன்.

கனம் வி. கே. ராமானுஜாச்சாரியார் தீர்மானத்தை ஆமோதித்தார்.

### கனம் லிட்டில் ஹேயில்ஸ்

இந்த விஷயம் நன்றாக கவனிக்கப்படும். முதலில் ஸ்தலத்திலுள்ள கல்வி இலாகா பரிசோதனை அதிகாரிகளைக் கலந்து கொண்டு, ஸ்தல ஸ்தா

பனங்களின் அபிப்பிராயத்தையும் கேட்டுத் தெரிந்து கொள்ள வேண்டும். ஸ்தலத்திலுள்ள கல்வி இலாகா அதிகாரிகளிட மிருந்தாவது, ஸ்தலஸ்தாபனங்களினிட மிருந்தாவது பிரேரணை நமக்கெட்டாத வரையில் நாம் பணத்தை ஒதுக்கி வைப்பது சரியல்ல. 1918-ம் வருஷத்திலேயே ஒருசெகண்டரி பாடசாலையை ஏற்படுத்தித் தரவேண்டு மென்று நன்னிலம் வாசிகள் மகஜர் அனுப்பிக்கொண் டிருக்கிறார்கள். ஆனால் தாலூகா போர்டாவது ஸ்தலத்ததிகாரிகளாவது அதை ஆதரிக்க வில்லை. இப்பால் தாலூகா போர்டார் தங்களுடைய அபிப்பிராயத்தை மாற்றிக்கொண்டு விட்டதைக் கண்டு நான் சந்தோஷப்படுகிறேன். அவ்விதமாயின் இந்தப் பிரேரணையை கவனிக்கிறோம்.

### கனம அகமது தம்பி மரக்காயர்

கிரமமான யோசனைகளை கல்வி இலாகா டைரக்டர் சொன்னதற்கு அவருக்கு நான் நன்றி பாராட்டுகிறேன். நானே தாலூகா போர்டு பிரசிடெண்டானதினால் தாலூகா போர்டார் தங்களுடைய அபிப்பிராயத்தைமாற்றிக்கொண்டு விட்டார்களென்றும், பள்ளிக்கூடத்தை ஏற்படுத்துவதில் அவர்கள் கவலையுள்ளவர்களாக இருக்கிறார்களென்றும், இது விஷயமாக கல்வி இலாகா அதிகாரிகளுடன் கடிதப் போக்குவரத்து நடந்து வருகிற தென்றும், அவர்களிட மிருந்து கூடிய சீக்கிரத்தில் பிரேரணைகள் கிடைக்கு மென்றும் தெரிவித்துக் கொள்ளுகிறேன். அது கிடைத்தவுடன் கல்வி இலாகா டைரகடர் அனுமதி கொடுத்து விடுவாரென்று நம்புகிறேன். பள்ளிக்கூடத்தை ஏற்படுத்தும்படி உத்திரவு செய்வது ஒருவிஷயம்;பணத்தைக் கொடுப்பது மற்றொரு விஷயம். கட்டிடம் தயாராக இருப்பதினால் பள்ளிக் கூடத்தை ஏற்படுத்த அனுமதி தரும்படி கேட்டுக் கொள்ளுகிறேன். ஊரெல்லாம் பள்ளிக்கூடங்களைக் கட்ட பணம் வேண்டுமென்று கூக்குரல் போட்டுக் கொண்டிருக்கையில் நான் கட்டிடத்தைத் தயாராக வைத்துக் கொண்டிருக்கிறேன். சொற்ப ரூபாய் தான் வேண்டும். ஆகவே முதலில் பள்ளிக்கூடத்தை ஏற்படுத்த கல்வி இலாகா டைரக்டர் அனுமதி கொடுத்து பிறகு பணத்தையும் கொடுத்துதவுவாரென்று நம்புகிறேன். கல்வி இலாகா டைரக்டர் கொடுத்த வாக்குறுதியின்பேரில் நான் தீர்மானத்தை வற்புறுத்த வில்லை.

தீர்மானம் வாபீஸ் வாங்கிக் கொள்ளப்பட்டது.

---

### நாகப்பட்டணத்தில் குழாய் வசதிகளை விஸ்தரிக்க.

நாகப்பட்டணம் முனிசிபாலிடியில் பாட்டணச்சேரியிலும் நாகூரிலும் குழாய்களை வைக்க 24 பி. சுகாதாரம் என்கிற தலைப்பின் கீழ் 53000 ரூபாய்

கொடுக்கும்படிக்கும் சில்லரை சுகாதார வேலைகளைச் செய்வதற்காக ஸ்தல ஸ்தாபனங்களுக்கு கிராண்டு கொடுக்க ஒதுக்கி வைத்திருக்கும் 6½-லட்சம் ரூபாயிலிருந்து இத்தொகையைக் கழித்துக் கொள்ளும்படிக்கும் இந்த சபை ஆலோசனை சபையுடன் கூடிய கவர்னருக்கு சிபார்சு செய்கிறது.

மேன்மைதங்கிய பிரபுவே,

பாட்டணச் சேரியில் வசித்து வரும் செம்படவர்கள் குடிப்பதற்கு நல்ல தண்ணீர் கிடைக்காமல் மிகவும் கஷ்டப்படுகிறார்கள். இதனால் வைசூரி கால்ரா முதலிய தொத்து நோய்கள் அடிக்கடி அங்கே உண்டாகின்றன. நாகப்பட்டணம் முனிசிபல் எல்லைக்குள் இந்த இடமிருந்தும் ஜலசப்ளை மாத்திரம் இல்லாமலிருக்கிறது; அவர்களைத் தொத்து வியாதியினின்றும் காப்பாற்றத் தண்ணீர்க் குழாய்களை அந்தப்பக்கத்திலும் கொண்டு போய் விட வேண்டும். முனிசிபல் கவுன்சில் இந்த ஏழைச் செம்படவர்களிடம் தண்ணீர் வரிவசூல் செய்தும் அவர்களுக்கு ஜலத்தை சப்ளை செய்யாதது மிகவும் விசனிக்கத்தக்கது. இதற்காக சுகாதார எஞ்சினீரால் பிளானும் திட்டங்களும் தயாரிக்கப்பட்டிருக்கின்றன. மொத்தம் இதற்காக 53000 ரூபாய் செலவு பிடிக்கிறது. கவர்ன்மெண்டார் 30-7-1919 தேதியுள்ள 1135 உத்திரவில் பாதிச்செலவைக் கொடுப்பதாக ஒப்புக் கொண்டிருக்கிறார்கள். சென்ற 3 வருஷகாலமாக ஜலசப்ளையில் முனிசிபாலிட்டி நஷ்டப்பட்டுக் கொண்டு வருவதால் மற்றொரு பாதித் தொகையைக் கொடுக்க அதற்குச் சக்தியில்லை. ஆகவே சில்லரை சுகாதார வேலைகளுக்காக ஸ்தலஸ்தாபனங்களுக்கு கிராண்டு கொடுக்க ஒதுக்கி வைத்திருக்கும் தொகையில் 53,000 ரூபாய் கொடுக்கும்படி கேட்டுக் கொள்ளுகிறேன்.

* * * *

பணத்தை வீதித்துக் கொடுக்கையில் இதர விண்ணப்பங்களுடன் நாகப்பட்டணம் முனிசிபாலிட்டியின் வேண்டுகோளும் கவனிக்கப்படுமென்று கனம் ஸர். பி. ராஜகோபாலாச்சாரியார் சொன்னார்.

## கனம் அகமது தம்பி மரக்காயர்

அதில் எனக்கு ஆட்சேபனையில்லை, இரண்டு மெம்பர்கள் ஆட்சேபித்தது எனக்கு வருத்தமாயிருக்கிறது. அவர்கள் ஆட்சேபிக்கும் தோரணை எனக்குக் கொஞ்சம் கூட பிடிக்கவில்லை. விஷய அட்டவணையைப் பார்த்தால் இன்னும் எத்தனையோ மெம்பர்கள் முனிசிபாலிட்டிகளுக்கும்ஸ்தல் ஸ்தாபனங்களுக்கும் பணம் கொடுக்க வேண்டுமென்று கேட்டிருக்கிறார்கள். நாகப்பட்டணம் வாசி என்கிற ஹோதாவில் என்னையும் மற்ற பிரஜைகளையும் காப்பாற்ற வேண்டிய பொறுப்பு எனக்கு இருக்கிறது. நான் சுயகாரிய வாதியாயிருக்கி

றேனென்று கனம் மெம்பர்கள் சொல்லுகிறார்கள். என்னுடைய ஊர் முனிசி பாலிட்டிக்காகத் தான் நான் கேட்கிறேன். என் ஊர்சம்பந்தபட்ட வரையில் நான் சுய காரிய வாதிதான். எதற்காக நாங்கள் இங்கே ஸ்தானம் வகித்தி ருக்கிறோம்? எங்களுடைய ஊர் நன்மையையும் தேச நன்மையையும் பாது காப்பதற்காக வன்றோ? ஜனங்கள் தங்களுடைய கட்சியை வாதிப்பதற்காக வே எங்களை இங்கே அனுப்பியிருக்கிறார்கள். கனம் சுப்பராவ் கவர்ன்மெண் டால் நியமிக்கப்பட்டவர். என்னைப்போல் ஓட்டர்களிடம் அவருக்குப்பொறுப் பில்லை. நான் மகாஜனங்களால் தெரிந்தெடுக்கப்பட்டவனாதலால் அவர்களுக்கு வழி சொல்லக் கடமைப்பட்டிருக்கிறேன். நான் ஒருதீர்மானங்கொண்டு வந் தால் அதை கனம் மெம்பர்கள் ஆட்சேபித்து நான் சுயகாரிய வாதியென்கிறார் கள். எங்களுடைய தொகுதியின் க்ஷேமலாபங்களைப் பாதுகாப்பதற்காகவே நாங்கள் இங்கிருப்பதால், இதை உத்தேசித்துத் தீர்மானங்கள் கொண்டு வரு வதைத் தப்பாக அருத்தம் செய்து கொள்வது சுத்தத்தவறு. கனம் ராஜ கோபாலாச்சாரியார் சொன்னது சரி. அவர் தம்மாலியன்ற உதவியைச் செய் வாரென்கிற நம்பிக்கையும் எனக்குண்டு. கவர்ன்மெண்டார் பாதிச்செலவை கொடுக்க ஒப்புக்கொண்டிருப்பதால் முழுச்செலவையும் ஒப்புக் கொள்ளும்படி கேட்கிறேன். இன்னொரு பாதியையும் கொடுக்கும்படி கவர்ன்மெண்டா ரைக் கேட்டுக் கொள்ளுகிறேன். கனம் மெம்பர் கொடுத்த வாக்குறுதியின் பேரில் நான் தீர்மானத்தை வற்புறுத்த வில்லை.

## மேன்மைதங்கிய கவர்னர்.

கனம் மெம்பர் தம்முடைய ஊரையும் தம்முடைய இனத்தாரையும் காப்பாற்ற வேண்டுமென்று கவலை கொண்டிருப்பதில் கவர்ன் மெண்டாருக்கு விசேஷ அனுதாபமிருக்கிறது. அவர் இவ்வளவு பலமாய் வாதித்திருப்பதி னால் அவருடைய வேண்டுகோளை எனது சகாஅனுகூலமாக கவனிப் பாரென்றே நான் நிச்சயமாக நம்புகிறேன். அவருடைய தொகுதியின் க்ஷே மலாபங்களைப் பொறுத்த விஷயங்களை இந்த சபையில் விவாதத்திற்குக் கொண்டுவர அவருக்குப் பூரண சுதந்தரமுண்டு. ஆனால் ஒவ்வொருவரு ம் இவ்விதம் கேட்டுக்கொண் டிருந்தால் கவர்ன்மெண்டார் என்ன செய் வதென்பதையும் அவர் யோசிக்க வேண்டு மென்று சொன்னார்.

தீர்மானம் வாபீஸ் வாங்கிக் கொள்ளப்பட்டது.

---::---

## மார்ச்சு மாதம் 15-ம் தேதி நடந்த கூட்டம்.

### வேதாரணியம் கோடிக்கரை ரயில்வே.

மேன்மைதங்கிய பிரபுவே,

அடியிற்கண்ட தீர்மானத்தை நான் பிரேரணை செய்கிறேன்.

"தஞ்சாவூர் ஜில்லா போர்ட்ரெயில்வேயை வேதாரணியத்திலிருந்து கோடிக்கரை வரையில் கூடிய சீக்கிரத்தில் நீட்டிவிட தக்க முயற்சி எடுத்துக் கொள்ள வேண்டுமென்று இந்த சபை சிபார்சு செய்கிறது."

இத்தீர்மானத்தைப் பிரேரணை செய்வதில் சில வார்த்தைகள் சொல்லிக்கொள்ள விரும்புகிறேன்.

சுமார் 10-வருஷங்களுக்கு முன்பாக திருத்துறைப் பூண்டியிலிருந்து வேதாரணியம் வரையில் ரயில்வே லயனைப் போடும் விஷயத்தை ஆலோசித்த பொழுது, இதில் போடும் முதலுக்கு 100-க்கு 2½ வீதம் கூட லாபம் கிடைக்காதென்று தென்னிந்தியா ரயில்வே கம்பெனியார் பலமாக ஆட்சேபனை செய்தார்கள். இருந்தாலும் திருத்துறைப்பூண்டி தாலூகா வாசிகள் போக்குவரத்து சவுகரியமில்லாமல் பட்ட கஷ்டங்களையும் அசவுகரியங்களையும் உத்தேசித்து லயனைப் போடவேண்டுமென்று ஜில்லா போர்டார்சிபார்சு செய்ததின் மேல் 5 வருஷங்களுக்கு முன்பாக லயன் போடப்பட்டது. அந்த லயனைத் திறந்து வைக்கப்போகும் சந்தர்ப்பத்தில் யுத்தத் தேவையை உத்தேசித்து லயனைப் பிடுங்கி விடலாமா வென்று கூட யோசனை செய்யப்பட்டது. ஆனால் நல்ல வேளையாக அவ்வித நிலைமை உண்டாகாமல் ஜில்லா போர்டார் இந்த லயனைப் பெருஞ் செலவில் பராமரித்து வந்தார்கள். இப்பால் இந்த லயனும் திறந்து வைக்கப்பட்டு, எதிர்பார்த்ததிற்கு அதிகமாகவே வருமானமும் கிடைத்து வருகிறது. ஸிலோனிலுள்ள காங்கேசன் துறை, யாழ்ப்பாணம் முதலிய இடங்களுக்குக் கப்பல்கள் புறப்பட்டுப் போகப் போதிய இயற்கை வசதிகளுள்ள கோடிக்கரைத் துறைமுகம் வரையில் இந்த லயனை நீட்டி விட்டு விட்டால் புதிய லயனிலும் அதிகப் போக்கு வரத்து ஏற்படுவதுடன் திருவாரூரிலிருந்தும் போக்கு வரத்துகள் அதிகப்படும். கோடிக் கரைத் துறைமுகம் பள்ளத் துறை முகமாயிருப்பதால் வருஷம் 365 நாளும் கப்பல்கள் அங்கு வந்து போக சவுகரியமான தென்பதை முக்கியமாக ஞாபகத்தில் வைத்துக்கொள்ள வேண்டும். கடற்சுங்க இலாகா உத்தியோகஸ்தர்களும் இதைக் ஒப்புக்கொண்டிருக்கிறார்கள். அதன் விவரத்தை வேதாரணியம், தோப்புத் துறை வாசிகள் கவர்ன்மெண்டுக்கு அனுப்பியிருக்கும் மகஜரில் குறிப்பிட்டிருக்கிறார்கள். இருப்புப் பாதையை

தரிசு நிலங்களின் வழியாகவே போடவேண்டி யிருப்பதால், நிலம் வாங்கு வதற்கு அதிகச் செலவு ஏற்படாது. மேலும் நடுவில் லயன் போடவேண்டிய அளவு 5 மைல் தான். இதற்காக 2-லட்சம் ரூபாய்க்கு அதிகமாக செலவு ஏற்பட்டுவிட நியாயமில்லை. நடுவில் பாலங்கள் முதலியன கட்டவேண்டிய அவசியமுமில்லை. காங்கேசன் துறைக்கும் கோடிக் கரைக்கும் 22-மைல் தூரம்தானிருக்கிறது. நடுவிலுள்ள கடலும் பாக்ஸ் ஜலசந்தியினுல் பாதுகாக்கப்பட்டிருக்கிறது. இந்த லயனை நீட்டி விட்டு விட்டால் துறை முகத்திற்கும் போக்குவரத்து வசதி அதிகப்படுவதுடன், சழித்துக் கிடக்கும் இந்தப் பிரதேசத்தையும் திறந்து விட்டதாகும். மேலும் தஞ்சாவூர் ஜில்லாவிலிருந்து சிலோனுக்கு வியாபாரம் செய்யவும் குறுக்கு வழி ஏற்படும். இப்போது சுத்திப் போக வேண்டியிருக்கிற நிலைமையை மாற்றிக் குறுக்கு வழியைத் திறந்து விட்டால் தென்னிந்தியா ரயில்வே கம்பெனியாருக்கு நஷ்ட மேற்படுமென்று சொல்லலாம். வியாபாரத்தையும் ரயில்வே வசதிகளையும் பெருக்குவது கவர்ன்மெண்டின் முக்கிய கொள்கையாக விருப்பதால், குறைந்த செலவில் சிலோனுக்கு சாமான்களை ஏற்றுமதி செய்ய முடியாமல் கஷ்டப்பட்டுக் கொண்டிருக்கும் தஞ்சை ஜில்லா வியாபார சவுகரியத்தை உத்தேசித்து இந்த லயனை கவர்ன்மெண்டார் போடவேண்டிய தவசியம். இந்த வழியைத் திறந்து விட்டாலும் தஞ்சை ஜில்லா ஏற்றுமதிகள் மட்டில் இந்தப் பாதையில் திரும்புமே தவிர, மற்ற ஜில்லாக்களிலிருந்து வழக்கமான பாதை வழியாகத் தான் ஏற்றுமதி செய்யப்படும். ஆகவே ரயில்வே கம்பெனியார் கவலைப்படத் தேவையில்லை. ஜில்லா போர்டுக்கும் இந்த லயனை நீட்டி விடுவதில் விசேஷ சிரத்தை இருக்கிறதென்பது 14—2—10-ல் நடந்த மீட்டிங்கில் போர்டார் ஏகோபித்துத் தீர்மானம் செய்திருப்பதிலிருந்து விளங்கும். இத்தியாதி காரணங்களை உத்தேசித்து இந்த லயனை நீட்டிவிட வேண்டுமென்று கவர்ன்மெண்டார் பலமாகச் சிபார்சு செய்து, தஞ்சை ஜில்லா வாசிகளினுடையவும், மற்றும் இந்த க்ஷேத்திரத்திற்கு வரும் யாத்திரீகர்களினுடையவும் நன்றிக்குப் பாத்திரமாகும்படிகேட்டுக்கொள்ளுகிறேன்.

கனம் வி. கே. ராமானுஜாச்சாரியார் தீர்மானத்தை ஆமோதித்தார்.

## கனம் மிஸ்டர் ஹேளலி

இப்போது சபையின் முன்பாக விருக்கும் தீர்மானத்தைப்பற்றி அதிகக்காலம் செலவிடவேண்டிய அவசியமே யில்லை. வேதாரணியத்திலிருந்து கோடிக்கரைக்கு லயனை நீட்டி விடுவது ஒவ்வொரு அம்சத்திலும் லாபத்தைத்தரத் தக்கதாக இருக்கலாம். ஆனால் மற்றொரு விஷயத்தில் இந்த லயனைப் போடும் யோஜனையை ஜில்லா போர்டார் அடியுடன் விட்டுவிடவாவது அல்லது சத்தியாக நிறுத்தி வைக்கவாவது

வேண்டியிருக்கலாம். இந்த லயனைப் போடும் விஷயமாக இன்னமும் ஜில்லா போர்டாரிடமிருந்து எவ்விதத் தகவலும் கிடைக்கவில்லை. ஆகவே இப்பொழுது எவ்வித அபிப்பிராயத்தையும் வெளியிடுவதாவது அல்லது கனம் மெம்பர் சொல்லுகிற யோசனைப் பிரகாரம் காரியங்களைச் செய்வதாவது உசிதமாயிராது. ஜில்லா போர்டாரிடமிருந்து ஏதேனும் தகவல் கிடைத்தால் அதை சிரத்தையுடன கவர்ன்மெண்டார் கவனிப்பார்களென்று தான் நான் இப்பொழுது சொல்லக்கூடும். இந்த லயனை நீட்டிவிடுவதா இல்லையா வென்கிற விஷயம் முடிவு செய்யப்படுவதி லிருந்து கோடிக்கரைத் துறை முகம் இருப்பதா இல்லாமற் போவதா வென்கிற விஷயமும் தீர்ந்து விடும். இது வரையில் இதைப் பற்றி எவ்விதப் பரிசீலனையும் செய்யப்படவில்லை. ரயில்வே லயனை நீட்டி விடுவதைப் பற்றிய விஷயம் யோசனைக்கு வரும் பொழுது கோடிக்கரை துறைமுகமாயிருக்க ஏற்ற இடமா, இந்த லயனை அந்த இடம்வரையில் நீட்டிக் கொண்டுபோய் விடலாமாவென்கிற விஷயமும் ஆலோசனை செய்யப்படும். சரியான காலம் வரும்போது இந்த விஷயம் சிரத்தையுடன் கவனிக்கப்படு மென்று கனம் மெம்பர் நம்பி யிருக்கலாம். இந்த நிலைமையில் கனம் மெம்பர் தமது தீர்மானத்தை வற்புறுத்தமாட்டா ரென்றே நினைக்கிறேன்.

## கனம் அகமது தம்பி மரக்காயர்

கனம் மெம்பர் அனுகூலமாக பதில் கூறியதற்கு நன்றி பாராட்டுகிறேன். ஜில்லா போர்டாருடைய சிபார்சு கிடைத்தும் இந்த லயனை நீட்டி விடும்படி கவர்ன்மெண்டார் ரயில்வே போர்டாருக்கு சிபார்சு செய்ய வேண்டு மென்பதே என்னுடைய கருத்து; தஞ்சாவூர் ஜில்லா போர்டார் தான் பணங் கொடுக்க வேண்டு மென்பதும் எனக்குத் தெரியும். பண உதவி செய்ய வேண்டு மென்று நான் கேட்கவில்லை. இந்த லயனைப் போடுவதற்கு வேண்டிய பணம் செலவிடக் கூடிய சக்தியுடைய தாகவே என்னுடைய ஜில்லா போர்டு இருக்கிறது. ஜில்லா போர்டாருடைய சிபார்சின் படியே லயனைப் போடும்படி ரயில்வே போர்டாருக்கு சிபார்சு செய்ய வேண்டுமென்பது தான் என்னுடைய வேண்டுகோள். ரயில்வே லயன் கோடிக்கரை வரையில் நீட்டிவிடப்பட்டு விட்டால் துறைமுக விஷயமும் தானகவே கவனிக்கபட வேண்டிவரும். அதைப்பற்றி நான் இப்பொழுது அதிகமாக வற்புறுத்த வில்லை. கனம் ஹெளலி அனுதாபத்துடன் பதில் கூறியிருப்பதை உத்தேசித்து நான் தீர்மானத்தை வற்புறுத்த வில்லை.

தீர்மானம் வாபீஸ் வாங்கிக் கொள்ளப்பட்டது.

---

[மார்ச்சு மாதம் 16-ம் தேதி நடந்த கூட்டம்.]



## கோஷா ஸ்திரீகளும் பத்திரப்பதிவும்

"அவசர சந்தர்ப்பங்களில் கிரமமான கட்டணம் பெற்று கோஷா ஸ்திரீகளுடைய பத்திரங்களை அவர்களுடைய வீடுகளுக்குப் போய் ரிஜிஸ்தர் செய்து வைக்கும்படி சப் மாஜிஸ்திரேட்டுகளுக்கு உத்திரவு செய்ய வேண்டுமென்று இந்த சபை சிபார்சு செய்கிறது"

இது முஸ்லீம்களின் மார்க்க தர்மத்தை பாதிப்பதாக உள்ள முக்கிய விஷயம். முஸ்லீம்களில் பலர் ஸ்டிரெயிட்ஸ் செட்டில் மெண்டுகள், மலாய் நாடுகள் இவைகளில் பிரம்மாண்டமாகத் தொழில் செய்து வருகிறார்கள். திடீரென்று யாதேனு மொரு நபர் இறந்து விட்டாலும் அல்லது அவருக்கு வேறு விதமான அவகேடு நேர்ந்து விட்டாலும் இங்கிருந்து வரும் அவருடைய சம்சாரம் வேறு ஒரு பெயர் வழியின் பெயருக்கு அதிகாரப்பத்திரம் எழுதி ரிஜிஸ்தர் செய்து அனுப்பினாலன்றி அங்கு தொழில் வைத்தது வைத்தபடியே இருந்து வர வேண்டியிருக்கிறது. சப்ரிஜிஸ்தார்கள் ரிஜிஸ்தர் செய்து வைக்கும் அதிகாரப் பத்திரங்களை குடியேற்ற நாட்டு கவர்ன்மெண்டார் ஒப்புக்கொள்ளாததினால், சப்மாஜிஸ்திரேட்டுகள் முன்பாக அவைகளை ரிஜிஸ்தர் செய்தனுப்ப வேண்டியிருக்கிறது. அது சம்பந்தமாக சென்ற மாதம் 21-ம்தேதி வெளியான சுதேச மித்திரன் பத்திரிகையில் அடியக்க மங்கலம் ஷரியாத்துல் இஸ்லாம் சங்கத்தார் வெளியிட்டிருக்கும் வியாசத்தை கவனிக்கவேண்டும்.

சப்ரிஜிஸ்தார்களைப் போல வீடுகளுக்குப் போய் ரிஜிஸ்தர் செய்து வைக்கும் பொறுப்பு சப்மாஜிஸ்திரேட்டுகளுக்கு இருந்து வராததால் அவர்கள் வீடுகளுக்கு வரமறுத்து விடுகிறார்கள். எனவே,கோஷா ஸ்திரீகள் அவர்கள் முன்பாக பப்ளிக் கோர்ட்டுகளில் ஆஜராவது மிகுந்த அசவுகரியமாயிருக்கிறது. ஆகையால் ஸ்டிரெயிட்ஸ் செட்டில் மெண்டுகள், மலாய் நாடுகளில் வசிப்பவர் எவரேனும் வார்சு இல்லாமல் அந்த இடத்தில் திடீரென்று இறந்து விட்டால் இந்தியாவில் வசிக்கும் அவருடைய பெண்சாதி பிள்ளைகள் அவருடைய சொத்துக்களை அனுபவிக்க முடியாத ஸ்திதியிலிருக்கிறார்கள்.

முஸ்லீம்களின் மார்க்க தர்மத்தைக் காப்பாற்றவும், தங்களுடைய முஸ்லீம் பிரஜைகளுக்கு எவ்வித நஷ்டமும் நேரிடாமல் பாதுகாக்கவும் நான் சபையின் அங்கீகாரத்திற்கு இத் தீர்மானத்தைக் கொணர்ந்து விண்ணப்பங்கள் செய்து கொள்ளப்பட்டால் கிரமமான கட்டணத்தை வாங்கிக்கொண்டு கோஷா ஸ்திரீகளுடைய வீடுகளுக்குப் போய் பத்திரங்களை ரிஜிஸ்தர் செய்து வைக்கும்படி இந்த மாகாணத்திலுள்ள சப் மாஜிஸ்தி

ரேட்டுகளுக்கு உத்திரவு செய்ய வேண்டுமென்று கவர்ன்மெண்டாரைக் கேட்டுக் கொள்ளுகிறேன். சப்ரிஜிஸ்தார்கள் வீடுகளுக்குச் செல்லுவதற்காக ஏற்படுத்தியிருக்கும் 10 ரூபாய் கட்டணத்தையே இவர்களும் விதிக்கலாம். இதனால் சப்மாஜிஸ்திரேட்டுகளினுடைய இதர வேலைகளுக்கு இடைஞ்சலுண்டாகுமென்று நினைக்க வேண்டியதில்லை. பார்க்கப் போனால் விண்ணப்பங்கள் குறைவாகத் தானிருக்கும். ஆபீஸ் நேரங்களில் அவர்கள் இந்த வேலையை கவனிக்க முடியா விட்டால் ஞாயிற்றுக்கிழமைகளிலாவது ஒழிவு நேரங்களிலாவது அவர்கள் பார்த்துக் கொள்ளலாம்.

கனம் யாகுப் ஹாசன் தீர்மானத்தை ஆமோதித்தார்.

## கனம் ஸர் பி. ராஜகோபாலாச்சாரியார்.

ஜனவரி மாதம் 19-ம் தேதி கனம் மெம்பர் கடித மூலமாக இந்த விஷயத்தை கவர்ன்மெண்டின் அறிவிப்புக்குக் கொண்டு வந்திருப்பது ஞாபகமிருக்கலாம்.

கனம் மரக்காயர்—அதற்கு பதிலும் கிடைத்திருக்கிறது.

கனம் ராஜகோபாலாச்சாரியார்.—என்ன பதில் கிடைத்திருக்கிறது?

கனம் மரக்காயர்:—26-ம் தேதியுள்ள கடிதத்தில் இந்த விஷயம் கவனிக்கப்படுமென்று கண்டிருக்கிறது.

கனம் ஸர் பி. ராஜகோபாலாச்சாரியார்:—அதைத் தான் நானும் சொல்லுவதாக இருந்தேன். கனம் மெம்பர் குறிப்பிடுகிற கேஸ்கள் அதிகமாக இல்லை யென்று விசாரணையில் தெரியவந்திருக்கிறது. ஆனால் அதிக கேஸ்களிருப்பதாக அவர் நினைக்கிறார் போலும்! அப்படி இருந்தால் அதிகாரப் பத்திரங்களை கோர்ட்டுக்கு வந்து ரிஜிஸ்தர் செய்து வைக்க முடியாமலிருக்கும் கோஷா ஸ்திரீகளுடைய வீடுகளுக்குச் சென்று அந்தப் பத்திரங்களை ரிஜிஸ்தர் செய்து வைக்கும்படி நிர்வாக ஹோதாவில் சப் மாஜிஸ்திரேட்டுகளுக்கு உத்திரவு செய்வதா, அல்லது பிரிட்டிஷ் இந்தியாவில் சப் ரிஜிஸ்தார்களால் ரிஜிஸ்டர் செய்யப்படும் அதிகாரப் பத்திரங்கள் அங்கிகரிக்கத் தக்கன்வாகும்படி விதிகளை மாற்றிக் கொள்ளும்படி அந்த கவர்ன்மெண்டுகளைக் கேட்டுக் கொள்ளுவதாவென்பதே அநேகத்தபடியாக யோசிக்க வேண்டிய விஷயம். இரண்டிலொன்று செய்து தானகவேண்டும். எந்த வழியில் போவதென்று இன்னமும் கவர்ன்மெண்டார் முடிவு செய்யவில்லை. சப் ரிஜிஸ்தார் ரிஜிஸ்தர் செய்யும் பத்திரங்கள் போதுமானதென்று சொல்லி அவைகளை ஏற்றுக்கொள்ளும்படி அந்த கவர்ன்மெண்டுகளுக்கு எழுதிப் பார்ப்போம். அவ்விதம் செய்ய சாத்தியப்படாமற் போய்விட்டால் எல்லா மாஜிஸ்திரேட்டுகளும் கோஷா ஸ்திரீகளுடைய வீடுகளுக்குப் போய் பத்திரங்களை ரிஜிஸ்தர் செய்து வைக்கும்படி உத்திரவு செய்வதைப்பற்றி

கவர்ன்மெண்டார் யோசிப்பார்கள். இதற்கெல்லாம் காலம் பிடிக்குமாதலால் கனம் மெம்பர் அதற்கு வேண்டிய அவகாசம் கொடுப்பாரென்றே நம்புகிறேன்.

## கனம் அகமது தம்பி மரக்காயர்.

ஏதாவது ஒரு வழியாக முடிவு செய்யும்படி கவர்ன்மெண்டாரிடமே இதைவிட்டு விடுவதில் எனக்கு சர்வ சம்மதம். கோஷா முறையைப் பாதுகாத்து அனுவசியமான நஷ்ட மேற்படாமல் செய்யவேண்டு மென்பதே என்னுடைய கருத்து.

நம்முடைய யோசனைகளைக் கேட்காமல் அந்த கவர்ன்மெண்டுகள் ஒரே பிடிவாதமாயிருக்கின்றன. சப் ரிஜிஸ்தார்கள் குமாஸ்தாக்கள் தானென்றும், அவர்கள் உத்தியோகஸ்தர்களாக மாட்டார்களென்றும், சப் மாஜிஸ்திரேட்டுகள் முகரிருக்க வேண்டுமென்றும் சொல்லுகிறார்கள். கௌரவ மாஜிஸ்திரேட் ரிஜிஸ்தர் செய்தால் போதாதாவென்று ஒரு மெம்பர் கேட்டார். முகர் போட முடியுமானுல் அவர் ரிஜிஸ்தர் செய்து வைப்பது போதுமென்றே நினைக்கிறேன். ஆனுல் அதற்கு சாத்தியப்படாமலிருக்கலாம். கூடிய சீக்கிரத்தில் உத்திரவு பிறப்பிவித்து விடவேண்டு மென்பதே என் கருத்து. இந்த மாதிரிக் கேஸ்கள் நான் ஏற்கனவே சொன்ன பிரகாரம் அதிகமாகவுமிராது. கனம் மெம்பர் கொடுத்த வாக்குறுதியின் பேரில் நான் தீர்மானத்தை வாபீஸ் வாங்கிக்கொள்ளுகிறேன்.

---

## பாய்கட்டிக் கப்பல்களுக்கு லைசென்ஸ்

"பர்மாவிலிருந்து நெல், அரிசி இவைகளை ஏற்றிக் கொண்டுவர பாய் கட்டிக் கப்பல்களுக்கு லைசென்ஸ் கொடுத்துக் கொண்டு வரும்படி இந்தியா கவர்ன்மெண்டாருடன் ஏற்பாடு செய்து கொள்ள வேண்டுமென்று இந்த சபை சிபார்சு செய்கிறது."

இது வியாபாரிகளைப் பொறுத்த விஷயமென்பது தங்களுக்கும் மற்ற மெம்பர்களுக்கும் தெரிந்ததே. யுத்த காலத்தில், தனிப்பட்ட நபர்களைக் கப்பல்களைக் கட்டும்படி கவர்ன்மெண்டாரே தூண்டிவிட்டு விட்டு, இப்பொழுது பர்மாவிலிருந்து நெல், அரிசி ஏற்றிவர லைசென்ஸ் கொடுக்க மாட்டேனென்று சொல்வது மிகுந்த ஏமாற்றத்தை விளைவித்திருக்கிறது. நானும் கப்பல் கட்டும் கமிட்டியில் ஒரு மெம்பராக இருந்திருக்கிறேன். யுத்தத்திற்கு முன்னிருந்த விலைக்கு தளவாடங்களைக் கொடுத்து கப்பல்களைக் கட்டும்படி கமிட்டியார் தூண்டியிருக்கிறார்கள். என்னுடைய வர்த்தக நண்பர்கள் பலரையும் இத்தொழிலை அபிவிருத்தி செய்யும்படி நான்

வேண்டிக் கொண்டிருக்கிறேன். கவர்ன்மெண்டார் தூண்டியதால் அநேகர் ஏராளமாக இத்தொழிலில் பணத்தைப் போட்டுக் கப்பல்களைக் கட்டியிருக்கிறார்கள். இந்தக் கப்பல்களெல்லாம் பர்மாவிலிருந்து அரிசி, நெல் முதலிய தானியங்களை ஏற்றுவந்திருக்கையில் இப்பொழுது அவைகளுக்கு லைசென்ஸ் கொடுக்க மறுப்பதிலிருந்து இந்தத்தொழிலுக்கு மார்க்கமில்லையோவென்று நினைக்க வேண்டியிருக்கிறது. புதிதாசக் கட்டின கப்பல்களுக்கு மாலுமிகளைத் தயார் செய்வதற்காக கப்பலோட்டும் சாஸ்திர போதனை பாடசாலையொன்றையும் ஏற்படுத்த வேண்டுமென்றகூட நான் தீர்மானம் கொண்டு வந்தேன். அதற்காக கள்ளிக்கோட்டை, காக்கினாடா, நாகப்பட்டணம் ஆகிய மூன்று இடங்களிலும் செஷனல் பாடசாலைகளை ஏற்படுத்துவதற்காக கவர்ன்மெண்டார் வரவு செலவு திட்டத்திலும் பணத்தை ஒதுக்கி வைத்திருக்கிறார்கள். பல கப்பல் காரர்கள் தங்களை சரியாக கவர்ன்மெண்டார் நடத்தவில்லையென்றும், தங்களுடைய கப்பல்கள் சும்மா கிடப்பதினால் தங்களுக்கு ஏராளமான நஷ்டமுண்டாகிறதென்றும் எனக்குத் தெரிவித்துக்கொண்டதின் பேரில் 24-1-20 ல் கூடிய ஸிவில் சப்ளைஸ் கமிட்டியின் கூட்டத்தில் அடியிற் கண்ட தீர்மானத்தைப் பிரேரணை செய்தேன்.

"பாய் கட்டிக் கப்பல்களைக் கட்டும்படி கவர்ன்மெண்டாரே தூண்டியிருப்பதால், இப்பொழுது பர்மாவிலிருந்து பாய் கட்டிக் கப்பல்களில் நெல், அரிசி இவைகளை ஏற்றி வருவதிலிருந்து வரும் நிர்ப்பந்தங்களை நிவர்த்தித்து விட வேண்டுமென்று இந்த கமிட்டி சிபார்சு செய்கிறது"

அதற்கு எனக்குக் கீழ்க்கண்டவாறு பதில் கிடைத்தது,—

"1919-ம் வருஷம் பிப்பிரவரி மாதம் 15-ம் தேதி வரையில் பாய்கட்டிக் கப்பல் லைசென்ஸ்கள் தாராளமாகக் கொடுக்கப்பட்டு வந்தன. இந்த மாகாணத்திற்கு ஏற்பட்ட அளவுக்கு மேல் அரிசி வந்து விட்டதால் உணவுப்பொருள் கமிஷனர் லைசென்ஸ் கொடுக்கக்கூடாதென்று ஆட்சேபித்தார். கப்பலுக்குப் பிடிக்கக்கூடிய பிரயாண காலம், அவைகள் போய்ச் சேருகிற இடம் இவைகள் நிலவரமாகத் தெரிவதில்லையாதலால், அரிசியில் ஒருபாகத்தை பாய்க்கட்டிக் கப்பல்கள் மூலமாக வரும்படி விடுவது அசாத்தியமாயிருக்கிறது"

என்னுடைய கேள்விக்கு ஸிவில் சப்ளைஸ் டைரக்டர் கொடுத்திருக்கும் பதில் மிகவும் அதிருப்திகரமானதாக இருக்கிறது. நமது மாகாணத்தின் தேவைக்குக் குறைவாகவே நமது மாகாணத்திற்கு அரிசி விதித்துக் கொடுக்கப் படுவது தெரிந்த விஷயம். கப்பல்களில் இடமில்லை யென்று சொல்லி அவைகளில் நெல்லை ஏற்றிவர அனுமதிக்க முடியாதென்று சொ

ல்லி விடுகிறார்கள். ஜனங்களுக்கு இஷ்டப்படும் பாய்க் கப்பல்களிலும் நெல், அரிசி இவைகளை ஏற்றிவர அனுமதி கொடுப்பதில்லை.

பர்மாவிலிருந்து அரிசி, நெல் இவைகளை ஏற்றுமதி வருவதிலுள்ள தடைகளைக் குறிப்பிட்டு விட்டேன். இந்த மாகாணத்திற்குள்ளேயே ஒரு துறை முகத்திலிருந்து மற்றொரு துறை முகத்திற்குக் கூட உள்ளூர் அரிசியை ஏற்றிக்கொண்டு போகக்கூடாதென்று ஸிவில் ஸப்ளைஸ் டைரக்டர் சொல்லுகிறார். ரயில் மார்க்கமாக ஒரு இடத்திலிருந்து மற்றொரு இடத்திற்கு அரிசி, நெல் இவைகளை ஏற்றிச் செல்லுவதிலிருந்து வந்த நிர்ப்பந்தங்களை ஒழித்த பிறகு, ஏன் பாய்க்கட்டிக் கப்பல்களில் ஏற்றிச் செல்லுவதைத் தடுக்க வேண்டுமென்று எனக்குத் தெரியவில்லை. எங்கேயோ எதோ உழலிருப்பதாகக் காணுகிறது. உடனே அந்தக் குறையை கவர்ன்மெண்டார் நிவர்த்தித்து விடுவார்களென்று நம்புகிறேன்.

எல்லா பாய்க் கட்டி கப்பல்களையும் சும்மா வைத்து வைப்பதென்றால் ஏராளமாக பணத்தைப் போட்டவர்கள் போகும் கதியென்ன? கப்பல்கள் போக்குவரத்து செய்யும் காலம் வர வர நெருங்கி வருகிறது. அந்திய காலத்தில் 3200 டன்னை ஏற்றிக் கொண்டு வர ஸிவில் சப்ளைஸ் டைரக்டர் அனுமதிகொடுப்பதின் அர்த்தமென்ன?

"காக்கினடாவில் கப்பல்கட்டும் தொழில்—அனுதாவு" என்கிற தலைப்பின்கீழ் ஜனவரிமாதம் 29-ம் தேதி வெளியான "ஹிந்து" பத்திரிகையில் பிரசுரமாயிருக்கும் ஒரு தந்தியின் விவரத்தை இந்த சந்தர்ப்பத்தில் சபையின் அறிவிப்புக்குக் கொண்டு வர விரும்புகிறேன்.

"காக்கினடா, மசூலிப்பட்டணம், யாழ்ப்பாணம் முதலிய இடங்களிலுள்ள கப்பல்காரர்களுக்கு சராசரி 200 டன் எடைகொண்ட 100 கப்பல்களிருக்கின்றன. 1918 ம் வருஷம் ஜூலை மாதத்தில் தளவாட சபையார் வெளியிட்ட அறிக்கையை நம்பித்தான் இந்தத் தொழிலில் அவர்கள் ஏராளமாக பணத்தைப் போட்டார்கள். அக்யாபிலிருந்து ஸிலோன் துறைமுகங்களுக்கு அரிசி, நெல் இவைகளை ஏற்றிக்கொண்டுபோக முடியாமற் செய்துவிட்டதில் கவலைக்கிடமான நிலைமை உண்டாகி விட்டது. ஸ்டீமர் கம்பெனிகளுடன் ஒப்பந்தம் செய்துகொண்டு ரங்கூன் மர வியாபாரிகள் சாக்குகளை ஏற்றுவதில்லை; ஏற்றிக்கொண்டு வருவதற்கு விற்பதுமில்லை. சமீபத்தில் ஏற்பட்ட புயல் காற்றில் பெரும் நஷ்டம் உண்டாகிவிட்டது; எல்லா பாய்க்கப்பல்களிலும் சேர்ந்து சரக்கேற்றினாலும் இரண்டு தடவைகளில் கொண்டுபோகக்கூடிய 1000 டன் சரக்கையும் ஒரே தடவையில் ஸ்டீமர் கொண்டுபோய் விடக்கூடுமாதலால் அதோடு போட்டி போடுவது சாத்தியமில்லை. நல்ல பருவகாலத்தில் கப்பல்களில் ஏற்றிக்கொண்டு வரும்படி அனுமதி வேண்டுமென்று இச்சங்கத்தார் இந்தியா கவர்ன்மெண்டாரை

வேண்டிகொண்டார்கள். இல்லாவிடில் சொந்தக்காரர்களுக்கு விசேஷ நஷ்ட மேற்படும். கவர்ன்மெண்டார் இந்த விஷயத்தை பக்ஷபாத மில்லாமல் கவனித்து, சொந்தக்காரர்களுக்கு நஷ்டம் வராமல்பாது காப்பார்களென்று இச்சங்கத்தார் நம்புகிறார்கள்.''

இத்தியாதி காரணங்களை உத்தேசித்து இந்தியாவின் வியாபாரத்தைப் பெருக்குவதற்காக பாய்க்கட்டி கப்பல்களில் ஏற்றிவர இந்தியா கவர்ன்மெண்டாரிடம் அனுமதி வாங்கித்தந்து, பிராசீன முறையை நிலைநாட்ட வேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

கனம் வெங்கடப்பய்யா தீர்மானத்தை ஆமோதித்தார்.

## கனம் எல். டி. சுவாமிக்கண்ணுபிள்ளை.

பாய்க்கட்டி கப்பல்களில் எவ்வித நிபந்தனைகளின் பேரில் பர்மாவிலிருந்து அரிசி ஏற்றிக்கொண்டுவர அனுமதி கொடுக்கப்பட்டதென்றும், பிற்பாடு ஏன் அந்த வழக்கத்தை நிறுத்திபாகி விட்டதென்றும் கனம் அகமது தம்பி மரக்காயரே சொல்லியிருக்கிறார். இதே தகவலை அவர் ஸிவில் சப்ளைஸ் கமிட்டியில் கேட்டார். பாய்க்கட்டிக் கப்பல்களில் ஏற்றிக்கொண்டு வரும் அரிசியை இந்த மாகாணத்திற்காகக் கொடுக்கப்பட்டிருக்கும் அளவிலிருந்து குறைத்துக்கொள்ளாமல், திட்டத்திற்குமேல் அனுமத்தாக இவைகளின் மூலமாக வந்துகொண்டிருந்ததால் டிசம்பர் மாதம் 15-ம் தேதி வரையில் தாராளமாக பாய்க்கப்பல்களில் கொண்டுவர லைசென்ஸ் கொடுக்கப்பட்டதென்று கமிட்டியில் பதில் சொல்லபட்டது. அந்த சமயத்தில் கனம் மெம்பர் பிரசன்னமாக விருக்கவில்லை போலும். ஆனால் இதைக் கணக்கிலிருந்து கழித்துக்கொள்ளுவதாக உணவுப்பொருள் கமிஷனர் கூறியதின் பேரில் இவைகளின் மூலமாகக் கொண்டுவரவிட வேண்டுமாவென்பதை கவலையுடன்யோசிக்க வேண்டியதாயிற்று. சுமார் ஒரு மாதத்திற்கு முன்வரையில் எவ்வளவு தூரம் நமது மாகாணத்தில் பெரும்பாகம் பர்மா அரிசியை நம்பியிருக்க' வேண்டியதாயிருந்ததென்பது கனம் மெம்பர்களுக்குத் தெரிந்தவிஷயம். ஆகவே அந்த சந்தர்ப்பத்தில் பர்மாவிலிருந்து ஸிவில் சப்ளைஸ் டைரக்டர் சீக்கிரமாக அரிசியைத் தருவிக்க வேண்டியிருந்தது. ஆனால் பாய்க்கப்பல்கள் வந்து சேருங்காலம் நிலவர மில்லாததினால், பர்மாவிலிருந்து பாய்க்கப்பல்களில் அரிசியை ஏற்றிக்கொண்டு வருவதற்கு லைசென்ஸ் கொடுப்பதைக் கொஞ்சகாலத்திற்கு நிறுத்திவைத்தோம். பிறகு கனம் அகமது தம்பி மரக்காயர் வேண்டிக்கொண்டதின் பேரில் ஸிவில் சப்ளைஸ் டைரக்டர் இந்த மாகாணத்தின் விதாசாரம் குறைந்தாலும் குறையுமென்று கொஞ்சம் அரிசியை பாய்க்கப்பல்களில் கொண்டுவர லைசென்ஸ் கொடுத்திருக்கிறார். இந்த மாகாணத்திற்கு மொத்தம் கிடைக்கவேண்டிய

27,000 டன் அரிசியில் 3,200 டன் அரிசியை பாய்க்கப்பல்களில்கொண்டுவர வில்வில் சப்ளைஸ் டைரக்டர் லைசென்ஸ் கொடுத்திருக்கிறார். இது போதாதென்று கனம் மெம்பர் நினைக்கிறதாகத் தெரிகிறது. பாய்க்கப்பல்களில் கொண்டு வருவதைத்தவிர எவ்வளவு சீக்கிரமாக அரிசியைக் கொண்டுவந்து சேர்க்க வேண்டுமென்பது போன்ற பலவிஷயங்களை நாங்கள் யோசிக்க வேண்டியிருக்கிறது. பர்மாவிலிருந்து அரிசியை ஏற்றிக்கொண்டு வராமற் போனால் கவர்ன்மெண்டாருடைய தூண்டுதலின்பேரில் கட்டப்பட்ட பாய்க் கப்பல்கள் எல்லாம் சும்மாகத்தான் கிடக்கவேண்டுமென்கிற தப்பெண்ணம் இருக்கிறதுபோல் தோன்றுகிறது. சாமான்கள் ஏற்றுமதி இறக்குமதி சட்டத்தின்படி இரண்டொரு சாமான்களைக் கொண்டுவரக் கூடாதென்று தடுத்திருப்பதைத் தவிர இதர சாமான்களை தாராளமாக ஏற்றிக்கொண்டு வரலாம். ஒருதுறை முகத்திலிருந்து மற்றொருதுறை முகத்திற்குக் கொண்டுபோக முடியாதபடி நிர்ப்பந்தமிருப்பதாகச் சொல்லப்பட்ட விஷயம் தீர்மானத்திலில்லையென்று கனம் டாட்ஹண்டர் எடுத்துக்காட்டியிருக்கிறார். அதைப்பற்றி பிரத்தியேகமாக எழுதும்படி கனம் மெம்பரைக் கேட்டுக் கொள்ளுகிறேன். இத்தியாதி காரணங்களை உத்தேசித்தும், சாத்தியமான வரையில் பாய்க்கப்பல்களில் அரிசியை ஏற்றிக்கொண்டுவர லைசென்ஸ் கொடுத்திருப்பதை உத்தேசித்தும் கனம் மெம்பர் தமது தீர்மானத்தை வாபீஸ் வாங்கிக்கொள்ளுவாரென்று நம்புகிறேன்.

## கனம் அகமது தம்பி மரக்காயர்.

கனம் சுவாமிக் கண்ணுபிள்ளை கொடுத்த பதில் கொஞ்சம்கூட திருப்திகரமாக இல்லை. பாய்க்கப்பல்களில் வந்துசேர காலதாமதமாகு மென்றும், பாய்க்கப்பல் எங்கு போய்ச்சேருகிறதென்று நம்பிக்கையில்லை யென்றும், உணவுப்பொருள் கமிஷனர் ஜோடித்து விட்ட சமாதானங்களை கனம் சுவாமிக் கண்ணுபிள்ளையும் தொகுத்துச் சொல்லியிருக்கிறார். இந்த சமாதானங்களை நாம் எவ்விதம் அங்கீகரிப்பது? வியாபாரிகளாகிய நாங்கள் கப்பல்கள் அகப்படாமல் திண்டாடிக் கொண்டிருந்தபொழுது கவர்ன்மெண் டார் முன்வந்து பாய்க்கப்பல்களைக் கட்டும்படி தூண்டினார்கள். கவர்ன் மெண்டாருடைய வார்த்தையை நம்பிக்கொண்டு பலர் ஏராளமாக பணத் தைப்போட்டு கப்பல்களைக் கட்டினார்கள். ஆனால் இப்பொழுது அரிசி கமிஷனரோ இந்தியா கவர்ன்மெண்டாரோ இந்த மாகாணத்திற்குக் கிடைக்கவேண்டிய அரிசியை பாய்க்கப்பல்களில் ஏற்றிக்கொண்டுவர லைசென்ஸ் கொடுக்க முடியாதென்றும், ஸ்டீமர்களில் தான் ஏற்றிக்கொண்டுவர வேண்டுமென்றும் சொல்லுகிறார்கள். இது வீண் சால் ஜாப்புதான். இந்த மாதிரி செய்வதாகயிருந்தால் கவர்ன்மெண்டாருடைய வாக்குறுதிகளை எவ் விதம் நாங்கள் நம்பமுடியும்? அந்த வாக்குறுதியை நம்பித்தான் இந்தியா

கவர்ன்மெண்டாரையாவது அரிசி கமிஷனரையாவது புனராலோசனை செய்யும்படி வேண்டிக்கொள்ள வேண்டுமென்று கோருகிறேன். விதித்துக்கொடுக்கும் விஷயத்திலும் கனம் மெம்பர் வியக்தமாக பதில் சொல்லவில்லை. போனவருஷத்தில் வந்து கொண்டிருந்த சரக்கில் பத்தில் ஒரு பாகம்கூட இப்பொழுது வரவில்லை. குறைவாக சரக்கு வருவதினாலேயே சிவில் சப்ளைஸ் டைரக்டர் பாய்க்கப்பல்களில் ஏற்றிக்கொண்டுவர லைசென்ஸ் கொடுக்க முடியாமலிருப்பதினால் அதிக அரிசி கிடைக்கும்படி ஏற்பாடு செய்யவேண்டும். அதைச் செய்யாவிட்டால் பாய்கட்டி கப்பல்களுக்கு லைசென்ஸ் அதிகமாகக் கொடுக்கமுடியாது. இந்தியா கவர்ன்மெண்டார் அரிசி வியாபாரத்திலேயே இறங்கிவிட்டதை கவனிக்கவேண்டும். அரிசி வியாபாரத்தை இந்தியா கவர்ன்மெண்டாரே ஆரம்பித்து விட்டதினால்தான் இந்த அனர்த்த மெல்லாமுண்டாகிறது. அவர்கள் அதில் லாபம் சம்பாதிப்பதாகவும் தோன்றுகிறது. நமது மாகாணத்திற்கு அரிசி அதிகமாக தேவையாக விருப்பதால் ஜாஸ்தியாக நமக்குக் கொடுக்கும்படி இந்தியா கவர்ன்மெண்டாரைக் கேட்டுக்கொள்ளவேண்டும். அப்படிச் செய்தால், கப்பல்காரர்களுக்கு நாம் கொடுத்திருக்கும் வாக்குறுதிகளையும் காப்பாற்றலாம்.

நமது மாகாணத்திற் குள்ளேயே ஒரு துறைமுகத்திலிருந்து மற்றொருரு துறை முகத்திற்கு பாய்க் கப்பலில் அரிசியை ஏற்றிக் கொண்டு போகாமல் செய்திருப்பது மிகுந்த ஆக்ஷேபகரமானது. அந்த நிர்ப்பந்தத்தை உடனே ஒழித்துவிட வேண்டும். கப்பல்களில் அதிகப்பணத்தைப் போட்டிருக்கிற பெயர் வழிகள் வெகு கஷ்டப்பட்டுக் கொண்டிருக்கிறார்கள். பாய்க் கப்பல்கள் நீராவிக் கப்பல்களைப் போன்றவையன்று. ஆறுமாத காலத்தில் நீராவிக் கப்பலகளுக்கு சரக்கு கிடைக்காவிடின் மற்ற ஆறு மாதத்தில் சேர்த்து அடித்து விடலாம். ஆனால் பாய்க் கப்பல்கள் நல்ல பருவத்தில் காற்று சவுகரியமாயிருக்கும் பொழுது தான் போய்வர முடியும். வருஷத்தில் 6-மாதம் தான் அவைகள் போக்குவரத்து செய்யலாம். இந்த சந்தர்ப்பத்தைக் கைவிட்டு விட்டால் முதலாளிகளுக்கு நஷ்டம் தான். 3200-டன் மிகவும் குறைந்த அளவானதினால் அதனால் ஒருவருக்கும் நன்மை உண்டாகிவிடாது. ஆகவே இந்த விஷயத்தை கவர்ன்மெண்டாரை சிரத்தையாக கவனிக்கும்படி வேண்டிக் கொண்டு தீர்மானத்தை வாபீஸ் வாங்கிக் கொள்ளுகிறேன்.

மேன்மைதங்கிய கவர்னர்:—அரிசி ஏற்றிக்கொண்டு வராததினால் எத்தனை கப்பல்கள் சும்மா கிடக்கின்றன வென்றும், எத்தனை பேர்கள் வேலை யில்லாமலிருக்கிறார்களென்றும் தகவல் கொடுக்கும்படி கனம் மெம்பரைக் கேட்டுக் கொள்ளுகிறேன்.

கனம் அகமது தம்பி மரக்காயர்:—நான் ஜாப்தா தயாரித்து தங்களுக்கு அனுப்புகிறேன்.

தீர்மானம் வாபீஸ் வாங்கிக் கொள்ளப்பட்டது.

---

## ஜூலைமாதம் 15ம் தேதி நடந்த கூட்டம்

---

### முத்துப் பேட்டை ஹிந்து—முஸ்லீம் கலவரம்

மேன்மைதங்கியபிரபுவே,

நான் கொண்டு வரும் தீர்மானத்தின் விவரமாவது,—

"முத்துப்பேட்டையில் முசம்மதியர்களின் பள்ளி வாசலுக் கெதிராக ஹிந்துக்கள் ஊர்வலம் நடத்திக் கொண்டு போகையில் அவர்கள் கலவரமுண்டுபண்ணி கலகம் செய்தவிஷயமாக அவசியமான விசாரணைகளை நடத்த வேண்டுமென்று இந்த சபை ஆலோசனை சபையுடன் கூடிய கவர்னருக்கு சிபார்சு செய்கிறது"

ஹிந்து—முஸ்லிம் ஒற்றுமை நாளுக்கு நாள் வளர்பிறைச்சந்திரன் போல் ஓங்கி வரும் இந்தக் காலத்தில் இத்தகைய தீர்மானங்களை அடிக்கடி நான் கொண்டுவர வேண்டியிருப்பதுஎனக்கு மிகவும் வருத்தமாயிருக்கிறது. ஆயினும் இது மகத்தான விஷய மானதினாலும், என்னுடைய சமூகத்தினரின் மத சம்பந்தமான உணர்ச்சியை வெகுவாக பாதிப்பதாக இருப்பதினாலும் இனியாவது இத்தகைய போராட்டம் நேரிடாம லிருப்பதற்குத்தகுந்த நடவடிக்கைகளை எடுத்துக் கொள்ளுவதற்காக இந்த விஷயத்தை சபையின் முன்பாக நான் பிரஸ்தாபத்திற்குக் கொண்டு வரவேண்டி யிருக்கிறது.

இந்த மாதிரியான சம்பவங்கள் சிற்சில இடங்களில் நேர்ந்து வருவதால், சட்ட பரிபாலனம், அமைதி இவைகளை உத்தேசித்தும், மாகாணத்தின் சாவதானமான அபிவிருத்தியை உத்தேசித்தும் இனியும் இவ்விதத் துர்பாக்கிய சம்பவங்கள் நிகழாவண்ணம் தக்க ஏற்பாடுகளைச் செய்ய வேண்டியதவசியமாயிருக்கிறது. கவர்ன்மெண்டாரும் இதன் அவசியத்தை உணர்ந்திருப்பதை நான் தெரிந்து கொள்ளாமலில்லை. இனி இவ்வித விபரீதமான சம்பவங்கள் நேராமல் பார்த்துக் கொள்வதற்கு இந்த கலவரங்களின் மூலகாரணங்களை நன்கு பரிசீலனை செய்து, அவைகளைத்தடுப்பதற்கு சட்டபூர்வமாகவோ, நிர்வாக தோரணையிலோ, செய்ய வேண்டிய காரியங்களைச் சிபார்சு செய்வதற்காக இருவகுப்புப் பிரமுகர்களும் அடங்கிய கமிட்டி

யொன்றை நியமிக்க வேண்டுமென்று நான் சென்ற நவம்பர் மாதத்தில் கொண்டுவந்த தீர்மானத்தை உத்தியோகஸ்தர்களல்லாத இரு வகுப்புப் பிரதிநிதிகளு மடங்கிய கமிட்டி யொன்று கவர்ன்மெண்டார் திருத்தி அங்கீ காரம் செய்திருப்பதே கவர்ன்மெண்டாருக்கு இவ்விஷயத்திலுள்ள சிரத் தையைக் காட்டுவதற்குப் போதிய ருஜுவாகும். கமிட்டி நியமனமாகி சில மாதங்களாகியும் நாளது மாதம் 12-ம் தேதி தான் கமிட்டி முதன் முத லாகக் கூடியது. இது சம்பந்தமாக என்னென்ன வேலைகளைச் செய்ய வேண்டுமென்று ஒரு திடமான முடிவுக்கு வருவதற்கு அவசியமான தக வல்களைச் சேகரிக்கவே இவ்வளவு காலதாமத மேற்பட்டிருக்கலாம். இந் தக்கமிட்டியின் முயற்சிகளினாலாவது, இருவகுப்பினருக்குள்ளும் ஒருவருக் கொருவர் பரஸ்பரம் விட்டுக் கொடுப்பதின் மூலமாக அன்யோன்ய பாவம் ஏற்படுமென்று நம்புகிறேன்.

இனி, தீர்மான விஷயத்தை கவனிப்போம். இது சம்பந்தமாக நான் ஆதியில் அனுப்பிய தீர்மானத்தில் "ஒரு முகம்மதியரைக் கொன்று பள்ளி வாசல், குளத்தில் எறிந்துவிட்ட" விஷயத்தையும் குறிப்பிட்டிருந்தேன். துரதிர்ஷ்ட வசத்தினால் சட்டசபை நடவடிக்கை முறை 4 (ஸி) பிரிவின் படி அந்தபாகம் தீர்மானத்திலிருந்து எடுத்து விடப்பட்டது. அநியாயமாய் ஒரு முஸ்லீமின் ஆவி போய்விட்டது. கொலை பாதர்கள் இன்னமும் கண்டு பிடிக்கப்படாமலே தப்பித்துக் கொண்டிருக்கிறார்கள். போலீசார் நடத்திய விசாரணையும் வெகுவாகத் துன்புற்றிருக்கும் முஸ்லீம்களுக்கு நம்பிக்கை உண்டுபண்ணத்தக்கதாக இருக்கவில்லை. கீழே நான் சொல்லப்போகும் விஷயங்களிலிருந்து அது வாஸ்தவ மென்பது புலப்படும். இந்த சம்பவ விஷயமாக மேமாதம் 3-ம் தேதியன்று முத்துப்பேட்டை பள்ளிவாசலொன் றின் முத்தவல்லியிட மிருந்து முதன் முதலில் கீழ்க்கண்ட தந்தியொன்று எனக்குக் கிடைத்தது— "நேற்றிரவு ஹிந்துக்கள் கலவரமுண்டுபண்ணி, பள்ளிக்கு வந்திருந்தவர்களையும் அடித்தார்கள். பள்ளியிலும் அக்கிரமம் செய்து விட்டார்கள். புதிய பள்ளிவாசலையும் உடைத்து விட்டார்கள். தவறாமல் இன்றைக்கே புறப்பட்டு வரவும்". இந்தத் தந்தி கிடைத்தவுடன் உடனே அவசியமான நடவடிக்கைகளை எடுத்துக்கொள்ளும்படி முத்துப் பேட்டையில் அதிகார வரம்புள்ள நாகப்பட்டணம்போலீஸ் டிப்டி சூப்பரின் டெண்டுக்கு அதை அனுப்பினேன். 'மறுபடியும் அதே பெயர்வழி யிட மிருந்து கீழ்க்கண்ட தந்தியொன்றும் எனக்குக்கிடைத்தது. "காணாமற் போயிருந்த முகம்மதியரின் பிரேதம் பாத்ர குளத்தில் மிதந்து கொண் டிருக்கக் கண்டெடுத்தோம். தங்களுடைய வரவை எதிர்பார்த் திருக்கிறோம்". நான் அனுப்பிய தந்தி கிடைத்தவுடன் போலீஸ் டிப்டி சூப்பரின்டெண்டு ஸ்தலத்திற்குப் போய் விசாரணை செய்த தாகத் தெரிகிறது. நானும் பிறகு ஸ்தலத்திற்குப்போய் போலீஸ் அதிகாரி

களையும் வைத்துக்கொண்டு விசாரணை செய்தேன். அதிலிருந்து ஹிந்துக்கள் பள்ளிவாசல் முன்பாக ஊர்வலத்தை நடத்திக் கொண்டு போனதினாலேயே இந்தக் கலவரம் ஏற்பட்டதென்று தெரியவந்தது. ஹிந்துக்கள் இவ்விதம் ஊர்வலம் நடத்தினது இதுமுதல் தடவையல்ல. ஆகவே பள்ளிவாசல் முன்பாக ஊர்வலம் நடத்திக் கொண்டுபோகக் கூடாதென்பது தங்களுக்கும் தெரியாதென்று அவர்கள் சொல்ல இடமில்லை. 1916-ம் வருஷத்தில் ஒரு முறை இம்மாதிரி சம்பவம் நடந்தபோது மன்னார்குடி சப்டிவிஷனல் மாஜிஸ்திரேட் பள்ளிவாசல் முன்பாக தம்பட்டம் கொட்டிக் கொண்டும் மேளவாத்தியங்கள் வாசித்துக்கொண்டும் ஊர்வலம் விட்டுக்கொண்டு போகக்கூடாதென்று கண்டிப்பாக உத்திரவு செய்திருக்கிறார். அவர் என்ன உத்திரவு செய்தும் பலனேற்பட்டதாகத் தெரியவில்லை. இது அதற்கு மாறாக நடந்ததின் பலன்தான். இது விஷயமாக நான் ஜில்லா போலீஸ் சூப்பரின்டெண்டுக்கும் ஒரு கடிதம் எழுதினேன். அதில் ஹிந்துக்கள் அக்கிரமங்கள் செய்து பள்ளிவாசலையும் துவம்சம் செய்ததையும், ஒருமுகம்மதியரைக் கொன்று குளத்தில் போட்டு விட்டதையும் குறிப்பிட்டிருந்தேன். என்னுடைய கடிதத்தையும் போலீஸ் சூப்பரின்டெண்டு டிப்டி சூப்பரின்டெண்டுக்கு அனுப்பி அவருடைய பதில் கிடைத்தவுடன் அசல் கடிதத்தை எனது பார்வைக்கு அனுப்பினர். அதனுடன் எனக்கு அவர் ஒரு கடிதமும் அனுப்பினர். அதில் பகல் 12-30 மணி முதல் இரவு 10-மணி வரையிலும் காலை 4-30 மணி முதல் 6-30 மணி வரையிலும் பள்ளிவாசல்களுக் கெதிராக தம்பட்டம் அடித்துக் கொண்டும் மேளவாத்தியம் வாசித்துக்கொண்டும் ஊர்வலம் விட்டுக்கொண்டு போகக்கூடாதென்று தாம் உத்திரவு செய்வதாகச் சொல்லி யிருந்தார். மன்னார்குடி டிப்டி மாஜிஸ்திரேட் ஆதியில் செய்த உத்திரவையே இவர் மீண்டும் செய்தது சரிதான். ஆனல் ஆதியில் செய்த உத்திரவினல் எவ்வித பலனுமேற்பட்டதாகத் தெரியவில்லை. இல்லாவிட்டால் பள்ளிவாசல் வழியாக ஹிந்துக்கள் ஊர்வலம் விட்டுக்கொண்டு போயிருக்க மாட்டார்கள்.

போலீஸ் டிப்டி சூப்பரின்டெண்டின் ரிபோர்ட்டைப் படிக்க மிகுந்த துக்கம் ஏற்படுகிறது. போலீஸ் விசாரணையினல் ஒன்றும் பயனேற்படவில்லை யென்றும், அவர்கள் பட்சபாத மில்லாமல் நடந்துகொள்ள வில்லை யென்றும் அதிலிருந்து தெரியவருகிறது. ஹிந்துக்களில் கொலை செய்தது யாரென்று கண்டு பிடிக்க முடியவில்லை யென்று அவர் சொல்லி யிருப்பதுடன் முகம்மதியர்கள் பேரில் எவ்வித தோஷமுமில்லை யென்று சொல்ல அவர் தயாராகவில்லை. "மேள வாத்தியங்களுடன் ஊர்வலம் நடத்திக் கொண்டு போனல் கலவரம் ஏற்படு மென்று அவர்களில் சிலருக்காவது தெரியுமென்றும், பள்ளிவாசல்களுக் கெதிரில் தம்பட்டம் அடிக்கக்

கூடாதென்று சப் டிவிஷனல் மாஜிஸ்திரேட் உத்திரவு செய்திருந்தும் அதற்கு விரோதமாக 29-4-20-ல் தமிழர்கள் தம்பட்டம் கொட்டிக்கொண்டு போயிருப்பதால், சட்டத்திற்குக் கீழ்ப்படிந்து நடக்க வேண்டியவர்களான முஸ்லீம்கள் இந்த விஷயத்தை அதிகாரிகளுடைய அறிவிப்புக்குக்கொண்டு வந்திருக்க வேண்டும்'' என்றும் அவர் சொல்லியிருக்கிறார். பள்ளிவாசலுக் கெதிரில் தம்பட்டம் அடித்துக்கொண்டு போகக்கூடாதென்று சப் டிவிஷனல் மாஜிஸ்திரேட் வியக்தமாக உத்திரவு செய்திருப்பதால், ஹிந்துக்கள் அதற்குமீறி நடந்துகொள்ள மாட்டார்களென்றே முஸ்லீம்கள் எதிர் பார்த்திருப்பார்கள். சில போக்கிரி முஸ்லீம்கள் ஹிந்துக்களின் வீட்டில் நெருப்பை வைத்ததினால் தான் அவர்கள் பள்ளியை துவம்ஸம் செய்திருக்கிறார்களென்றும் அவர் சொல்லியிருக்கிறார். இவ்விதம் டிப்டி சூப்பிரின் டெண்டு சொல்லுவதை நான் அங்கீகரிக்க முடியாது. முஸ்லீம்கள் பேரில் பழியைப் போடுவதற்காக ஹிந்துக்களே தீ வைத்திருக்கலாமென்று நான் நினைக்கிறேன். தீவைக்கப்பட்டதாகச் சொல்லப்படும் வீட்டையும் போலீசாருடன் கூட நான் நேரில் போய் பார்த்தேன். அந்த வீடு ஹிந்துக்களுடைய தெருவின் மத்தியில் இருக்கிறது. அதற்கடுத்தாற் போலுள்ள மெத்தை வீட்டில் தான் அன்று விவாகம் நடந்திருக்கிறது. அன்று ராத்திரி அந்த வீட்டில் சதிர்க் கச்சேரி நடந்திருக்கிறது. ஏராளமாக ஹிந்துக்கள் அங்கு வந்து சதிர்க் கச்சேரி பார்த்துக் கொண்டிருந்திருக்கிறார்கள். தவிரவும் அந்தத்தெருவு நெடுக காந்த விளக்குகள் போடப்பட்டு எங்கும் ஒரே ஜகஜ் ஜோதியாய் இருந்திருக்கிறது. இவ்வித நிலைமையில் முகம்மதியரெவரும் அங்கே துணிந்து போய் தீயை வைப்பார்களா? அவ்விதம் செய்வதற்கு அவர்களுக்கு கெட்ட எண்ணம் இருக்க இடமென்ன? மேலும் டிப்டி சூப்பரின்டெண்டு சொல்லுகிற பிரகாரம் முகம்மதியர்களே வேண்டுமென்று தீயை வைத்திருப்பதாக வைத்துக் கொள்வதாக இருந்தாலும் இதற்கென்று தீயை வைக்கப்போகிறவர்கள் பெருத்த நஷ்டம் ஏற்படும்படி யல்லவா தீயை வைத்திருக்கவேண்டும். ஒரு மூலையில் தீ வைக்கப்பட்டு அதனால் விசேஷமான நஷ்டம் எதுவும் ஏற்படாமலிருந்திருப்பதிலிருந்தே முகம்மதியர்கள் தீயை வைத்திருக்க மாட்டார்களென்று ஏற்படுகிறது. முகம்மதியர்கள் பேரில் பழியைப் போடுவதற்காக ஹிந்துக்களே செய்திருக்கலாமென்கிற கட்சி தான் பலப்படுகிறது.

மேலும் சப் இன்ஸ்பெக்டர் மிஸ்டர் சொக்கலிங்கம்பிள்ளையை போலீஸ் டிப்டி சூப்பரின்டெண்டு வெகுவாக சிலாகித்திருப்பதற்குக் கொஞ்சமும் ஆதாரமில்லை. அனாவசியமாகவே அவர் புகழ்ந்து எழுதியிருக்கிறார். நான் நேரில் விசாரணை செய்ததில் இந்த விஷமத்திற்கெல்லாம் அவரே காரணமென்றும், ஹிந்துக்களுக்கு உடந்தையாக இருந்தாரென்றும், துப்

பாக்கி பிரயோகம் செய்ததற்கும் அவரே ஜவாப்தாரியென்றும் தெரிய வந்தது. டிப்டி மாஜிஸ்திரேட்டினுடைய தடை உத்திரவாவது, ஹிந்துக்கள் பிடிவாதமாக ஊர்வலத்தை நடத்திக்கொண்டு போகத் தீர்மானித்திருந்ததாவது அவருக்குத் தெரியாமலிருக்க நியாயமில்லை. அவர் கொஞ்சமும் பட்சபாதமில்லாமல் நல்ல எண்ணங்கொண்டு ஹிந்துக்களுக்கு நல்ல புத்தியைச் சொல்லியிருக்கும் பட்சத்தில், எவ்விதக் கலவரமும் நேர்ந்திராது. சூப்பரின்டெண்டு வெகுவாக அவரை சிலாகித்துச் சொல்லியிருந்தாலும்கூட அவரை அந்தஇடத்திலிருந்து மாற்றியிருப்பதிலிருந்தே அவர் பட்சபாதமாகநடந்து கொள்ளாமலிருக்க வில்லையென்றும், அவர்பேரில் பிசகு இல்லாமலில்லையென்றும் ஏற்படுகிறது. நான் முத்துப்பேட்டைக்குப் போய் இருதிரத்தாருக்கும் புத்திசொன்ன பிறகு எவ்விதக்கலவரமும் கிடையாது.

நான் மேலே சொல்லிய விஷயங்களிலிருந்து போலீஸார் பட்சபாதமன்னியில் நடந்துகொள்ள வில்லையென்றும், தப்பான பெயர்வழிகள் மீது தோஷம் கற்பிக்க முயற்சி செய்திருக்கிறார்களென்றும் ஏற்படுகிறது. அநியாயமாய் ஒரு முஸ்லிம் கொல்லப்பட்டுப் போய்விட்டார். பள்ளிவாசலை ஹிந்துக்கள் துவம்சம் செய்தது முஸ்லிம்களின் மனதை வெகுவாக புண்படுத்தி விட்டது. இருந்தாலும் கலவரத்திற்கு மூலகாரணமும் கண்டுபிடிக்கப் படவில்லை. குற்றவாளிகளும் அகப்படவில்லை. ஆகவே சரியான நியாயம் வழங்கப்படுவதற்கு பட்சபாத மற்ற விசாரணை நடத்தி வைக்க வேண்டிய தவசியம். எனவே இந்த விஷயத்தைப் பற்றி விசாரணை நடத்தி வைக்கும்படி கேட்டுக்கொள்ளுகிறேன் என்று சொன்னார்.

கனம் ராமனாதபுரம் ராஜா தீர்மானத்தை ஆமோதித்தார். கனம் டேவிட்ஸன் இது சம்பந்தமாக சிலர் மீது கேஸ் தொடரப்பட்டிருக்கிறதென்றும் மற்றும் பல விஷயங்களையும் சொன்னார். அதன் பேரில் தீர்மானம் வாபீஸ் வாங்கிக்கொள்ளப்பட்டது.

—:—

# சென்னை சட்டசபை

———(::)———

## பிரிவு IV

### மசோதாக்கள்.

சென்னை சட்டசபையில் 1913-ம் வருஷம் முதல் நாளது தேதி வரையில் கொண்டுவரப் பட்டிருக்கும் மசோதாக்கள் விஷயமாக கனம் கான் பகதூர் அகமது தம்பி மரக்காயர் பேசியிருக்கும் விபரங்களைக் கீழே காணலாம்:—

சுற்றுக் கடிதம் நம்பர் IV

நாகப்பட்டணம்,

10—11—1920.

கனம் கான்பகதூர்,

அகமது தம்பி மரக்காயரிடமிருந்து,

சகோதரீர்,

மலபார் மாப்பிள்ளைமார்களுக்குள் அனுஷ்டானத்தில் இருந்து வரும் மருமக்கள் தாயம், மக்கள் தாயம் முறையைப்பற்றி கவர்ன்மெண்டாரிடத்தில் பிரஸ்தாபம் செய்யவேண்டுமென்று நான் வெகுகாலமாக யோசித்துக்கொண்டிருக்கிறேன். வடமலபாருக்கு சமீபத்தில் மேன்மை தங்கிய கவர்னர் விஜயம் செய்திருந்தபோது பிரமுகர்களான மாப்பிள்ளைமார்களே இந்த விஷயத்தைப்பற்றி அவரிடம் பிரஸ்தாபித் திருப்பதை மெயில் பத்திரிகையிலிருந்து அறிய நான் சந்தோஷப்படுகிறேன். மக்கள் தாயம் சட்டம் செய்து விடவேண்டியது தானுவென்பதை பற்றித் தங்களுடையஅபிப்பிராயத்தை எனக்கு அறிவித்தால் சவுகரியமாக இருக்கும். தங்களிடமிருந்து பதில் கிடைத்த பிறகு சட்டசபையில் இது விஷயமாக ஒரு மசோதாக் கொண்டு வருகிறேன். கூடிய சீக்கிரத்தில் தங்களுடைய பதிலை எதிர்பார்க்கிறேன்.

தங்கள் உண்மையுள்ள,

அ. க. கு. அகமது தம்பி மரக்காயர்.

# 1915

## (நவம்பர் மாதம் 23-ந் தேதி நடந்த கூட்டம்)

---

### மாப்பிள்ளா வார்சுரிமை மசோதா.

மருமக்கள் தாயம் அல்லது இளைய சந்தானம் முறையைக் கையாண்டு வரும் மாப்பிள்ளைமார்கள் மரண சாஸனம் எழுதிவைக்காமல் இறந்து போய் விட்டால் அவர்களுடைய சொத்துக்களை யார் அடையவேண்டிய தென்பதை நிஷ்கரிஷை செய்யும் மசோதா வொன்றைக் கொண்டுவர அனுமதி தரவேண்டுமென்று கேட்டுக் கொள்ளுகிறேன். வட மலபார் தென் கன்னடம் இரண்டு ஜில்லாக்களிலும் மருமக்கள் தாயம் அல்லது இளைய சந்தானம் முறையைக் கையாண்டு வரும் மாப்பிள்ளைமார்களை தங்கள் மனச் சாட்சிப்படி நடக்கும்படி இடந் தரவேண்டுமென்பதற்காகவே இந்த மசோதாவைக் கொண்டு வருகிறேன். தங்களுடைய சொந்தப் பிள்ளைகளுக்குத் தங்களுடைய சொத்துக்களை அடைய பாத்தியமில்லாமலிருப்பது இயற்கை சாஸ்திரத்திற்கே விரோதமாயிருக்கிறதென்றும், குர் ஆன் வாக்கியங்களுக்கு அந்த முறை நேர் விருத்தமாயிருக்கிறதென்றும் இந்த ஜில்லாவிலுள்ள மாப்பிள்ளைமார்கள் பலர் அபிப்பிராயப்படுகிறார்கள். இது விஷயமாக மாப்பிள்ளைமார்களுக்குள் பலமான உணர்ச்சி இருந்து வருவதால் சென்ற வருஷத்தில் தாங்கள் மலபார் தென்கன்னடம் ஜில்லாக்களுக்குச் சுற்றுப் பிரயாணம் சென்றிருந்த பொழுது அவர்கள் ஒரு டெபுடேஷனை தங்களிடம் வந்து இந்த விஷயத்தைப் பற்றி விஞ்ஞாபனம் செய்துகொண்டிருக்கிறார்கள். சகோதரர்களுடைய பிள்ளைகளுக்கு சொத்துக்கள் சேருவதை மாற்றி பிள்ளைகளுக்குக் கிடைக்கச் செய்யவேண்டுமென்கிற உணர்ச்சி அவர்களுக்கும் பலமாக இருந்து வருகிறதென்பதை கவர்ன்மெண்டார் விசாரணையின் மூலமாகத் தெரிந்து கொண்டிருப்பார்களென்று நினைக்கிறேன். தங்களுடைய சொத்துரிமை விஷயத்தில் அவர்களுக்கு இருந்துவரும் வயிற்றெரிச்சலை நிவர்த்திக்கவும், முகம்மதிய மார்க்க தர்மத்திற்கு விரோதமாக இருக்கும் வழக்கத்தை மாற்றவும் இந்த மசோதா அவசியமாக இருக்கிறது. சுய ராஜ்ஜித சொத்துக்கள் சம்பந்தப்பட்ட மட்டில் தான் இந்த மசோதா அவசியமாக இருக்கிறது. சுய ராஜ்ஜித சொத்துக்கள் சம்பந்தபட்ட மட்டில் தான் இந்த மசோதா செல்லுபடியுள்ளதாகுமேதவிர தார்வாடைச் சேர்ந்த சொத்துக்கள் பிரிவினை விஷயத்தில் எவ்வித பாதகமும் இந்த மசோதாவினால் ஏற்படாது. இந்த மசோதாவின் நோக்கங்களும் ஹேதுக்களும் என்று மசோதாவுடன் அண்டித்திருக்கும் குறிப்பில் இந்த மசோதாவின் அவசியத்தைப் பற்றி வியக்தமாகச் சொல்லியிருக்கிறேன். ஆகவே வீணாகக் காலகரணம் செய்து கொண்டிராமல் இந்த மசோதாவைக் கொண்டுவர அனுமதி தரவேண்டுமென்று கேட்டுக் கொள்ளுகிறேன்.

## கனம் மிஸ்டர் வி. ஜி. டாட்ஹண்டர்.

கனம் மெம்பர் கொண்டுவர விரும்பும் மசோதாவானது தென்கன்னடம், மலபார் ஜில்லாக்களில் வசிக்கும் ஒரு சாதாரண முகம்மதியர்களின் வாரிசுரிமையைப் பொறுத்த விஷயம். இதைப்பற்றி விசாரணை செய்த வரையில் சம்பந்தப்பட்ட வகுப்பினர் இந்த மாறுதலை விரும்புவதாகவே தெரிகிறது. ஆகவே கவர்ன்மெண்டார் இப்பொழுது இந்தப் பிரேரணையை ஆட்சேபிக்காமல் மசோதா பிரசுரமாகி சம்பந்தப்பட்ட வகுப்பினர் தங்களுடைய அபிப்பிராயத்தை வெளியிட்ட பிறகு எவ்விதம் நடந்துகொள்ள வேண்டுமென்று கவர்ன்மெண்டார் நிர்ணயம் செய்து கொள்வார்கள்.
மசோதா கொண்டுவர அனுமதி கொடுக்கப்பட்டது.

---

## 1916

### (பிப்பிரவரிமாதம் முதல் தேதி நடந்த கூட்டம்)

---

### 1898-ம் வருஷத்திய மலபார் உயில் சட்டத்தைத் திருத்தும் மசோதா

1898-ம் வருஷத்திய மலபார் உயில்களைப் பற்றிய சட்டத்தைத் திருத்துவதற்கான மசோதா வொன்றைக் கொண்டு வர அனுமதி தர வேண்டுமென்று அடுத்தாற் போல் கனம் அகமது தம்பி மரக்காயர் பிரேரணை செய்து பேசியதாவது:—

மேன்மை தங்கிய பிரபுவே,

1898-ம் வருஷத்திய மலபார் உயில்களைப்பற்றிய சட்டத்தைத் திருத்து வதற்கு ஒரு மசோதா கொண்டுவர அனுமதிதர வேண்டு மென்று கேட்டுக்கொள்ளுகிறேன். இப்பொழுதிருக்கிற சட்டமானது மருமக்கள் தாயம் அல்லது இளைய சந்தானம் முறையை அனுஷ்டிக்கும் சென்னை மாகாணத்தில் குடியேறி யுள்ள எல்லோரையும் கட்டுப்படுத்துவதாக இருக்கிறது. அதன்படி அவர்கள் தங்களுடைய சொந்த சொத்துக்களை உயில்கள் மூலமாக விநியோகம் செய்து விடலாம். முகம்மதிய மார்க்கப்படி ஒரு முகம்மதியர் உயில் மூலமாக தம்முடைய பூரா சொத்துக்களையும் விநியோகம் செய்து விடக்கூடாது. தம்முடைய ஈமக்கிரியைகளுக்கும் கடன்களுக்கும் ஒழுக்கினது போக பாக்கி சொத்தில் மூன்றில் ஒரு பாகத்தைத் தான் அவர் விநியோகம் செய்யலாம். தவிரவும் வேறு நிர்பந்தங்களு மிருக்கின்

றன. முகம்மதிய லாப்படி சொத்துக்கு பாத்திய முடையவர்களுக்கு இதர வார்சுகளுடைய சம்மத மன்னியில் உயில் எழுதி வைத்தாலும் அது செல் லும்படியுள்ளதாவது இப்பொழுதிருந்துவரும் சட்டத்தில் அந்த வரையறை களில்லாமலிருப்பதினுல் எவரும் தமது பூரா சொத்துக்களையும் விநியோகம் செய்து விடலாம். முகம்மதிய லாவானது மருமக்கள் தாயம், அல்லது இளைய சந்தானம் முறையை அனுஷ்டித்து வரும் வகுப்பினருக்கும் சொல்லும்படியுள்ளதாக இருக்கும்படி. முகம்மதிய லாப்படி அவர்களுக் குள்ள அதிகாரத்தை வரையறுத்து விட 4-வது பிரிவில் ஒரு ஷரத்தைச் சேர்த்து விட உத்தேசித்திருக்கிறது. மரண சாஸனம் எழுதி வைக்காமல் இறந்து போகிறவர்கள் விஷயத்தில் வழங்கி வரும் முகம்மதியலாவை மரு மக்கள் தாயம் அல்லது இளைய சந்தானம் முறையைக் கையாண்டுவரும் மாப்பிள்ளை மார்களுக்குச் செல்லுபடியுள்ளதாகச் செய்துவிட மலபார் மாப் பிள்ளைமார் வார்சுரிமை மசோதா வொன்றை 1915-ம் வருஷத்தில் நான் கொண்டு வந்திருப்பது தங்களுக்குத் தெரிந்த விஷயம்.) இதுவும் அதைப் போலவே மரணசாஸனம் எழுதிவைக்கும் விஷயத்தைப் பொறுத்தது என்று சொன்னுர்.

## கனம் ஹாரோல்டு ஸ்டூவர்ட்.

மேன்மைதங்கிய பிரபுவே,

கவர்ன்மெண்டார் இந்தப் பிரேரணையை ஆட்சேபிக்கப் போவதில்லை. ஆனல் சம்பந்தப்பட்ட வகுப்பினரின் அபிப்பிராயம் தெரிந்த பிறகு எவ் விதம் நடந்து கொள்ளவேண்டுமோ அவ்விதமாக நடந்துகொள்ள கவர்ன் மெண்டார் சுதந்தரம் வைத்துக் கொண்டிருக்கிருர்கள்.

பிரேரணை அங்கிகரிக்கப்பட்டது.

---

# 1917

[பிப்பிரவரி மாதம் 6ம் தேதி நடந்த கூட்டம்]

---

## மாப்பிள்ளை மார்கள் வார்சுரிமைச் சட்டம்

மருமக்கள் தாயம் அல்லது இளைய சந்தான முறையைக் கையாண்டு வரும் மாப்பிள்ளை மார்கள் மரண சாஸனம் எழுதி வைக்காமல் இறந்து போனுல் அவர்களுடைய சொத்துக்களை யார் அடைய வேண்டு மென்பதை நிஷ்கரிஷை சொல்லுவதைப்பற்றி சபையின் முன்பாக கொண்டு வருகிற

மசோதாவை கனம் அகமதுதம்பி மரக்காயர் வாபீஸ் வாங்கிக்கொண்டு அது சம்பந்தமாக திருத்த மசோதாவொன்றைக் கொண்டுவர அனுமதிகோரிப் பேசியதாவது:—

மேன்மைதங்கிய பிரபுவே,

சென்ற 1915ம் வருஷம் நவம்பர் மாதம் 23ம் தேதியில் இந்த சபையில் கொண்டு வருவதற்காக நான் அனுமதி பெற்றிருக்கும் மாப்பிள்ளை மார்கள் வார்சுரிமை மசோதாவில் சில திருத்தங்கள் செய்ய வேண்டியிருப்பதால் அதை நான் வாபீஸ் வாங்கிக்கொள்ளுகிறேன். அதற்கு பதிலாக வேறு திருத்த மசோதாவைக் கொண்டுவர அனுமதி கேட்டுக் கொள்ளுகிறேன். இந்த மசோதாவானது முகம்மதியர்களில் ஒரு சாதாரண மாப்பிள்ளை மார்களை மட்டில் பொறுத்த விஷயமானதினாலும் அவர்கள் திருக்குர் ஆனில் காணப்படும் வேதவாக்கியங்களுக்கிணங்கி நடக்க இஷ்டப்படுவதாலும் இந்த மசோதாவில் எவ்வித சிக்கிலும் கிடையாது. இந்த சட்டத்தைச்செய்ய வேண்டிய அவசியத்தை கவர்ன் மெண்டாரே ஒப்புக் கொண்டிருக்கிறார்கள். இந்த மசோதா போர்ட்டு செயிண்டு ஜார்ஜு கெஜட்டிலும் ஜில்லா கெஜட்டிலும் பிரசுரம் செய்திருந்தும் ஒருவரும் இது வரையில் ஆட்சேபனைகளை செய்ய வில்லை. மாப்பிள்ளை மார்களின் சுயராஜ்ஜித சொத்துக்களைப் பொறுத்த மட்டில் இந்த மசோதா செல்லுபடியுள்ளதாகுமே தவிர தார்வாரு சொத்துக்களை எவ்விதத்திலும் பாதிக்காது. சில சட்ட சம்பந்தமான விஷயங்களைப் பற்றிய ஆட்சேபனைகள் சொல்லப்பட்டதால் இந்த மசோதாவைக் கொண்டுவர இவ்வளவு காலதாமத மேற்பட்டது; இனியும் இந்த மசோதாவைக் காலகாணம் செய்வது மலபாரிலும் தென்கன்னடத்திலு மிருக்கும் முகம்மதியர்களின் நன்மைகளை பறிக்கு மாதலால் இந்த மசோதாவைக் கொண்டுவர அனுமதி கொடுக்கவேண்டு மென்று கேட்டுக் கொள்ளுகிறேன்.

மேன்மைதங்கிய கவர்னர்:—ஆதி மசோதாவை வாபீஸ் வாங்கிக் கொள்ளுவதாக கனம் மெம்பர் ஒரு பிரேரணை கொண்டு வருவாரா?

கனம் மரக்காயர்:—பழைய மசோதாவை வாபீஸ் வாங்கிக் கொள்ளுவதாகப் பிரேரணை செய்கிறேன்.

கனம் யாகுப் ஹாசன் ஆமோதிக்க வாபீஸ் வாங்கிக் கொள்ள அனுமதி கொடுக்கப்பட்டது.

கனம் மரக்காயர்:—திருத்திய மசோதாவைக் கொண்டுவர அனுமதி கேட்கிறேன்.

கனம் யாகுப் ஹாசன் தீர்மானத்தை ஆமோதித்தார்.

கனம் கில்மன்.—இந்த மசோதாவைக் கொண்டுவர அனுமதி கேட்டிருப்பதை கவர்ன்மெண்டார் ஆட்சேபிக்காமல் மசோதா பிரசுரமான பிறகு சம்பந்தப்பட்டவர்கள் சொல்லும் குண தோஷங்களைத் தெரிந்து கொண்டு தாங்கள் அனுஷ்டிக்க வேண்டிய கொள்கையை நிர்ணியம் செய்து கொள்வார்கள்.

கனம் மரக்காயரின் பிரேரணை அங்கீகரிக்கப்பட்டது.



## 1918

### பிப்பிரவரி மாதம் 12ம் தேதி நடந்த கூட்டம்.



### மாப்பிள்ளை மார்கள் வார்சுரிமை மசோதா.

மருமக்கள் தாயம் அல்லது இளைய சந்தானம் வார்சுரிமை முறையைக் கையாண்டு வரும் மாப்பிள்ளை மார்கள் மரணசாஸன மெழுதி வைக்காமல் இறந்து போய் விட்டால் அவர்களுடைய சொத்துக்களை எவ்விதம் விநியோகிப்ப தென்பதை நிர்ணயிக்கும் மசோதாவொன்றை கனம் அகமது தம்பி மரக்காயர் கொண்டு வந்து பேசியதாவது:—

மேன்மைதங்கிய பிரபுவே,

மாப்பிள்ளை மார்கள் முகம்மதிய லாவையே அனுஷ்டிக்க விரும்புவதால் அவர்களுடைய வேண்டு கோளின் பேரிலேயே நான் இந்த மசோதாவைக் கொண்டு வந்திருக்கிறேன் இந்த மசோதா இந்த மாகாணத்திலுள்ள பிரஜைகளில் ஒரு சாரரை மட்டில் பொறுத்த விஷயம் அவர்கள் இதை ஏகோபித்து ஒப்புக் கொள்ளுகிறார்கள் இந்த மசோதாவைக் கொண்டுவர ஏற்கனவே ஒரு பிரேரணையை நான் கொண்டு வந்து இந்த சபையில் 23-11-15ல் ஒப்புக் கொள்ளப்பட்டிருக்கிறது. பிறகு அதில் சில வாசகங்களை மாற்றிக் கொள்வதற்காக அதை வாபீஸ் வாங்கிக்கொண்டேன். 1917ம் வருஷம் பிப்பிரவரி மாதம் 6ம் தேதியில் திருத்திய மசோதாவைக் கொண்டு வர அனுமதி கிடைத்தது. சென்ற ஏப்பிரல் மாதத்தில் இந்த மசோதா பிரகரிக்கப் பட்டிருக்கிறது. இந்து வரையில் ஒருவரும் இதை ஆட்சேபிக்கவில்லை. எல்லோரும் இதை ஒப்புக்கொண்டிருக்கிறார்கள். ஆகவே மசோதாவை சபையில் முதன் முதலாகப் படிக்க வேண்டு மென்று நான் பிரேரணை செய்கிறேன்.

கனம் யாகுப்ஹாசன் தீர்மானத்தை ஆமோதித்தார்.

கனம் கில்மன்

கவர்ன் மெண்டார் இந்தப்பிரேரணையை ஒப்புக் கொள்ளுகிறார்கள். சம்பந்தப்பட்ட வர்களுக்கு இதுபிடித்தம் இருப்பதாகவே தெரிகிறது ஏதாவது தோஷங்கள் சொல்லப்பட்டாலும் தனிக்கமிட்டியில் அவைகளை பரிசோதித்துக் கொள்ளலாம்.

பிரேரணை அங்கீகரிக்கப்பட்டது.

பிறகு கனம் மரக்காயர்; அடியிற் கண்டவர்களடங்கிய தனிக்கமிட்டியை ஏற்படுத்த வேண்டுமென்று பிரேரணைசெய்தார்:—

கனம் கில்மன், கனம் அட்வொகேட் ஜெனரல், மிஸ்டர் நாப், கனம் அவிஸ்ரூடின் சாகிப் பகதூர், கனம் யாகுப் ஹாசன் சாகிப் பகதூர், கனம் ரங்காசாரியார், கனம் சதாசிவபட், கனம் மரக்காயர்.

கனம் சதாசிவபட் பிரேரணையை ஆமோதித்தார். பிரேரணை அங்கீகரிக்கப்பட்டது மசோதா சபையின் முன்பாகப் படிக்கப்பட்டது மசோதாவை தனிக்கமிட்டியாரின் பரிசீலனைக்கு அனுப்புவதென்கிற பிரேரணை அங்கீகரிக்கப்பட்டது.



## ஏப்ரல் மாதம் 3ம் தேதி நடந்த கூட்டம.

மேன்மை தங்கிய பிரபுவே,

மருமக்கள் தாயம் அல்லது இளைய சந்தானம் வார்சுரிமை முறையைக் கைபாண்டுவரும் மாப்பிள்ளைமார்கள் மாரை சாஸன மெழுதி வைக்காமல் இறந்து போகாவிட்டால் அவர்களுடைய சொத்துக்களின் வார்சுரிமையை வரை யிருப்பதைப்பற்றிய மசோதாவைப் பரிசீலனை செய்த தனிக்கமிட்டியாரின் யாதாஸ்தை நான் ஆஜர் படுத்துகிறேன். யாதாஸ்தின் பிரதி கனம் மெம்பர்களுக்கு கொடுக்கப்பட்டிருக்கிறது. தனிக்கமிட்டியாருடைய ரிபோர்ட்டின் கடைசி பாராவை, கனம் மெம்பர்களின் அறிவிப்புக்குக் கொண்டு வருகிறேன்.

"மசோதாவில் விசேஷ மாறுதலெதுவும் நாங்கள் செய்யாததால் மசோதாவையும் எங்களுடைய ரிப்போர்ட்டையும் போர்ட்டு செயிண்டு ஜார்ஜு கெஜட்டில் பிரசுரிப்பது அவசியமென்று நினைக்கிறோம். ஏபிரல் மாதம் 3ம் தேதி கூடும் மீட்டிங்கில் இந்த மசோதாவை விவாதத்திற்கு எடுத்துக்கொண்டு சட்டம் செய்து விடலாம்."

ஆகவே மசோதாவையும் ரிபோர்ட்டையும் உடனே ஆலோசனைக்கு எடுத்துக் கொண்டு மசோதாவை சட்டமாக்கி விடவேண்டுமென்று பிரேரணை செய்கிறேன்.

கனம் யாகுப் ஹாசன் பிரேரணையை ஆமோதித்தர். கனம் கில்மன் பிரேரணையை அங்கீகரிக்கப்பட்டது ஒரு அற்பத்திருத்தப் பிரேரணை கனம் ராமச்சந்திரராவால் கொண்டு வரப்பட்டு அங்கீகரிக்கப்பட்டு, மசோதா சட்டமாக்கப்பட்டது.

---

[ஆகஸ்டுமாதம் 13ம் தேதி நடந்த கூட்டம்.]

---

[முஸ்லீம் விவாக, ரத்துப் பதிவு மசோதா.)

இது சம்பந்தமாக கனம் யாகுப்ஹாசன் கொண்டு வந்த மசோதாவை கனம் அகமது தம்பி மரக்காயர் எதிர்த்து பேசியதாவது:—

மேன்மை தங்கிய பிரபுவே,

என்னுடைய நண்பர் கொண்டு வந்திருக்கும் மசோதாவை ஆட்சேபிக்க வேண்டியிருப்பதற்காக நான் வருத்தப்படுகிறேன்.

முஸ்லீம் விவாகங்களை பதிவு செய்யும் முறை விஷயமாக சட்டம் செய்ய வேண்டியதவசியமென்பது ஒப்ப முடிந்த விஷயம். 1900ம் வருஷத்திலேயே திருவல்லிக்கேணியிலுள்ள முஸ்லீம்கள் 1880ம் வருஷத்திய XIIவது டவுன் காஜி ஆக்டைத் திருத்தவேண்டுமென்றும், முஸ்லீம் விவாகங்களை கட்டாயமாய் பதிவு செய்யவேண்டுமென்றிருந்தால் ஏற்படும் ஊழல்களை போக்கவும் வேண்டுமென்று கவர்ன்மெண்டாருக்கு மகஜர் அனுப்பிக்கொண்டிருக்கிறார்கள். அந்த சந்தர்ப்பத்தில் கவர்ன்மெண்டார் முகம்மதிய உத்தியோகஸ்தர்களையும் ஜில்லா கலெக்டர்களையும் கலந்து கொண்டு, எந்த வழியில் மாறுதல் செய்யவேண்டுமென்று முஸ்லீம் வகுப்பினரே வேண்டிக்கொள்ளாத வரையில் தாங்கள் ஒன்றும் செய்ய முடியாதென்று சொல்லிவிட்டார்கள். முகம்மதிய விவாகங்களை சரியானபடி பதிவுசெய்வது அவசியமென்பதை ஒருவரும் மறுக்க முடியாது இப்பொழுது விவாகங்களைப் பதிவு செய்ய வேண்டுமென்றில்லாதிருந்ததினால் ஏற்படும் ஊழல்களை நிவர்த்திக்கக் கூடியதாக இனிக் கொண்டுவரும் மசோதா விருக்கவேண்டும். ஆகவே கட்டாயமாக விவாகங்களைப் பதிவு செய்யவேண்டுமென்று செய்யாத வரையில், பதிவு செய்ய வேண்டுமென்கிற அக்கரை அதிகமாக ஏற்படாது. கனம் மெம்பர் கொண்டு வந்திருக்கிற மசோதாவில் தானாகவே இப்பொழுதிருப்பது போல்

விவாகமானவர்கள் பதிவு செய்து வைக்கலாமென்று தானிருக்கிறது பதிவு செய்யப்படாத விவாகம் செல்லு படியற்றதாகி விடாதென்று 25வது பிரிவில் கண்டிருப்பதால் இந்த மசோதாவினால் ஒன்றும் பிரயோஜன மேற்பட்டு விடாது. மசோதாவின் நோக்கங்களிலும் ஹேதுக்களிலும் கனம் மெம்பர் "விவாகங்களையும், ரத்துகளையும் பதிவு செய்து வைப்பதில் கண்டிதமில்லாமலிருப்பதினால் பொருத்த,ஊழல்கள்ஏற்பட இடமுண்டாகிறது" என்றுசொல்லியிருக்கிறார். "சாதாரண இஸலாம் முறையிலும் விவாகத்தைச் செய்து கொள்ளலாம்" என்று கனம் மெம்பர் ஒப்புக்கொண்டிருப்பதால், நாம் எதிர் பார்க்கும் பயன் இந்த மசோதாவினால் ஏற்படாது. முஸ்லீம் விவாகங்கள் செல்லு படியுள்ளதாக இருக்க வேண்டுமானால் அவைகளைப் பதிவு செய்ய வேண்டுமென்று ஏற்படுத்துவது முகமதியலாவின் கருத்துக்கு விருத்வமாக இருக்கலாம். ஆகவே அவ்வித சங்கடம் நேரிடாமலிருப்பதற்கு விவாகங்களை பதிவு செய்யாதவர்களுக்கு சிட்சையை ஏற்படுத்துவதுடன், பதிவு ஆகாத விவாகங்கள் சொல்லுபடியற்றதாகி விடாதென்றும் செய்யவேண்டும். முகமதிய லாப்படி பதிவு செய்யப்படாத விவாகங்களும் செல்லுபடியுள்ளவைகளான போதிலும், பதிவு செய்யாதவர்களுக்கு சிட்சையென்றால் அவர்கள் அதற்கு பயந்துகொண்டு பதிவு செய்து வைத்து விடுவார்கள். ஆகவே பதிவாகாத விவாகங்கள் செல்லுபடியற்றதாக இல்லாமற் போனால், பதிவு செய்யாத பெயர்வழிகளுக்கு சிட்சை விதிக்க இடமிருக்கும்படியாக மசோதா கொண்டு வரப்படவேண்டும். அப்படிச் செய்தால் இப்பொழுதிருக்கிற ஊழல்கள் ஒழிய வழியுண்டாகும். அவ்வித மசோதா வொன்றைக் கொண்டு வருவதற்காக முகம்மதியர்களுடைய அபிப்பிராயத்தை நான் கேட்டுத் தெரிந்து கொண்டிருந்தேன். அதற்குள்ளாக கனம் மெம்பர் இந்த மசோதாவைக் கொண்டு வந்து விட்டார். இதனால் இப்பொழுதிருக்கிற ஊழல்களை நிவர்த்திக்க வழி யுண்டாகுமென்று நான் நினைக்கவில்லை. நான் சொன்ன யோசனையை அனுசரித்து மசோதா வொன்றைக் கொண்டு வரும்படி பல பேர் வழிகளிடமிருந்து எனக்குத் தினமானம் கடிதங்கள் வந்து கொண்டிருக்கின்றன. ஆகவே முகம்மதிய விவாகங்கள் சரியாகப் பதிவு செய்யப்பட்ட வேண்டுமென்கிற எண்ணத்தின் பேரில் கனம் மெம்பர் இந்த மசோதாக் கொண்டு வந்திருப்பதில் எனக்கு அனுதாபமிருந்த போதிலும், நான் இந்த மசோதாவை ஆட்சேபிக்க வேண்டியிருக்கிறது. புதிதாக ஒரு மசோதாவைக் கொண்டு வந்து இப்பொழுதிருந்து வருகிற 1880-ம் வருஷத்திய காஜி சட்டத்துடன் முரண் பட்டுக் கொண்டிருக்கிறதைவிட முஸல்மான்களின் அபிப்பிராயத்திற்கிணங்க காஜிகள் சட்டத்தைத் திருத்துவதினால் தான் நம்முடைய லட்சியம் கைகூடுமென்று நினைக்கிறேன்.

(ஆகஸ்டு மாதம் 14-ம் தேதி நடந்த கூட்டம்.)

---

## விவசாயத்திற்குக் கேடு விளைவிக்கும் பூச்சிகளையும் வியாதிகளையும் நிவர்த்திக்கும் மசோதா.

இது சம்பந்தமாக கனம் ஸர். பி. ராஜகோபாலாச்சாரியார் கொண்டு வந்த மசோதாவை கனம் அகமது தம்பி மரக்காயர் ஆதரித்துப் பேசியதாவது:—

மேன்மைதங்கிய பிரபுவே,

இந்த மாதிரி மசோதா வொன்றில்லாமல் என்னுடைய ஜில்லா வாசிகள் வருந்துகிறார்கள் முத்துப்பேட்டை அதிராம் பட்டணத்திலுள்ள தென்னை மரங்களில் பூச்சிகள் விழுந்து விடுவதாக என்னுடைய தொகுதியினரிடமிருந்து எனக்கு அடிக்கடி கடிதங்கள் கிடைத்து வருகின்றன. இந்த மசோதா ஜனங்களுக்குப் பரம உபகாரமாயிருக்கும். ஆகவே நான் இந்த மசோதாவை ஆதரிக்கிறேன்.

## சென்னை நகர் முனிசிபல் மசோதா.

கனம் திவான் பகதூர் பி. ராஜ கோபாலாச்சாரியார் கொண்டு வந்த இந்த மசோதாவைப்பற்றி கனம் அகமது தம்பி மரக்காயர் பேசியதாவது:—

பிரபுவே,

இந்த சபையில் நான் சென்னை முஸ்லீம்களுடைய பிரதிநிதியல்ல. ஆயினும் முகம்மதியர்களைப் பொறுத்த விஷயம். பிரஸ்தாபத்திற்கு வருகையில், நான் ஒரு மதப் போராட்டக்காரன் என்று கனம் ராமனாதபுரம் ராஜா சொல்லியது போல் என்னுடைய வழக்கபடி முகம்மதியர்களின் பிரதிநிதித்துவ விஷயமாக சில வார்த்தைகள் சொல்லிக் கொள்ளவேண்டி யிருக்கிறேன். மசோதாவின் 5-வது பிரிவைப் பார்க்குமிடத்து, மொத்தம் 43 கவுன்சிலர்களில் முகம்மதியர்கள் பிரத்தியேகமாகத் தங்களுடைய பிரதிநிதிகளைத் தெரிந்தெடுத்துக் கொள்ள வழி சொல்லப்படவில்லை. ஆகவே முகம்மதியர்கள் எலெக்ஷன் மூலமாக சில ஸ்தானங்களை அடையும்படி அவர்களுக்காக சில ஸ்தாபனங்களை ஒதுக்கி வைக்கும்படி கவர்ன்மெண்டாரைக் கேட்டுக் கொள்ள வேண்டுமென்று எனக்குத் தோன்றிற்று. முகம்மதியர்கள் மற்ற வகுப்பினருடன் எலெக்ஷனில் போட்டி போடுவது கஷ்டமான காரியமென்பது தங்களுக்குத் தெரிந்த விஷயம். எலெக்ஷனில் தெரிந்தெடுக்கப் படாதவர்களுக்காக அவர்களுடைய பிரதிநிதிகளை நியமிக்க சில

ஸ்தானங்கள் ஒதுக்கி வைக்கப்பட்டிருப்பது வாஸ்தவமே. ஆனால் டிவிஷனல் ஆபீசர்களும் கலெக்டர்களும் கவர்ன்மெண்டாருடைய கருத்தை அறிந்து நடந்து கொள்வதில்லை யென்பது எனக்கு அநுபோகத்தில் தெரிந்த விஷயம். கவர்ன்மெண்டுக்கு நல்ல எண்ணம் தானிருக்கிறது; கீழ் உத்தியோகஸ்தர்கள் அதை சரியாக நிறைவேற்றி வைக்கிறதில்லை. கண்ணியமும் கௌரவமும் வாய்ந்த பெயர் வழிகள் நியமிக்கப்படாமற் போயிருப்பதற்கு அநேக உதாரணங்களை நான் சொல்லக்கூடும். ஆகவே, அரசியல் திருத்த ரிபோர்ட்டில் சொல்லபட்டிருக்கிற பிரகாரம் முகம்மதியர்களுக்கு பிரத்தியேகமாக தொகுதிகளை விட்டு வைப்பதை அனுஷ்டிப்பது தான் சரி. மிண்டோ-மார்லி திருத்தங்கள் இந்த விஷயத்தில் மிகவும் ஒழுங்கானது தான். முகம்மதியர்கள் ராஜவிசுவாசம் குறையாமலிருந்து வருவது தான் அதற்குக் காரணம். மாகாண சட்டசபைகளிலும், இந்திய சட்டசபைகளிலும் இந்த உண்மை எங்களுக்கு இருந்து வரும்பொழுது, நான் எப்போதும் கேட்டு வருகிற பிரகாரம் ஸ்தல ஸ்தாபனங்களிலும் ஏன் இந்த உரிமையை அனுஷ்டிக்கக்கூடாது. இப்போது சென்னை நகர் முனிசிபல் சட்டத்தை திருத்தப் போவதால் முகம்மதியர் களுக்கு பிரத்தியோகமாக எலக்ஷனுக்கு ஏற்பாடு செய்து விடும்படி கேட்டுக்கொள்ளுகிறேன்.

——::——

## [1919-ம் வருஷம் பிப்பிரவரிமாதம் 10ம்தேதி நடந்த கூட்டம்.]

சென்னை நகர் முனிசிபல் மசோதாவில்கைமாறிய ஓட்டர்களாலேயே தெரிந்தெடுக்கப்படும்படி 4 ஸ்தானங்களை ஒதுக்கி வைக்கவேண்டு மென்று கனம் அகமது தம்பி மரக்காயர் பிரேரணை செய்தார்.

மேன்மை தங்கிய கவர்னர்:—கனம் மெம்பர் விஸ்தரிக்க வேண்டிய அவசியமில்லை. அவர் பிரேரணை செய்து எவரேனும் ஆமோதித்தால், ஓட் எடுத்து விடலாம்.

கனம் யாகுப் ஹாசன் ஆமோதித்தார்.

கனம் மரக்காயர்;—என்னுடைய திருத்த பிரேரணைக்கு சாதகமாக சில காரணங்களைச் சொல்லிக்கொள்ள வேண்டியிருக்கிறது. முகம்மதியர்களுடைய உரிமைகளைப்பற்றி சில வார்த்தைகள் சொல்லிக்கொள்ள அநுமதி கொடுக்கவேண்டும்.

மேன்மை தங்கிய கவர்னர்:—சபையோருக்கு ஆட்சேபனை யில்லாவிடில் எனக்கு ஆட்சேபனை யில்லை நீங்கள் பேசலாம்.

கனம் மரக்காயர் :—என்னுடைய திருத்தப் பிரேரணையின் கருத்துத் தெரிந்துதான் சட்டசபைகள் விரிவுபட்டது முதலாக, முஸ்லிம்களுக்கு ஸ்தல ஸ்தாபனங்களிலே போதிய பிரதிநிதித்துவம் வேண்டுமென்கிற அவா உண்டாகி யிருப்பதை நான் அடிக்கடி சபையில் பிரஸ்தாபித்திருக்கிறேன். இது இந்தியா கவர்ன்மெண்டைப் பொறுத்த விஷயமானதினால் தாங்களொன்றும் செய்வதற்கில்லையென்று கவர்ன்மெண்டார் ஜால் ஜப்பு சொல்லி வந்திருக்கிறார்கள். ஆகவே இப்பொழுதிருக்கிற மசோதாவில் முகம்மதியர்களுக்குப் போதிய பிரதிநித்துவம் தங்களுடைய தாராளத் தன்மையைக் காட்டிக்கொள்ள கவர்ன்மெண்டுக்கு சமயம் வாய்த்திருக்கிறது. முஸ்லீம்களாலேயே தேர்ந்திடுக்கப்பட்ட சட்டசபைப் பிரதிநிதிகள் தங்களுடைய சமூகத்தினருக்கு திருப்திகரமாக நடந்து வருவதிலிருந்து, ஸ்தலஸ்தாபனங்களிலும் அதே சுதந்தரத்தை அவர்களுக்கு அளித்தால், அவர்கள் கவர்ன்மெண்டுக்கும் தங்களுடைய இனத்தாருக்கும் திருப்திகரமாக நடந்து கொள்ளுவார்களென்று ஏற்படுகிறது.

இதுவரையில் முகம்மதியர்களுக்குப் பிரதிநிதித்துவமில்லாமலிருந்தால் கவர்ன்மெண்டாரே நியமனம் செய்துகொண்டு வந்தார்கள். 2-4-16ல் கூடிய சட்டசபையில் நான் இது விஷயமாகக் கேள்விகேட்டபோது கவர்ன்மெண்டார் கீழ்கண்டவாறு பதில் சொல்லியிருக்கிறார்கள்.

எலெக்ஷன் மூலமாகப் பிரதிநிதித்துவம் பெறாமற்போன சொற்பத் தொகையினரின் நன்மையை உத்தேசித்தே பிரதிநிதிகளை நியமிக்கும் அதிகாரம் வைத்துக் கொள்ளப்பட் டிருக்கிறதென்று தெரிந்த விஷயம்.”

இப்பொழுது நியமன அதிகாரத்தைக் குறைத்து எலக்ஷனாக மாற்றுவதால், முகம்மதிய மெம்பர்களைப் போதியளவு நியமிக்க இடமில்லாமற் போய்விடும். இந்த மசோதாவின்படி சொற்ப ஸ்தானங்களுக்குத் தான் கவர்ன்மெண்டார் நியமனம் செய்யலாம். இவ்வித நிலைமையில் முகம்மதியப் பிரதிநிதிகள் தங்களுடைய வகுப்பினராலேயே தெரிந்தெடுக்கப் படும்படி செய்ய வேண்டாமா? அவ்விதம் செய்யாத வரையில் போதிய பிரதிநிதித்துவ மேற்படாது. முகமதியர்களுக்காக பிரத்தியோக ஓட் தொகுதிகளை அமைக்கும் விஷயத்தில் தனிக்கமிட்டியார் அனுதாபம் காட்டியுள்ளார்கள் ஆனால் முகம்மதியர்களுக்குப் போதிய பிரதிநிதித்துவம் கிடைக்கும்படி சட்டபூர்வமாக பாதுகாப்பு ஏற்படாதவரையில் கவர்ன் மெண்டாருடைய தயவை எதிர்பார்த்திருக்கும்படி விட்டு விடலாமென்று நினைத்திருக்கிறார்கள். சட்டசபைகள் எலக்ஷன் விஷயத்தில் இந்த உரிமையைத் தந்திருக்கையில், சென்னை கார்ப்பரேஷனிலும், ஸ்தல ஸ்தாபனங்களிலும் ஏன் இந்த உரிமையைக் கொடுக்கக் கூடாது.

இதுவிஷயமாக 1906ம் வருஷத்தில் முகம்மதியர்களின் பிரதிநிதிக்கு லார்டு மிண்டோ கீழ் கண்டவாறு பதில் சொல்லியிருக்கிறார்:—

“ சட்டசபையோ முனிசிபாலிட்டியோ ஜில்லா போர்டோ எதிலே னும் எலெக்ஷனைப் புகவிடவோ அதிகப்படுத்தவோ ஏற்பாடு செய்கையில் முகம்மதிய சமுகத்தினருக்குப் பிரத்தியேகமாகப் பிரதிநிதித்துவம்கொடுக்க வேண்டு மென்பதே தங்களுடைய பத்திரத்தின் முக்கிய கருத்தென்று நினை க்கிறேன். அதிலும் உங்களுடைய ஜனத்தொகையை மட்டில் எடுத்துக் கொள்ளாமல் உங்களுடைய சமுகத்தின் ராஜீய அந்தஸ்தையும் ஏகாதி பத்தி யத்திற்கு நீங்கள் செய்திருக்கும் ஊழியத்தையும் மதித்துப் பிரதிநிதித்து வம் கொடுக்க வேண்டு மென்று நீங்கள் கேட்பது சரிதான். அதை நான் ஒப்புக் கொள்ளுகிறேன்.

இவ்விதம் தெளிவாக ஒப்புக் கொள்ளப்பட்டிருக்கும் என்னுடைய சமுகத்தினரின் உரிமைகள் ஒருவாறு மிண்டோ மார்லி சீர்திருத்தத்தில் கொடுக்கப்பட்டன. லாண்டு ஹார்டிஞ்சும் பஞ்சாப் முஸ்லீம் சங்கத்தார் 2-4-11ல் படித்துக் கொடுத்த உபசாரப்பத்திரத்திற்கு பதிலளிக்கையில் என்ன சொல்லி யிருக்கிறாரெனில்:—

“ சமீபத்தில் செய்யப்பட்டிருக்கும் அரசியல் திருத்தங்களை நீங்கள் பாராட்டுவதையும் உங்களுக்குக் கொடுத்திருக்கும் வாக்குறுதிகளை என்னு டைய கவர்ன்மெண்டாரும் உறுதி செய்திருப்பதை உணர்ந்து மதிப்பதை யும் கண்டு நான் சந்தோஷப்படுகிறேன். கவர்ன்மெண்டாரால் கொடுக்கப்பட் டிருக்கும் வாக்குறுதிகள் ஒருக்காலும் நிறைவேற்றி வைக்கப்படாமற் போய் விடாதென்று நீங்கள் நம்பியிருக்கலாம்.

மிஸ்டர் மாண்டேகுவும் முகம்மதியர்கள் பிரத்தியேகப் பிரதிநிதித்து வமூலமாகவும் பிரத்தியேக ஓட் தொகுதியின் மூலமாகவும் தான் தங்களு டைய க்ஷேமலாபங்கள் பாதுகாக்கப்படு மென்று நினைக்கிறார்கள், என்று சொல்லி அவருடைய அரசியல் திருத்தத்தில் முகம்மதியர்களுக்கு புதிய சட்டசபைகளில் வகுப்புவாரிப் பிரதிநிதித்துவம் கொடுத்து விட வேண்டிய அவசியத்தை வற்புறுத்தியிருக்கிறார். வாக்குறுதியிலிருந்து விடுவிக்கப்படும் வரையில் அதை நாம் காப்பாற்றித் தீர வேண்டு மென்பதைத் தவிர அவரு டைய ரிபோர்ட்டின் 231வது பாராவில் புதிய சபைகளில் இந்த வகுப்பின ருக்குப் போதிய பிரதிநிதித்துவம் ஏற்படும்படி பார்த்துக் கொள்ள வேண்டி யது நமது கடமை யென்று சொல்லியிருக்கிறார்.

ஸ்தலஸ்தாபனங்களை விரிவுபடுத்த இப்பொழுது உத்தேசிக்கையில் சட்ட சபைகளிலிருந்தது போல் சென்னை கார்ப்பொரேஷனிலும் முகம்மதி

யர்களுக்குப் பாதுகாப்பு ஏற்படுத்த வேண்டிய தவசியமில்லையா? 7 ஸ்தானங்களில் நான்கை முகம்மதியர்களுக்காக ஒதுக்கி வைப்பது அனுபவத்தில் சவுகரிய மாயிருக்கு மென்று கமிட்டியார் சொல்லியிருக்கையில் 4 பேர்களை முகம்மதியர்களே தெரிந்தெடுக்க சட்ட பூர்வமாக ஏற்பாடு செய்துவிடக் கூடாதென்று ஏன் சொல்லியிருக்கிறார் களென்று எனக்குத் தெரிய வில்லை.

ரங்கூன் முனிசிபல் சட்டத்தில் இந்த ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது. சமீபத்தில் ஐக்கிய மாகாணங்களின் முனிசிபல் சட்டத்திலும் முஸல்மான் களுக்காக சில ஸ்தானங்கள் கொடுக்கப்பட்டிருக்கின்றன. தங்களுடைய கவர்ன் மெண்டாரும் முஸல்மான் களிடத்தில் தாராள புத்தி காட்டுவீர்களென்றே நம்புகிறேன். முஸ்லீம் வகுப்பினரின் க்ஷேமலாபத்தைப் பெருக்குவதில் கவர்ன் மெண்டாருக்கு அக்கரையிருப்பது எனக்குத் தெரியும். 8-4-16ல் நடந்த மீட்டிங்கில் ஸர்பி. எஸ் சிவஸ்வாமியார் கனம் மரக்காயர் ஒரு விதாசாரத்தை தமது சமுகத்தினருக்காக ஒதுக்கிவைக்க வேண்டுமென்று சொல்லி முகம்மதிய சமுகத்தினருக்குப் போதிய பிரதிநிதித்துவம் கொடுக்க வேண்டுமென்று வாதாடுகிறார். முகம்மதிய சமுகத்திற்கும் போதிய பிரதிநிதித்வம் கொடுக்க வேண்டு மென்கிற அக்கரை கவர்ன் மெண்டுக்கிருக்கிறதென்பதை கனம் மரக்காயருக்குத் தெரிவித்துக் கொள்ளுகிறேன் என்று சொல்லி யிருக்கிறார்.

ஆகவே என்னுடைய சமுகத்தாரின் கிரமமான இக் கோரிக்கையை இச்சபையார் ஆதரிப்பார்களென்றே நான் நிச்சயமாக நினைக்கிறேன். அவ்விதம் சொல்வதினால் முஸ்லீம் சமுகத்தாரும் மற்ற வகுப்பினரைப் போல் முன்னேற்ற மடைய வழி உண்டு பண்ணியதாகும். என்னுடைய அனுபவத்தில் கார்ப்பொரேஷனில் ஒருவருக்கு அதிகமாக தேர்ந்தெடுக்கப்பட்ட முஸ்லீம் மெம்பரிருந்ததில்லை. முஸ்லீம் ஓட்டர்களே தங்களுடைய பிரதிநிதிகளைத் தெரிந்தெடுத்துக் கொள்ள சட்ட பூர்வமாக தகுந்த ஏற்பாட்டைச் செய்யுவரையில் சென்னை மாகாணத்தில் நகர்கார்பொரேஷனில் முஸல்மான்களுக்கு போதிய பிரதிநிதித்துவமில்லாமல் திண்டாட வேண்டி வரும்.

திருத்தப்பிரேரணை ஓட்டுக்கு விடப்பட்டு தோற்றுப்போய் விட்டது.

கவர்ன் மெண்டார் நியமனம் செய்யும் ஸ்தானங்களில் நான்கையாவது முஸ்லீம்களை நியமிப்பதற்காக ஒதுக்கி வைக்க வேண்டுமென்று கனம் மரக்காயர் மற்றொரு திருத்தப்பிரேரணை கொண்டுவந்தார். அந்த ஸ்தானங்களுக்கு சபையுடன் கூடிய கவர்னர் நியமனம் செய்கையில் முகம்மதியர்கள் முதலிய சொற்பத் தொகையாகவுள்ள வகுப்பினருக்குப் போதிய பிரதிநிதித்துவம் இருக்கும்படி பார்த்துக் கொள்ள வேண்டுமென்று திருத்தம் செய்யப்பட்டது.

* * * *

கௌரவ மாஜிஸ்திரேட் பதவியை வகித்து வருகிற வரும் முனிசிபல் கவுன்சிலர் ஸ்தானத்திற்கு அபேக்ஷகராக நிற்கலாமென்றும், அவர் அந்த ஸ்தானத்திற்கு நியமிக்கப்பட்டு விட்டாலும், தேர்ந் தெடுக்கப்பட்டு விட்டாலும் அவர் கௌரவ மாஜிஸ்திரேட் ஸ்தானத்தை ராஜி நாமாச் செய்துவிட வேண்டுமென்றும், இல்லையேல் முனிசிபல் கவுன்சிலர் ஸ்தானத்திற்கு அவர் நியமிக்கப்பட்டிருந்தாலும், தேர்ந் தெடுக்கப்பட்டிருந்தாலும் அது செல்லுபடியற்றதாகி விடுமென்றும் 52 (1) பிரிவில் ஒரு ஷரத்தைச் சேர்க்க வேண்டுமென்று கொண்டுவரப்பட்ட திருத்தப் பிரேரணையை கனம் அகமது தம்பி மரக்காயர் ஆமோதித்துப் பேசியதாவது:—வெளி ஜில்லா முனிசிபாலிட்டிகள் சட்டத்தில் இந்த ஏற்பாடு சொல்லப்பட்டிருக்கிறது. அநேக முனிசிபல் கவுன்சிலர்கள் கௌரவ மாஜிஸ்திரேட்டுகளாக நியமிக்கப்பட்டிருக்கிறார்கள். ஆனால் முனிசிபாலிட்டி சம்பந்தப்பட்ட கேஸ்களில் மட்டும் அவர்கள் கலந்து கொள்ளக்கூடாதென்று சொல்லப்பட்டிருக்கிறது. நான் 7 வருஷ காலம் முனிசிபல் கவுன்சிலராகவும் கௌரவ மாஜிஸ்திரேட்டாகவும் இருந்திருக்கிறேன். முனிசிபல் கவுன்சிலர் முனிசிபாலிட்டி சம்பந்தப்பட்ட கேஸ்களின் விசாரணையில் கலந்து கொள்ளா விடினும் கேஸ் நடவடிக்கைகளையாவது கவனித்துக் கொண்டிருப்பது கார்ப்பொரேஷனுக்கு நன்மையைத் தரத்தக்க விஷயம். ஜில்லா முனிசிபாலிட்டிகள் சட்டத்தில் சபையுடன் கூடிய கவர்னர் விலக்கு செய்யலாமென்று கண்டிருக்கிறது. (இது சம்பந்தமான பிரிவை கனம் மரக்காயர் வாசித்தார்.) இந்த அதிகாரம் கலெக்டர்களுக்குக் கொடுக்கப்பட்டு அவர்கள் விலக்கு செய்து வருகிறார்கள். ஒருவர் இரண்டு உத்தியோகங்களையும் வகித்திருப்பதினால் கார்ப்பொரேஷன் அல்லது பொது ஜனங்களுடைய க்ஷேம லாபம் எவ்விதம் பாதிக்கப்படுமென்று எனக்குத் தெரியவில்லை. இப்பொழுதிருக்கிற நிலைமையில் கௌரவ பிரசிடென்ஸி மாஜிஸ்திரேட் முனிசிபல் கவுன்சிலர் ஸ்தானத்தை அபேக்ஷித்து நிற்கவிடலாம். அவர் அந்த ஸ்தானத்திற்குத் தெரிந்தெடுக்கப்பட்டு விட்டால் கௌரவ மாஜிஸ்திரேட் பதவியை ராஜி நாமாச் செய்யும்படி அவரைக் கேட்டுக் கொள்ளலாம்.

* * * *

திருத்தப்பிரேரணை தோற்றுப் போய்விட்டது.



(1919-வருஷம் நவம்பர் மாதம் 19-ந்தேதி நடந்த கூட்டம்)



## ஜில்லா முனிசிபாலிட்டிகள் மசோதா

கனம் ஹபிபுல்லா சாகிப் ஆஜர்ப்படுத்திய ஜில்லா முனிசிபாலிட்டிகள் மசோதாவைப்பற்றி கனம் அகமது தம்பி மரக்காயர் பேசியதாவது:—

மேன்மை தங்கிய பிரபுவே,

சீர்திருத்தச் சட்டம் அமுலுக்கு வந்த பிறகு இந்த மசோதாவை ஆலோசனைக்கு எடுத்துக் கொள்ளலாமென்று அநேக முனிசிபாலிட்டிகள் தெரிவித்துக் கொண்டிருப்பதாகத் தெரிகிறது. நாகப்பட்டணம் முனிசிபாலிட்டியும் அவ்வித அபிப்பிராயமே தெரிவித்துக் கொண்டிருப்பதாக நினைக்கிறேன். புதிய சீர் திருத்தம் வருவதில் ஏதேனும் சந்தேக மிருந்தால் இந்த மசோதாவை இப்பொழுதே கொண்டு வரவேண்டியது தான்; ஆனால் கூடிய சீக்கிரத்தில் அரசியல் திருத்தம் கிடைத்து விடுவதாக யிருந்தால் இன்னும் சில மாதங்களுக்கு இந்த மசோதாவைப் பற்றி விவாதிப்பதை நிறுத்தி வைத்துக் கொள்ள வேண்டுமென்று கனம் நரஸிம்மய்யர் சொன்ன யோசனை உசிதமானதாகத் தோன்றுகிறது.

* * *



## (நவம்பர்மாதம் 20ம் தேதி நடந்த கூட்டம்.)

இந்த மசோதாவைக் கொண்டுவரத் தான் வேண்டுமென்கிற பிரேரணை அங்கீகரிக்கப்பட்டுப் போய் விட்டதால், கனம் தியாகராய செட்டியார் சொன்ன பிரகாரம் இந்த மசோதாவை தனிக்கமிட்டியில் விரிவு படுத்திக் கொள்ளலாம் புதிய சபையிலும் வேண்டிய திருத்தங்களைச் செய்து கொள்ளலாம். ஆகவே மசோதாவைப்பற்றி விவரித்துக் கொண்டிருக்க வேண்டிய அவசியம் இப்பொழுதில்லை யென்று நான் நினைப்பதால், கனம் மெம்பர்களும் அவ்விதமே நினைத்து, தனிக்கமிட்டியை நியமனம் செய்வார்களென்று நம்புகிறேன்,

* * *



## 1920

### (மார்ச்சு மாசம் 15ம் தேதி நடந்த கூட்டம்)

---

கால் நடைகள், வெள்ளாடு, செம்மறி ஆடு இவைகளை முகம்மதியர்களை வதைக்க வேண்டுமென்று 261-வது பிரிவில் ஒரு ஷரத்தைச் சேர்த்துவிட வேண்டுமென்று கனம் அகமது தம்பி மரக்காயர் பிரேரணை செய்து பேசியதாவது:—

இந்த திருத்தப் பிரேரணைக்கு சாதகமாக அதிக வார்த்தைகள் சொல்ல வேண்டிய தவசியமென்று நான் நினைக்கவில்லை. செம்மறி ஆடுகள் வெள்ளாடுகள் முதலியவற்றை கசாப்புக்கடைகளில் முகம்மதியர்களே வேத வாக்கியங்கள் ஓதிக்கொண்டு வதை செப்வதென்பது நீண்டகாலமாக அனுஷ்டானத்திலிருந்து வருகிறது. ஆனல் இந்தப் பிராசின வழக்கத்தைக் கைவிட்டு விட்டு, ஹிந்து சகோதரர்களே இந்த மிருகங்களை வதை செய்து அவைகளின் மாம்சங்களை மார்க்கெட்டுகளில் கொண்டு வந்து விற்பதாக எனக்கு என்னுடைய ஒட்டர்களால் அறிவிக்கப்பட்டிருக்கிறது. இது இஸ்லாம் மதத்திற்கே விரோதமான விஷயம். சரியானபடி வேத வாக்கியங்களை ஓதிவதைக்கப்படாத மிருகங்களின் மாமிசங்களை பக்ஷிப்பது எங்களுடைய மார்க்க தர்மத்தின்படி பாபச் செயலாகும்.

அநேக முனிசிபாலிட்டிகளிலும் எவ்வித வழக்கம் அனுஷ்டானத்திலிருக்கிறதென்பதைத் தெரிந்து கொள்வதற்காக நான் பலத்த விசாரணை செய்தேன். 66 முனிசிபாலிட்டிகளில் 60 முனிசிபாலிட்டிகளிடமிருந்து 53 தாலூகா போர்டுகளில் 50 தாலூகா போர்டுகளிடமிருந்தும் பொது கசாப்புக் கடைகளில் முகம்மதியர்களே மிருகவதை செய்து கொண்டுவருவதாக எனக்கு பதில் கிடைத்திருக்கிறது. இருந்தாலும் உள்ள நிலைமையை அறிந்து கொள்வதற்காக நான் கவர்மெண்டாருக்கு எழுதிக் கேட்டதில் அடியிற்கண்ட பதில் எனக்குக் கிடைத்திருக்கிறது.

“அவசியமான காலங்களில் நடவடிக்கை எடுத்துக் கொள்ளுவது லோகல் போர்டுகளைப் பொறுத்த விஷயம். கிரமமாகவதை செய்யப்படாத மிருகங்களின் மாமிசங்களை முகம்மதியர்கள் புஜிக்கும்படி நேரிடுகிற முனிசிபாலிட்டிகளில் முனிசிபல் கவுன்சில்கள் முகம்மதியர்களுக்கே வதை செய்ய லைசென்ஸ் கொடுக்கலாம் அல்லது முகம்மதியர்களைக் கொண்டுதான் மிருகங்களைவதை செய்விக்க வேண்டுமென்று லைசென்ஸில் ஒரு ஷரத்தைச் சேர்த்து விடலாம்.

நாம் இப்பொழுது ஜில்லா முனிசிபாலிட்டிகள் சட்டத்தையே செப்பனிடுவதால், பெருவாரியாகவுள்ள முஸ்லீம்களின் மத உணர்ச்சியை மதித்து, முகம்மதியர்களல்லாதவர்கள் வதை செய்யும்படி விடக்கூடாதென்று முனிசிபாலிட்டிகளுக்கு சட்ட பூர்வமாக நிபந்தனையை ஏற்படுத்தி விடுவது உசிதமாகும். இது முஸ்லீம் வகுப்பினரின் மார்க்க தர்மத்தைப் பொறுத்த விஷயமாதலால் இந்த சபையிலுள்ள ஹிந்து சகோதரர்கள் இத்திருத்தப் பிரேரணையை ஆதரிப்பார்களென்றே நம்புகிறேன்.

கனம் யாகுப்ஹஸன் திருத்தப் பிரேரணையை ஆமோதித்தார்.

* * *

என்னுடைய சகாக்களில் பலர் இந்தத் திருத்தப் பிரேரணையை ஆட்சேபித்திருக்கிறார்கள். சில ஹிந்து கசாப்புக் கடைக்காரர்கள் அக்கிரமம் செய்வதினாலேயே இந்தப் பிரேரணையை நான் கொண்டு வந்தேன். முஸ்லீம்களே வதை செய்ய வேண்டு மென்கிற வழக்கம் நீண்டகாலமாக இருந்து வருகிறது. அநேக முனிசிபாலிட்டிகளிலும் தாலூகா போர்டுகளிலும் முஸ்லீம்களே வதை செய்கிறார்களென்பதற்கு என்னிடம் ரிகார்ட்டுகளிருக்கின்றன. ஆனால் ஹிந்து கசாப்புக்கடைக்காரர்களும் சிலரிருக்கிறார்கள். ஆனால் மிருகங்களை அறுக்கும் முல்லாக்களுக்கும் கசாப்புக்கடைக்காரர்களுக்கும் பண விஷயத்தில் தகராறு ஏற்பட்டுவிட்டால், அவர்கள் அறுக்க மறுத்து விடுகிறார்கள். அதன்மேல் கசாப்புக்கடைக்காரன் தானே வதை செய்ததாகச் சொல்லி விடுகிறான். கனம் வெங்கடபதிராஜு முத்திரை போடவேண்டியிருக்கிறதென்று சொல்லியிருக்கிறார். அந்த வேலையைப் பொறுப்பு வாய்ந்த பெயர் வழிகள் செய்வதில்லையானதினால் சுலபமாக முத்திரை குத்தி விடலாம். 7 8 ரூபாய் சம்பளம் வாங்கும் பெயர் வழியே அந்த வேலையைச் செய்து வருகிறான். வதை செய்யும்போது அவன் நேரில் பார்க்கிறதுகூட கிடையாதென்பது எனக்குத் தெரியும். மிருகங்கள் வதையாகி இறைச்சி மார்க்கெட்டுக்குக் கொண்டு வரப்பட்டபிறகு மார்க்கட் சார்ஜென்ட்வந்து அவைகளுக்கு முத்திரை குத்திவிடுகிறார். ஆகவே குறிப்பிட்ட இறைச்சி முகம்மதியர்களல்லாதவர்களால் அறுக்கப்பட்டதாவென்று தெரிவதற்கே இடமில்லாமற் போய் விடுகிறது. இம்மாதிரியான தீர்மானங்களைக் கொண்டுவரக்கூடாதென்று என்னையும் கனம் யாகுப்ஹஸனையும் பற்றி கனம் மிஸ்டர் மாக்பேல் என்னமோ சொன்னார். நாங்கள் எங்கேபோய் முறையிடுகிறது ? பரிகாரம் தேடிக்கொள்ளலாமென்று தான் நாங்கள் இங்கே வந்திருக்கிறோம் இதைத் தவிர எங்களுக்கு முறையிட்டுக் கொள்ள வேறு இடமில்லை. இங்கு கொண்டு வந்து தான் நீங்களும் மற்ற மெம்பர்களும் மார்க்க தர்மத்தின்படி எங்களுக்கிருந்து வரும் சங்கடங்களை நிவர்த்திக்க வேண்டும். இந்த மாதிரியான குற்றங்கள் நடைபெறுவதற்கு இடம் கொடுக்கலாமென்று அதிகப்பேர்கள் நினைக்க மாட்டார்கள். இதை

ஒப்புக்கொள்ளாமற்போனல் முகம்மதியர்களுக்குள் பெருத்த வருத்தமுண்டாகி பெருங் கலவர முண்டாகும். இந்தியா முழுவதும், முகம்மதிய உலகத்திலும் இதைப்பற்றி பலமாக மனத்தாங்கல் ஏற்படும். இது புதிதாகக் கிளம்பிய விஷயமல்ல. 1918-ம் வருஷம் முதலே நான் இதைப்பற்றி கிளர்ச்சி செய்ய வாரம்பித்து சமயம் வருமென்று காத்துக்கொண்டிருந்து இப்பொழுது சமயம் வந்திருப்பதினுல் இப்போது சபையின் முன்பாகப் பிரஸ்தாபத்திற்குக் கொண்டு வந்திருக்கிறேன். தங்களுடைய கவர்ன்மெண்டார் இந்த விஷயத்தை அனுகூலமாக கவனித்து உத்திரவு செய்வார்களென்றே நம்புகிறேன். மசோதாவில் இதைச் சேர்த்துவிட சாத்தியப்படாமற் போனல் கனம் ராமானுஜாச்சாரியார் சொன்ன பிரகாரம் உத்திரவு செய்துவிடலாம். சுங்கான் கேட்டுகள், மார்க்கெட்டுகள், கசாப்புக்கடைகள் இவைகளை சமீபத்தில் ஒரு முனிசிபாலிடியில் குத்தகைக்கு விடும்பொழுது இந்த விஷயத்தை முக்கியமாக கவனித்து, முகம்மதியர்களைக் கொண்டு மிருக வதை செய்விக்க வேண்டுமென்று லைசென்ஸில் ஒரு ஷரத்தைச் சேர்த்துவிட வேண்டுமென்றும், தலை ஒன்றுக்கு மூன்று பைசா வரியும் 3 வருஷத்திற்கு எத்தனை மிருகங்களைத் தான் வதை செய்யலாமென்று உத்தேசமாக ஒரு கணக்கையும் சேர்த்துவிட வேண்டுமென்று சேர்மனுக்கு எழுதினேன். முகம்மதியர்கள் தான் அறுக்க வேண்டுமென்று உத்திரவு செய்து விட்டால் என்னுடைய சமூகத்தாருக்குப்பெரும்ஆறுதலாயிருக்கும் திருத்தப் பிரேரணை தோற்றுப்போய்விட்டது.



## (மார்ச்சு மாதம் 20ம் தேதி நடந்த கூட்டம்)



## ஆரம்பக்கல்வி மசோதா.

கனம் நாப் கொண்டு வந்த ஆரம்பக்கல்வி மசோதாவைப் பற்றி கனம் அகமது தம்பி மரக்காயர் பேசியதாவது:—

பிரபுவே,

நான் இந்த மசோதாவை ஆதரிக்கிறேன். சீக்கிரத்தில் இந்த மசோதாவைச் சட்டமாக்கிவிட வேண்டுமென்று நான் நினைக்கிறேன். பெண் கல்வியைப்பற்றி சில வார்த்தைகள் சொல்லிக் கொள்ளவேண்டி யிருக்கிறது எனது நண்பர் கனம் யாகுப் ஹாசன் அதைப்பற்றி விஸ்தாரமாகச் சொல்லி விட்டதால் நான் அதிகமாக ஒன்றும் சொல்லிக் கொள்ளவேண்டியதில்லை. முகம்மதிய கோஷா முறையைப்பற்றி கனம் பித்தாபுரம் ராஜாவே பிரஸ்தாபித்து விட்டது எனக்கு சந்தோஷத்தைத் தருகிறது. முகம்மதிய

கோஷாப் பெண்களின் கல்வி விஷயத்தைப்பற்றி சொல்லிக் கொள்ளவேண்டிய தகிகமிருக்கிறது. மிகுந்த ஏழையாகவுள்ள முகம்மதியர்கள் தான் தங்களுடைய பெண்களைப் பள்ளிக்கூடங்களுக்கு அனுப்புகிறார்கள். நடுத்தர ஸ்திதியிலும் செல்வ நிலைமையிலுள்ளவர்கள் முகம்மதிய ஸ்திரீகளை வீட்டுக்குத் தருவித்துப் பெண்களுக்கு அரபி பாஷை கற்றுக் கொடுக்க வைக்கிறார்கள். ஆரம்பத்தில் புருஷக் குழந்தைக்காவது பெண் குழந்தைக்காவது எங்களுடைய மார்க்கப்படி எங்களுடைய பாஷையைத் தவிர வேறு பாஷை எதையும் கற்றுக் கொடுக்கக்கூடாது. வேறு பாஷையை அவர்கள் அப்பியசிக்க ஆரம்பிக்குமுன் சொந்த பாஷையைக் கட்டாயமாகக் கற்றுக் கொண்டே தீரவேண்டும். இவ்வித நிலைமையில் ஆண், பெண் இருவருக்குமாக இந்த மசோதாவைச் சட்டமாக்கினால் ஆண் குழந்தைகளைவிட பெண் குழந்தைகள் விஷயத்தில் அதிகக் கஷ்ட மேற்படும். ஆண் பிள்ளைகளும் குறிப்பிட்ட ஒரு காலம் வரையில் மதப்படிப்பு படிக்க வேண்டியிருப்பதால் அவர்கள் விஷயத்திலும் சிரமம் தான். ஒவ்வொரு இடத்திலும் அந்தந்த நிலைமைக்குத் தக்கபடி பள்ளிக்கூடத்திற்கு அனுப்பவேண்டிய வயதுக் கிரமத்தை சபையுடன் கூடிய கவர்னரே நிஷ்கரிஷை செய்யலாம். ஒவ்வொரு வகுப்பினருடையவும், அதிலும் முக்கியமாக முகம்மதியர்களுடையவும் அபிப்பிராயத்தை மதித்து பள்ளிக்கூடத்திற்கு அனுப்பவேண்டிய வயதுக்கிரமத்தை நிர்ணயம் செய்ய வேண்டுமென்பது தான் கவர்ன்மெண்டின் கருத்து. இந்தக் கஷ்டம் பாதிக்காமல் இருப்பதற்கு ஏதேனும் வழி செய்யவேண்டும். கல்வி இலாகா அதிகாரிகளே உசிதா உசிதமறிந்து நடந்து கொள்ளும்படி விட்டுவிடுவதே நலமென்று நினைக்கிறேன். முக்கிய கஷ்டம் ஒன்று இருக்கிறது. எந்தப் பிதாவேனும் தன்னுடைய குழந்தையை பள்ளிக் கூடத்திற்கு அனுப்பாத வரையில் இந்த சட்டத்தின்படி குற்றம் செய்தவனாவான். இந்த சிட்சைக்கு பயந்து கொண்டு மதப்பள்ளிக்கூடத்திற்கு அவன் பிள்ளைகளை அனுப்பாவிட்டால் அந்தப் பாபத்திற்கு ஆளாக வேண்டியிருக்கும். முகம்மதியர்கள் முதலில் தங்களுடைய பிள்ளைகளை மதப் பள்ளிக்கூடங்களுக்கு அனுப்பி அவர்களுக்கு அரபி பாஷையைக் கற்று வைக்க வேண்டும். அவர்கள் அவ்விதம் செய்யாவிடில் பாவத்திற்கும் ஆளாவதோடு அவர்களுடைய வகுப்பினரும் அவர்களைத் தூற்றுவார்கள். இந்தக் கஷ்டத்தை நிவர்த்திப்பதற்காக எனது நண்பர் கனம் யாகுப் ஹாசன் சிறிது காலத்திற்கு முன் யோசனை சொன்ன பிரகாரம் இப்பொழுது இருந்து வரும் மதப் பள்ளிக்கூடங்களை அங்கீகரித்து விடவேண்டும். அந்தப் பள்ளிக்கூடங்களுக்கு முகம்மதியர்கள் குறிப்பிட்ட வயதில் தங்களுடைய குழந்தைகளை அனுப்பிக் கொண்டு வந்தால் இந்த சட்டத்திற்கு மீறியதாகாதென்று அங்கீகரித்து அவர்களுக்கு சிட்சையில்லாமற் செய்து விடவேண்டும். இதைத் தான் கவர்ன்மெண்டுக்கு எடுத்துச்சொல்ல வேண்டுமென்பது என்னுடைய கருத்து. தனவந்தர்கள் தங்களுடைய

வீடுகளிலேயே குழந்தைகளுக்கு உபாத்தியாயர்களை வைத்துச் சொல்லிக் கொடுக்க இடமிருக்கவேண்டும். கிரமமான கல்வியைக் கற்றுக் கொடுக்க அவர்களே உபாத்தியாயர்களை வைத்துக் கொடுக்கவும் இடம் கொடுக்க வேண்டும். இந்த மாதிரி ஏதேனும் பரிகாரம் செய்யாவிடில் அதிகாரிகளுக்கும் முகம்மதியர்களுக்கும் போராட்டம் ஏற்பட்டுக் கொண்டே யிருக்கும் நானும் கனம் யாகுப் ஹாசனும் சொன்ன யோசனைகளை அனுசரித்து கவர்ன்மெண்டார் தகுந்த ஏற்பாட்டைச் செய்வார்களென்று நம்புகிறேன்.

* * *

[குறிப்பு:—ஜூலை, ஆகஸ்டு, செப்டம்பர், அக்டோபர் மாதங்களில் சபையின் முன்பாகக் கொண்டுவரப்பட்ட லோகல் போர்டுகள் மசோதா, ஆரம்பக்கல்வி மசோதா, கிராமப் பஞ்சாயத்து மசோதா இவைகளைப்பற்றியும் கனம் மரக்காயர் விஸ்தாரமாகப் பேசியிருக்கிறார். அந்தக் கூட்டங்களின் ரிபோர்ட்டு இன்னும் வெளியாகாததினால் அந்த விவரங்களை இதில் சேர்க்கக்கூடவில்லை.]

—(::)—

# சென்னை சட்ட சபை

## பிரிவு V.

### இதர தீர்மானங்கள்.

சென்னை சட்ட சபையில் கனம் மெம்பர்கள் கொண்டு வந்த தீர்மானங்களைப் பற்றி கனம் கான்பகதூர் அ. க. கு. அகமது தம்பி மரக்காயர் பேசியுள்ள விவரங்களைக் கீழே காணலாம்.

## 1913

### மார்ச்சுமாதம் 13ம் தேதீ நடந்த கூட்டம்

### முகம்மதியர்களுக்கு நடுத்தரக் கல்வி.

இது விஷயமாக கனம் டி. ஸெயினுலாப்தீன் கொண்டு வந்த தீர்மானத்தை கனம் மரக்காயர் ஆமோதித்துப் பேசியதாவது:—இத் தீர்மானத்தை நான் ஆமோதிக்கிறேன. கவர்ன் மெண்டாரும் இத் தீர்மானத்தில் பரிபூரண அனுதாபங் காட்டி கல்வி விஷயத்திலும் முக்கியமாக நடுத்தர கல்வியிலும் என்னுடைய சமுகத்தினர் பிற் போக்காக இருந்து வருவதை உத்தேசித்து அவர்களுடைய நடுத்தரக் கல்வி அபிவிருத்திக்காக 50000 ரூபாய் ஒதுக்கி வைப்பார்களென்று நம்புகிறேன்.

## 1914

### ஜனவரி மாதம் 29ம் தேதி நடந்த கூட்டம்.

### கால்நடைகளின் அபிவிருத்தி

இது விஷயமாக கனம் சிதம்பர நாத முதலியார் கொண்டு வந்த தீர்மானத்தை கனம் அகமது தம்பி மரக்காயர் ஆமோதித்துப் பேசியதாவது:—

கால்நடைகளுக்குள் வியாதி பரவியிருப்பதை உத்தேசித்து போர்ட்டு ஸ்வீட்டன் ஹாமுக்குக் கூட அவைகளைக் கொண்டு போகக்கூடாதென்று தடுத்திருப்பதினால் வியாபாரம் வெகுவாகக் குந்தகப்படுவதினாலும் வியாதிகளினால் கால் நடைகள் ஏராளமாக மரித்து வருவதாலும் கனம் சிதம்பரனாத முதலியார் யோசனை சொல்லுகிற பிரகாரம் ஒரு கமிட்டியை நியமிக்க வேண்டிய தவசியம். கனம் மெம்பர் கோருகிற பிரகாரம் ஒரு கமிட்டியை நியமிக்கும் பட்சத்தில் கால் நடைகளின் சொந்தக் காரர்களுக்கும் சவுகரியமேற்படுவதுடன் வியாபாரிகளுக்கும் விசேஷ அனுகூல முண்டாகும்.

---

## நவம்பர் மாதம் 22ம் தேதி நடந்த கூட்டம்.

---

### கவர்ன்மெண்டு ஆபீஸ்களில் வேலை நேரங்கள்

இது சம்பந்தமாக கனம் நர்ஸிம்மய்யர் கொண்டு வந்த பிரேரணையை கனம் அகமது தம்பி மரக்காயர் ஆமோதித்துப் பேசியதாவது:—குமாஸ்தாக்கள் காலையிலேயே ஆபீஸ்களுக்குப் போய் இரவு 9 அல்லது 10மணி வரையில் திரும்பிவர முடியாமலிருப்பது எனக்கு நேரில் தெரியும். அதிக நேரம் வேலை செய்வதினால் அவர்களுடைய தேகமும் கெட்டு நீர் ரோகமும் அவர்களுக்கு உண்டாகும். துறைமுக ஆபீஸ்களிலும் கடற்சுங்க ஆபீஸ்களிலும் குமாஸ்தாக்கள் அதிக நேரம் வேலை செய்வதினால் தொழிலுக்கு சவுகரிய முண்டாகிறது. அதிக வேலை செய்வதற்காகக் கிடைக்கும் தொகையைக் கொண்டு அவர்கள் ஷடக்காக சாப்பிட்டு உடம்பைத்தேற்றிக்கொள்ளலாம். ஆகவே அதிக வேலையையாவது நிறுத்த வேண்டும். அல்லது குறிப்பிட்ட காலத்திற்கதிக மாகவும் ஞாயிற்றுக்கிழமைகளிலும் வேலை செய்கிறவர்களுக்குப் பிரத்தியேகமாகப் பணம் கொடுக்க வேண்டும்.

### திண்டுக்கல் பொள்ளாச்சி ரயில்வே.

கனம் கே. ராமய்யங்கார் இது விஷயமாகக் கொண்டு வந்த தீர்மானத்தை கனம் மாக்காயர் எதிர்த்துப் பேசியதாவது:—சம்பந்தப்பட்ட ஜில்லா போர்டுகளிடம் பணமில்லாததினாலும் கவர்ன்மெண்டார்கடன் வாங்குவதென்பது தீர ஆலோசிக்க வேண்டிய விஷயமானதினாலும், நான் இத் தீர்மானத்தை ஆட்சேபிக்க வேண்டியிருப்பதற்காக வருந்துகிறேன். பின்னி கம்பெனியாரைக் கொண்டு இந்த லயனை போட்டுவைக்க ஏற்பாடு செய்து வருவதாகத்தெரிகிறது. இந்த லயனை சீக்கிரத்தில் போடவேண்டியதவசியமாக இருப்பதால் அதற்குத் தயாராயிருக்கிற பின்னி கம்பெனியாரைக்கொண்டே கால தாமதமில்லாமல் இந்த லயனைப் போட்டு வைப்பது தான் சரியாகும். ஜில்லா

போர்டுகளே இம்மாதிரியான இருப்புப்பாதைகளை போடுவதில் எனக்கு ஆட்சேபணையில்லை. ஆனால் அதைப்பற்றி ஏற்கனவேயே யோசித்திருக்க வேண்டும். இனி விவாதிப்பதில் பிரயோஜனமில்லை.

## 1915

### [மார்ச்சு மாதம் 30-ம் தேதி நடந்த கூட்டம்.]

### சில்லரைத் துறைமுகங்கள்.

சில்லறைத் துறைமுகங்களைப் போக்குவரத்துக்காகத் திறந்துவிட்டுவிட வேண்டுமென்று கனம் கே. சிதம்பரநாத முதலியார் கொண்டுவந்த தீர்மானத்தை கனம் அகமது தம்பி மரக்காயர் ஆமோதித்து பேசியதாவது:—இந்த சில்லரைத் துறைமுகங்களை மூடிவிட்டதில் வியாபாரம் வெகுவாகக் குந்தகப்பட்டு வர்த்தகர்களுக்குள் பெருங் கூக்குரல் ஏற்பட்டிருப்பதால் இவைகளை உடனே திறந்து வைத்து விடவேண்டியதவசியம். கனம் மெம்பர் சொல்லிய பிரகாரம் கப்பல் கம்பெனிகளும் ரயில்வே கம்பெனியாரும் ஒப்பந்தம் செய்து கொண்டிருப்பதின் பலனாக கப்பல் கம்பெனியாரின் நிலைமை சீர் கேடாகி விட்டதால், அவசியமான துறைமுகங்களுக்கு அவர்கள் கப்பல்களைக் கொண்டுவர முடியவில்லை. இல்லாவிட்டால் அவர்களுக்குக் கப்பல்களைக் கொண்டுவர சம்மதம் தான். முத்துப் பேட்டைத் துறைமுகம் சம்மந்தப் பட்ட வரையில், ஆறு தூர்ந்துபோய் விட்டதால் கப்பல்கள் வருவதற்கு அங்கு வசதிகளில்லை யென்று கவர்ன்மெண்டாருக்குத் தெரியும். கவர்ன்மெண்டார் ஆற்றை வெட்டுவதற்கு ஏற்பாடு செய்யாத வரையில் கப்பல்கள் அங்கு வருவதற்கு சாத்தியமில்லை. அதிராம் பட்டணத்திலும் திருமுல்லை வாசலிலும் கப்பல்கள் வருவதற்கு வசதிகளிருந்த போதிலும் மேலே கண்ட காரணங்களால் கப்பல்கள் வர முடியவில்லை. வியாபாரிகளுடைய நன்மையைக் காப்பாற்றுவதற்கு கவர்ன்மென்டார் அவசியமான ஏற்பாடுகளைச்செய்ய வேண்டும்.

### நவம்பர் மாதம் 26 ம் தேதி நடந்த கூட்டம்.

### ஜில்லாபோர்டுகளுக்கு உத்தியோகஸ்தர்களல்லாத பிரசிடெண்டுகள்.

குறிப்பிட்ட சில ஜில்லாக்களிலாவது உத்தியோகஸ்தர்களல்லாதவர்களை ஜில்லா போர்டுக்கு பிரசிடெண்டுகளாக நியமனம் செய்ய வேண்டு

மென்று கனம் நாஸிம்மய்யர் கொண்டு வந்த பிரேரணையை கனம் அகமது தம்பி மரக்காயர் ஆமோதித்துப் பேசியதாவது:—

ஜனங்களுக்குள் வர வர கூக்குரல் அதிகரித்து விட்டதால் ஸ்தல ஸ்தாபன நிர்வாகத்தில் அவர்களுக்கு அதிக சுதந்தரத்தைக் கொடுக்கவேண்டிய தவசியம். சுமார் இரண்டு மாதங்களுக்கு முன் தஞ்சாவூர் ஜில்லா போர்டார் உத்தியோகப் பற்றில்லாத மெம்பர்களில் ஒருவரை வைஸ் பிரசிடெண்டாக நியமிக்க வேண்டுமென்பது தீர்மானம் செய்திருக்கிறது. இதைக் கொடுத்தால் பிரசிடெண்டையும் நியமிக்க வேண்டுமென்று கேட்பார்கள். கவர்ன்மெண்டார் போர்ட்டாருடைய வேண்டுகோளை அங்கீகரிக்காமல் பதிவு செய்து கொண்டு விட்டார்கள். இவ்வித வேண்டு கோள்களைப் பூர்த்தி செய்து வைக்க வேண்டிய காலம் வந்து விட்டது. ஜனங்கள் தங்களுடைய தேவைகளையும் கடமைகளையும் உணரத் தலைப்பட்டு விட்டார்கள். கவர்ன்மெண்டாரும் ஜனங்களுக்கு உதவி செய்யக் கடமைப்பட்டிருக்கிறார்கள். கவர்ன்மெண்டார் பரிக்ஷார்த்தமாக சில ஜில்லாக்களிலாவது உத்தியோகஸ்தர்களல்லாதவர்களை பிரசிடெண்டுகளாகத் தெரிந்தெடுத்துக் கொள்ள ஜில்லா போர்டுகளுக்கு சுதந்தரம் கொடுக்கும்படி கேட்டுக் கொள்ளுகிறேன்.

———:———

## (நவம்பர் மாதம் 27 ம் தேதி நடந்த கூட்டம்)

———

## ஸிலோன் கோரண்டைன் நிர்ப்பந்தங்கள்.

ஸிலோனுக்குச் செல்லும் பிரயாணிகளுக்கும் கூலிகளுக்கும் மண்டபத்தில் ஸிலோன் கவர்ன்மெண்டார் ஏற்படுத்திருக்கும் நிர்ப்பந்தங்களை நீக்கி விடும்படி அந்த கவர்ன்மெண்டாரைக் கேட்டுக்கொள்ள வேண்டுமென்றும், அவர்கள் அவ்விதம் செய்யும் வரையில் ஸிலோனுக்கு சென்னை மாகாணத்தில் கூலிகள் சேர்க்காமல் தடுக்க ஏற்பாடுகள் செய்ய வேண்டுமென்றும் கனம் எம். ராமச்சந்திர ராவ் கொண்டு வந்த தீர்மானத்தை கனம் அகமது தம்பி மரக்காயர் ஆமோதித்துப் பேசியதாவது:—

என்னுடைய தொகுதியினர்களில் பலர் ஸிலோன் அதிகாரிகளால் மண்டபம் காம்பில் ஏற்படுத்தப்பட்டிருக்கிற நிர்ப்பந்தங்கள் சகிக்க முடியாதனவாக இருக்கின்றன வென்று என்னிடம் புகார் செய்து கொண்டிருக்கிறார்கள். ஸ்டிரெயிட்ஸ் செட்டில் மெண்டுகள், மலாய் நாடுகள் இவைகளுக்கு சென்னையிலிருந்தும் நாகப்பட்டணத்திலிருந்தும் கால் நடைகளை அனுப்பும் விஷயமாக செய்திருக்கும் ஏற்பாடுகள் மிகவும் திருப்திகரமாக இருப்பதால்,

அதைப்போலவே தொத்து வியாதியால் பீடிக்கப்பட்டிருந்த பிரதேசத்தி லிருந்து வருகிறவர்கள் சரீரா ரோக்கிய சர்ட்டிபிகேட்டுகள் கொண்டு வந்தால் அவர்களை தாராளமாகச் செல்ல விட்டுவிட வேண்டுமென்று ஸிலோன் அதிகாரிகளுக்குத் தெரிவித்து இந்தியப் பிரயாணிகளுக்கிருந்து வரும் கஷ்டங்களையும் அசௌகரியங்களையும் குறைக்க வழி செய்ய வேண்டும். ஸிலோன் அதிகாரிகள் எதற்காக தங்களுடைய அதிகாரிகளை இங்கு வைத்திருந்து நம்முடைய பிரயாணிகளைக் கடுமையான நிர்ப்பந்தங்களுக்கு ஆளாக்க வேண்டுமென்று எனக்குத் தெரிய வில்லை. ஸ்டிரெயிட்ஸ் செட்டில் மெண்டுகளும் குடியேற்ற நாடாக இருந்தும் அங்கே இந்த நிர்ப்பந்தம்கிடையாது. நமது சுகாதார உத்தியோகஸ்தர்கள் பரிசோதித்து அனுப்புகிற 3 வது வகுப்புப் பிரயாணிகளைக் கூட அவர்கள் தாராளமாக தங்கள் நாட்டிக்கு வர விட்டு விடுகிறார்கள். நமது பிரஜைகளின் சவுகரியத்தை உத்தேசித்து இப்பொழுதிருக்கிற நிலைமையை கவர்ன்மெண்டார் அபிவிருத்தி செய்ய வேண்டிய தவசியம்.



## 1916

### (பிப்ரவரி மாதம் முதல் தேதி நடந்த கூட்டம்.)



### சென்னையில் உயர்தர உத்தியோகஸ்தர்களுக்கு இடவசிதி.

சென்னையில் உயர்தர உத்தியோகஸ்தர்களுக்கு வீடுகட்டிக் கொடுக்கச் செய்திருக்கும் யோசனையை விட்டு விடவேண்டுமென்று கனம் ஏ. எஸ். கிருஷ்ண ராவ் கொண்டுவந்த தீர்மானத்தை கனம் அகமது தம்பி மரக்காயர் ஆதரித்து பேசியதாவது ;—வருஷந்தவறாமல் வெளியிடங்களிலுள்ள உத்தியோகஸ்தர்களுக்கு குடியிருப்பு வசதி செய்து தரவேண்டுமென்று நான் கூக்குரல் போட்டுக் கொண்டுவந்தும் பிரயோஜனமில்லை. அவர்கள் படும் கஷ்டங்களும் அசவுகரியங்களும் செப்பத்தரமன்று. போன மாதத்தில் நாகபட்டணத்திற்கு மாற்றலாகி வந்த டெப்டீஸ்தரான ஒரு ஐரோப்பிய போலீஸ் இன்ஸ்பெக்டருக்கு குடியிருக்க இடம் கிடைக்காமல் முமுசாபர் பங்களாவில் தங்கியிருந்து கொண்டு நிர்மல கஷ்டப்படுகிறார் நாகபட்டணத்தில் அதிகாரிகள் குடியிருக்கத்தகுதியான இடங்கள் கிடைப்பதில்லை இன்னும் கவையாற்றுக்குப் பாலங்கட்டாததினால்அநேக உயிர்களுக்கு சேதம் ஏற்படுத்திக் கொண்டுவந்தும் அதைப் போன்ற பல கப்பல்களுக்கு கவர்ன்மென்டார் பணமில்லையென்று சொல்லிவந் திருக்கிறார்கள். நான் தீர்மானங்கள் கொண்டு வந்த போதெல்லாம் கவர்ன்மென்டார் பணமில்லை என்று சால்

ஜாப்புச் சொல்லி தீர்மானங்களை ஒப்புக் கொள்ளுமலிருந்திருக் கிறார்கள். சென்னையிலுள்ள உயர்தர உத்தியோகஸ்தர்களுக்கு வீடுகள் கட்டிக் கொடுக்ககூடாதென்கிற எண்ணம் எனக்கில்லை. அவர்களுக்கு வேண்டிய வீடுகள் கிடைத்து வருகின்றன. இப்போது பணம் மிகவும் தட்டாக இருக்கையில் உயர்தர உத்தியோகஸ்தர்களுக்கு வீடுகளைக் கட்டிக்கொடுக்க ஏராளமாகப் பணத்தைச் செலவிடக்கூடாது.

---

## (பிப்ரவரி மாதம் 2ந் தேதி நடந்த கூட்டம்)

---

## தென்னிந்தியா ரயில்வேயில் வாகன்கள் குறைவு.

தென்னிந்தியா ரயில்வே கம்பெனியாரால் போதிய வாகன்கள் இப்பொழுது சப்ளை செய்ய முடியாமலிருப்பதைப்பற்றி உடனே விசாரணை செய்ய வேண்டுமென்று கனம் கே. சிதம்பரநாத முதலியார் கொண்டுவந்த தீர்மானத்தைப்பற்றிப் பேசியதாவது:—

நான் ஒரு வியாபாரியானதினாலும் கப்பல் வியாபாரத்தில் சம்பந்தமுள்ளவனானதினாலும் சில வார்த்தைகள் சொல்ல விரும்புகிறேன். ரயில்வே கம்பெனியாருடைய நிலைமை என்னவென்பது எனக்குத் தெரியும். யுத்தம் ஆரம்பமான பிறகு கப்பல்கள் தட்டுப்பட்டு கல்கத்தாவுக்கும் பம்பாயிக்கும் வாரா வாரம் போய்க்கொண்டிருந்த கப்பல்களை நின்று போய்விட்டன. அதுமுதல் காக்கிநாடா, விசாகப்பட்டணம், பீம்லிபட்டணம் துறைமுகங்களிலுள்ள வியாபாரிகள் வினோலாணுக்கு அரிசி அனுப்ப முடியாமல் கஷ்டப்படுகிறார்கள். ஆகவே அவர்கள் ரயில்வே மூலமாகவே அரிசியை ஏற்றி அனுப்ப வேண்டியதாகி விட்டதால் அதிக வாகன்களைக் கொடுக்கும்படி ரயில்வே கம்பெனியாரை வற்புறுத்த வேண்டியதாகி விட்டது. ரயில்வே கம்பெனியாருக்கு இன்னொரு கஷ்டமுண்டாகி விட்டது, கப்பல் கட்டணம் அதிகரித்து விட்டதால் ரயில்வே கம்பெனியார் தாங்கள் வாங்கியிருந்த 3-லட்சடன் நிலக்கரியையும் கப்பல் மார்க்கமாக வல்லாமல் ரயில் மூலமாகவே கொண்டுவர வேண்டியதாகி விட்டது. அதற்கு வேண்டிய வாகன்களைக் கொடுக்காவிட்டால் தினமானம் வண்டிப் போக்குவரத்துக்கே பாத்தியமில்லாமற் போய்விடும் இந்த நிலைமையில ரயில்வே கம்பெனியார் தங்களுக்கும் மற்ற வியாபாரிகளுக்குமாக வாகன்களைப் பிரித்துக் கொள்ளுவது நியாயம் தான். எனக்குத் தெரிந்த வரையில் வாகன்கள் கிடைக்கவில்லையென்கிற புகார் அவ்வளவு அதிகமாக இல்லை. நான் அரிசி ஏற்றுமதி விஷயமாக சில தினங்கள் முன்பாக தஞ்சாவூர் ஜில்லா முழுவதும் சுற்ற நேர்ந்த பொழுது,

திருவாரூர் நீடாமங்கலம் ஸ்டேஷன் மாஸ்டர்கள் வேண்டிய வாகனங்கள் கிடைக்கின்றனவென்றும் சாக்குத்தான் வரவில்லை யென்றும்சொன்னார்கள்.

ரயில்வே கம்பெனியார் சாத்தியமான வரையில் வியாபாரிகளுக்கு சவுகரியம் செய்து கொடுத்து வருகையில் அவர்கள் மீது அதிக தோஷம் கூறுவதற்கு இடமில்லை. கனம் மூர்ஹெட் தம்மாலியன்ற வரையில் உதவி செய்யத் தயாராக இருக்கிறாரென்றே நினைக்கிறேன். ஆகவே கனம் மெம்பர் தீர்மானத்தை வற்புறுத்த மாட்டாரென்று நம்புகிறேன்.



(மார்ச்சு மாதம் 15ம் தேதி நடந்த கூட்டம்.)



## தஞ்சையில் கவர்ன்மெண்டு உத்தியோகஸ்தர்களுக்கு வீடுகள்

தஞ்சாவூரில் கவர்ன்மெண்டு உத்தியோகஸ்தர்களுக்கு வீடுகளைக் கட்டிக் கொடுப்பதற்கு கீழ் நிலத்தை வாங்குவதற்காக வரவு செலவு திட்டத்தில் 12200 ரூபாய் ஒதுக்கி வைத்திருப்பதை நீக்கிவிட வேண்டுமென்று கனம் ஏ. எஸ். கிருஷ்ணராவ் கொண்டு வந்த தீர்மானத்தை கனம் அகமது தம்பி மரக்காயர் எதிர்த்துப் பேசியதாவது:— இந்த தீர்மானத்தை ஆட்சேபிக்க வேண்டியிருக்கிறதே யென்று எனக்கு வருத்தமாக யிருக்கிறது. சென்னையில் உயர்தர உத்தியோகஸ்தர்களுக்கு வீடுகள் கட்டிக் கொடுக்க வேண்டியதில்லை யென்று முன்னொரு தடவை கனம் மெம்பர் தீர்மானம் கொண்டு வந்தபோது, சென்னையைப் பொறுத்த மட்டில் தான் அவர் ஆட்சேபிக்கிறாரென்று நான் நினைத்து அதை ஆதரித்தேன். வெளியிடங்களிலும் உத்தியோகஸ்தர்களுக்கு வீடுகள் கட்டிக் கொடுக்காமல் செய்துவிட இப்பொழுது அவர் பிரயத்தினப் படுகிறார். நான் வருஷந் தவறாமல் வெளியிடங்களிலுள்ள உத்தியோகஸ்தர்களுக்கு வீடுகள் கட்டிக் கொடுக்க வேண்டுமென்று கூக்குரல் போட்டுவருவது தங்களுக்குத் தெரிந்த விஷயம். வீட்டுக் கஷ்டம் வெளியிடங்களில் அதிகமாக இருப்பது தெரிந்த விஷயமானதினால் வீடுகளைக் கட்ட நிலம் வாங்குவதற்காக 12200ரூபாய் ஒதுக்கிவைத்ததை நான்பாராட்டுகிறேன். கவர்ன்மெண்டு உத்யோகஸ்தர்களுக்குக் குடியிருக்க இடமில்லாமல் செய்து விட கனம் மெம்பர் முயற்சி செய்வது சரியல்ல.

தீர்மானம் தோற்றுப் போய்விட்டது.



# 1917

(பிப்ரவரி மாதம் 7ம் தேதி நடந்த கூட்டம்.)

## ஜில்லா போர்டுகளுக்குத் தேர்ந்தெடுக்கபட்ட வைஸ் பிரசிடெண்டுகள்.

முக்கியமான ஜில்லா போர்டுகளின் உத்தியோகஸ்தர் களல்லாத மெம்பர்களுக்கு வைஸ் பிரசிடெண்டைத் தெரிந் தெடுத்துக் கொள்ளும் சுதந்தரத்தைக் கொடுக்க வேண்டுமென்று கனம் கே. ஆர். வி. கிருஷ்ணராவ் கொண்டுவந்த தீர்மானத்தை ஆதரித்து கனம் அகமது தம்பி மரக்காயர் பேசியதாவது:—நான் நாகப்பட்டணம் தாலுக்கா போர்டு வைஸ் பிரசிடெண்டாக இருக்கிறேன். நான் இருக்கிறேனே தவிர எந்த வேலையையும் செய்வதற்கு அதிகாரம் முழுவதும் பிரசிடெண்டிடமே இருக்கிறது. அவர் பார்த்து ஏதேனும் சில அதிகாரங்களைக் கொடுக்காத வரையில் ஒரு வேலையுமில்லாமல் அழகுக்கு உட்கார்ந்து கொண்டிருக்க வேண்டியிருக்கிறது. அப்படியிருக்க நாங்கள் வேலை செய்யவில்லை யென்று எவ்விதம் சொல்ல முடியும்? அதற்கு பிரசிடெண்டுகள் தான் ஜவாப் தாரிகளே தவிர நாங்கள் ஜவாப் தாரிகளல்ல, பிரசிடெண்டாகப் பார்த்து எதையேனும் செய்யும்படி சொல்லாத வரையில் நாங்கள் ஒன்றும் செய்வதற்கில்லை. ஜில்லா போர்டு பிரசிடெண்டுகள் வைஸ்பிரசிடெண்டுகள் சரியான பெயர்வழிகளென்று நினைத்து அவர்களுக்கு சில அதிகாரங்களைக் கொடுத்தால்தான் அவர்கள்வேலைசெய்யலாம் ஒன்றும் கிடைக்காமல் தாலுக்கா போர்டு வைஸ் பிரசிடெண்டுகளைப்போல அவர்களும் உபயோகமில்லாதவர்களாகத் தானிருப்பார்களென்று எவ்விதம் சொல்லலாம். எங்களை நாங்களே ஆண்டு கொள்ள எவ்வளவு அதிகாரம் பெற முடியுமோ அவைகளை அடைய வேண்டு மென்ற ஆவலுள்ளவர்களாகவே நாங்கள் இருக்கிறோம். ஒவ்வொரு படியிலும் நாங்கள் வாங்கவில்லை யென்று கவர்ன்மெண்டார் சொல்லிக் கொண்டிருந்தால் நாங்கள் முற்போக்கடைவ தெப்படி? நாகப்பட்டணம் தாலுக்கா போர்டு பிரசிடெண்டு உத்தியோகஸ்த ரல்லாத வராக இருந்தாலென்ன. சரியான உத்தியோகஸ் தர்களல்லாத பெயர் வழிகள் யில்லையென்று சொல்லப் படுகிறது. அநேக வக்கீல்களும் ராஜீய விஷயம் தெரிந்த வர்களு மிருக்கிறார்கள். அவர்களிடம் ஏன் அதிகாரங்களைக் கொடுக்கக்கூடாது? ஜில்லா போர்டுக்கு உத்தியோகஸ் தரல்லாத வைஸ் பிரசிடெண்டு ஏற்பட வேண்டுமென்று ஒரு தீர்மானம் ஏற்கனவே தஞ்சாவூர் போர்டில் செய்யப்பட்டது. ஏகோபித்து எல்லா மெம்பர்களும் தீர்மானித்து அனுப்பினார்கள். தீர்மானத்தை தாகல்

செய்து கொண்டு விட்டதாக கவர்ன்மெண்டார் பதில் சொல்லி விட்டார்கள் இதுதான் எங்களுக்குக் கிடைத்த பதில். அநேக தடவை வைஸ்பிரசிடெண்டுகள் நியமன விஷயமாக இந்த சபையில் தீர்மானங்கள் கொண்டுவரப் பட்டுப் பிரயோசனமில்லை. இனி ஜில்லா போர்டுகளில் வைஸ் பிரசிடெண்டுகளைத் தெரிந்தெடுத்துக்கொள்ள ஜனங்களுக்கு சுதந்தரத்தைக் கொடுக்க வேண்டிய காலம் வந்துவிட்டது.

[பிப்ரவரி மாதம் 8ம் தேதி நடந்த கூட்டம்]

## ஸ்திரீ, குழந்தைகள் வைத்திய சாலைகள்.

பார்ஹம்பூர், குண்டூர், கர்நூல், தாட்பத்ரி, கடப்பை, சித்தூர், ஸ்ரீவில்லிபுத்தூர், கீழ்க்கரை, உதகமண்டலம், வேலூர், திருச்சி, தலைச்சேரி, கண்ணனூர் இவைகளில் ஸ்திரீகளுக்கும் குழந்தைகளுக்கும் வைத்திய சாலைகளை ஏற்படுத்த வேண்டுமென்று கனம் யாகுப்ஹாசன் கொண்டுவந்த தீர்மானத்தை இடங்களைக் குறிப்பிடாமல் வைத்திய சாலைகளில்லாத இடங்களில் ஏற்படுத்த வேண்டுமென்று கனம் அகமது தம்பி மரக்காயர் கொண்டுவந்திருந்த ப்ரேரணை சொற்ப மாறுதலுடன் அங்கீகரிக்கப்பட்டது.

[மார்சு மாதம் 14-ம் தேதி நடந்த கூட்டம்]

## போக்குவரத்துக்காக கால்வாய்களின் அபிவிருத்தி.

படகுகள் போய் வருவதற்காக இந்த மாகாணத்திலுள்ள கால்வாய்களையும் முக்கியமாக பக்கிங்காம் கால்வாயையும் நாகப்பட்டணம் வேதாரணியம் கால் வாயையும் சீர்திருத்துவதற்காக 1,25,000 ரூபாய் ஒதுக்கி வைக்க வேண்டுமென்று கனம் கே. சிதம்பரநாத முதலியார் கொண்டு வந்த தீர்மானத்தை கனம் அகமது தம்பி மரக்காயர் ஆதரித்துப் பேசியதாவது:-

கனம் முதலியார் வெகு வியக்தமாக எடுத்துச் சொல்லி யிருப்பதாலும், கில்மன் அனுதாபத்துடன் பதிலளித்திருப்பதாலும் நான் அதிகமாக ஒன்றும் சொல்லவேண்டிய அவசியமில்லை. ஆயினும் நாகப்பட்டணம்—வேதாரணியம் கால்வாயைப்பற்றி மட்டில் சில வார்த்தைகள் சொல்லிக் கொள்ள வேண்டியிருக்கிறது. தஞ்சை ஜில்லாவிலுள்ள வியாபாரிகள் இந்

தக் கால்வாயைத் தான் நம்பிக் கொண்டிருக்கிறார்கள். வேதாரணியம், தோப்புத் துறை, கோடிக்கரை, நாகப்பட்டணம் இவைகளினூடே அநேக சாமான்கள் போக்குவரத்தாகிக் கொண்டிருக்கின்றன. யுத்தம் காரணமாக ரயில்வே வாகன்கள் கிடைக்காமலும் கப்பல்கள் கிடைக்காமலும் தஞ்சை ஜில்லா வியாபாரிகள் கஷ்டப்படுவது தங்களுக்குத் தெரிந்த விஷயம். இந்தக் கஷ்டத்தை நீக்குவதற்காக வேதாரணியம்—நாகப்பட்டணம் கால் வாயை போக்குவரத்துக்கு சவுகரியமாகச் செய்துவிட வேண்டிய தவசியம். திருத்திரைப் பூண்டி வேதாரணியம் ரயில்வேயைத் திறந்து வைக்காமல் நிறுத்தி விட்டதினால் ஜனங்கள் போக்குவரத்துக்கு அதிகக் கஷ்டப்படுவார்கள், வேதாரணியம்—நாகப்பட்டணம் ரஸ்தாவில் பெரும் பாகம் மணல் பாங்காக இருப்பதால், மன்னார்குடி, திருவாரூர், நீடாமங்கலம் பெயர் வழிகள் வண்டிகளில் சாமான்களை ஏற்றிக்கொண்டு போவதுபோல் செய்வதற்கு முடியாமலிருக்கிறது. மன்னார்குடி, நீடாமங்கலம் அரிசி இயந்திர சாலைகளுக்குக் கட்டை வண்டிகளில் நெல் வந்து சேருகிறது. வேதாரணியம், கோடிக்கரை முதலிய இடங்களுக்கு ரஸ்தா வசதி சவுகரியமாக இல்லாததினால் வண்டிகளில் ஏற்றிக்கொண்டு போகமுடியாது. ஆகவே கொஞ்சங்கூட காலதாமத மின்றியில் இந்தக் கால் வாயைத் தோண்ட வேண்டிய தவசியம். நாகப்பட்டணம் முகத்துவாரத்தைத் தோண்டுவதற்காக வாங்கப்பட்ட டெட்ஜர் "பென்ட்லாண்ட்" ஏதோ காரணத்தினால் உபயோக மில்லாமலிருக்கிறது. அதை வாங்கி வீணாக வைத்திராமல் அதைக் கொண்டு இந்தக் கால்வாயைத் தோண்டலாம். கால் வாயைப் பள்ளப்படுத்தினால் முகத்துவாரமும் பள்ளமாகும். போக்குவரத்துக்கும் சவுகரிய மேற்படும். இந்த விஷயத்தை கவர்ன்மெண்டார் அனுகூலமாக கவனித்து உடனே பரிகாரம் செய்து தரவேண்டும்.



## 1918

### (பிப்பிரவரி மாதம் 13-ம் தேதி நடந்த கூட்டம்)



### லோகல் போர்டுகளுக்கு விசேஷ அதிகாரம்.

லோகல் போர்டுகளுக்கு இப்பொழுதிருந்து வரும் அதிகாரங்களை விரிவு படுத்த வேண்டுமென்றும், ஜில்லா நிர்வாகத்தைப் பொறுத்த விஷயங்களிலும் அபிப்பிராயம் தெரிவித்துக் கொள்ள இப்பொழுது திருத்தம் செய்யப்பட விருக்கும் லோகல்போர்டுகள் மசோதாவில் சட்ட பூர்வமாக ஆதாரமேற்

படுத்திவிட வேண்டுமென்றும் ஒரு தீர்மானம் கொண்டு வரப்பட்டது. அதற்கான யோசனைகளைச் சொல்ல இந்த சபை மெம்பர்களான உத்தியோகஸ்தர்களும் உத்தியோகஸ்தர்களல்லாதவர்களு மடங்கிய கமிட்டி யொன்றை ஏற்படுத்த வேண்டுமென்று கனம் டி. ரங்காச்சாரியார் ஒரு திருத்தப்பிரேரணை கொண்டு வந்தார். மேன்மைதங்கிய கவர்னர் திருத்தப்பிரேரணையை நிராகரித்து விட்டார். இந்த சந்தர்ப்பத்தில் கனம் மரக்காயர் எழுந்து பேசியதாவது:—கனம் ரங்காச்சாரியார் கொண்டு வந்த திருத்தப்பிரேரணையை நிராகரித்து விட்டதற்கு நான் வருந்துகிறேன். அவர் சொன்ன யோசனையின் படி ஒரு கமிட்டியை நியமித்தால் இருவகுப்பினருக்கும் சவுகரிய மேற்படுவதுடன் ஜில்லா நிர்வாகமும் செவ்வனுறும். அவ்விதம் செய்துவிட்டால் ஹிந்துக்களுக்கும் முஸ்லீம்களுக்கும் அடிக்கடி ஏற்படும் சச்சரவுகளைப்பற்றி நான் அடிக்கடி பிரஸ்தாபித்த போதெல்லாம் கவர்ன்மெண்டார் மதவிஷயத்தில் தலையிடுவதில்லை யென்றுசொல்லி நிராகரித்து விடுவதைப்போன்ற பல விஷயங்கள் இந்த சபையில் பிரஸ்தாபத்திற்குக் கொண்டு வரப்படவே இடமில்லாமற் போய்விடும். இவைகளைப்பற்றி எல்லாம் விவாதிக்கக் கூடாதென்றால் சச்சரவுகளைத் தீர்த்து வைப்பது தான் எப்படி? அவைகள் அதிகப்பட்டுக் கொண்டு போய் நமக்கு அளவற்ற கஷ்டத்தைத் தான் கொடுத்துக் கொண்டிருக்கும். ஆடுகளை ஹிந்துக்கள் அறுக்கும் விஷயமாக முனிசிபல் இலாகா மெம்பருக்கு நான் ஒரு கடிதம் எழுதியிருந்ததற்கு அதுவும் ஒரு மத விஷயமென்றும் அதில் கவர்ன்மெண்டார் தலையிட முடியாதென்றும் சொல்லி விட்டார். மதசம்பந்தமாக அநேக விஷயங்கள் இந்த சபையில் கொண்டு வரப்பட்டும் பிரயோஜனப்படவில்லை. இந்த விஷயத்தை கவனிக்க உத்தியோகஸ்தர்களும் உத்தியோகஸ்தர்களல்லாதவர்களுமடங்கிய கமிட்டி யொன்றை நியமித்தால் ஜில்லா அதிகாரியையும் சப்கலெக்டர்களையும் கலந்து கொண்டு சமரஸமாகத் தீர்த்து வைக்க ஏற்பாடு செய்து நமக்குத் தொல்லையில்லாமல் செய்து கொள்ளலாம்.

வகுப்பு வாரிப் பிரதிநிதித்துவம் பிரத்தியேக ஓட் தொகுதி இவைகளைப் பற்றி நான் அடிக்கடி பிரஸ்தாபித்து வருவதை கனம்மெம்பர் குறிப்பிட்டார். அவைகளெல்லாம் நான் பிரஸ்தாபத்திற்குக் கொண்டுவர வேண்டிய விஷயங்கள் தான். நான் முகம்மதிய ஓட்டர்களால் தெரிந்தெடுக்கப்பட்ட பிரதிநிதியாவேன். மாகாண சட்டசபைகளிலும் இந்தியா சட்டசபையிலும் என்னுடைய வகுப்பினருக்குப் பிரதிநிதிகளை அனுப்பிவைக்க சுதந்தரமிருக்கிறது. லோகல் போர்டுகளில் ஏன் அவ்விதம் வகுப்புவாரிப் பிரதிநிதித்துவத்தைக் கொடுக்கக்கூடாது? என்னுடைய வகுப்பினருக்காக வாதிக்கவே நான் இங்கிருக்கிறேன். அவர்களுக்காகவே நான் வாதிக்கிறேன். அவ்விதம் செய்ய எனக்கு உரிமையுண்டு அது பிசகென்று கவர்ன்மெண்டார் நினைத்தால் அதற்கு நான் ஜவாப்தாரியன்று. கனம் ரங்காச்சாரியார் கொண்டு

வந்த திருத்தப்பிரேரணை நல்ல பயனை விளைவிக்கக் கூடியதானதினால் அதை அங்கீகரிக்கும்படி கேட்டுக் கொள்ளுகிறேன்.



(ஏப்பிரல் மாதம் 3-ம் தேதி நடந்த கூட்டம்)



## உணவுப்பொருள்களின் விலையேற்றம்

இந்த மாகாணத்தில் உணவுப்பொருள்கள் மற்றும் நித்திய வாழ்விற்கவசியமான பண்டங்கள். இவைகளின் விலை அபாரமாக ஏறியிருப்பதைப் பற்றி உடனே விசாரணை செய்து ஒருவரையறை ஏற்படுத்தவேண்டுமென்று கனம் சிவராவ் கொண்டுவந்த தீர்மானத்தை கனம் மரக்காயர் ஆதரித்துப் பேசியதாவது.—

இது மிகவும் முக்கிய விஷயமானதினால் கவர்ன்மெண்டார் உடனே கவனம் செலுத்த வேண்டும். பம்பாய் கவர்ன்மெண்டார் உசிதமான ஏற்பாட்டைச் செய்திருப்பது போல் இந்த கவர்ன்மெண்டாரும் நடந்து கொள்ளாத பக்ஷத்தில் யுத்தம் தீர்ந்தும் உணவுப் பொருள்களின் விலைவாசி குறையாது. விலை குறைய பல வருஷங்கள் செல்லும், யுத்தத்தைக் காரணமாக வைத்துக் கொண்டு ஜனங்கள் உள் நாட்டுச் சரக்குகளான கறி, காய்கள், மீன், கல், சுண்ணாம்பு இவைகளின் விலையையும் ஏற்றி விட்டார்கள். தளவாடங்களின் விலையேற்றத்தினால் அநேக முக்கிய கட்டிடங்கள் முடியாமல் பாக்கியிலிருக்கின்றன. மலபாரில் உற்பத்தியாகும் மரம் உள்நாட்டுச் சரக்கான போதிலும் அதின் விலையும் உயர்ந்துவிட்டது. அது இங்கிலாந்து முதலிய அன்னிய தேசங்களிலிருந்து வரும் சரக்கா? கப்பல் கட்டணம் முதலியன அதிகப்பட்டிருந்தால் அன்னிய நாட்டுச் சரக்குகளின் விலையேற நியாயமுண்டு. இந்தியச் சரக்குகளின் விலை ஏன் உயர வேண்டும்? ரயில்வே வசதிக்குறைவினால் கொஞ்சம் நமது மாகாணத்தில் சரக்குகள் விலையேற நியாயமுண்டென்பதை நான் ஒப்புக்கொள்ளுகிறேன். இருந்தாலும் அளவுக்கு மிஞ்சி ஜனங்கள் விலையை ஏற்றி கொள்ளை லாபம் சம்பாதிக்கப் பார்க்கிறார்கள். சிலர் ஏராளமாகப் பணத்தை சம்பாதித்து கொழுத்து வருகிறார்கள். ஆனால் பெருவாரியாகவுள்ள ஏழை ஜனங்கள் மிகவும் கஷ்டப்படுகிறார்கள். பம்பாயில் ஏற்படுத்தியிருப்பதுபோல் நாமும் ஒரு கமிட்டியை நியமித்து தகுந்த ஏற்பாட்டைச் செய்யும்படிவிடாத வரையில் பிரயோஜனமில்லை. ஆகவே இத்தீர்மானத்தை நான் பலமாக ஆதரித்து, கவர்ன்மெண்டாரை உடனே நடவடிக்கை எடுத்துக் கொள்ளும்படி கேட்டுக்கொள்ளுகிறேன்.

## (ஏப்பிரல் மாதம் 5-ம் தேதி நடந்த கூட்டம்.)

---

## மகம்மதியர்களின் கல்வி அபிவிருத்தி.

இந்த மாகாணத்தில் முஸ்லீம்களின் கல்வி அறிவைப் பெருக்குதல் பொருட்டு ஒவ்வொரு ஜில்லாவிலும் ஆறு மெம்பர்களுக்கு அதிகமாகயிராத மக்தப் கமிட்டிகளை ஏற்படுத்த வேண்டு மென்றும், சென்னையில் 10 மெம்பர்கள் அடங்கிய கமிட்டியை ஏற்படுத்த வேண்டுமென்றும், முகம்மதியப் பள்ளிக்கூடங்களின் சப் அஸிஸ்டெண்டு இன்ஸ்பெக்டர்களை ஒவ்வொரு கமிட்டியின் காரியதரிசியாகவும் நியமிக்க வேண்டுமென்றும், சென்னை சம்பந்தப்பட்ட வரையில் தென்னிந்திய முஸ்லீம் கோரிக்கையும், வெளியிடங்களில் அங்கங்குள்ள சங்கங்களையும் கலந்து கொண்டு சபையுடன் கூடிய கவர்னர் மெம்பர்களை நியமிக்க வேண்டுமென்றும் கனம் யாகுப் ஹாசன் கொண்டு வந்த தீர்மானத்தை ஆமோதித்து கனம் மரக்காயர் பேசியதாவது,—கனம் மெம்பர் உள்ள விஷயத்தைத் தெளிவாக எடுத்துக் கூறிவிட்ட படியால் இரண்டொரு விஷயங்களைத் தவிர அதிகமாக நான் ஒன்றும் சொல்லிக் கொள்ள வேண்டியதில்லை. என்னுடைய வகுப்பினர் 4,5 வருஷ காலம் முதலில் மார்க்கப்பள்ளிக்கூடங்களுக்குக் கட்டாயமாகச் சென்று படிக்க வேண்டியிருப்பதினாலும் அவர்கள் சாதாரணக் கல்வியைப் பெற்ற பிறகே நன்றாக முத்தின பிறகு வந்து சேரவேண்டியிருப்பதினாலும், தான் என்னுடைய சமுகத்தினர் கல்வி அறிவில் முற்போக்கடைய முடியாமலிருக்கிறது. கொஞ்சகாலம் போன பிறகு வாலிபப்பருவத்திலிருக்கும் இதர வகுப்புப் பிள்ளைகளுடன் சேர்ந்து படிக்க வெட்கப்பட்டுக் கொண்டு அவர்கள் பள்ளிக்கூடங்களை விட்டுப் போய்விடுகிறார்கள். இதனால் தான் கல்வி அறிவு என் வகுப்பினரில் பெருக மார்க்கமில்லாமற் போகிறது. ஆகவே கனம் யாகுப் ஹாசன் கோருகிறபடி கமிட்டியை நியமிப்பதின் மூலமாக வாவது, அல்லது நான் கல்வி இலாகா காரியதரிசிக்குக் கடித மூலமாக யோசனை சொல்லி யிருக்கிற பிரகாரம் முகம்மதிய முனிசிபல் பாடசாலைகளில் மதக்கல்வியை போதிக்கும்படி செய்தாவது இந்தக் கஷ்டத்தை நிவர்த்திக்க வேண்டும். முந்தின கூட்டத்தில் நான் இது சம்பந்தமாக அனுப்பிய தீர்மானத்தை ஏற்றுக் கொள்ளாமல் நிராகரித்து விட்டீர்கள். இந்த மாதிரியான ஏற்பாடுகள் ஏதேனும் செய்யாவிடில் என்னுடைய வகுப்பினர் கல்வி விஷயத்தில் முன்னேற்ற மடைய முடியாது. என்னுடைய வகுப்பினரின் கல்வி அபிவிருத்தியில் தங்களுடைய கவர்ன்மெண்டுக்கு சிரத்தை இருந்த போதிலும் இந்த விஷயத்தைத் தொங்க வைத்துக் கொண்டிருக்கிற வரையில் பிரயோஜன முண்டாகாது. ஆகவே இந்த மதக் கமிட்டிகளை நியமிக்க வேண்டிய தவசியமானதினால் கவர்ன்மெண்டார் இத்தீர்

மானத்தை ஒப்புக்கொள்ளும்படி கேட்டுக் கொள்ளுகிறேன். இதனால் கவர்ன்மெண்டுக்கு அதிகச் செலவு ஏற்பட்டு விடாது. சொற்ப கிராண்டு கொடுப்பதைத் தவிர புதிதாக ஒரு நியமனமும் செய்ய வேண்டிய அவசிய மில்லை. ஆகவே கவர்ன்மெண்டார் தீர்மானத்தை ஒப்புக்கொள்ளுவார்க ளென்று நம்புகிறேன்.

---

## (ஆகஸ்டு மாதம் 14ம் தேதி நடந்த கூட்டம்)

---

### தஞ்சை ஜில்லாவில் பஞ்சமர்களுக்கு மனைக்கட்டுகள்.

தஞ்சை ஜில்லாவில் பஞ்சமர்களுக்கு மனைக்கட்டுகள் வாங்கிக் கொடு க்கும் விஷயமாக 1917-ம் வருஷம் நவம்பர் மாதம் 10-ம் தேதியுள்ள 4559ம் நம்பர் கவர்ன்மெண்டு உத்திரவின்படி மேல் நடவடிக்கை எடுத்துக்கொண்டு இன்னும் பணத்தைச் செலவிடுமுன், இந்தப் பிரச்னையைப்பற்றி தீர விசா ரித்து தகுதியான சிபார்சுகளைச் செய்ய உத்தியோகஸ்தர்களும் உத்தியோக ஸ்தர்களல்லாதவர்களு மடங்கிய கமிட்டியொன்றை நியமிக்க வேண்டுமென் றும், ரிபோர்ட்டு கிடைக்கும் வரையில் மேல் வேலைகளை நிறுத்தி வைக்க வேண்டு மென்றும் கனம் ராவ்பகதூர் டி. ரங்காச்சாரியார் கொண்டு வந்த தீர்மானத்தைப்பற்றி கனம் அகமது தம்பி மரக்காயர் பேசியதாவது:-- நான் மிராசுதார்களின் பிரதிநிதியாக இல்லாத போதிலும் அவர்களிட மிருந்து நான் கேள்விப் பட்டிருப்பதிலிருந்து இவ்விஷயத்தில் அவர்களுக் குக் குறை இருப்பதாகவே தோன்றுகிறது. இது சம்பந்தமான வேலை களைச் செய்து வரும் டிப்டி கலெக்டரையும் நான் கண்டு அவர் செய்து வரும் காரியங்களைக் கேட்டுக் கொண்டிருக்கிறேன். நான் அவருடன்கூட பாப்பா கோவில் என்னும் கிராமத்திற்குச் சென்று பார்வை யிட்டபோது அவர் தமது கட்சியையும் பண்ணையாட்களுடைய கட்சியையும் எனக்கு எடுத்துக் கூறினார். அது எவ்விதமாயினும் கவர்ன்மெண்டார் செய்யும் காரியத்தை நான் ஆட்சேபிக்க வேண்டுமென்கிற எண்ணத்துடன் பேச எழும்பவில்லை. இந்தப் பிரேரணையைக் கொண்டு வந்த வரும் இதன் தத்துவத்தை ஆட்சேபிக்கவில்லை. மிராசுதார்களுக்குச் சொந்தமான நாத்தங் கால்களையும் நஞ்சை நிலங்களையும் தான் இதற்காக எடுத்துக் கொண்டுவிடக் கூடாதென்று அவர் சொல்லுகிறார். இவைகளைத் தவிர வேறு நிலங்களை கவர்ன்மெண்டார் வாங்கிக் கொடுப்பதில் ஆட்சேபணையில்லை. மிராசுதார் கள் தங்களுடைய க்ஷேமத்தை உத்தேசித்தே பண்ணையாட்களை நல்ல ஸ்திதியில் வைத்திருக்க வேண்டியவர்களென்று கவர்ன்மெண்டுக்குத் தெரிந் தது தான். அவர்கள் பண்ணையாட்களைக் கொடுமையாக நடத்துவார்

களென்று நினைக்க எவ்விதக் காரணங்களுமில்லை. கவர்ன்மெண்டார் செய்யும் காரியம் முழுவதையும் இத்தீர்மானம் ஆட்சேபிக்கவில்லை. போதிய விசாரணையை நடத்தாததினால் உத்தியோகஸ்தர்களும் உத்தியோகஸ்தர் அல்லாதவர்களுமடங்கிய கமிட்டியொன்றை நியமித்து அவர்களுடைய சிபார்சுகளின் மேல் முடிவான உத்திரவு செய்ய வேண்டுமென்று தான் தீர்மானத்தில் கண்டிருக்கிறது. அவ்விதம் செய்வதில் எவ்வித ஆட்சேபனைக்கு மிடமிருப்பதாக எனக்குத் தோன்றவில்லை. இப்பொழுது இந்த வேலையைச் செய்து வரும் டிப்டி கலெக்டரையும் கமிட்டியில் ஒரு மெம்பராக நியமித்து விடலாம்.

---

## (நவம்பர் மாதம் 19-ம் தேதி நடந்த கூட்டம்)

---

### இன்புளுயன்ஸா ஜுரம்

இந்த நோயின் காரணங்களைக் கண்டறிய நிபுணர்களடங்கிய கமிட்டியொன்றை நியமிக்க வேண்டுமென்று கனம் பி. சிவராவ் கொண்டு வந்த தீர்மானத்தின் மேல் கனம் அகமது தம்பி மரக்காயர் பேசியதாவது:-- கனம் சர்ஜன் ஜெனரல் அளித்த பதிலை சிரத்தையுடன் கவனித்தேன். சில விஷயங்களைப்பற்றி அவர் சொல்லுவதை நான் ஒப்புக் கொள்ளுகிறேன். பெரிய பட்டணங்களில் அதிகமாக ஆஸ்பத்திரிகைகளை ஏற்படுத்துவது நல்ல யோசனைதான். இதற்கு வேண்டிய மருந்துகளையும் ஸ்பெஷல் உத்தியோகஸ்தர்களை நியமிக்கும் செலவையும் கவர்ன்மெண்டார் கொடுத்து விடுவதாக முனிசிபாலிட்டிகளும் லோகல்போர்ட்டுகளுக்கும் ஜில்லாபோர்ட்களுக்கும் அறிவித்து விடவேண்டும். இதைச் செய்தால் கொஞ்சம் உபயோகமாயிருக்கும்.

---(::)---

## (நவம்பர் மாதம் 20-ம் தேதி நடந்த கூட்டம்)

---

### யுத்தநிவர்த்தம்.

யுத்தத்தில் வெற்றியடைந்து விட்டதற்கு நேச தேசத்தினருக்கு சந்தோஷத்தைத் தெரிவித்துக் கொள்வதாகக் கொண்டு வரப்பட்டத்தீர்மானத்தைப் பற்றி கனம் அகமது தம்பி மரக்காயர் பேசியதாவது :—நமது பிரிட்டிஷ் கவர்ன் மெண்டாரும் நேசதேசத்தினரும் யுத்தத்தில் வெற்றியடைந்து விட்டதற்கு என்னுடைய சமுகத்தினரின் சார்பாக அவர்களு

டைய பிரதிநிதி ஹோதாவில் என்னுடைய சந்தோஷத்தைத் தெரிவித்துக்
கொள்ளுகிறேன். முகம்மதியர்கள் யுத்த காலத்தில் மனிதர்களாலும் பணத்
தாலும் எவ்வளவு உதவி செய்திருக்கிறார்க ளென்பதை நான் கூறத்தேவை
யில்லை. அவர்கள் எப்பொழுதும்போல் ராஜவிசுவாச முள்ளவர்களாகவே இரு
ந்து வருவார்கள். பிரிட்டிஷ் ஏகாதிபத்தியம நீடூழிகாலம் க்ஷேமமாய் நிலைவி
விருக்க வேண்டுமென்று யான் பிரார்த்திக்கிறேன்

## பண்டங்களின் விலையேற்றம்.

உணவுப் பொருள்கள் மற்றும் ஜீவனத்திற்குரிய பண்டங்கள் இவை
களின் அபார விலையேற்றத்தைத்தடுக்கத் தகுந்த ஏற்பாட்டைச் செய்ய
வேண்டு மென்றும் மிகவும் கேவலமான இடங்களில் கஷ்டநிவாரண வேலை
களை ஆரம்பிக்க வேண்டு மென்றும் கனம் சிவராவ் கொண்டுவந்த தீர்மானத்
தைப்பற்றி கனம் அகமது தம்பி மரக்காயர் பேசியதாவது—

இத்தீர்மானத்தில் எனக்குப்பரிபூரணமான அனுதாபமிருக்கிறது.
கவர்ன் மெண்டார் இப்பொழுதிருந்துவரும் கஷ்டங்களை நிவர்த்திக்கவேண
டியதவசியம் இதை நான் பஞ்சமென்று சொல்லாவிடினும் அடுத்த வரு
ஷத்தில் பெரும் பஞ்சம் ஏற்படு மென்றே நினைக்கிறேன்.

இந்தவருஷம் மகசூல் முழு மோசமாயிருப்பதால் கால்திட்டம் கூடத்
தேறாது. ஜில்லாக்களில் விலைவாசிகளைக் கட்டுப்படுத்துவதினால் பிரயோஜன
மேற்படுமா வென்று எனக்குத் தெரியவில்லை. மிராசுதார்களும் வியாபாரி
களும்பணம் சம்பாதித்து விடவில்லை. மில்காரர்கள்தான் கொள்ளை லாபம் சம்
பாதிக்கிறார்கள். அவர்கள் ஜாடா நெல்லையும் வாங்கிக் கட்டுக்கடை செய்து
கொண்டு விடுகிறார்கள். ஒரு மாதத்திற்கு முன் உள்ளூர் சம்பா அரிசி
மூட்டை 15 ரூபாயாக இருந்தது. இப்பொழுது 19 ரூபாய் விற்கிறது.
நிர்பந்தத்தை ஏற்படுத்துவதாயின் மில்காரர்கள் மீதுதான் முதலில் ஏற்படு
த்த வேண்டும். ஸ்டி ரெயிட்ஸ், மலாய் நாடுகள் இவைகளுக்கு அரிசி ஏற்று
மதி செய்யும் வியாபாரியாக நான் இருந்தபோதிலும், என்னுடைய சொந்த
லாபத்தை கவனிக்காமல் பொது நன்மையை உத்தேசித்து, போதியவளவு
தானியங்கள் கிடைக்கிற வரையில் ஸிலோன், ஸ்டிரெயிட்ஸ் இவைகளுக்கு
ஏற்றுமதி யாவதை நிறுத்திவைக்க வேண்டுமென்று அவசரக் கமிட்டி மெம்
பர் ஹோதாவில் கலெக்டர் துவாராவாக சிவில் சப்ளைஸ் டைரக்டருக்குத்
தெரிவித்துக் கொண்டேன். இது தகுந்த பரிகார மானதினால் கவர்ன்மெண்
டார் இதை அனுஷ்டிக்க வேண்டும். இவ்வித உத்தரவு செய்யப் பட்டு
விட்டதும் எனக்குத் தெரியும். கொஞ்சகாலத்திற்கு இந்த உத்திரவை
அமுலில் வைத்திருக்க வேண்டும். நமது மாகாணத்திற் குள்ளேயே ஒரு
ஜில்லாவிலிருந்து மற்றொரு ஜில்லாவுக்கு அனுப்பக் கூடாதென்று தடைப்
படுத்தக் கூடாது. அநேக ஜில்லாக்கள் பஞ்சத்திலடிபட்டிருக்கின்றன.

மற்ற ஜில்லாக்களிலிருந்தும், அவசியமானல் இதர மாகாணங்களிலிருந்தும் அவைகளுக்கு தானியங்களை அனுப்பவேண்டும். விலோன், ஸ்டி ரெயிட்ஸ் ஏற்றுமதியைத் தடுத்தால் ஜனங்கள் கூச்சல் போடுவார்களென்பது எனக்குத் தெரியும், அவர்களை பர்மாவுக்குப் போகும்படி சொல்லலாம். அங்கு வேண்டிய தானியம் கிடைக்கும். தனக்கு மிஞ்சித்தான் தான தருமம்'' என்று விலோன் முதலிய குடியேறிய நாட்டாருக்கு நாம் சொல்லிவிடலாம், இப்பொழுது யுத்தம் தீர்ந்து விட்டதினுல் அநேகமாக எல்லாக் கப்பலகளும் விடுதலை பெற்றுவிடும். பர்மாவிலிருந்த வியாபாரிகள் ஏராளமாக அரிசியைத் தருவித்தால் விலையும் காலக்கிரமத்தில் குறைந்துவிடும்.

பர்மா மில்காரர்கள் அநியாய சூதடி செய்து வருகிறுர்கள். ஹிந்துஸ்தானியில் "சத்தார்'' என்று ஒரு தொழிலுண்டு. மாத மாதம் அவர்கள் அரிசியை ஒப்பந்தம் செய்துகொண்டு, அநியாய லாபம் சம்பாதிக்கிறுர்கள்.

இவர்கள் தான் மார்க்கெட்டைக் கெடுத்து விலையை அதிகமாகத் தூக்கி விடுகிறுர்கள். இந்தியாவில் விலையிருக்கும் நோட்டத்தைப் பார்த்துக் கொண்டு அங்கும் விலையைத் தூக்கிவிடுகிறுர்கள். அவர்கள் ஏற்பாடாகத்தரகர்களை வைத்துக்கொண்டு அவர்களுக்கு மொத்தமாகப்பணம் கொடுத்து விலையை ஏற்றிவிடச் செய்கிறுர்கள். ரங்கூனில் இந்தியா கவர்ன் மெண்டார் ஒரு கண்டிரோலரை ஏற்படுத்தி விட்டால் கனம் கார்டியூ சொன்ன கஷ்டங்களெல்லாம் தீர்ந்து விடும். ரங்கூனிலிருந்து வியாபாரிகள் அரிசியைத் தருவித்து உள் நாட்டு வியாபாரிகளுடன் போட்டிபோடுகையில் உள்நாட்டு வியாபாரிகள் வேண்டுமென்று விலையை ஏற்றுகிறுர்களென்று தெரிந்தால் அதை நிறுத்திவிடலாம். கப்பல்கள் கிடைத்த பிறகு இந்த ஏற்பாட்டையும் செய்து ரங்கூனிலும் விலையைக்கட்டு படுத்தாவிட்டால் சென்னைமாகாணத்தில் பஞ்சமுண்டாகாமல் பார்த்துக்கொள்ளலாம்.

ரங்கூனில் விலை தூக்கலாக இருப்பதால் அங்கிருந்து சென்னை நாகப்பட்டணம் முதலிய இடங்களுக்கு அதிகமாக அரிசியைத்தருவிக்க முடியவில்லை. கனம் நாப் யோசனை சொன்ன பிரகாரம் ரங்கூனில் நெல் விலையை அறிவிக்கும்படி என்னுடைய கம்பெனிக்குத் தந்தி கொடுத்தேன். எனக்கு பதில் கிடைத்திருப்பதிலிருந்து கலம் 1-க்கு கிட்டத்தட்ட ரூபாய் நான்காகிறது. இது ரொம்ப ஜாஸ்தி. இந்த விலைக்கு நாம் தருவித்து ஏழைகளுக்கு நாம் கொடுக்க முடியுமென்று நான் நினைக்கவில்லை, கவர்ன் மெண்டாருடைய அனுமதியின் பேரில் ஒரு கப்பல் பெற்று 1000, 1500டன் அரிசியைத் தருவித்து சொற்ப லாபத்திற்கு விற்கலாமென்று யோசித்தேன். நான் வியாபாரியானதினுல் நஷ்டத்திற்கு விற்க வேண்டுமென்று யாரும் எதிர்ப்பார்க்க மாட்டார்கள். அழிவுசேராததற்காக சொற்பலாபம்வைத்து விற்கலாமென்று யோசித்தேன். வியாபாரத்தில் பரோபகாரத்தையும் காட்டலாம். இப்பொழுதிருக்கும் நிலைமையை கவனிக்குமிடத்து அவ்விதம் செய்வதற்கு சாத்திய

மில்லாமலிருக்கிறது. அதன் பேரில் விலை 115க்கு வந்தவுடன் தந்தி கொடுக்கும்படி என்னுடைய கம்பெனிக்கு எழுதியிருக்கிறேன். அந்த விலைக்கு வந்தால் நான் ஏராளமாக சரக்கைத் தருவித்து சொற்ப லாபத்திற்கு விற்றதன் மூலமாக கவர்ன் மெண்டுக்கும் பொது ஜனங்களுக்கும் உபகாரம் செய்யலாம். அக்யாபில் விலை சரஸமாயிருக்கிறதென்று கேள்விப்பட்டு தந்தி கொடுத்திருக்கிறேன். அங்கு விலை சரஸமாயிருந்தால் அதிகமாகச் சரக்கைத் தருவிக்கிறேன். தவிரவும் மகசூல் காலம் தீர்ந்து போய்விட்டது. ரங்கூன் விலையேற்றத்திற்கு மற்றொரு காரணம்; டிசம்பர் கடைசியிலாவது ஜனவரி துவக்கத்திலாவது புது நெல்லு கிளம்பிவிடும். அப்பொழுது விலை குறையுமாதலால் நாம் ஏராளமாகத் தருவித்து கொள்ளலாம். சம்பாதிக்க எண்ணி ஏழைகளைக் கஷ்டப்படுத்து கிறவர்களுக்கு வழிபண்ணலாம். கப்பல் கூலியை குறைக்க கனம் கார்ட்டியூ சொன்னபடி இந்தியா கவர்ன்மெண்டார் பம்பாய் கண்டரோலிடம் ஏற்பாடு செய்தால் கொஞ்சம் சவுகரியமுண்டாகும். அதனுடன் ரங்கூனிலும் கண்டிரோலரை நியமிக்க வேண்டும். ஸிலோன் ஸ்டிரெயிட்ஸ் இவைகளுக்கு ஏற்றுமதி யாகாதபடி கொஞ்சகாலத்திற்கு இப்பொழுது செய்யப்பட்டிருக்கும் உத்திரவை அமுலில் வைத்திருக்க வேண்டும் இல்லாவிடில் துறைமுகத்திலுள்ள வியாபாரிகள் விலையை அபாரமாக ஏற்றி இப்பொழுது 19ரூபாய்விற்கிற உள்ளூர் வியாபாரிகளுடன் போட்டிக்கு வந்துவிடுவார்கள் ஆகவே விலை தணியும் காலம் வரையில் ஸிலோன் ஸ்டெரியிட்ஸ் இவைகளுக்கு ஏற்றுமதி செய்வதிலுள்ள தடையை வைத்திருக்க வேண்டுமென்று கேட்டுக் கொள்ளுகிறேன்.

---

## 1919

### [பிப்பிரவரி மாதம் 7-ம் தேதி நடந்த கூட்டம்.]

---

ஸிவில் சப்ளைஸ் டைரக்டெர் ஆபிஸ் செலவுகளுக்காக வரவு செலவு திட்டத்தில் ஒதுக்கிவைத்திருக்கும் 78,600 ரூபாயை எடுத்துவிட வேண்டுமென்று கனம் யாகுப் ஹாசன் சாகிப் கொண்டு வந்த தீர்மானத்தின் மேல் கனம் அகமது தம்பி மரக்காயர் பேசியதாவது:—இன்னும் கொஞ்ச காலத்திற்கு ஹத்து இருந்துவர வேண்டுமென்றே நான் அபிப்பிராயப் படுகிறேன். உண்மையான வியாபாரிகளுக்கு வாகன்கள் கொடுப்பதில் சில ஊழல்கள் இருந்து வருவது எனக்குத் தெரியும். ஸிவில் சப்ளைஸ் டைரக்டர் ஏற்படாமலும், ஸிலோன், ஸ்டிரெயிட்ஸ் முதலிய நாடுகளுக்கு ஏற்றுமதியாவதைத் தடுக்காமலு மிருந்திருந்தால் அநேக லூட்டிகள், நடந்து, உணவுப்பொருள்களின் விலை யேறி ஏழைகளும் விவசாயிகளும் அதிகக் கஷ்டப்படவேண்டி

யிருந்திருக்கும். கண்டிரோலினால் விலையும் ஏறவில்லை; வர்த்தகர்கள் அதிக லாபம் வைக்கவும் முடியவில்லை. கப்பல் சார்ஜை 42 ரூபாயிலிருந்து 28 ரூபாயாக அவர் குறைத்து, உள்ளூர் நெல்லின் விலை ஏறுமலும் பார்த்துக் கொண்டிருக்கிறார். ஆகவே ஜனங்களுடைய க்ஷேமத்தை மதித்து ஸிவில் சப்ளைஸ் டைரக்டர் இருந்து வர வேண்டுமென்றே நினைக்கிறேன். மிஸ்டர் உட்டைப் போன்ற உயர்தர உத்தியோகஸ்தர்களை நியமிக்க முடியாமற்போனாலும், கொஞ்ச சம்பள உத்தியோகஸ்தரையாவது வைத்து கொஞ்சகாலத்திற்கு ஹத்தை வைத்திருக்க வேண்டிய தவசியம். அப்பொழுது தான் வர்த்தகர்கள் மோசடி பண்ணுமலிருக்க முடியும். நானும் ஒரு வியாபாரி தான்; எனக்கு 3, 4 ரூபாய் மூட்டைக்கு லாபம் வேண்டுமென்றுஆசைப்படவில்லை. எனக்கு கண்டிரோலில் மூட்டைக்கு 8 அணு லாபம் தான் கிடைக்கிறது. இந்திய வியாபாரிகள், ஐரோப்பிய வியாபாரிகள் இருவருக்கும் ஹர்து இருக்க வேண்டும். இல்லாவிடில் ஜனங்கள் கஷ்டப்படுவார்கள்.

நாகப்பட்டணத்திலுள்ள ரயில்வேத் தொழிலாளிகளில் சுமார் 4000, 5000 பேர்கள் என்னைப் போல் அவசரக்கமிட்டி மெம்பரான மிஸ்டர் வி. பி. பக்கிரிசாமி பிள்ளையின் கீழ் இங்கு நெல்லைத் தருவிக்க வேண்டுமென்று மீட்டிங்கில் வற்புறுத்திக் கொண்டு வருகிறார்கள். பர்மாவிலிருந்து நெல்லைத் தருவிக்காவிட்டால் உள்ளூர் நெல்லின் விலை குறையாது. ஸிவில் சப்ளைஸ் டைரக்டர் ஏற்படித்தியிருக்கிற ஷரத்துக்கும் நிபந்தனைகளும் கடுமையானவைகளாக இல்லாததால் அவர்கள் விலையை யேறறிக்கொண்டு தான் போவார்கள். விதிகளுக்கு விரோதமாக அதிக லாபம் வைத்து யாரேனும் விற்றால் அவர்களுக்கு லைசென்ஸ் கொடுக்கப்பட மாட்டாதென்றும் முன் பாத்திய சர்ட்டிபிகேட்டு ரத்து செய்யப்பட்டு விடுமென்றும் தான் சொல்லப்பட்டிருக்கிறது. அதில்லாமலும் இவர்கள் காரியத்தைப் பார்க்கலாம். ஆகவே மோசடிக்கு இடமிருக்கிறது. பர்மாவில் நெல் சரியாகப் புழுக்கப்படாததினால்; இங்கேயே நெல்லைத் தருவித்துப் புழுக்கிக் கொள்ள ஜனங்கள் இஷ்டப்படுவதால், பர்மாவிலிருந்து நெல்லாகவேதருவிக்கவேண்டுமென்று யோசனை சொல்லிக்கொள்ள விரும்புகிறேன். பர்மாவிலிருந்து நெல்லைத் தருவிக்க ஏற்பாடு செய்ய வேண்டும். இந்த வருஷமாவது கண்டிரோல் இருந்து வர வேண்டியது தான்.

## ரஸ்தாக்களின் அபிவிருத்திக்காகப் பொருளுதவி.

தஞ்சாவூர் ஜில்லாவிலுள்ள ரஸ்தாக்களை அபிவிருத்தி செய்வதற்காக ஜில்லா போர்டுகளுக்கு கிராண்டு கொடுப்பதற்காக ஒதுக்கி வைத்திருக்கும் 13- லட்சம் ரூபாயிலிருந்து ஒன்றரை லட்சம் ரூபாய் தஞ்சாவூர் ஜில்லா போர்டுக்குக் கொடுக்க வேண்டுமென்று கனம் அகமது தம்பி மரக்காயர் பிரேரணை செய்தார். கடைசியாக தீர்மானம் தோற்றுப் போய் விட்

டது. (இதை மூன்ருவது பிரிவில் சேர்க்க விட்டுப்போய் விட்டதினுல் இந்த இடத்தில் சேர்த்திருக்கிறது.)

(மார்ச்சு மாதம் 11-ம் தேதி நடந்த கூட்டம்)

## ஒரு ஜில்லாவிலிருந்த மற்ருெரு ஜில்லாவுக்கு உணவுப்பொருள் போக்கு வரத்து.

இந்த மாகாணத்திற்குள் ஒரு ஜில்லாவிலிருந்து மற்ருெரு ஜில்லாவிற்கு உணவுப்பொருள்களைப் போக்கு வரத்து செய்வதிலிருந்து வரும் நிர்ப்பந்தங்களை நீக்கிவிடும்படி ஸிவில் சப்ளைஸ் டைரக்டருக்கு அறிவிக்க வேண்டுமென்று கனம் வெங்கடபதி ராஜு° கொண்டுவந்த தீர்மானத்தைப் பற்றி கனம் அகமது தம்பி மரக்காயர் பேசியதாவது:---இது விஷயமாக சபையோருக்கு சில தகவல்களைத் தெரிவித்துக் கொள்ள விரும்புகிறேன். சரியான தோரணையில் இத்தீர்மானத்தைக் கொண்டு வந்திருந்தால் நான் இதைக் கட்டாயமாக ஆதரிப்பேன். எல்லாவற்றையும் விவாதத்தில் போட்டுக் குழப்பப்பட்டிருக்கிறது. பர்மாவிலிருந்து அரிசி தருவிப்பவர்களுக்கு இருந்து வரும் நிர்ப்பந்தங்களையும் லைசென்ஸ்கள் கொடுப்பதையும் அடியுடன் நீக்கிவிடவேண்டு மென்கிற யோசனையை நான் ஒருக்காலும் ஒப்புக் கொள்ளமுடியாது. கனம் ஸர் அலெக்ஸாண்டர் கார்டியூ கூறிய பிரகாரம் பர்மாவில் அரிசி விலையைக் கட்டுப்படுத்த கவர்ன்மெண்டார் உதவி செய்யாமலிருந்திருந்தால் கிரமமான விலைக்கு பர்மா அரிசியை நாம் தருவித்திருக்கவே முடியாது. நெய்யின் விலைகூட கட்டுப்படுத்தப்பட்டிருக்கிறது. ஒருவரும் அதிக விலை கொடுத்தும் வாங்கமாட்டார்கள்; மில்காரர்களும் அதிக விலைக்கு விற்கமாட்டார்கள். சென்ற அக்டோபர் மாதத்தில் கனம் ஸர் கார்டியூ கூறிய பிரகாரம் விலை 435 ரூபாயாக இருந்தது. இப்பொழுது விலை 335 ஆக இருக்கிறது. இந்த நிர்ப்பந்தமில்லாமலிருந்தால் இந்தியாவில் விளைவில்லாமற் போனதைப் பார்த்துக்கொண்டு விலையை 500 ரூபாய்க்குக் கூட உயர்த்தியிருப்பார்கள். இங்கு விலை இரண்டு அல்லது மூன்று மடங்கு உயர்ந்து பஞ்சவிலைக்கு அரிசி விற்கும், ஆத்திருப்பதினுல் முதலில் நமக்கு இந்த முக்கியமான சவுகரியமிருக்கிறது.

லைசென்ஸ்கள் கொடுக்கும் விஷயத்தில் ஸிவில் சப்ளைஸ் டைரக்டர் செய்யும் காரியம் அநீதமென்ருவது வேருகவாவது சொல்லித் தூற்றுவதில் பிரயோஜனமில்லை. லைசென்ஸ்களை அவர்கள் ஏற்பாடாகக் கொடுக்கிருர்கள்.

தேர்ந்த ஐரோப்பிய உத்தியோகஸ்தர்களும் டிப்டி கலெக்டர்கள் கிரேடி யுள்ள இரண்டு இந்திய உத்தியோகஸ்தர்களும் இந்த வேலையை கவனித்து வருகிறார்கள். ஒருவர் மிஸ்டர் கே. சுந்தராச்சார்லு; மற்றவர் மிஸ்டர் ஹார்ட்டிஸ் அவர்களுக்கு ஸ்தலத்தனுபோகம் விசேஷமாக இருப்பதினால் விலைவாசியைப்பற்றியும் வர்த்தகர்களுடைய யோக்கியதையைப் பற்றியும் திரவிசாரித்து நம்பிக்கையுள்ள பெயர் வழிகளாகப் பார்த்து லைசென்ஸ் கொடுக்கிறார்கள். ஏற்கனவே யார் தொழில் செய்து வந்திருக்கிறார்களென்று பார்த்து தகுந்த பெயர் வழிகளாகப் பார்த்து லைசென்ஸ்கள் கொடுக்கிறார்களே தவிர புதிதாக முளைத்திருக்கும் வியாபாரிகளுக்கு அவர்கள் லைசென்ஸ்கள் கொடுப்பதில்லை. இப்பொழுது எல்லோரும் கிளம்பி தாங்களும் வியாபாரிகள் தானென்று லைசென்ஸ் கேட்பது எனக்குத் தெரியும். நான் அவசரக்கமிட்டி மெம்பராக இருக்கிறேனென்று ஆயிரக் கணக்கான பெயர் வழிகள் எனக்கு விண்ணப்பம் செய்து கொள்ளுகிறார்கள்; நூற்றுக்கணக்கான பெயர் வழிகள் நேரில் வந்து ஷரா எழுதித்தரும்படி பலவந்தப்படுத்துகிறார்கள். கமிட்டி மெம்பர்களான இரண்டொரு வக்கீல்கள் இதை ஒரு தொழிலாக வைத்துக் கொண்டு செய்கிறார்கள். லைசென்ஸ் கேட்டுக் கிடைக்காமற் போனால் ஸிவில் சப்ளைஸ் டைரக்டர் மீதும் மற்ற வியாபாரிகள் மீதும் சாறுபாருகப் பத்திரிகைகளுக்கு எழுதி விடுகிறார்கள். இது லைசென்ஸ் கிடைக்காத பெயர் வழிகள் பொறாமை பேலிட்டினால் செய்யுங் காரியம். சுய லாபத்தை உத்தேசித்துப் பிறர்மீது தூஷணை சொல்ல அவர்கள் கிளம்பி விடுகிறார்கள். ஸிவில் சப்ளைஸ் டைரக்டர் செய்து வரும் காரியம் வெகு ஒழுங்காக இருக்கிறது அடியிற்கண்ட நிபந்தனைகளின் பேரில் நான் லைசென்ஸ்கள் கொடுக்கப்படுகின்றன.

(1) பர்மாவில் 1919-ம் வருஷத்திய மகசூலை இந்தியா கவர்ன்மெண்டார் திட்டப்படுத்தியிருக்கும் விலைக்கு அதிகமாகக் கொடுத்துவாங்கக்கூடாது.

(2) 2 மணங்கு அரிசி மூட்டை ஒன்றுக்கு 8 அணுவும் நெல்லு மூட்டைக்கு 4 அணுவும் தான் லாபம் வைத்து விற்கவேண்டும்; என்ன விலைக்குத்தான் அவர்கள் அரிசியையும் குறுவையையும் விற்கலாமென்று அட்டவணையில் கண்டிருக்கிறது.

(3) தன்னுடைய துறை முகத்திலுள்ள சில்லரை வியாபாரிகளுக்கும் வெளியிலுள்ள வியாபாரிகளுக்கும் 8 அணு லாபத்திற்குத் தான் கொடுக்கலாம். ஒரு மொத்த வியாபாரி இன்னொரு மொத்த வியாபாரிக்கு சரக்கை விற்று, விட்டதாகப் பதிவு செய்து கொண்டு அவருடைய லாபத்திற்காகவும் 8 அணு சேர்த்துக் கொண்டு விற்கக்கூடாது.

சரக்கு 6, 7 கைம்மாறி விலை தூக்கிப் போய்விடுகிறதென்று சில மெம்பர்கள் சொன்னார்கள். அந்த மாதிரி நடப்பதாக எனக்குத் தெரியவில்லை. அவசரக் கமிட்டிகள் இருந்து வருமிடங்களில் தருந்தபடி கண்காணிப்பு நடந்து வருகிறது. ரிவினியூ இலாகாவிலும் தாசில்தாரையும் டிப்டி தாசில்தாரையும் விலை வாசியை விசாரிக்கும்படி ஏற்பாடு செய்திருக்கிறார்கள். வாரந்தோறும் வரத்து சரக்கு, விற்பனை இவைகளுக்குக் கண்டு அனுப்பும்படி கேட்டிருக்கிறார்கள். என்னுடைய ஊர் டிவிஷனல் ஆபீசருக்கு நான் கணக்குக் கொடுத்துக் கொண்டு வருகிறேன். லைசென்ஸ்காரர்களை இவ்விதமாக கண்காணித்து வருகையில் எவ்வித அநீதியும் நடப்பதாகத் தெரியவில்லை. அப்படி ஏதாவது நடந்தாலும் தகுந்தபடி கண்காணித்துக் கொண்டு வரும் பட்சத்தில் அவைகள் நின்று போய்விடும்.

உத்தியோகஸ்தர்களும் உத்தியோகஸ்தர்களுமல்லாத கமிட்டியை நியமிப்பதில் கனம் கார்டியூ சொன்ன பிரகாரம் நன்மை உண்டாகலாம். ஆனால் எங்கும் அவசரக் கட்டியிருப்பதால அவர்கள் பார்த்து தகுந்த பரிகாரம் செய்துவிடலாம்.

கனம் கார்டியூ கூறிய அபிப்பிராயத்தை கனம் ரங்காச்சாரியார் ஆட்சேபித்துப் பேசினார். ஒன்று அல்லது இரண்டு அல்லது அரைடஜன் தகுந்த கம்பெனிகளுக்கு லைசென்ஸ் கொடுத்து கண்டிரோலர் குறிப்பிடுகிற விலைக்கே அவர்கள் விற்க வேண்டுமென்று ஏற்பாடு செய்வது சவுகரிய மேதவிர, ஒருக்காலும் வியாபாரம் செய்யாமல் புதிதாக இத்துறையில் வெவந்திறங்கும் ஒவ்வொருவருக்கும் லைசென்ஸ் கொடுப்பது சரியல்ல வென்று எனக்குத் தோன்றுகிறது. பெஸ்ட்டு கம்பெனியாருக்காவது, அல்லது மிஸ்டர் அகமது தம்பி மரக்காயருக்காவது லைசென்ஸ் கிடைக்கிறதென்று சொல்லுகிறார்கள். பரம்பரையாகத் தொழில் செய்யாத பெயர் வழிக்கு எவ்விதம் லைசென்ஸ் கிடைக்கும்? டைரக்டர் ஒன்றும் தெரியாதவரல்ல; அவர் சுபோதியுமல்ல, நம்பிக்கையுள்ள பெயர்வழிகளாகப் பார்த்துத் தான் அவர் லைசென்ஸ் கொடுப்பார்; அவ்வித செய்து வந்தால் சவுகரியமாயிருக்குமே தவிர லைசென்ஸ் கேட்கிறவர்களுக் கெல்லாம் கொடுப்பது பிரயோஜன மில்லை.

கனம் ரங்காச்சாரியார்:— வியாபாரம் செய்து வருகிறவர்களைத்தான் நான் சொன்னேன் இதுவரையில் வியாபாரம் செய்யாதவர்கள் இப்போது வியாபாரத்திற்கு வருகிறார்கள்.

கனம் மரக்காயர்:— பெஸ்டு கம்பெனியார் வியாபாரிகள், ஒரு கூடை அரிசி விற்கிறவனும் வியாபாரி தான். கிரந்தரமாக தானியத்தைத் தரித்து

வியாபாரம் செய்கிறவர்களுக்கே லைசென்ஸ் கொடுக்க வேண்டுமென்று சிவில் சப்ளைஸ் டைரக்டர் சொல்லுகிறார். அதை யோசித்துச் செய்தால் திருப்திகரமா யிருக்கும்.

கப்பல் நிர்ப்பந்தங்களை கவனியுங்கள் கப்பற் விநியோகம் பம்பாய் கண்ட்ரோலர் வசமிருப்பதால் அதிகக் கப்பல்களை வகித்த இந்த கவர்ன்மெண்டிக்கு அதிகார மிருக்கிறதா வென்று தெரியவில்லை. சென்னைக்காவது கல்கத்தாவுக்காவது கப்பல்களை விடுவதற்கு அவருடைய அனுமதி வேண்டும். கனம் கார்டியூ கூறியபிரகாரம் இந்தியா முழுவதும் பஞ்சமா யிருக்கிறது. எந்தெந்த இடத்திற்கு எவ்வளவு அரிசி போகவேண்டு மென்று இந்தியா கவர்ன்மெண்டார் திட்டம் போட்டு வைத்திருக்கிறார்கள். ஆகவே எவ்வளவு வேண்டுமானாலும் தானியங்கள் கொண்டு வரலாமென்றும், கப்பல்கள் வேண்டியன கிடைக்குமென்றும் நினைப்பதற்கில்லை. அது நல்ல ஏற்பாடு தான்; ஆனால் இங்கோ பஞ்சமாயிருக்கிறது. அநேக ஏழைகள் கஷ்டப்பட்டுக் கொண்டிருக்கிறார்கள். ஆகவே அதிகமாக நமக்குக் கொடுக்கும்படி இந்தியா கவர்ன்மெண்டாரைக் கேட்டுக் கொள்ளலாம். கவர்ன்மெண்டார் ஹுத்து ஏற்படுத்தாத வரையில் கப்பற்கூலி 48 ரூபாயிலிருந்து 26 ரூபாய்க்கு வந்திராதென்று கனம் கார்டியூ சொல்லி யிருக்கிறார்: சரியான தொகை எவ்வள வென்று எனக்குத் தெரியவில்லை. கவர்ன்மெண்டார் சில கப்பல்களை அமர்த்திக்கொண்டு, உணவுப் பொருள்களைப் போக்கு வரத்து செய்வதற்காக வாகன்களையும் தயாராக வைத்திருக்க வேண்டுமென்று கனம் ராமய்யங்கார் சொன்னார். கவர்ன்மெண்டார் கையிலேயே கப்பல் விஷயமிருப்பதால் அவர்கள் வேண்டியதைக் செய்யலாம். வாகன்கள் விஷயத்திலும் கவர்ன்மெண்டார், ஹித்து ஏற்படுத்தி யிருக்கிறார்கள். இது வரையில் ரயில்வே அதிகாரிகளிடம் தொங்கிக்கொண்டு கூட்ஸ் கிளார்களுக்கும் ஸ்டேஷன் மாஸ்டர்களுக்கும் பணங் கொடுத்து அவர்களுடைய தயவை எதிர் பார்த்திருக்க வேண்டியிருந்தது. இப்போது கண்ட்ரோல் ஏற்பட்ட பிறகு அவசரக் கமிட்டிக்கோ, டைரக்டருக்கோ எழுதி ரயில்வே வாகன்களையும் பெற்றுக் கொண்டு விடலாம். வாகன்கள் வேண்டியிருந்தால் லைசென்ஸ் நம்பரைக் குறிப்பிட்டு வாகன்கள் கேட்கலாம், தொடர்ந்த நம்பரக இனங்கள் கொடுக்கப்பட்டிருந்தால் ரயில்வே அதிகாரிகளுக்கு லைசென்ஸ் நம்பரைக் குறிப்பிட்டு வாகன் வேண்டுமென்று எழுதினால் கொடுக்கிறார்கள். ஆகவே வாகன்களைக் கைக்குள் வைத்துக் கொள்ள வேண்டுமென்று கனம் ராமய்யங்கார் சொன்ன யோசனை அவசியமான தென்று நான் நினைக்கவில்லை.

இதர கவர்ன்மெண்டுகள் குறுக்கிட்டுநமது கையிருப்பை அடித்துக்கொண்டுபோய் விடுவதாக கனம் வெங்கடபதிராஜூ சொன்னார். நானும் அதை ஒப்புக்கொள்ளுகிறேன். ஸிலோன், ஸ்டிரெயிட்ஸ் இவைகளுக்கு ஏற்றுமதி

செய்யாதபடி தடை ஏற்படுத்தியிராமற்போனால் இப்போது 16 அல்லது 18 ரூபாயாக இருக்கும் அரிசி மூட்டை ஒன்பதின் விலை 30 அல்லது 40 ரூபாயாகி யிருக்கும் மற்ற ஜில்லாக்களைப்பற்றி எனக்கு அதிகமாகத் தெரியாது. இதர கவர்ன்மெண்டுகள் தங்களுடைய நன்மையை உத்தேசித்து நம்முடைய சரக்குகளைக் கொண்டுபோய் விடாமல் டைரக்டர் சில பாதுகாப்புகளை ஏற்படுத்த வேண்டிய அவசியம். இந்தியர்கள் எங்கே இருந்தாலும், வேறு குடியேற்ற நாட்டிலிருந்தாலும் அவர்களுக்கு அரிசி சப்ளை செய்ய வேண்டியது நமது கடமை யென்று இந்திய கவர்ன்மெண்டார் ஒரு உத்திரவில் சொல்லி யிருக்கிறார்கள். ஆனால் அந்த உத்திரவு அனுஷ்டானத்தில் கொண்டுவரப்படவில்லை. பர்மாவில் அதிகப்படியாக இருக்கும் அரிசி தான் அதன்படி அனுப்பப்படுவதாகத் தெரிகிறது. இவ்விடத்திய சரக்கில் கைவைக்கப்படவில்லை. அவ்வித ஏற்றுமதியுமில்லாமல் தடுத்ததற்கு கவர்ன்மெண்டாருக்கு நாம் நன்றியுள்ளவர்களாக இருக்க வேண்டும்.

நான் சொல்லவேண்டியதைச் சொல்லி விட்டேன். கனம் நரஸிம்மய்யர் சொல்லி, கனம் கார்டியு சில மாறுதல்களுடன் ஒப்புக்கொண்ட பிரகாரம் நமது ஜனங்கள் உணவுப் பொருள்களுக்காகப் படும் கஷ்டங்களை நிவர்த்திக்க தகுதியான யோசனைகளைச் சொல்ல ஒரு கமிட்டியை ஏற்படுத்துவதில் எனக்கு ஆட்சேபணையில்லை.

கண்டிரோலை நீக்கிவிட வேண்டுமென்கிற பிரேரணையை நான் பலமாக ஆட்சேபிக்கிறேன். இன்னும் இவ்வருஷங்களுக்கு கண்டிரோல் இருந்துதான் தீரவேண்டும். இன்னுமொரு வருஷமுங் கஷ்டமிருக்குமாதலால் கண்டிரோலும் இருந்து வரவேண்டியதுதான். கண்டிரோல் இல்லாவிடில் கஷ்டம் அதிகரிக்கும்.

—:—

## (ஏப்பிரல் மாதம் 4ம் தேதி நடந்த கூட்டம்.)

———

சென்னை மாகாணத்திலிருந்து எண்ணெய் விதைகளை ஏற்றுமதி செய்யாமல் தடுக்கும்படி இந்தியா கவர்ன்மெண்டாருக்கு சிபார்சு செய்ய வேண்டுமென்று கனம் ரங்காச்சாரியார் கொண்டு வந்த தீர்மானத்தைப்பற்றி கனம் அகமது தம்பி மரக்காயர் பேசியதாவது,—இதனால் நமது தேசத்திற்கு எவ்வித நன்மையுண்டாகுமென்று எனக்குத் தெரியவில்லை. மிஸ்டர் உட் சொன்ன பிரகாரம் நமது தேவைக்கு அதிகமாக எண்ணெய் விதைகள் இங்கு உற்பத்தியாவதால் எக்காரணங் கொண்டும் எண்ணெய் விதைகளின் ஏற்றுமதியைத் தடுக்கக்கூடாது. அப்படிச் செய்வதினால் வியாபாரி

களுக்குத்தான் லாப முண்டாகும். அன்னிய நாடுகளுக்கு ஏற்றுமதி செய்வதில் விவசாயிகளுக்கும் லாபம் கிடைப்பதுடன் கூலிக்காரர்களும் பிழைக்கிறார்கள். ஒரே அடியாக ஏற்றுமதியை நிறுத்திவிட்டால் ஏழை ஜனங்களுக்கும் வியாபாரிகளுக்கும் கஷ்டமுண்டாகும். அவைகளைக்கொண்டு வேறு சாமான்களைத் தயாரிப்பதற்கு வேண்டிய சாதானங்களிருந்தால் ஏற்றுமதி கூடாதென்பதை நான் ஒப்புக்கொள்ளுகிறேன். அன்னிய நாடுகளுக்கு நாம் மணிலாக்கொட்டையை ஏற்றுமதி செய்தால் அவைகளைக் கொண்டு சோப், மெழுகு வத்தி முதலியவைகளை அவர்கள் செய்கிறார்கள். நமக்கு வேண்டிய இயந்திரங்களுக்கு நாம் அன்னிய நாடுகளையே எதிர்பார்த்திருக்க வேண்டியிருப்பதால், பண்டங்களாக மாற்றுவதற்கு வேண்டிய சாதனங்கள் இங்கில்லை. மூலப்பொருள்களை பண்டங்களாக மாற்றக்கூடிய நிலைமையை நாம் அடையும் வரையில்—அதற்கெத்தனை காலம் பிடிக்குமோ—அன்னிய நாடுகளுக்கு எண்ணெய் விதைகளையாவது, வேறு எவைகளையாவது ஏற்றுமதி செய்வதை நிறுத்தினால் அதனால் நமக்குத்தான் நஷ்டம். நாம் அவைகளின் மீது வரி போடப்பார்த்தால் அன்னிய நாட்டினரும் இந்தியாவுக்கு வரும் சாமான்களின்மீது வரி போட்டு வைக்க முயற்சி செய்வார்கள். ஆகவே இப்பொழுது எண்ணெய் விதைகளின் ஏற்றுமதியைத் தடுப்பதாவது, வரி விதிப்பதாவது நன்மை தருமென்று நான் நினைக்கவில்லை. பிற நாடுகளை எதிர்பார்த்திருக்க வேண்டிய காலம் நீங்கும் வரையில் நாம் பொறுத்துக்கொண்டு தானிருக்க வேண்டும்.



(ஏப்பிரல் மாதம் 5ந் தேதி நடந்த கூட்டம்.)

---

## புதிய போலீஸ் ஸ்டேஷன்கள்.

புதிதாக இந்த மாகாணத்தில் எந்தெந்த இடங்களில் போலீஸ் ஸ்டேஷன்களை ஏற்படுத்த வேண்டுமென்று விசாரித்துச் சொல்ல உத்தியோகஸ்தர்களும் உத்தியோகஸ்தர்களல்லாதவர்களு மடங்கிய கமிட்டியொன்றை நியமிக்க வேண்டுமென்று கனம் ராமனாதபுரம் ராஜா கொண்டு வந்த தீர்மானத்தை கனம் அஹமது தம்பி மரக்காயர் ஆமோதித்துப் பேசியதாவது,—கனம் மெம்பர் விபக்ஷமாக எல்லா விஷயங்களையும் சொல்லி விட்டதால் நான் சொல்லிக்கொள்ள வேண்டிய ததிகமாக இல்லை. சர்க்கிள்களை ஏற்படுத்தி சில்லரை ஸ்டேஷன்களை எடுத்து விட்டது முதல் போலீஸ் நிர்வாகம் திருப்திகரமாக இல்லை. சமீபத்தில் லூட்டிகள் நடந்தபோது போலீஸ் பந்தோபஸ்தின் அவசியம் தெரிந்தது. கமிட்டியை நியமிப்பது நல்ல யோசனையென்று எனக்குத் தோன்றுகிறது.

(ஆகஸ்டு மாதம் 12ம் தேதி நடந்த கூட்டம்.)

## காலஞ்சென்ற கனம் அலிஸாடின்.

கனம் அலிஸாடினின் மரணத்திற்காக வருந்துவதாகக் கொண்டு வரப்பட்ட தீர்மானத்தை கனம் அகமது தம்பி மரக்காயர் ஆமோதித்துப் பேசியதாவது:—கனம் அலிஸாடீனின் அகால மரணமானது எனது வகுப்பினருக்கே ஒரு பெருத்த நஷ்டமாகும். அவருடைய யோக்கியப் பொறுப்பையும், திறமையையும், சாமர்த்தியத்தையும் பற்றி நான் அதிகமாக ஒன்றும் சொல்லத் தேவையில்லை. வெகு காலமாகக் கஷ்டப்பட்டதற்கு ஒருநாள்கூட பென்ஷன் வாங்காமல் ஜீனியுடன் இறந்து விட்டாரே யென்று நான் வருத்தப்படுகிறேன்.

## நவம்பர் மாதம் 21ட தேதி நடந்த கூட்டம்

### கல்வி இலாகா விதி திருத்தம்

கல்வி இலாகாவின் 102 வது விதியில் கடைசி பிரிவை அடியிற் கண்டவாறு திருத்த வேண்டும்:—

"எல்லாப் பள்ளிக்கூடங்களிலும் முகம்மதியர்களிடத்திலும் ஒரியாக்காரர்களிடத்திலும், பெண்களிடத்திலும் அரைச் சம்பளம் வாங்க வேண்டும்; தாழ்ந்த வகுப்பினர், ஜாதியாரிடம் அரைச் சம்பளத்திற்கு அதிகமாக வாங்கக்கூடாது ?

கனம் எம் வி ராஜா கொண்டுவந்தமேஷ் தீர்மானத்தை கனம் அகமது தம்பி மரக்காயர் ஆதரித்துப் பேசியதாவது;—முகம்மதியர்களின் பிரதிநிதி என்கிற ஹோதாவில் இத்தீர்மானத்திற்கு சாதகமாக சில வார்த்தைகள் சொல்லிக்கொள்ள விரும்புகிறேன். சம்பளம் கொடுக்க சக்தியில்லாத ஏழை முகம்மதியப் பிள்ளைகளிடமிருந்து மிஷன் பாடசாலைகளிலும் கவர்ன்மெண்டின் உதவியைக்கொண்டு நடந்துவரும் இதரபாடசாலைகளிலும் முழுச்சம்பளம் கேட்பதாக எனக்குப்புகார் எட்டியதின் பேரில் 1914ம் வருஷம் மே மாதம் 19ம் தேதிகூடிய சட்டசபையில் முகம்மதியப்பையன்களிட மிருந்து அரைச்சம்பளமே வாங்கவேண்டு மென்று அந்த பள்ளிக்கூடங்களின் அதிகாரிகளைக் கேட்டுக்கொள்ள வேண்டுமென்று ஒரு கேள்விகேட்டேன். கவர்ன்மெண்டார் அவ்விதம் அரைச்சம்பளம் வாங்குவதினால், நஷ்டமடையும் பள்

ளிக்கூடங்களுக்கு அந்த நஷ்டத்தைக் கட்டிக்கொண்ட பள்ளிக்கூட மானேஜர்களுக்கு தூண்டுதலா யிருக்கும்படி கிராண்டு சட்டம் 32வது பிரிவு கவர்ன்மெண்டார் திருத்தியிருக்கிறார்கள் என்று பதிலளித்தார்கள்.

கவர்ன்மெண்டார் அவ்விதமாக உத்திரவு செய்திருந்தும் பல பள்ளிக்கூட மானேஜர்கள் அதன்படி நடந்து கொள்ளுவதில்லை யென்று எனக்கு அநேக புகார்கள் எட்டியிருக்கின்றன. தாங்கள் கள்ளிக்கோட்டைக்குச்சென்றிருந்த காலத்தில் மாஞ்சேரி சபையார் தங்களிடம் சமர்பித்த மகஜரின் பிரதியொன்றும் எனக்கு கிடைத்திருக்கிறது. எல்லா முகம்மதியப் பையன்களும் அரைச்சம்பளமே கொடுக்கும்படி செய்து விடவேண்டுமென்று அதில் கேட்டுக்கொள்ளப் பட்டிருக்கிறது. ஆகவே முகம்மதியர்கள் தாழ்ந்த வகுப்பினர் முதலியவர்களின் கல்வி அபிவிருத்தியைக்கருதி அவ்வித உத்திரவு செய்து விடவேண்டு மென்று சொல்லி வசூலிக்கலாம் என்பதை வசூலிக்க வேண்டும் என்று மாற்றி விடவேண்டுமென்று திருத்தப்பிரேரணை கொண்டு வந்தார்.



## 1920

### (பிப்பரவரி மாதம் ௬ந் தேதி நடந்த கூட்டம்.)



### முக்கிய ரஸ்தாக்களின் பராமரிப்பு.

பெரிய ரஸ்தாக்களை ஸ்தலஸ்தாபனங்களின் பராமரிப்பிலேயே விட்டுவிடும் விஷயமாக கனம் மாதவ ராஜா கொண்டு வந்த தீர்மானத்தைப் பற்றி கனம் அகமது தம்பி மரக்காயர் பேசியதாவது—நான் இத்தீர்மானத்தை ஆதரிக்க முடியவில்லை ஜில்லாக்களில் ரஸ்தாக்கள் இருக்கும் சீர்கேட்டைப்பற்றி இந்த சபையில் சில வருஷங்கள் முன்பாக நான் தீர்மானங் கொண்டு வந்தது ஞாபக மிருக்கலாம். முக்கிய ரஸ்தாக்களை ஸ்தலஸ்தாபனங்கள் சரியான ஸ்திதியில்வைத்திருக்கக் கூடிய நிலைமையிலில்லை. திருச்சிணுப்பள்ளி ஜில்லாவிற்கருகில் கப்பி கிடைப்பதால் தமது ஜில்லாவிலுள்ள ரஸ்தாக்கள் நல்ல ஸ்திதியி லிருக் கின்றன வென்று திவான்பகதூர் டி. தேசிகாச்சாரியார் சொல்லலாம். தஞ்சாவூர்ஜில்லாவில் ரஸ்தாக்கள் மிகவும் சீர்கேடான நிலைமையிலிருக்கின்றன. நாகப்பட்டணம் தாலூக்கா போர்ட்டின் விசாரணையிலிருந்த இரண்டு ரஸ்தாக்களை ஜில்லாபோர்டார் தங்களுடைய பராமரிப்புக்குட்படுத்திக் கொண்டார்கள். அநேக ரஸ்தாக்கள் மிகவும் கெடுதலாயிருக்கின்றன. அநேக கப்பிரோட்டுகளுக்குக் கப்பி போடப்படா மலிருக்கிறது கப்பி போடப்படாத மண் ரஸ்தாக்களு மிருக்கின்றன. கவர்ன்மெண்டார்

இந்த ரஸ்தாக்களை தங்களுடைய பராமரிப்புக்குட்படுத்திக் கொண்டதும் நான் அடைந்த சந்தோஷத்திற்களவில்லை. இது விஷயமாக கவர்ன்மெண்டுக்கு வேண்டிய உதவியைச் செய்யாமல் மறுபடியும் ரஸ்தாக்களை ஸ்தல்ஸ்தாபனங்களிடமே விட்டு விடவேண்டுமென்று கனம் மெம்பர் கேட்கிறார். ரயில்வே கப்பல்கள் மூலமாகப்போக்கு வரத்து செய்வது கஷ்டமா யிருக்கும். அவசரகாலங்களில் ரஸ்தாக்கள் மூலமாக போக்குவரத்துக்களை நடத்திவர அவைகளை நல்ல ஸ்திதியில் வைத்திருக்க வேண்டுமென்று சிலவருஷங்கள் முன்பாகத் தீர்மானங் கொண்டு வந்ததாக ஞாபக மிருக்கிறது. நல்ல ரஸ்தாக்க ளிருந்தால் அவைகளின் வழியாகப் போக்குவரத்தை நடத்தலாம். அவ்விதமில்லாததால் நிரம்பகஷ்டமாயிருக்கிறது ரஸ்தாக்கள் நல்ல நிலைமையிலிருந்தால் ஒரு வேளை சத்துருக்கள் வந்தால் துருப்புகளை ரஸ்தாக்கள் வழியாகவே கொண்டு போகலாம். கவர்ன்மெண்டாரே பணத்தைச் செலவழித்து ரஸ்தாக்களைப் பராமரித்து வந்தால்தான் அவைகள் நல்ல நிலைமையிலிருக்கும். வேலையைச் செய்வதற்கு ஒருவர் மூலமாகச் செய்தால் தான் சவுகரியமாயிருக்கு மென்று கனம் மெம்பர் சொல்வதை ஒப்புக் கொள்ளுகிறேன். பல பேரிடத்தில் வேலையைக் கொடுத்தால் சார்ஜு வித்தியாசப்படும். அடுத்தாற் போல் சுங்கங்களிருக்கின்றன. இப்பொழுது ஜில்லா போர்டுகளும் முனிசிபாலிட்டிகளும் சரிபண்ணிக் கொள்ளுகின்றன கவர்ன்மெண்டாரே ரஸ்தாக்களின் விசாரணையை எடுத்துக் கொண்டு விட்டால் சுங்கங் கேட்டுகளின் வருமானங்களைப் பற்றியும் சரியான ஏற்பாடு செய்து விடலாம். ரஸ்தாக்களை கவர்ன்மெண்டார் எடுத்துக் கொள்வதினாலாவது அவைகள் நல்ல நிலைமையில் வைத்திருக்கப்படுமென்று நம்புகிறேன்.

(மார்ச்சு மாதம் 16-ம் தேதி நடந்த கூட்டம்)

## உணவுப் பொருள்களின் விலையேற்றம்.

இந்த மாகாணத்தில் உணவுப் பொருள்களின் விலைவாசியைக் கட்டுப்படுத்தி ஹத்துக்குள் வைத்திருப்பதற்கான யோசனைகளைச் சொல்லுவதற்கு உத்தியோகஸ்தர்களும் உத்தியோகஸ்தர்க ளல்லாதவர்களு மடங்கிய கமிட்டி யொன்றை நியமிக்க வேண்டுமென்று கனம் என். சுப்பராவ்கொண்டு வந்த தீர்மானத்தைப்பற்றி "கனம் அகமது தம்பி மரக்காயர் பேசியதாவது:- 6,7 நாளாக சபை நடந்து அலுத்துப் போயிருக்கும் இந்த சமயத்தில் பூராநிலைமையையும் எடுத்துச் சொல்லுவது அசாத்தியம். கனம் சுப்பராவ் சொல்லுகிற பிரகாரம் கமிட்டியை ஏற்படுத்த வேண்டிய தவசியம். கமிட்டியை நியமித்தல் அவர்கள் பூரா விவரங்களையும் பரிசிலனை செய்து என்ன செய்வதென்று ரிபோர்ட்டு செய்யலாம். ஜில்லாக்களில் மொத்த வியாபாரிகள் கொள்ளைலாபம் சம்பாதிக்கிறார்கள். கலெக்டர் சிபார்சு செய்கிற வியாபாரிகள் கொள்ளைலாபம் சம்பாதிக்கிறார்கள். இதைத்தடுத்து சரியான வழியை ஏற்படுத்த ஒரு கமிட்டியை நியமிக்க வேண்டும்.

* * *

அநேக கஷ்டங்கள் நேருமென்று சொல்லப்பட்டிருப்பதால் எனக்கு ஒரு யோசனை தோன்றுகிறது. ஜில்லாக்களில் மொத்த வியாபாரிகளுக்கு அரிசி விற்பனை செய்ய லைசென்ஸ் கொடுப்பதைமாற்றி, ஜில்லா போர்டுகள், தாலூகா போர்டுகள் இவைகளின் பிரசிடெண்டுகளும் முனிசிபாலிட்டி சேர்மன்களும் கடைகளை ஏற்படுத்தி அரிசியை விற்று வரும்படி செய்யலாம். இதனால் கஷ்டங்கள் தீர்ந்து அநியாய லாபமுமில்லாமற் போய்விடும்.

---(::)---

## (மார்ச்சு மாதம் 29-ம் தேதி நடந்த கூட்டம்)

## கவர்ன்மெண்டு உத்தியோகஸ்தர்களுக்கு சம்பளம் உயர்வு

நடுத்தர கவர்ன்மெண்டு உத்தியோகஸ்தர்களின் சம்பளத்தை உயர்த்தும் விஷயமாக கனம் யாகுப் ஹாசன் கொண்டுவந்த தீர்மானத்தை கனம் அகமது தம்பி மாக்காயர் ஆமோதித்துப் பேசியதாவது:—

கீழ்த்தர உத்தியோகஸ்தர்களிட மிருந்து தினமானம் மகஜர்கள் வந்து குவிந்து கொண்டிருப்பதால் அவர்களுடைய கஷ்டங்கள் கவர்ன் மெண்டுக்குத் தெரிந்தனவே:— இந்த மாகாணத்திலுள்ளவர்கள் இத்தீர் மானத்தின் முடிவையும் சம்பளக் கமிட்டியின் ரிபோர்ட்டையும் ஆவலுடன் எதிர் பார்த்திருக்கிறார்கள். நான் கிராம உத்தியோகஸ்தர்கள் கான்ப ரென்ஸுக்காகக் கும்பகோணம் போயிருந்தேன். நான் அதில் அக்கிரா சனம் வகித்தேன். அவர்கள் தீர்மானங்கள் செய்து அனுப்பியதற் கெல் லாம் கவர்ன்மெண்டார் கவனிப்பதாக பதில் சொல்லி யிருந்தார்கள். தஞ்சா வூர் ஜில்லாவில் 3000 கிராம உத்தியோகஸ்தர்க ளிருக்கிறார்கள், அவர்கள் தங்களுடைய சம்பளத்தை 30 ரூபாயாக உயர்த்தாவிடில் 24-ம்தேதி வேலை நிறுத்தம் செய்யப் போவதாக கலெக்டருக்கு அறிவிப்ப தென்று தீர்மானித் தார்கள். இன்று வரையில் காத்துக்கொண்டிருக்கும்படி அவர் கேட்டுக் கொண்டிருக்கிறார். சம்பளக் கமிட்டியாருடைய ரிபோர்ட்டின் பேரில் எல்லா விஷயங்களைப் பற்றியும் விவாதிக்கப்படு மென்று நானும் சொன்னேன். காலக்ஷேபச் செலவு அதிகமாகி யிருப்பதைப்பற்றி நான் அதிகமாக ஒன் றும் சொல்லத்தேவையில்லை. யோக்கியப்பொறுப்புள்ள எந்த உத்தியோகஸ் தரும் இப்பொழுது கிடைக்கும் சம்பளத்தைக் கொண்டு காலக்ஷேபம் செய்ய முடியாது. கிரமமான சம்பளத்தைக் கொடுக்காவிடில் யோக்கியப் பொறுப்பாக அவர்கள் எவ்வித மிருக்க முடியும். யோக்கியர்களும் அயோக்கியர்களாகி விடுவார்கள். அதற்கு இடந்தர எனக்கு இஷ்டமில்லை, அவர்கள் யோக்கியத் தவறாக நடந்தால் கவர்ன்மெண்டுக்காவது பொது ஜனங்களுக்காவது நன்மை உண்டாகுமா. இந்த விஷயத்தை உடனே ஆலோசனைக்கு எடுத்துக் கொண்டு கவர்ன்மெண்டு உத்தியோகஸ்தர்களுக்கு கிரமமான சம்பளத்தைக் கொடுக்க வேண்டும். பம்பாய் கவர்ன்மெண்டார் கொடுத்திருக்கிற சம்பள உயர்வை கவனிக்கையில் கனம் மெம்பர் குறிப் பிடும் தொகை நிதானமாகத் தானிருக்கிறது. தீர்மானத்தில் கண்ட தொகை கூட குறைவாக இருப்பதினால் அது போதா தென்றுகூட அநேக சங்கங்க ளிடமிருந்து தந்திகள் கிடைத்திருக்கின்றன. எங்கும் ஒரே மனக் கலக்க

மாயிருப்ப[illegible] நாம் உடனே பரிகாரம் செய்யாவிடில் என்ன நேருமோ? நமது மாகாண முழுவதும் அநேக தொழில்களிலும் தொழிலாளர்கள் வேலை நிறுத்தம் செய்து வருகிறார்கள். குறைந்த சம்பளக்காரர்கள் சொற்ப சம்பளத்தைக் கொண்டு வீட்டு வாடகையையும் கொடுத்து பெண்சாதி பிள்ளைகளை எவ்விதம் காப்பாற்றி வரமுடியும். அவர்களுக்கு சரியான சம்பளத்தைக் கொடுக்கவேண்டியது நமது கடமை. அவர்கள் அயோக்கியர்களாகி விடுவதற்கு முன் கிரமமான சம்பளத்தை அவர்களுக்குக் கொடுத்து விட வேண்டும். "ஆபத்திற்குப் பாபமில்லை யென்று ஒரு பழமொழியுண்டு. இந்த உத்தியோகஸ்தர்கள் தங்களுடைய மனக்கலக்கத்தில் என்ன செய்து விடுவார்களோ? குறைந்த சம்பளக்காரர்களுக்கு சம்பள உயர்வு செய்துதர உடனே ஏற்பாடு செய்ய வேண்டு"மென்று நான் எச்சரிக்கை செய்கிறேன்.

(மார்ச்சு மாதம் 30ம் தேதி நடந்த கூட்டம்.)

## பஞ்சமர்களி[illegible] பிரேதங்கள்.

மைலாப்பூர் வீரப் பெருமாள் தெருவிலிருக்கும் பஞ்சமர்கள் தங்களுடையபிரேதங்களை அந்தத் தெரு வழியாக எடுத்துக்கொண்டு போவதைத் தடுக்காமலிருக்கும்படி போலீஸ் கமிஷனருக்கு உத்திரவு செய்யவேண்டுமென்று கனம் எம். ஸி. ராஜா கொண்டுவந்த தீர்மானத்தைப்பற்றி கனம் அகமது தம்பி மரக்காயர் பேசியதாவது;—எனக்கு இத்தீர்மானத்தில் பரிபூரண அனுதாபமிருக்கிறது. நீண்ட காலமாக பஞ்சமர்கள் அந்தத் தெருவில் [illegible]து வருகையில் அவர்களுடைய பிரேதங்களை மட்டில் குறிப்பிட்ட [illegible]ரு வழியாக எடுத்துக் கொண்டு போகக்கூடாது. செத்தவர்களுக்கு நாம் [illegible]யாதை செய்யவேண்டும். அது எல்லாருடைய கடமை யாகும். கவர்ன்மெண்டார் எவ்வித வித்தியாசமுமில்லாமல் பார்த்துக் கொள்ளவேண்[illegible] அவ்விதம் செய்யாவிடில் வீண் வியவஹாரங்களுக்கு இடமுண்டாகும். [illegible] காக ஒரு கமிட்டியையும் நியமிக்கலாம்.

(மார்ச்சு மாதம் 31-ம் தேதி நடந்த கூட்டம்.)

## கால் நடைகளின் ஏற்றுமதி

சென்னை மாகாணத்தில் கால் நடைகளின் சங்கியை குறைந்துவிடா[illegible] [illegible]நப்பதற்காக கறவைப் பசுக்களையும் கால் நடைகளையும் ஏற்றுமதி [illegible]வதைத் தடுக்க வேண்டுமென்று கனம் வெங்கடப்பய்யா கொண்டுவந்த [illegible]னத்தைப்பற்றி கனம் அகமது தம்பி மரக்காயர் பேசியதாவது:— [illegible]விகாலிகளை ஏற்றுமதி செய்வதைத் தடுத்துவிட வே[illegible]டுமென்பதை [illegible]ஒப்புக் கொள்ளுகிறேன். அவ்விதமான [illegible]ானமொ[illegible]ரையும் சில [illegible]ஷங்கள் முன்பாக நான் கொண்டுவந்தே[illegible]ல் நடை ஏற்றுமதியில

...நாள் சிரத்தையுள்ளவனென்பது தங்களுக்குத் தெரிந்த ... ஸ்டி ரெயிட்ஸ், மலாய்நாடுகள் இவைகளுக்கு தண்ணீர் இறைக்கவும் சாகுபடி செய்யவும் கால் நடைகள் போகின்றன. அதனால் நமது மாகாணத்திலுள்ள வியாபாரிகளுக்கு சவுகரிய மேற்படுகிறது. வியாபாரிகளுடைய நன்மையை உத்தேசித்து எப்பொழுதும் மேல் அவைகளை ஏற்றி அனுப்ப அனுமதி கொடுக்க வேண்டும். ஆனால் பொலிகாளைகள், ஆரிய பசுக்கள் இவைகளை அனுப்பக் கூடாதென்பதே என்னுடைய அபிப்பிராயம். அவைகளால் தான் நமது மாகாணத்தில் கால் நடைகள் விருத்தியாகின்றன. அவைகளெல்லாவற்றையும் இங்கேயே வைத்துக்கொள்ள வேண்டும். அவைகளை அனுப்பிவிட்டால் நமக்கு வேண்டிய கால் நடைகளில்லாமற் போய் விடும். இது தான் என்னுடைய அபிப்பிராயம்.

---

## (மே மாதம் 27ம் தேதி நடந்த கூட்டம்)

---

### பணப் பிரிவினை.

இந்தியா கவர்ன்மெண்டார் தங்களுடைய தேவைக்கு மாகாண கவர்ன்மெண்டுகளிடம் வாங்கிக் கொள்ளும் வழக்கம் கூடாதென்பதைப் பற்றிய தீர்மானத்திற்கு கனம் சுப்பராவ் எதிர் பாராத யுத்தம் போன்ற அபூர்வமான நிலைமை ஏற்பட்டாலன்றி மாகாணங்களிலிருந்து பணம் கேட்கக்கூடாதென்று ஒரு திருத்தப் பிரேரணை கொண்டு வந்தார். இதன் மேல் கனம் அகமது தம்பி மரக்காயர் பேசியதாவது.—இந்தியா கவர்ன்மெண்டாருக்குத் தங்களுடைய தேவைக்காக வரி விதித்துக் கொள்ள இடமிருக்கும்பொழுது, ஏற்றுமதி வரியை ஏன் உயர்த்த வேண்டும். வரி விதிக்க அநேக... கள் இருக்கும்பொழுது ஏன் ஒரு இனத்தில் மாத்திரம் கையை வை... வேண்டும். அவர்களுக்குப் பல அதிகாரங்களிருக்கின்றன. பிரயாணிக... க அதிகாரமிருக்கிறது. ஒரு மாகாணத்திற்குப் பணம் தேவையாக ...ருந்தால் அங்கேயே வரிவிதித்து வழி பண்ணலாம். ஏற்றுமதி வரியை உயர்த்துவதானது கடைத் தேங்காயை எடுத்து வழிப் பிள்ளையாருக்கு உடைப்பதுபோலிருக்கிறது. பொதுவாக எவ்வித வாடகையையும் உயர்த்துவதையும் ...க்கியமாக சென்னை மாகாணத்தில் எவ்வித வரியை உயர்த்துவதையும் ...பலமாக ஆட்சேபிக்கிறேன்.

(குறிப்பு: ஜூலை, ஆகஸ்டு, செப்டம்பர், அக்டோபர் மாதங்களில் நடந்த கூட்டங்களின் நடவடிக்கைகள் இன்னமும் பிரசுரமாகாததால் இத்துடன் சேர்க்கப்படவில்லை)



